# தமிழ்ப்புலவர் அகரவரிசை





கழக வெளியீடு

கழக வெளியீடு: ௧000

# தமிழ்ப் புலவர் அகரவரிசை

## (இரண்டாம் பகுதி)

ஆசிரியர்:

சு. அ. இராமசாமிப் புலவர்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
திருநெல்வேலி. :: சென்னை-1.

First Edition: January, 1960.

# THAMIZH PULAVAR AKARAVARISAI
# VOL - II



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS - 1.

*Head Office:*

98 EAST CAR STREET, TIRUNELVELI

Appar Achakam, 2/140, Broadway, Madras-1—C. 1200.

# பதிப்புரை

நாடும் மொழியும் நன்னெறியுமாகிய மூன்றும் முறையே உடல் உள்ளம் உயிர்போன் றியைந்து வாழும் மாந்தர்க்கு வளம்பல வழங்கி, நலம்பல நல்கி உறுதுணை யாகும். இம் மூன்றன் அமைப்பும் சீர்பெற நிலைத்து நிற்பதற்குத் துணைபுரிவது தோலாநாவின் மேலோராகிய நல்லிசைப் புலவர்கள் யாத்தளித்த பெருநூலாகும். அத்தகைய பெருநூல்களை வழங்கியுள்ள பெரும்புலவர்களின் அருமைமிக்க வரலாறுகளை நாம் ஒவ்வொருவரும் நன்குணர்ந்து நாட்டமுற்று அவைகள் நமக்கு அருமையாகக் கிடைத்த கலங்கரை விளக்கெனப் போற்றியொழுகுதல் வேண்டும். அதன்பொருட்டு அரிதுமுயன்று அத்துறை வல்லாராகிய திரு. சு. அ இராமசாமிப் புலவர் அவர்களைக்கொண்டு "தமிழ்ப் புலவர் வரிசை" என்னும் பெயரான் எழுதச்செய்து - ஐந்நூற்றறுபத்தைவர் புலவர்களைப்பற்றி இருபத்தொரு புத்தகங்கள் வெளியிட்டனம்.

மேலும் ஆயிரத்தைஞ்ஞூற்றுக்கு மேற்பட்ட புலவர்களின் வரலாற்றுக் குறிப்புக்கள் கிடைத்துள்ளன அவற்றைச் சுருக்கம்பற்றி அகரவரிசையில் தொகுத்துத் தொடர்ந்து வெளியிடக் கருதியுள்ளோம். அம்முறையில் "தமிழ்ப் புலவர் அகரவரிசையின்" முதற் பகுதிக்கண் ஐந்நூற்று முப்பத்தேழு புலவர்களின் அரிய வரலாறுகளை வெளியிட்டோம். ஈண்டு ௫௩௮ முதல் ௧0௪௩ முடிய மேலும் ௫0௬ புலவர்களின் வரலாறுகளைத் "தமிழ்ப் புலவர் அகரவரிசை" இரண்டாம் பகுதியாக வெளியிட்டுள்ளோம். எஞ்சியுள்ளனவும் தொடர்ந்து வரும். இதனை எழுதியுதவிய திரு சு. அ. இராமசாமிப் புலவரவர்கட்குக் கழகத்து நன்றி உரித்தாகுக. இந் நூலினைப் பெருமக்களும், ஆசிரிய மாணவர்களும், நூலகங்களும் வாங்கியும் வாங்குவித்தும் பயனெய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

ஒருவருடைய பிறப்பு வளர்ப்பு வாழ்க்கை முதலியன பற்றி எழுதப்பெறும் நூலகள் 'வரலாற்று நூல்கள்' என்று கூறப்பெறும். சிறந்த அறிஞர்கள், கொடையாளர்கள், வீரர்கள், அரசர்கள முதலியவர்களுடைய வரலாறுகள் மறைந்துவிடாமல் எழுதிப் பாதுகாக்க வேண்டியது இன்றியமையாததாகும் இத்தகையோருடைய வரலாற்று நூல்களால் நாட்டிற்கு நன்மைகள் உண்டாகும். வரலாறெழுதும் பழக்கம் மேனாட்டைப்போல் நம்முடைய நாட்டில் வளர்ச்சியடையவில்லை. நமது நாட்டிலும் வரலாறெழுதும் பழக்கம் அண்மைக் காலத்தில் இருந்துதான் ஓரளவு பரவி வருகிறது முன்னாளில் இருநதே வரலாறெழுதும் பழக்கம் நமது நாட்டில் ஏற்படாதபடியால் நமக்கேற்பட்டுள்ள இழப்புப் பெரிதாகும. அண்மைக்காலம் வரையில் நம்மிடம் வாழ்ந்திருந்து மறைந்த அறிஞர்களுடைய வரலாறுகள்கூட நம்மால் நன்கு உணர்ந்துகொள்ள முடியாத நிலையில் இருக்கின்றன.

நமது நாட்டில் புகழ்பெற்று விளங்கியிருந்த ஔவையார், திருவள்ளுவர், கம்பர் முதலிய பெரும் புகழாளர்களுடைய உண்மை வரலாறுகள்கூட நம்மால் நன்கு உணர்ந்துகொள்ளமுடியாத நிலைமையில் உள்ளன. கேட்கப்பெறும் வரலாறுகள் ஒன்றுக்கொன்று முரணாக இருக்கின்றன. சங்ககாலப் புலவர்களுடைய வரலாறுகள் அனைத்தும் அந்நாளில் எழுதப்பட்டிருக்குமாயின் அவைகள் நமக்கு இந்நாளில் எவ்வளவோ பயன்பட்டிருக்கும். நமது தென்னாட்டின் வரலாற்றையும் உள்ளவாறுணர்தற்கு அவைகள் உற்றதுணையாகவும் அமைந்திருக்கும்.

தமிழறிஞர்களுடைய வரலாற்றைத் தமிழ் உலகில் நிலைபெறச் செய்யவேண்டுமென்று விரும்பிய சைவ

சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப்பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் தமிழ்ப் புலவர்களுடைய வரலாறுகளை எழுதுமாறு கூறியதோடு, எழுதுவதற்குரிய வழிவகைகளையும் தெரிவித்தனர். யானும் அவ்வாறே அவ் வரலாறுகளைக் கூடியவரையில் சுருக்கமாகவும் விளக்க மாகவும் எழுதினேன். அவைகள் தனித்தனி நூல்களாக வெளியாயின. மிகுபுகழ் பெற்றவர்களின் வரலாறுகள் முன்னர் வெளிவந்தன. பிறகு நூலியற்றிய அனைவருடைய வரலாறுகளும் இருபத்தொரு பகுதிகளாக வெளியாயின. இருபத்தொரு நூல்களினும் வெளிவந்த வரலாறுகள் ருசுரு.

இவ் வரலாறுகளை எழுதுவதற்கு யான் பல நூல் களையும் நூலகங்களையுந் தேடினேன். விரிவாகக் கிடைத்த வரலாறுகள் போகச் சுருக்கமாகக் கிடைத்த வரலாறுகள் அகரவரிசையாகத் தொகுக்கப்பெற்றன. பல புலவர்க ளுடைய பெயர்கள் நூன்முகப்பில் காணப்படுவதைத் தவிர வேறெவ்விதமான குறிப்புக்களும் அற்றவைகளாக இருந்தன. சில அறிஞர்களுடைய செய்திகளைச் சிறப்புப் பாயிரங்கள் புலப்படுத்தின. சிலருடைய செய்திகள் செவி வழிச் செய்தியாகவுங் கிடைத்தன. இவ்வாறு கிடைக்கப் பெற்றவைகள் யாவும் இவ் அகரவரிசையிற் சேர்க்கப் பெற்றுள்ளன.

இந்த அகரவரிசையைத் தொகுத்து முடிப்பதற்குத் தஞ்சைமாவட்டம மன்னார்குடியில் உள்ள கோட்டூர் இரங்கசாமி முதலியார் இலவச நூல்நிலையம், திருவையாறு அறுபத்துமூவர் மடத்தில் உள்ள நூல்நிலையம், கானையார் கோயில் கா. செ. மடாலய நூல்நிலையம், பாகனேரி தன வைசிய இளைஞர் தமிழ்ச்சங்க நூல்நிலையம், நெல்லையில் உள்ள திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைச் சேர்ந்த சிவஞான முனிவர் நூல் நிலையம், திருவைகுண்டத்தில் உள்ள குமரகுருபர சுவாமி கள் நூல்நிலையம், பாளையங்கோட்டையில் உள்ள திருவ ரங்கனார் நூல்நிலையம், வாகீச புத்தகசாலை, திருநெல்வேலி

திருஞானசம்பந்த சுவாமி மடாலய நூல்நிலையம், பலவான் குடியில் உள்ள திரு. மெ. வெ. வேலப்ப செட்டியாரவர்களுடைய திருமுருகன் செந்தமிழ்நிலைய நூல்நிலையம், திரு. ராம. கும. சு. குமரப்ப செட்டியாரவர்களுடைய தமிழக நூல்நிலையம், திருமறைக்காட்டை யடுத்த பஞ்சநதிக் குளம் அருணாசல சுவாமிகள் மடாலய நூல்நிலையம், மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் உள்ள நூல்நிலையம், மதுரைக் குட்டையாச் சுவாமிகள் மடாலய நூல்நிலையம், கரந்தைத் தமிழ்ச்சங்க நூல்நிலையம், தஞ்சை பாலையசுவாமிகள் மடாலய நூல்நிலையம், திருக்களர் கோ. ஆ. மடாலய நூல்நிலையம், திருவாவடுதுறை ஆதீனத்துச் சரசுவதிமகால் நூல்நிலையம், தருமபுர ஆதீன நூல்நிலையம், திருப்பனந்தாள் காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி நூல்நிலையம், சிதம்பரம் மௌனசாமிகள் மடாலய நூல்நிலையம், சென்னை வீர, சுப்பைய சுவாமிகள் மடாலய நூல்நிலையம், வியாசர்பாடி சிவப்பிரகாச சுவாமிகள் மடாலய நூல்நிலையம், மறைமலையடிகள் நூல்நிலையம், பேரையூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் மடாலய நூல்நிலையம், கோவை சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் (இப்பொழுது சம்பந்த சரணாலயத் தம்பிரான்) அவர்களுடைய நூல்நிலையம், திரு. சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களுடைய நூல்நிலையம், சிரவணபுரம் கௌமார மடாலய நூல்நிலையம், திருக்குடந்தை குமாரசாமிச் செட்டியாரவர்களுடைய நூல்நிலையம், மயிலம் சிவஞான பாலையசுவாமிகள் தமிழ்க்கல்லூரி நூல்நிலையம், காஞ்சிபுரம் ஆளவந்த வள்ளலார் ஆதீன நூல்நிலையம், காஞ்சி முத்தமிழ் அச்சகத்தில் உள்ள சேக்கிழார் நூல்நிலையம், காரைக்குடி இந்து மதாபிமான சங்க நூல்நிலையம், திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடாலய நூல்நிலையம் ஆகியவைகளில் உள்ள நூல்கள் பலவும் பார்வையிடப்பெற்றுக் குறிப்பெடுக்கப்பட்டன. மேற்கூறிய இடங்கட்குச் சென்றபொழுது அங்கங்குள்ள அன்பர்கள் ஆகவேண்டிய உதவிகளைச் செய்தனர். அவர்கட்கு எனது உளமார்ந்த நன்றியைத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன்.

தமிழ்ப்புலவர் அகரவரிசை நூல் முயற்சி பல்லாண்டு கட்கு முன்னரே தொடங்கப்பெற்றிருக்கிறது. யாழ்ப் பாணத்தில் இருந்து வெளிவந்த 'பாவலர் சரித்திர தீபகம்' என்னும் நூலே முதலாவது தமிழ்ப்புலவர் அகரவரிசை நூலாகும். இஃது ஒரு சிலருடைய வரலாறுகளையே கூறியது. இதற்குப் பின்னுஞ் சில தமிழ்ப்புலவர் அகர வரிசை நூல்கள் தோன்றின. இவைகளும் ஒரு சிறு அளவிலேயே அமைதிபெற்றன. இவ் வகரவரிசை நூல் பெரும்பாலாருடைய வரலாற்றைக் கூறுகிறது.

விரிவாக எழுதப்பெற்ற இருபத்தொரு நூல்களினும் அமைந்துள்ள புலவர்களை இவ் வகரவரிசையிற் சேர்க்க வில்லை. அந் நூல்களில் வந்துள்ள ஐந்நூற்றறுபத்தைவரின் பெயரும் புத்தக எண்ணும் அகரவரிசையில் இந் நூலின் இறுதியிற் சேர்க்கப்பட்டுள்ளன. அவ் வரலாறுகளைப் பார்க்க விரும்புவோர் அவ்வப் புத்தகங்களில் பார்த்துக் கொள்ளலாம். இவ் வகரவரிசைப் புலவர்கள் இயற்றிய நூலின் பெயர் அகரவரிசையும் இறுதியில் உளது.

சமயாசாரியர்கள், ஆழ்வார்கள், சங்கப்புலவர்கள் முதலியோரின் வரலாறுகள் தனி நூல்களாக வெளி வந்திருத்தலின் அவர்களுடைய பெயர்கள் இவ் வகர வரிசையிற் சேர்க்கப்பெறவில்லை. நூல் அச்சாகுங்கால் கிடைக்கப்பெற்ற பல வரலாற்றுக் குறிப்புகள் நூலின் இறுதியிற் பிற்சேர்க்கையாக இணைக்கப்பட்டிருக்கின்றன. இத்தகைய வரலாற்றுத் தொண்டில் என்னை ஈடுபடுத்திய கழக ஆட்சிப்பொறுப்பாளரவர்கட்குத் தமிழ் உலகம் நன்றி செலுத்துங் கடப்பாடுடையது. இவ் வகரவரிசை வேலை இவ்வளவிலேனும் வெற்றிபெறத் துணைபுரிந்த முருகப் பெருமானின் திருவடிகளைப் போற்றுகிறேன்.

பைந்தமிழ்ப் பண்ணை
கருப்பக்கிளர்
தஞ்சை மாவட்டம்.
1-10-1959

சு. அ. இராமசாமிப் புலவர்

## ௫௩௮. சண்முகநாதன் கவிராசர் (19 - நூ.)

பாண்டிவள நாட்டிலே திக்கெலாம் புகழுந் திருநெல் வேலிக்கு அண்மையில் உள்ள பாளையங்கோட்டையில் சிறந்த தமிழறிஞராக விளங்கியிருந்தவர். இவருடைய வரலாற்றைப் பற்றி எதுவுந் தெரியவில்லை. எட்டையபுரம் கடிகை நமசிவாயப் புலவர் இயற்றிய "வல்லிபரதம்'' என்னும் நூலுக்கு இவர்,

'' சிங்கமெட்டேந் திரனருமை வாசல்வித்வான்
நமச்சிவா யன்சொற் பாவால்
தங்கமலர் மாலையென வள்ளியம்மை நாடகத்தைத்
தமிழில் தந்தான்
சங்கீத வல்லசுப்ப ராமனதை வர்னமெட்டால்
தனுக்குச் செய்தான்
எங்குமிசை தங்குவெங்க டேசுரெட்ட
மேந்திரன்மணம் சந்திட் டானே.''

என்னும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௫௩௯. சண்முக முதலியார் - மோசூர் (௧)

தொண்டைவள நாட்டிலே மோசூர் என்னும் ஊரில் தோன்றியவர். தந்தையார் பெயர் முனிசாமி முதலியார். முனி சாமி முதலியாருஞ் சிறந்த தமிழ்ப்புலவராக விளங்கியவர். சண்முக முதலியார் இலக்கண இலக்கியங்களில் புலமைபெற் றிருந்ததன்றி ஆயுர்வேதத்திலும் சிறந்த புலமைபெற்று விளங்கி னார். சென்னைச் சிவனடியார் தலயாத்திரைச் சங்கத்தின் தலைவ ராக இருந்தார். சிறந்த புலவராகத் திகழ்ந்த இவர் நாதமுனி முதலியார் என்பவர் இயற்றிய " திருமயிலைப் புராணத்''திற்கு,

'' சீர்குலவு மயிலைநகர் நாரா யணசாமி
செய்தவப் புதல்வ னாகித்
திறமைபெற என்புபெண் ணுக்குநக ரில்வரும்
தீரவர நதிமரபி னன்
பேர்குலவு நல்லிலக் கியமோ டிலக்கணமும்
பிரியமாய்க் கற்ற புலவன்
பேணுசித் தாந்தமாம் அத்துவித உண்மைநிலை
பேசுபுகழ்பரவ வாழ்ந்தோன்

ஏர்குலவு தணிகா சலப்பெயர்கொள் கோமான்
இசைந்தமா னவனுகியே
இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனியோ
எனவிரும் பூதெய்தவே
தார்குலவு மயிலைப்பு ராணம திசைத்தனன்
நம்பனருளால் வாழ்கவே
நலமேசெய் நல்லோர்கள் புராணரத் தினமென்னும்
நாதமுனி நாவலவனே.''

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ருசO. சண்முக முதலியார் (உ)

இவர் கண்டிப்பாக்கம் என்னும் ஊரில் சுப்பராய முதலியார் என்பவருடைய மகனுகத் தோன்றியவர். இவர் "சிவத்தல மாலை'' என்னும் நூல் பாடியிருக்கிருர். சிவப்பதி ஒன்றுக்கு ஒரு வெண்பாவாக நூறு சிவப்பதிகட்கு நூறு வெண்பாக்கள் அமைந்துள்ளன.

'' வேணுவனத் திசா விமலாநெல் வேலியில்வாழ்
தாணுவே முக்கட் டயாளுவே—வாணுதலாள்
காந்திமதி அம்மையுடன் கண்குளிர வந்துவரம்
ஈந்தருள்வ தென்றோ இயம்பு.''

என்பது நூலில் ஒரு பாடல்.

## ருசக. சண்முகம் பிள்ளை - வே

இவர் ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்கு முன்னே திக்கெலாம் புகழுந் திருநெல்வேலியில் பாளையங்கோட்டையிலே வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் வேங்கடாசலம் பிள்ளை. பாளையங் கோட்டை என்னும் திருமங்கை நகரத்தில் வாழ்ந்திருந்த வேணுவனலிங்கம் பிள்ளையென்பவர் நாள்தோறும் திருவிளையாடற் புராணம் முழுவதையும் படிக்கவேண்டும் என்று விரும்பினர். ஆயிரக்கணக்கான பாடல்களடங்கிய அப் புராணம் முழுவதையும் நாள்தோறும் படித்து முடிக்க முடியவில்லை. புராணஞ் சிறியதாகச் சுருக்கமாக இருந்தால் நாள்தோறும் படிப்பதற்கு எளிதாக இருக்குமென்று எண்ணினர். தடையமும் எண்ணத்

தைச் சிறந்த புலவராக விளங்கியிருந்த இவருக்குத் தெரியப் படுத்தினர். அவருடைய விருப்பப்படி இவர் அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் 240 பாடல்களில் தொகுத்துப் பாடி முடித்தார். திருவிளையாடற் புராண சங்கிரகம் என்பது நூலின் பெயர்.

> '' அகல்வி சும்புளார் கோமான் அன்றொருநாட் குருவை
> அவமதித்த பாதகத்தால் அவனவண்விட் டேகப்
> புகலுமொரு நான்முகனைப் போய்க்கேட்பப் புகுதும்
> போதகனும் விசுவவுரு பொய்யன்பிற் புறத்தால்
> இகல்செயுமா அசுரர்தமக் கிதஞ்செயலுங் காணு
> இருங்குலிசப் படையோச்சிச் சிரங்குறைத்தான் இப்பால்
> உகலருமப் பழியவன்பால் உற்றிடலும் உம்பர்
> ஓதுபவ மாதர்புனல் மண்மரத்தில் உய்த்தார்.''

என்பது இந்திரன் பழிதீர்த்த படலத்தில் ஒரு பாட்டு. நூலைப் பாராட்டி, நா. சேதுராமய்யர், திருவாவடுதுறை ஆதீனம் குழந்தைவேலுச் சுவாமிகள், குருவிகுளம், மீனாட்சிசுந்தர முதலியார், ஸ்ரீவில்லிபுத்தூர் பொன்னுப்பெருமாள் செட்டியார், திருநெல்வேலி சங்கரமூர்த்தி முதலியார், வழுதியூர் அழகுசுந்தரம் பிள்ளை, திருநெல்வேலி சண்முகம் பிள்ளை, பாளையங்கோட்டை வேணுவனலிங்கம் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். நூல் அரங்கேறிய காலம் இடம் முதலியவைகளை,

> '' மங்கலக் கொல்லாண் டாயிரத் தெழுபத்
> தைந்தினில் ஆதவன் மகரம்
> தங்கிய புகழ்நான் கைந்தொரு மூன்றில்
> சண்முகத் தனிப்பெருந் தகையோன்
> பொங்கிய கூடல் திருவிளை யாடல்
> புராணசங் கிரகத்தைப் புனையா
> மங்கையில் அப்பர் மடத்தினில் கவிஞர்
> மகிழ்ந்திட அரங்கமேற் றினனே.''

என்னும் பாடல் விளக்குகின்றது.

## ருசஉ. சண்முகம் பிள்ளை
(20 - நூ.)

சோழவள நாட்டில் தஞ்சைமா நகரில் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தவர். இவருடைய பெயர் சிவாநந்த

யோகிகள் எனவும் வழங்கியது. இவர் மருத்துவக் கலை பயின்று சிறந்த மருத்துவராக விளங்கியதோடு செந்தமிழ்க் கலையையும் நன்கு பயின்று முத்தமிழ் வல்லவராகவும் விளங்கினார். அதனால் இவருக்கு "முத்தமிழ்க் கவியரசு" என்னுஞ் சிறப்புப் பெயரும் உண்டாயிற்று. "திருமுருகன் அருட்பாமாலை" என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சிறப்புப்பாயிரப் பாடல்கள் இரண்டில் ஒன்றை அடியிற் காண்க:

"சீர்மணக்கும் வானுலகின் எழின்நலங்காண்
டருதருக்கள் சிறப்புற்றோங்கி
நேர்மணக்கும் தெய்வவருள் நிலைக்குமரு
தாசலம்வாழ் நிகரில் கந்தன்
கார்மணக்க அருளியவா மூருகனருட்
பாமாலை கனிந்து சொற்றான்
ஏர்மணக்கும் கோயிலூர் மரபில்வரு
செல்லப்பன் எனும்ஆ சானே."

## ௩௪௩. சண்முகம் பிள்ளை

இவர் பாளையங்கோட்டையில் வசித்திருந்த தமிழறிஞர். 1904 ஆம் ஆண்டில் காலமானார். "சடபரதர் சரித்திரம், நாம் குடியிருக்கும் வீடு" என்பன இவரால் எழுதப்பெற்றன. இவர் காலமானபோது வ. உ. சிதம்பரம் பிள்ளை :

"சாதுக் கடங்குதற்குத் தன்னகத்தை ஈந்தவர்தம்
காதுக்கெக் காலமுமே கைக்காத—வேத
உணவுதவு நண்பநின துத்தமமா வோங்கும்
குணமதையுங் கொள்வதென்றோ கூற்று."

என்று இரங்கற்பாப் பாடல்கள் மூன்று இயற்றினார்.

## ௩௪௪. சண்முகவேலாயுதம் பிள்ளை - வ
(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் அருப்புக்கோட்டையில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் வள்ளிநாயகம் பிள்ளை. அவர் சிறந்த புலமையுடையவர். இவர் தம் தந்தையாரிடமே கல்விகற்றுப் புலமைபெற்றார். முருகக் கடவுளிடத்துப் பேரன்புடையவர். தம் மைந்தனுக்குச் சண்முகசுந்தரம் என்று பெய

ரிட்டுக் கல்வி கற்பித்துப் புலமைபெறச் செய்தவர். தம் தந்தையார் இயற்றிய தில்லைப் பதிற்றுப்பத்தந்தாதி நூலுக்கு இவர்,

" நீரேந்து சடைக்காட்டி லாரேந்தி
அயன்தலையும் நிலவ வேந்திக்
காரேந்து மணிமிடறு முடையபெரு
வடிவன்பர்க் களித்துத் தொல்லைப்
பாரேந்து புகழ்த்தில்லைக் கூத்துடையார்க்
கொருபதிற்றுப் பத்தந் தாதித்
தாரேந்து மகிழ்வளித்தான் வள்ளிநா
யகப்பேரெஞ் சாமி தானே."

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார். இவரியற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை.

## ருசரு. சண்முகவேலுக் கவிராயர் - சி. ப (1860)

சோழவள நாட்டில் திருத்தில்லையில் இருந்தவர். வாமதேவ முருகதேசிகர் என்பவருக்கு மாணவராகி ஓதவேண்டியவைகளையெல்லாம் ஓதியுணர்ந்தார். சிறந்த புலமைபெற்றுத் திகழ்ந்த இவர் கூத்தப்பிரானுக்குத் திருமாலைப் பணிபுரிந்துகொண்டிருந்தார். நாகப்பட்டினத்தில் இருந்த ஐயாத்துரை ஞானியார் என்பவர் இயற்றிய தில்லை நடராசர் சதகம் என்னும் நூலுக்கு இவர் பதினைந்து விருத்தப்பாக்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். அக் கவிகளின் இயல்பை நோக்குமிடத்து இவர் பன்னூற் பயிற்சியும் நன்கு அமையப் பெற்றவரென்பது பெறப்படுகின்றது.

" திருவளர்சிந் தாமணிநன் னிதியிரண்டு
திகழ்காம தேனு தெய்வத்
தருவளர்விண் ணுலகளிக்கு மயிராணி
கேள்வனெழிற் சதமகன்போல்
மருவளர்பொன் னிறக்கடுக்கைத் தொடையல்புனை
சிவபெருமான் வதியுங் கோயில்
உருவளர்தன் விழியாகக் கொண்டுவளர்
புகழ்ச்சென்னி ஒண்மை நாட்டில்."

என்பது அச் சிறப்புப்பாயிரத்தின் தொடக்கமாகும்.

## ருசகூ. சண்முகாச்சாரியார்
(19 - நூ.)

இவர் பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடையில் தொண்டை வள நாட்டில் பெருநகர் என்னும் ஊரில் இருந்தவர். தந்தையார் பெயர் கந்தப்பாசாரியார். இவருடைய குலம் விஸ்வகர்ம குலம். இவர் தென்மொழியில் உள்ள இலக்கண இலக்கியங்களை நன்குகற்றுத் தேறிச் சிறந்த புலமையடைந்து திகழ்ந்ததுடன் வடமொழிப் புலமையும் நன்கு பெற்றிருந்தார். இவர் விஸ்வ குரு சதகம் என்னும் நூலை இயற்றியிருக்கிறுர். இவருடைய வரலாற்றுப் பகுதியை,

"...................................................
நான்மறை முதலெழு நான்காக கமமிரு
மூன்றுசாத் திரமறு மூன்று புராணம்
எண்ணெண் கலைகள் நண்ணுமா றிரண்டு
சமயம் அன்றியும் அமைதரு வடநூல்
முழுவதும் ஆய்ந்து பழுதற வுணர்ந்தோன்
பைந்தமிழ் இலக்கணச் சிந்துவை அருந்தி
புவிமிசை நின்று கவிநான் கென்று
மழைமுகில் எனவே பொழியும்நல் உரவோன்
தருவளர் சோலைப் பெருநகர் வாழ்வோன்
யாவர்க்கும் இனிய தேவப் பிராமணன்
எந்தப்பா வுஞ்சொலுங் கந்தப் பாசாரியன்
செழுந்தவப் புணரியின் எழுந்திடு கதிரென
உதித்திடும் இனிமை கதித்திடும் புதல்வன்
வண்மை மிகுந்த சண்முகாச் சாரி
என்னும் நாமம் துன்னுநா வலனே."

என்னும் தொழுவூர்ப் புலவர் வேங்கடாசலாச்சாரியாருடைய சிறப்புப்பாயிரம் ஒருவாறு விளக்குகிறது.

"பொன்னுலகு வேந்தனின் னூர்திகொடு அசுரர்தொழப்
பொன்ருரு நிழல்வை கினன்
பொருவிசய னுனதுகவி கேதனங் கொண்டுவளர்
புகழ்சவ்ய சாசி யானுன்
பன்னுதச முகனுனது கன்னிதனை வேண்டியே
பரமனெடு கைலை சாய்த்தான்
பதுமகோ மளைநினது சுதையினுற் சூர்நூறு
பத்தொடெட் டண்ட மாண்டான்

மன்னுகதிர் மருகனு யோருருட் டிகிரியினை
மாவேழின் முடவ னுய்த்தான்
மாருதிக் கொடியாகி பலமகிமை பெற்றனன்
வான்புகழ்க் குறளுதித்த
தென்னுமிவ் வாசைகொண் டுன்னியற் பெயரையிவ்
விருபிறப் பினர்வௌவுதற்
கெண்ணுமிது கோசிகள் கடவுளா வினைவிக்கி
னர்த்தனேர் விஸ்வ குருவே.''

என்பது சதகத்தில் ஒரு பாட்டு.

## ௫௪௭. சண்முகாநந்த அடிகள்
(20 - நூ.)

இவர் சென்னைமா நகரில் வசித்திருந்தவர். யோகாநந்த ஆசிரமம் என்னும் பெயருடைய ஆசிரமத்திற்குத் தலைவராக விளங்கினுர். தமிழ்ப்புலமை மிக்கவர். சுரைக்காய்ச் சுவாமிகள் என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்ருர். அப் பெரியார்மீது பதிகம் ஒன்று பாடியதோடு அவருடைய வரலாற்றைச் செய்யுளாகவும் பாடியுள்ளார். அதன் பெயர் சுரைக்காய்ச் சுவாமிகள் வரலாறு என்பது.

''எல்லையி லடியர் சூழ இரவியொத் திலகி வஞ்சக்
கல்லைநேர் உள்ளம் போக்கும் கமண்டல முனிவன் சொன்ன
சொல்லெனுந் துளிகொ ளிப்பி துரிதமா யாரமாபோல்
ஒல்லையில் அவத்தை மாறி உணர்வுறுந் தன்மை காண்பான்.''

என்பது வரலாற்றுச் செய்யுளில் ஒரு பாட்டு. இவர் 'சித்தர் நூற்பதிப்புக் கழகம்' என்னும் பெயருடன் கழகம் ஒன்றை நிறுவினுர். அக் கழகத்தின் வழியாகச் சித்தர்களுடைய நூல்களைப் பிழையறப் பரிசோதித்து வெளியிடத் தொடங்கித் திருமூலர் கருக்கிடை முதலிய இரண்டொரு நூல்களையும் வெளிப்படுத்தினுர். இவரோடு அக்கழகமும் இறுதிநிலையை அடைந்தது.

## ௫௪௮. சண்முகானந்த அடிகள் – ௬
(20 - நூ.)

இவர் கோயிலூர் ஆதீனத்தை அடுத்து வேதாந்தக் கல்வி கற்றுச் சிறந்து விளங்கினுர். பிறகு தஞ்சை பால்சுவாமிகள்

மடத்திலும் பன்னாள் வசித்திருந்தார். முருகக் கடவுளிடத்திலே பேரன்புடைய இவர்; திருவடிப் புகழ்ச்சிமாலை, மருதாசலக் கடவுள் சண்முகமாலை, சண்முகப் பதிகம், பாதப்பதிகம், திருவாவினன்குடிப் பதிகம், பழநிச் சோடசமாலை, குமரக் கடவுள் பதிகம், சென்னை வடிவேலர் பதிகம், திருத்தணிகை ஆறுமுகக் கடவுள் பதிகம், திருப்போரூர் முருகன் தசாங்கப் பதிகம், திருவங்கமாலை முதலிய நூல்களைப் பாடியுள்ளார்.

*"தலையே நீ வணங்காய்-தனி-மாமயி லேறியென்றும்*
*மலையே நல்லிடம் என்றுறை வள்ளலைத்*
*தலையே நீ வணங்காய்*
*கண்காள் காண்மின்களோ-கதிர்-வேல்முருகன் கழலைப்*
*பண்பார் வள்ளி பதம்பணி நாதனைக்*
*கண்காள் காண்மின்களோ*

*செவிகாள் கேண்மின்களோ-திரை-புக்கொழிமாகிரியும்*
*புவியோர் போற்றப் பொடித்த குகன்புகழ்*
*செவிகாள் கேண்மின்களோ*

*மூக்கே நீ முரலாய்-முது-மாமறையின் பொருளை*
*வாக்கால் ஈசன் மகிழச்சொல் தேவனை*
*மூக்கே நீ முரலாய்*

*வாயே வாழ்த்திடுவாய்-மயி-லேறிவலம் நொடியில்*
*போயே மீண்டருள் புண்ணியன் தன்புகழ்*
*வாயே வாழ்த்திடுவாய்*
*நெஞ்சே நீ நினையாய்-நிக-ரில்குகன் தன்னுருவை*
*அஞ்சேல் என்னவந் தாண்டருள ஐயனை*
*நெஞ்சே நீ நினையாய்."*

இது திருவங்கமாலையின் முற்பகுதி. இப்படியே பிற்பகுதியையும் பாடிமுடித்துள்ளார். இவருடைய நூல்களைப் பாராட்டிச் சங்கரநயினார் கோயில் சொக்கலிங்க அடிகள், ஆதிநாராயண சாத்திரி, சண்முகாநந்தபுரி சுவாமிகள், சிரவணபுரம் கௌமார மடம் இராமாநந்த அடிகள், திருவொற்றியூர் இராமைய தேசிக சுவாமிகள், நாராயணசாமி ஐயர், கோயமுத்தூர் திருச்சிற்றம்பலம் பிள்ளை, ல. நாராயணசாமி நாயகர், ம. தி. பானுகவி, அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், யானைமலைக் கர்ணம் முத்துவீரப் பிள்ளை, தஞ்சை சண்முகம் பிள்ளை, ஆறுமுக முதலியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௫௪௯. சதாசிவ ஐயர் - சிவ

இவர் ஏறக்குறைய அறுபதாண்டுகட்கு முன் ஈழவள நாட்டிலே யாழ்ப்பாணத்துத் தும்பா புரத்திலே வசித்திருந்தவர். இவர்கதிர்காமம் முருகக்கடவுள்மீது, "கதிர்காமப் பதிகம்" என்னும் பெயருடைய பதிகம் ஒன்று பாடியுள்ளார்.

"மாணிக்கக் கங்கையாந் தீர்த்திகையி லாடியே
மலமதை அகற்றல் செய்ய
மன்னியுறு மைசுவரிய திவ்யதிரு நீறுமொளி
வளரக்க மணியும் பூண்டே
மாணிக்க வைங்கரன் கழலினைத் தொழுதுநின்
மந்திரஞ் செபிக்க அருளுவாய்
மாயையின காதலன் சிஙகனே க கோறல்புரி
வச்சிரா யுதக்கை யனே
மாணிக்க வாசகன் காண்குறத் தெய்வநான்
மறைப்பரி உலகத்த செல்வன்
மறைமுதல உணர்ந்திடக் குருமொழி உணர்த்தினாய்
மயூரவே தண்ட நாதா
மாணிக்க வண்ணனே வில்வவன நாதனே
மகாவேம கூட விரா
மங்கைஉமை பாலனே வள்ளிபுணர் லோலனே
மாகதிரை வடிவே லனே."

என்பது பதிகத்தில் மூன்ருவது பாட்டு.

## ௫௫0. சதாசிவ நாவலர்

இவர் இலக்கண விளக்கம் இயற்றிய வைத்தியநாத நாவலருடைய அருமைப் புதல்வர். பிறக்க வீடுபேறளிப்பதாகிய திருவாரூரினர். இவருக்குத் தியாகராச தேசிகர் என்னும் உடன்பிறந்தாரும் இருந்தனர். சதாசிவநாவலர் தம் தந்தையாரிடமே இலக்கண இலக்கிய நூல்களையுஞ் சங்கநூல்களையுங் கற்றுச் சிறந்த புலமை யடைந்தார். சொற்போரிடுவதினும் சொற்பொழிவுகள் செய்வதினும் மிகவல்லவர். இவர் சொற்பொழிவு ஒன்று ஓரிடத்தில் மிகச் சிறப்பாக நிகழ்ந்தது. அப்பொழுது அங்கே அம்பலவாணத்தம்பிரான் என்பவரும் சொற்பொழிவைக் கேட்டுக்கொண்டிருந்தார். சொற்பொழிவு அவருக்கு மிகுந்த வியப்பை யளித்தது. இவரைப் பாராட்டி,

"வன்மீக நாதன் வரத்தால் அவதரித்த
வன்மீக நாதன் மரபினேன்—வன்மீகர்
தாமோர் தமிழுருவாய்ச் சார்ந்த சதாசிவனை
யாமோ புகழவல்லே மீண்டு."

என்று புகழ்ந்து பாராட்டிப் பாடினார்.

சதாசிவ நாவலரிடம் மாணவர் பலர் கல்வி பயின்றனர். அம்மாணவர் எப்பொழுதும் படிப்பிலேயே கருத்துச் செலுத்தியிருந்தனர். ஒருநாள் நாவலர் தம்முடைய மாணவர்களைப் பார்த்துத், "தூதுளங்காய் சிறிது கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டார். அம்மாணவர்கள் தூதுளங்காய் தேடிச் சென்று ஊரையடுத்த காட்டு வெளியிற் பறித்துக்கொண்டிருந்தனர். அப்பொழுது அவர்கள் தாம் மனப்பாடஞ்செய்த யாப்பருங்கலக்காரிகைப் பாடலை ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டிருந்தனர்.

படிக்காசுப் புலவர் சதாசிவ நாவலரின் தந்தையாராகிய இலக்கண விளக்கம் வைத்தியநாத நாவலரிடம் கல்வி பயின்றவர். தம்முடைய ஆசிரியரின் மகனாகிய சதாசிவ நாவலரைப் பார்ப்பதற்குத் திருவாரூர்க்கு வந்தார். வழியில் நாவலரின் மாணவர்கள் யாப்பருங்கலக்காரிகைப் பாடல்களைப் பாடிக் கொண்டு தூதுளங்காய் பறித்தலைக் கண்டு வியப்படைந்தார். பிறகு நாவலரின் வீட்டையடைந்து அவரைக் கண்டவுடன்,

"கூடுஞ் சபையிற் கவிவா ரணங்களைக் கோளரிபோல்
சாடுஞ் சதாசிவ சற்குரு வேமுன்னுன் றந்தைதம்மால்
பாடும் புலவர்க ளானேமின் றிச்செம்மற் பட்டியெங்கும்
காடுஞ் செடியுமென் னேதமிழ்க் காரிகை கற்பதுவே."

என்று பாடினார். சதாசிவ நாவலர் தனிநூல்கள் எவையுஞ் செய்ததாகத் தெரியவில்லை. தம் தந்தையார் இயற்றிய இலக்கண விளக்கத்தைப் பற்றி இவர்,

"கடல்விளிம் புடுத்த கண்ணகன் ஞாலத்
தடரும்வல் லிருள்துரந் தனைத்தையும் விளக்கும்
பல்கதிர்ப் பருதியிற் பரம்பர னருளால்
உள்ளகத் திருள்கடந் துறுபொரு ளனைத்தையும்
பாற்படத் தொடுத்த பதினெண் மொழியுளும்
மேற்கடல் கீழ்க்கடல் வேங்கடங் குமரி

யாகிய வெல்லையு ளருந்தமிழ்ப் பௌவத்
தெழுத்துமுதன் மூன்றையும் யாவருந் தெரியத்
தொகைவகை விரியிற் பகருக வென்று
வேதியர் திலகன் விரவலர் கோளரி
மாதைய ரதிபன் வரகுண மேரு
கல்விக் கெலலை கருணைக் காகரம்
பெருமாண் மெய்த்தவப் பேறெனத் தோன்றிய
திருமா லுலகஞ் செவ்விதிற் புரக்கும்
மேதகு புகழ்த்திரு வேங்கட நாதன்
ஓதின னாக உவகைமீ தூர
முன்னோர் நூலின் முடிபு நோக்கிச்
சொல்லும் பொருளும் ஒல்வன தழீஇப்
பல்சுவைக் கரும்பி னொருவட் டேய்ப்ப
இலக்கண விளக்கமென் றொருபெயர் நிறீஇப்
புலப்படுத் தியலுறப் பொருள்விரித் துரைத்தனன்
பவத்தொகை யகற்றுந் தவத்தின்வரம் பானோன்
பன்மீ னாப்பட் பான்மதி போல
வன்மீக நாத மாதவன் வரத்தால்
அந்த ணாரூர் வந்தருள் செல்வன்
வலம்புரி யொருமுத் தன்ன
நலம்புரி வைத்திய நாததே சிகனே.''

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ருருக. சதாசிவ பண்டிதர்

ஈழ நாட்டில் தோன்றியவர்; பொற்கொல்லர் குலத்தினர். தந்தையார் பெயர் நமசிவாயம். இலக்கிய இலக்கணங்களைத் தக்காரிடத்திலே நன்கு கற்றுக் தேறினார். இவர் இயற்றிய நூல்கள் வண்ணையந்தாதி, வண்ணை நகரூஞ்சல், சிங்கை நகரந்தாதி என்பன. இவைகளை யன்றித் தனிப்பாடல்களும் பல இயற்றியிருக்கிறார்.

'' குதிக்கின்ற வாணவக் கூத்துங் குலநலக் கொள்கைகளும்
மதிக்கின்ற மாடமும் மாளிகைத் தோப்பு மனைவிமக்கள்
விதிக்கின்ற கட்டளைப் பட்டங்கள் யாவும் விழலெனயான்
மதிக்கின்ற நெஞ்சைத் தருவாய் பழஞ்சிங்கைப் பண்ணவனே.''

என்பது இவரியற்றிய சிங்கைநகரந்தாதியில் ஒரு பாட்டு. பாடல்கள் யாவும் எளிமையும் இனிமையும் அமைந்து விளங்குகின்றன.

## ௫௫௨. சதாசிவ பிள்ளை - செ
(20 - நூ.)

நாஞ்சில் நாட்டிலே இரவிபுதூர் என்னும் ஊரிலே இவர் புலவராக விளங்கியிருந்தார். மாணிக்க வாசகம் பிள்ளை என்பவர் இயற்றிய திருச்செந்தில் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலுக்கு இவர்,

"இருங்கூட்டுட் படுத்தும்வினை இரண்டு நீங்கி
எஞ்ஞான்றும் நிலையான இன்பம் எய்தப்
பருங்கோட்டு மீனுணக்கும் பரத மாதர்
பண்ணொலிபல் லியவொலியோ டிரட்டுஞ் செந்தில்
அரங்கூட்டும் வேற்கரத்தெம் அண்ணல் தாட்கோர்
அந்தாதி பதிற்றுப்பத் தமையச் செய்தான்
கருங்கோட்டுப் புன்னைவனங் கவின வாழ்வு
கலந்தமணி வாசகனுங் கலைவ லோனே."

என்னும் செய்யுளால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை.

## ௫௫௩. சதாசிவ பிரமம்
(20 - நூ.)

சோழவள நாட்டில் திரிசிரபுரத்தில் இருந்தவர். செந்தமிழ்ப் புலமையில் சிறந்தவர். இவர் இயற்றிய நூல்கள் முதலிய விவரங்கள் தெரியவில்லை. அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளை இயற்றிய வயலூர் வெண்பாவந்தாதிக்கு வழங்கிய மூன்று சாத்துக்கவிகள் கிடைத்துள்ளன.

"அப்பனுக்கே குருவான தப்பகற்றக்
குகன்முறையே அடைந்துதானங்
அப்பனுக்கே பூசைபுரிந் தப்பனுயர்
ஆசியுற்ற ஆதி யூரசம்
வெப்பனுக்காச் சேர்லைசெறி வயலூரில்
வாழ்குகனும் வேலோன் உள்ளம்
ஒப்பனுக்காத் தமிழ்வெண்பா அந்தாதி
பிறந்திட்ட துலகி னம்மா."

என்பது அப்பாடல்களில் ஒன்று.

## ௫௫௪. சதாசிவ பிரமயோகீசுவரர்

இவர் சுகர் கைவல்லியம் என்னும் நூலை, ௧௧0 பாடல்களா கப் பாடியுள்ளார்.

''அத்துவிதந் நானுகி அதுவும் இன்றி
அகண்டமுமாய் ரேசகபூ ரகமும் இன்றிச்
சித்தமிசை ஆநந்தம் ஆகி எந்தச்
செயலுமின்றிச் சிதாகாச சொரூப மாகிச்
சுத்தவிண்ணு யுயர்ந்தவுப நிடதந் தன்னில்
சொலும்பொருளாய் அப்பாலுக் கப்பால் ஆகி
உத்தமமாந் துரியாதீ தப்பொருளா நின்றங்
குரையிறந்த வவசரத்தும் உறுவ தாகி.''

என்பது நூலில் ஒருபாட்டு. நூல் ஈசூர் சச்சிதாநந்த சுவாமிக ளால் பார்வையிடப்பட்டு வெளிவந்துள்ளது.

## ௫௫௫. சதாசிவ முனிவர்

இவர் 'சந்திரகாவியம்' என்னும் காலக்கணிதநூலை இயற்றி யிருக்கிறுர். நூலில், இராசியோக துவாதச பாவம் முதலியன அடங்கியுள்ளன.

''தனுசிற் பிறந்தவர்க்குத் தண்புகர்பொன் பாவி
சனிசெவ்வாய் சூரியன்தான் நல்லர்—சனிமதியுங்
கொல்லான் புகர்புதனுங் கொல்லுவர்மால் சூரியனும்
ஒல்லையினிற் கூடிலுண்டாம் யோகம்.''

என்பது தனுசுலக்கின பலன் கூறும் பாடல்.

## ௫௫௬. சதாநந்ததாசர் - தி. வே

இவர் சோழவள நாட்டில் ஆச்சாபுரத்தில் இருந்தவர். பெரும்புலவர் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் மாணவர் சியா லம் சோமசுந்தரம் பிள்ளை என்பவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுத் தேறியவர். இவர் புள்ளிருக்கு வேளூர் முத்துக்குமார சாமி பதிகம் முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

''ஆசையெனும் பாசத்தை அறுத்தநல்ல மணியே
அடியவனேன் குடிமுழுதும் அடிமைகொண்ட மணியே
மாசில்லா மணியேநன் மாணிக்க மணியே
மங்கையிரு வோர்பங்கில் வளர்பவள மணியே

காசினியில் நினைப்பவர்முன் கடுகிவரு மணியே
　　கருவினின்று மெனை நீக்கிக் காக்கவந்த மணியே
தேசுநிறை புள்ளிருக்கும் வேளூர்வாழ் மணியே
　　திருவடிதந் தெனையாண்ட சிவசுப்பிர மணியே.''

என்பது பதிகத்தில் ஒருபாட்டு.

## ௫௫எ. சதாநந்தா
(20 - நூ.)

சோழவள நாட்டின் நன்னிலம் தாலுகா பேரளம் என்னும் ஊரில் இருந்தவர். இவர் தோன்றிய குலம் திருவள்ளுவர் குலமென்று தெரிகிறது. இவருடைய தந்தையார் பெயர் சொக்கலிங்க நாயனார் சதாநந்தா ஆசிரமம் ஒன்று அமைத்துக்கொண்டு துறவியைப்போல் வாழ்ந்திருந்தார். அறிஞர் பலர் ஒன்றுசேர்ந்து இவருக்கு 'இராசரிஷி' என்று சிறப்புப் பெயர் வழங்கினர். அப்பொழுது இவரைப் பாராட்டி அறிஞர்கள் பலர் வாழ்த்துப் பாக்கள் பாடினார்கள். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேர்ந்த இவர் 'வள்ளுவர் குலமும் அவர் வாய்மொழியும்' என்னும் உரைநடை நூல் முதலியவைகளை இயற்றியுள்ளார். இவர் இயற்றிய செய்யுள் ஒன்றை அடியிற் காண்க:

'' புண்ணியர் உலகில் வாழ்க
　　புலன்செறு நோன்பு வாழ்க
பெண்ணுடன் ஆணும் வாழ்க
　　பிழையில்செங் கோலும் வாழ்க
கண்ணுடைக் கற்றோர் வாழ்க
　　கனிந்தராத் திரமும் வாழ்க
வண்மைவள் ளுவர்தாம் சொன்ன
　　வாய்மொழி கேட்போர் வாழ்க.''

இவருக்கு இராச ரிஷி என்னும் சிறப்புப் பெயர் கொடுக்கப்பட்டபோது சென்னைமா நகரத்தில் இருந்த புலவர் பெருமக்கள் பலர் வாழ்த்துப் பாடல்கள் கூறிவாழ்த்தினார்கள்.

## ௫௫அ. சத்தியசந்தர்

இவர் செங்குந்தர் தசாங்கம் என்னும் நூலை இயற்றியிருக்கிறார். இதில், மலை, யாறு, நாடு, நகர், மாலை, குதிரை, யானை

முரசு, கொடி, செங்கோல் ஆகிய பத்துங் கூறப்படும். இவற்றில் செங்கோல் ஒழிய மற்றைய ஒன்பதும் இரண்டிரண்டாகக் கூறப்படும்.

> " செம்பொற் சிறையனமே செல்வச்செங் குந்தமன்னர்
> அம்பொன் கொழித்திடுதல் ஆறியம்பாய்—எம்பரையைத்
> தங்கையெனக் கொண்டுவினைத் தாங்கிமனைப் போற்றுசிவ
> கங்கையுமொண் காவிரியுங் காண்."

என்பது யாற்றைப் பற்றிய பாட்டு.

## ருருகூ. சத்தியஞான சுப்பிரமணிய தேசிகர் (1868)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலி புதுத்தெருவில் கூபத்து மடாதிபதியாக விளங்கிய இவர் செய்யுள் பாடுந் திற முடையவர். இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவருக்கு இவர் பதினன்கு சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தத்தையும் மற்றெருரு வெண்பாவையும் எழுதியனுப்பியுள்ளார்.

> " கார்பூத்த தன்கடல் உடுத்தமா நிலமெலாம்
> காக்கின்ற சார்வ பூமன்
> கைம்மாறு தன்னையே கருதாது நாளுமே
> கற்றவர்க் குதவு கையான்
> தார்பூத்த மணிமகுட முடியரசர் பல்லோர்கள்
> தமதுதிறை கொண்டு நித்தம்
> சாமியென் றுயரைத் தவிர்த்திடு கெனச்சொலிச்
> சாருமணி முன்றி லுடையான்
> சீர்பூத்த புதுவைநக ராதிபதி பூலோக
> சிங்காச நாதி பதியாம்
> சிவஞான மன்னனருள் பொன்னுச்சா மிக்குரிசில்
> செகதலத் தோர்கள் மெச்ச
> ஏர்பூத்த சேதுவின் தலமகிமை தன்னையே
> எக்காலும் வாழ்த்தி யன்பர்
> இகலோக பரலோக வாழ்வுபெற வச்சிட்
> டியற்றினன் இசைபெ ருகவே."

சேதுபுராணம் வெளியிடப்பட்டபோது பொன்னுச்சாமித்தேவர் அந்நூலைப் பலருக்கும் நன்கொடையாக வழங்கினர். அதைப் பற்றிப் பாடல்கள் இயற்றி யனுப்பப்பட்டன.

## ௫௬௦. சத்திய ஞானி (நாகை)

(கி. பி. 1700)

இவர் சோழவள நாட்டிலே நாகபட்டினத்திலே யிருந்தவர். இவர் நீதிசாரானுபவத் திரட்டு என்னும் நூலை இயற்றியிருக்கிறார். இந்நூல் மனிதரியல்பு, நீதியியல்பு என்னும் இரண்டு பிரிவுகளையுடையது மனிதரியல்பு 46 செய்யுட்களையும், நீதியியல்பு 74 செய்யுட்களையுங் கொண்டது. நூலிற் பல அறநெறிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. செய்யுள் நடை பொதுவானது.

" அறியவரு சகாத்தந்தான் ஆயிரத்தி
எழுநூற்றி யோரொரு பதின்மேல்
அறிவுக்கே உரிமையாம் நீதியது
தொகைவகையை முழுதுநே ராய்ந்தே
அறிவிலே வலியரன்றி எளியார்க்கும்
பொருள்விளக்க மாம்வண்ண நாடி
அறைகடல்சூழ் அவனிமிசை நாகைசத்ய
ஞானியறைந் தனன்நீதி யன்றே."

என்பது நூலின் இறுதிப் பாட்டு.

## ௫௬௧. சத்தியநாத பிள்ளை

(18 - நூ )

இவர் தொண்டைவள நாட்டிலே 1742 ஆம் ஆண்டின் முன்னும் பின்னும் வாழ்ந்திருந்தவர். கிறித்துவ சமயத்தினர். இவர் பேரின்பமணிமாலை என்னும் நூலைப் பாடியிருக்கிறார். நூல் இருநூற்றுமுப்பது பாடல்களைக் கொண்டது.

" அய்யனெனுஞ் சருவேசன் இரங்கித் தன்னை
அறிந்துணர மனுவோருக் கருளு ஞான
மெய்வேதப் படிநடவா திதர வேதம்
எனுஞ்சமயம் சராறில் உழன்றெல் லோரும்
பொய்யையெலா மெய்யெனவு மெய்யைப் பொய்யாப்
புலவர்சொன்ன புராணமதை விசுவ சித்தும்
வெய்யதழல் எனுநரக வீடு புக்கு
மீளாமல் நொந்தலறி வேகு வாரே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௫௬உ. சந்திரசேகர உபாத்தியாயர்

(19 - நூ.)

இவர் தஞ்சைமாவட்டத்து மாயூரத்தில் இருந்தவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்து, புலமையடைந்து திகழ்ந்த இவர் எண்வகை அவதானங்களைப் புரிவதினுஞ் சிறந்து விளங்கினர். பள்ளிக்கூடம் ஒன்றை அமைத்துக்கொண்டு அதில் கணக்காயராக அமர்ந்து மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக் கொண்டிருந்தார். தண்டரை சுப்பராய ஆச்சாரியார் என்பவர் இயற்றிய அகம்புற ஆராய்ச்சி விளக்கம் என்னும் நூலுக்கு இவர்,

'' சிற்ப நூலின் படிசாமுத்
திரிக நூலின் படியுருவும்
பொற்பும் அமைக்கும் கைவல்லோர்
புனைசித் திரங்கட் குயிருளதோ
கற்கும் இயல்நூல் இலக்கிய நூல்
கரைகண் டிருக்குங் கவிவலவர்
ஒற்கம் இன்றிப் பாடிய நூல்
உண்மைப் பொருள்பெற் றிலவன்றே.

எத்தன் மையதா யினுமயன்செய்
படைப்புக் கிணையொன் றிலையதுபோல்
சித்து மயமாம் மெய்ந்நூல்கள்
தேர்ந்து சென்னைத் திருநகர்வாழ்
சுத்தன் விசுவப் பிரமகுல
திலகன் சுப்ப ராயப்பேர்
முத்தன் மொழிநூற் கிணைபகர
மும்மை உலகத் தினுமின்றே.''

என்பன முதலிய செய்யுட்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவரால் இயற்றப் பெற்ற நூல் கந்தபுராண சதகம்.

'' ஆறுமுகம் ஈராறு தோளருட் கண்கள்கொண்
டருளவே திருவு ளஞ்செய்
தாறுபிறை சூடியுமை வேறுவே றுப்புரி
அருந்தவத் துறுதி கண்டாங்(கு)
ஊறுசர வணவாவி மேவுதின துற்பத்தி
உரையாட வல்ல ருளரோ
ஓதுமுன் காசிபன் அளித்தவவு ணர்க்கிறைவ
உதவுசுர சைப்பெ யரினுள்

> ௬. முபுக ரிடைமாயை விஞ்சைகற் றவனூல்
> கொடுத்தமா யைப்பெயர் கொடே
> குலவிருத் தியையெண்ணி வெள்ளிமுயல் வானிடிக்
> குன்றின்வட பால்வி யக்க
> வீறுதவ வடிவான காசிப னிருக்கைபுக
> விளைமயல் கொளத் தெரிந்தாய்
> மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர
> வேதபுரி வாழ்குமர னே.''

என்பது அசுரகாண்டத்தில் ஒரு பாட்டு.

## ௫௬௩. சந்திரசேகர பண்டிதர் (௧)

ஈழவள நாட்டிலே யாழ்ப்பாணத்து நல்லூரில் இருந்த ஆதி சைவப் பிராமணர். இவருடைய தந்தையார் பெயர் நாராயண பட்டர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேறியவர். செய்யுள் பாடத் தொடங்கினுல் பழம்பாடல்களைப் பாடுவதைப் போல் மிகுவிரைவாகப் பாடக் கூடிய ஆற்றல் பொருந்தியவர். நல்லூர்க் கந்தசாமி மீது ''கிள்ளைவிடு தூது'' என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

> ''விந்தைசெறி நல்லூர் விரும்பியுறுங் கந்தன்பாற்
> சுந்தரஞ்சேர் கிள்ளைவிடு தூதுக்குத்—தந்தவிசைச்
> சீராம்ப லானனத்தான் சிந்திக்கும் ஓர்கோட்டுக்
> காராம்ப லானனத் தான் காப்பு.''

என்பது அந்நூலின் காப்புச் செய்யுள்.

## ௫௬௪. சந்திரசேகர பண்டிதர் (௨)

ஈழவளநாட்டிலே உடுவில் என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்பு தோன்றியவர். தந்தையார் பெயர் அம்பலவாணர். இவர் தமிழ் ஆங்கிலம் வடமொழி ஆகியவைகளை நன்கு பயின்றவர். உவின் சிலோ எனப்படும் தமிழ் அகரவரிசை நூலை இயற்றி அச்சிட்டு வெளியிட்டவர். இவர் 1879 ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். அகரவரிசை நூலைத் தவிர வேறு நூல்கள் இவர் செய்ததாகத் தெரியவில்லை.

"உத்தமர்கள் எந்நூலும் முற்ற வோர்ந்தே
உறுகுறைகள் மறையவுண்மை உகந்து கொள்வர்
மத்திமர்கள் அவையிரண்டுஞ் சமமாய்க் கொள்வர்
மற்றையராம் அதமருண்மை வகுக்க மாட்டார்
இத்தகையா லாய்ந்துணர்ந்த நல்லார் கல்லான்
இயற்றுமக ராதியென இகழா ரென்றே
சித்தமிசைக் கொண்டுதெளி வில்லாப் பேதைச்
சிற்றறிவேன் அறிவளவிற் சேர்த்திட் டேனே."

என்பது இவர் அகரவரிசை நூலிற்கூறிய அவையடக்கச் செய்யுளாகும்.

## ருகூரு. சந்திரசேகரம் பிள்ளை

கொங்குவளநாட்டில் கோயமுத்தூரில் வேளாளர் குலத்தில் தோன்றிய இவர் ஆங்கிலமொழியையும் தமிழ் மொழியையும் நன்கு கற்றுத் தேறினர். சதர் அதாலத் அமீனுகவும் வழக்கறிஞராகவும் தொழில் புரிந்திருந்த இவர் தனிப்பாடல்கள் பல இயற்றியிருக்கிறார்.

## ருகூகூ. சந்திராமுத கவிஞர்

ஏறக்குறைய முந்நூறு யாண்டுகட்குமுன்பு சேற்றூரில் இருந்தவர். பொன்னுயிரங் கவிராயர் சேறைப் புராணம் பாடி அரங்கேற்றியபோது அழுக்காறுகொண்டு சொற்போரிட்டுத் தோல்விகண்டவர். பிறகு பராட்டிப் போற்றியவர். பொன்னுயிரங் கவிராயருடைய சேற்றூர்ப் புராணத்திற்குப் பாடிய சிறப்புப்பாயிரப் பாடல்,

"சுந்தரஞ் சூழுந் தண்டலைச் சேறைச்
சின்மயத் திருவனுங் கணக்கில்
சுந்தரஞ் சேரும் விரதமா தவரும்
சுகம்பெறத் தமிழினுல் தொகுத்து
மந்தர வீர வாகுவன் செய்த
வானுயர் நந்திமண் டபத்தில்
அந்தரர் அமிழ்தங் கைப்பெனப் பொன்னு
யிரங்கவி ஏற்றினன் அரங்கே."

என்பது. இவர் பல நூல்களும் தனிப்பாடல்களும் இயற்றியிருப்பதாகப் பொன்னுயிரங் கவிராயருடைய வரலாற்றால் விளங்குகிறது.

## ௫௬௭. சந்தோடம் - க. ப

தொண்டைவள நாட்டில், வட ஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த வேலூரில், ''ஊர்கீஸ்'' உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பல ஆண்டுகள் பணிபுரிந்தவர். இவருடைய பெயர் தமிழில், ''மகிழ்நன்'' என்று மொழிபெயர்க்கப்பட்டது. இவரைக் குறித்துத் திரு. வி. க. அவர்கள் தம்முடைய வரலாற்றுக் குறிப்பில்,

''வேலூர் வேலைப்பாடியிலே ஒரு சங்கத்தின் ஆண்டுவிழா நடைபெற்றது. யான் தலைமைவகித்தேன். நிகழ்ச்சி முறையில் குறிப்பிட்டிருந்தவாறு 'சந்தோஷம் பேசுவார்' என்று கூட்டத்துக்கு அறிவித்து அமர்ந்தேன். சந்தோஷம் பேசினார். அப்பேச்சுப் பையப்பைய என் நெஞ்சத்தைத் தன்னில் படிவித்தது. சந்தோஷத்தின் வடிவந்தோன்றவில்லை. இலக்கியந் தோன்றியது. அச்சந்தோஷ இலக்கியம் பின்னே பல விடங்களில் தமிழ் விருந்தளித்தது. சந்தோஷம் எதையும் உரிமையுணர்வுடன் நோக்கி நோக்கி ஆராய்ந்தமை அவரை இலக்கியமாக்கியது என்று தெளிந்தேன். அவரது தமிழ் நட்பையும் எனது வாழ்க்கை பெற்றது'' என்று குறிப்பிட்டுள்ளார். இவர் 1943 ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். இவர் நகைச்சுவை ததும்புமாறு பேசுவதினும் எழுதுவதினும் வல்லவர். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள், ''மகிழ்நன் ஆராய்ச்சிக் கட்டுரைகள்'' ''முல்லைப்பாட்டு ஆராய்ச்சி'' முதலியன. மிக அண்மைக்காலம் வரையில் வாழ்ந்திருந்த இவருடைய விரிவான வரலாற்றை எழுதி வெளிப்படுத்துவது மிக நன்மை பயப்பதாகும்.

## ௫௬௮. சபாபதி ஐயர்

இவர் மாயூரம் பட்டமங்கலத் தெருவில் வாழ்ந்திருந்தார். சென்னை எழும்பூரில் இருந்த திருவேங்கடாசல முதலியாரிடத்தில் பல நூல்களைப் பாடங்கேட்டவர். கூறை நாட்டில் சாலியர்களிடத்தில் இராமாயணச் சொற்பொழிவு செய்தே தமது வாணாளைப் போக்கினார்.

## ௫௬௯. சபாபதிச் செட்டியார்
(1883)

சோழவளநாட்டில் கும்பகோணம் என வழங்கும் திருக்குடந்தையில் சபாபதிச் செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். யாழ்ப்பாணம் பூ. முருகேச முதலியாரிடம் கல்வி கற்றுச் செய்யுள் பாடுந் திறனடைந்து திகழ்ந்தார். யாழ்ப்பாணம் முருகேச பிள்ளை என்பவர் இயற்றிய குடந்தை வெண்பா என்னும் நூலுக்கு இவர்,

"சீர்பெருகும் புவிமகளுக் கணியே போலத்
திகழ்தரு யாழ்ப்பாணமதிஸ் சிறப்புற் றோங்கும்
ஏர்மலிசுன் னாகஞ்செய் தவத்தி னுலங்
கியங்குமுரு கேசனெனும் இயங்கும் பேச
வார்மலிசெஞ் சடைக்கடவுள் அருட்க வாளம்
வண்மைபெற வருந்திமிக மனங்க ளித்துப்
பார்புகழுங் குடந்தைவெண்பாத் தானம் பெய்த
பண்புடைய கவிவாணர் பருகுந் தேனே."

என்னும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௫௭௦. சபாபதித்தாயுமானப் பண்டார சந்நிதிகள்-குரு
(20 - நூ.)

திருக்கயிலாய பரம்பரை அன்னப்பன்பேட்டை ஆதீனத்தில் தலைவராக எழுந்தருளியிருந்தவர். இலக்கண இலக்கியங்களிலுஞ் சைவசித்தாந்த நூல்களினுஞ் சிறந்த பயிற்சியுடையவர். சாலியமங்கலம் மு. சாம்பசிவ நாயனுர் என்பவர் இயற்றிய 'சிவக்ஷேத்திர யாத்திரானுகூலம்' என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கிறுர்.

"எண்டிசையு நிறைந்தண்டந் தகர்த்தப் பாலும்
ஏறுபுகழ்ச் சாலியமங் கலத்து வாழ்வான்
வண்டிசையார் பூங்குவளை அலங்கல் தோளான்
வைதிக சைவநெறி இயங்குந் தாளான்
கண்டிசையா ஒருமுதலை யாவ ரானும்
கண்டுதொழு தேசெல்வம் மலிசேர் கையான்
மண்டியமா சகற்றுதிரு வேடத் தன்பின்
மாண்புடையான் சாம்பசிவ நாமன் மாதோ."

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௫எக. சபாபதிப் பிள்ளை - சு

இவர் ஈழவளநாட்டில் வடகோவை என்னும் ஊரில் சுயம்பு நாத பிள்ளை என்பவருடைய மகனாகத் தோன்றியவர். "திருச் சிற்றம்பல யமகவந்தாதி" என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது.

"திருத்துங்க வந்தண ரோம்புநல் வேள்வித் திருமறைய
திருத்துங்க மானசிற் றம்பலம் பாடத் தமியனுளந்
திருத்துங் கருணைக் கடலே யடைக்கலங் கங்கைசிரத்
திருத்துங்கண் மூன்றுடைத் தேவே கைலைப் பருப்பதனே"

என்பது அந்தாதியில் முதற்பாட்டு.

## ௫எஉ. சபாபதிப் பிள்ளை - ரா
### (20 - நூ.)

சோழவளநாட்டில் திருக்குடந்தையில் தோன்றிய இவர் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்களுடைய மாணவ ராகிய சி. தியாகராசச் செட்டியாரிடம் கல்வி கற்றுப் புலவ ரானார். கோயமுத்தூர்க் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராக விளங்கியதோடு புரவிப்பாளையம் சமத்தானப் புலவராகவும் விளங்கினார். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் பத்திரகிரி யார் புராணம், திருக்குடந்தைப் பெரிய நாயகியம்மை பதிகம், குமரப் பாமாலை, முத்துவிநாயகர் தோத்திரப்பாமாலை, திருப் பேரூர் வெண்பாவந்தாதி, திருப்பேரூர்க் கலித்துறையந்தாதி, திருப்பேரூர்ப் போற்றிக் கலிவெண்பா, திருப்பேரூர் அரசம்பல வாணர் பதிகம், சவுடநாயகியம்மை தோத்திரப்பாமாலை, திரு ஞானசம்பந்த சுவாமிகள் தோத்திரப்பாமாலை, தேவாங்க புராணவுரை, திருப்பேரூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, திருப்பேரூர்க் கலம்பகம், மரகதவல்லியம்மை திருவருள்விலாசம், உச்சிப் பிள்ளையார் தோத்திரப்பாமாலை, சுவாமிமலை அலங்காரபஞ்சகம், திருப்போரூர்ப் புராணவுரை, விசுவநாதர் பதிகம், விசாலாட்சி யம்மை பதிகம், கோணியம்மை உயிர்வருக்க மாலை, நடராசர் தோத்திரப்பா மாலை, சுப்பிரமணியர் நான்மணிமாலை, பவானி சங்கமேசர் பதிகம், வேதநாயகி யம்மை தோத்திரப்பாமாலை, மார்க்கண்டேயர் சரித்திரம், திருவாதவூரடிகள் சரித்திரம்,

தெய்வானையம்மையார் திருமணம், வள்ளியம்மையார் திருமணம், சிவஞான முனிவர் சரித்திரம் என்பன.

இவற்றுள் அச்சாகாதனவும் உள. பத்திரகிரியார் புராணம் நாற்றுநாற்பத்தைந்து செய்யுள்களால் ஆகியது

"படியினோர் புகழும் திருவெண்காட் டையர்
அருள்பெறு பத்திர கிரிப்பேர்
அடிகள்சீர்க் காதை செந்தமிழ்த் தொடையில்
ஆற்றினேன் அறிவிலாச் சிறியேன்
நெடிததிற் பிழைகள் இருப்பினுங் களைந்து
நிறைந்தநன் னீர்மையிற் கொள்வர்
வடிதமிழ் உணர்ந்த புலமையோர் சிறூரின்
மழலைகேட் டுவக்குமா றெனவே"

என்பது அவையடக்கப் பாடல். நூலைப்புகழ்ந்து நூலாசிரியருடைய மாணவர்களாகிய மதுக்கரை ஆனையப்ப முதலியார், பள்ளப்பாளையம் வையாபுரிப் பிள்ளை, உடுமலைப் பேட்டை மு. சிவகுருநாத பிள்ளை, தேவன்பாடி இராமசாமி முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௫௭௫. சபாபதி முதலியார் - வெ
(19 - நூ)

தஞ்சைமாவட்டத்திலே பூவனூர் என்னும் ஊரிற் சிறந்து விளங்கிய இவர், நிலக்கிழாராக இருந்ததோடு கலைக்கிழாராகவும் இருந்தார். திருவாவடுதுறை யாதீனம் சுப்பிரமணியத் தம்பிரான் பாடிய பூவனூர்ச் சிலேடை வெண்பா என்னும் நூலுக்கு இவர்,

"கறைமிடற்றன் திருக்கயிலைப் பரம்பரையின் வந்த
காசினியில் ஆவடுதண் துறையமர்ந்து மேலாம்
மறைவிளங்குஞ் சைவநெறி ஓங்கிமிக வாழ்க
மணிநமச்சி வாயனெனுந் தேசிகன்தன் பாதம்
இறையளவு மனத்தகலா அடியார்கள் தம்மின்
இன்பருள்சுப் பிரமணிய முனிவனியற் றினநூல்
நறைகமழும் புட்பவன நாதர்திரு வடிக்கீழ்
நன்மைபெறு வாழ்வுபெறச் சிலேடைவெண்பாத் தனையே."

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ருஎச. சம்புவராயன்

தொண்டை மண்டலத்தில் காஞ்சிமாநகரில் இவன் கி. பி. 1330 முதல் 1383 வரை அரசாட்சிசெய்துகொண்டிருந்தான். பூவேந்தனுக மட்டுமன்றிப் பாவேந்தனுகவும் விளங்கிய இவனுடைய பெயர் ஏகாம்பரநாத சம்புவராயனென்றும் நீண்டுவழங்கிநின்றது. இலக்கண இலக்கியங்களை இவன் நன்கு ஓதி உணர்ந்திருந்தான். தனிப்பாடல்கள் பல இவனுல் செய்யப்பட்டுள்ளன. இவனுடைய தம்பியாகிய கூவராயன் என்பவனுஞ் சிறந்த புலமையுடையவன். அண்ணன் தம்பியாகிய இருவருமே சிறந்த வள்ளல்களாக விளங்கினுர்கள்.

கலம்பகத்திற் கிரட்டையர்கள் என்று பாராட்டப் பெற்ற இரட்டைப் புலவர்கள் இவ்வரசனுடைய காலத்தவர்கள். சம்புவராயனிடம் கொண்டிருந்த மதிப்பைவிடக் கூவராயனிடத்தில் இரட்டையர்கள் மிகுந்த மதிப்பைக்கொண்டிருந்தார்கள். ஒருநாள் சம்புவராயன் இரட்டையர்க்கு நன்கொடை வழங்கினுன். இரட்டையர்கள் அந் நன்கொடையை இடக்கை நீட்டி வாங்கினர். தானளிக்குங் கொடையை இரட்டைப் புலவர்கள் இடக்கையால் வாங்கியது சம்புவராயனுக்கு மனவருத்தத்தையும் சிற்றத்தையும் உண்டாக்கியது. உடனே சம்புவராயன்,

> ''மதிவீர சம்புவென்று பாராமல் கல்விக்
> கிதமுடைய ரெட்டையரே ஈகை—உதவில்வலக்
> கைத்தலத்திற் கொண்டு களிக்காமல் உம்மிடது
> கைத்தலத்திற் கொள்ளுவதேன் காண் ?''

என்று செய்யுள் மூலமாகவே வினவினுன். கூவராயன் இரட்டையரிடத்தில் அளவுகடந்த பேரன்புகொண்டிருந்தான். அவனுடைய அன்பை நன்கு உணர்ந்திருந்த இரட்டையர்கள்,

> '' கூவரா யன்தியாகம் கொள்வோம் வலக்கைமுடி
> யாவர் தரினுமிடக் கைகொள்வோம்—பூவுலகில்
> மின்பணியி னுர்மதனே! வீரசம்பு வே!யினி நாம்
> அன்பெவர்பால் காண்போம் அடுத்து.''

என்று கூவராயனுடைய அன்பைச் சிறப்பித்துப் பாடினுர்கள்.

சம்புவராயன் இரட்டையர்களைக்கொண்டு, ''ஏகாம்பரநாதர் உலா'' என்னும் நூலைப் பாடச் செய்து அரங்கேற்றினுன்.

இவனிடம் பல புலவர்கள் நன்கொடை பெற்றுள்ளனர். இவன் தனிப்பாடல்களைத் தவிர நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை.

## ருஎரு. சயம்பர்
## (1884)

ஈழவளநாட்டில் சாவகச்சேரிக் கோயிற் பற்றைச் சேர்ந்த மறவன் புலத்தில் வேளாளர் மரபிலே பிறந்தவர். பெரும்புலவராக விளங்கிய சேனாதிராய முதலியார் என்பவரிடம் கல்வி கற்றுப் புலமை பெற்றவர். முப்பது செய்யுட்கள் அடங்கிய உமாபதிமாலை என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார்.

"திருவருட் பரமா நந்தனை ஞானச்
செஞ்சுடர் விளக்கையென் னுளத்தில்
தெவிட்டாத தேனைக் கருணைவா ரிதியைத்
தில்லைமன் றாடிய சிவனைக்
குருவருட் கோலா கலவுமா பதியைக்
கும்பிட்டேன் குறைமுறை யிட்டுக்
குளிர்புக ழருளா சிரியமை யாறு
பாமாலை வழியனேன் கூற
அருவருட் கருவா யிருவடி வாய்த்தியா
கப்பரா பரப்பெருஞ் சோதி
யாதிநா தாந்த னனந்த வடிவு
மைங்கர நால்வாய்முக் கண்ணும்
இருவருட் செவியார் மருப்புடன் புழைக்கை
ஏந்திய கூரிய திருக்கோட்
டியானைமா முகவன் ஏகனெம் பெருமான்
இணையடி இறைஞ்சிவாழ் வாமே."

என்பது அம்மாலையில் ஒரு பாட்டு.

## ருஎசு. சரவணப் பிள்ளை - சா

இவருடைய தந்தையார், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களுடைய மாணவராகிய திருவீழிமிழலைச் சாமிநாதக் கவிராயர். இவர் சேலம் கல்லூரியில் பதினேழு ஆண்டுகள் தமிழ்ப் புலவராக இருந்தார். இவருக்கு ஆங்கிலமொழிப் பயிற்சியும் இசைப் பயிற்சியும் இருந்தன. முருகக்கடவுளிடத்தில்

சிறந்த அன்புடையவர். நல்லொழுக்கமும் சைவசித்தாந்த நூற் பயிற்சியும் உடையவர். சொற்பொழிவு செய்வதில் மிக வல்லவர். விவேகபாநு முதலிய பத்திரிகைகளிற் கட்டுரைகள் பல எழுதினர். இவர் 1903 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 31 ஆம் நாள் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடிநீழலை அடைந்தார்.

## ௫௭௭. சரவணப் பிள்ளை - பெ

(20 - நூ.)

இவர் புதுக்கோட்டை அரசர் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தவர். ''தியானபந்தனமாலிகை'', ''இராமாயண சமய உசித கவிதை'' முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். நா. சுந்தரேசுவர ஐயர், சுந்தரராச்சாரியார், சுப்பையாப் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

*''மலைதனக் கிறகு கண்டேன் மகோ திநன் னீருங் கண்டேன்*
*சிலைமதன் உருவு கண்டேன் சிவன்சுத்தக் கழுத்துங் கண்டேன்*
*அலைகடல் கடையக் கண்டேன் அயனைந்து சிரமுங் கண்டேன்*
*கொலைவச்ரன் இருகண் கண்டேன் கொடுபொருள் வாங்கக் காணேன்.''*

என்பது இராமாயண உசித கவிதையில் ஒரு பாட்டு.

இவருடைய சொந்தவூர் திரிசிரபுரம். மற்றும் இவரால் மகாவிட்டுணு தசாவதாரப் பதிகம், சூரியப்பத்து காந்தசார வெண்பா முதலிய நூல்களும் இயற்றப்பட்டுள்ளன.

*''கடவுளர்க்குங் கண்ணுகிக் காண்பதற்குத்*
*தனியுருவாய்க் கடல்சூழ் வையப்*
*படருயிர்தம் மயலகற்றி உணவூட்டி*
*அறிவுறுத்திப் பரனு யோங்கும்*
*சுடரளிக்குஞ் சுயஞ்சோதி சுத்தமிகு*
*காரணனே துகளேன் செய்த*
*மடமொழிய அருட்கதிரின் மயமாக்கி*
*நயமாக்கும் வளமை யோனே.''*

என்பது சூரியப்பத்தில் ஒரு பாட்டு. காந்தசார வெண்பா ௪௲0 வெண்பாக்களைக் கொண்டது.

"மாமணிகள் பெற்றிலங்கும் வண்கயிலை மண்டபத்தில்
பூமணி கொள் பீடம் புக்கிருந்த—சோமனணி
தேவை எதிர்வணங்கித் தேவிதக்கன் புத்திரியாய்க்
கூவுமதை நீக்கவருள் கூட்டு"

என்பது நூலில் ஒருபாட்டு. இந்நூலுக்கு, சி. வை தாமோதரம் பிள்ளை, சி. தியாகராசச் செட்டியார், திரிசிரபுரம்-பாரதப் பிரசங்கம் பெரியதம்பிப் பிள்ளை, புதுக்கோட்டை-மு. சுப்பையாப் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௫எ௮. சரவணப் பெருமாளையர்

தொண்டைவளநாட்டில் அறுமுகப்பரமன் திருக்கோயில் கொண்டு எழுந்தருளிய தணிகையம் பதியில் வீரசைவ வழிமுறையில் விருபாட்சி தேவர் என்பவர் முருகக்கடவுளுடைய திருவருளினாலே மிகுந்த சிறப்போடு மடாதிபதியாக எழுந்தருளியிருந்தார்.

அந்த விருபாட்சி தேவருடைய மகன் முத்தையர்; முத்தையருடைய மகன் சாம்பசிவ ஐயர்; சாம்பசிவ ஐயருடைய மகன் கந்தப்பையர்; இக் கந்தப்பையர் தமிழ் நூல்களையெல்லாம் நன்கு ஓதியுணர்ந்து சிறந்த புலவராக விளங்கியிருந்தார். இவர் தணிகையாண்டவன்மீது பாடிய நூல்கள் பல. அவைகளெல்லாம் "திருத்தணிகைச் சந்நிதிமுறை" என்னும் பெயரோடு வழங்குகின்றன. கந்தப்பையர் வள்ளியம்மையென்னும் மாதரசியை மணந்து இல்வாழ்க்கையை இனிது நடத்திக்கொண்டிருந்தார். ஆண்டுகள் பல ஆகியும் மக்கட்பேறு உண்டாகவில்லை. மக்கட்பேற்றை விரும்பிய கந்தப்பையர் தம்மனைவியின் தங்கையாகிய தெய்வானையம்மை என்னும் மாதையும் இரண்டாவது மனைவியாக மணந்தார்.

இரண்டாவது மனைவியிடமும் சில ஆண்டுகள்வரை மக்கட்பேறு உண்டாகவில்லை. அக்காளுந் தங்கையுமாகிய மங்கையரிருவரும் சக்களத்திப் போராட்டம் சிறிதும் இன்றி ஒற்றுமையாகவே இல்வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தனர். இருவரும் ஒருநாள் தண்ணீர் கொண்டுவரும் பொருட்டுச் சிறிது தொலையில் இருந்த குளம் ஒன்றுக்குச் சென்றனர். அப்பொழுது

திருவேங்கடமலை கண்ணுக்குத் தெரிந்தது. "முருகன் இது வரையிலும் நமக்கு மக்கட்பேற்றை வழங்கினான் இல்லை. நமக்கு மக்கட் பேறளிக்க அவனுக்கு நோக்கமில்லை போலும்! இனிமேல் மக்கட்பேறுண்டாயின், அதோ கண்ணுக்குத் தெரிகிற திருவேங்கடமலையானுடைய திருப்பெயரைத்தான் இடுதல் வேண்டும்" என்று 'வேடிக்கையாக உரையாடிக்கொண்டு சென்றனர்.

திங்கள் பல சென்றன. மங்கையர் இருவரும் கருப்பமுற்றனர். சாலிவாகனசகம் ௬௭௨0-இல் பிங்கள ஆண்டு பங்குனித் திங்கள் இரண்டாம்நாள் இருவரும் மக்களைப் பெற்றனர்.* ஒரு நாள் முன்பின்னாகவே இருவரும் ஆண்பிள்ளைகளைப் பெற்றனர். கந்தப்பையர் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தார். செய்யவேண்டிய சடங்குகளையெல்லாஞ் செய்தார். ஒரு குழந்தைக்கு விசாகன் என்றும் ஒரு குழந்தைக்குச் சரவணன் என்றும் பெயரிட முடிவு செய்தார். முதலிற் பிறந்தவர் விசாகப் பெருமாளையர். இரண்டாவது பிறந்தவர் சரவணப் பெருமாளையர். மனைவியர் இருவரும் தம் கணவரைப் பார்த்துத் தாங்கள் முன்பு உரையாடிக் கொண்டதைக் கூறினார்கள். கந்தப்பையர் "அப்படியாயின் வேங்கடமலையான் பெயரையுஞ் சேர்த்தேவைத்து விடலாம்" என்றுகூறி ஒருகுழந்தைக்கு விசாகப்பெருமாள் என்றும் ஒரு குழந்தைக்குச் சரவணப்பெருமாள் என்றும் பெயர் வைத்தார். மங்கையர் இருவரும் தங்களுடைய எண்ணமும் நிறைவேறிய தென்று மகிழ்ச்சி யடைந்தனர்.

இளமையிற் கற்பிக்கவேண்டிய இளமைக் கல்வியைக் கந்தப்பையர் தாமே கற்பித்தார். பிறகு அந்நாளில் புகழ்பெற்று விளங்கிய முகவை இராமாநுச கவிராயரைக் கொண்டு கற்பிக்கச் செய்தார். இருவருங் கல்வியிற் சிறந்து விளங்கலாயினர். சரவணப் பெருமாளையர் இலக்கியப் பயிற்சியிலும் விசாகப் பெருமாளையர் இலக்கணப் பயிற்சியிலும் சிறப்புற்று விளங்கினர். மழவை மகாலிங்கையர் சந்திரசேகர கவிராசப் பண்டிதர் ஆகியோர் இவர்களுடைய மாணவர்களே யாவர்.

---

* ஓராண்டு முன்பின்னாக என்றும் ஒருசெய்தி வழங்குகின்றது.

சரவணப் பெருமாளையர் நாலடியார் உரை, நன்னூல் உரை, திருவள்ளுவமாலை உரை, வெங்கைக்கோவை உரை, நீதிநூல்கள் உரை, திருக்குறள் உரை, நைடத உரை, பிரபுலிங்கலீலை உரை, கோளதிபிகை, நான்மணிமாலை, களத்தூர்ப் புராணம் முதலிய நூல்களை இயற்றி அச்சிற்பதிப்பித்து வெளியிட்டார். திருக்குறள் பரிமேலழகர் உரையை இவர் திருத்தியும் சுருக்கியும் விளக்கியும் உரைசெய்தார் என்பது,

"பாவருமெய்ப் புகழ்த்திருவள் ளுவர்நூற்கு
வண்பரிமேல் அழகர் என்பார்
நாவருநல் உரைசிலகற் றோர்க்கேயாம்
பரிசுதனை நாடி மற்றை
யாவருமிங் கெளிதுணரும் முறையதனைச்
சுருக்கிநலம் அமையச் செய்தான்
பூவருமொண் சீர்கொள்சர வணப்பெருமாள்
ஐயனெனும் புலவன் தானே."

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகிறது. இவருக்கு ஒரு மைந்தன் தோன்றினன். அவனுக்குப் பாட்டனாருடைய பெயராகிய கந்தப்பையர் என்பதையே பெயராகச் சூட்டினார். சிறந்த கல்வி வளத்தைப் பெற்றிருந்த இவர் நீண்டவாழ்நாளைப் பெற்றிருக்க வில்லை. நாற்பத்து இரண்டு ஆண்டுகள்வரை வாழ்ந்திருந்து விளம்பியாண்டு மாசித் திங்கள் இருபத்தைந்தாம் நாள் காலமானார். இவருடைய காலத்தில் வெளிவந்த நூல்களெல்லாம் இவரிடம் சிறப்புப்பாயிரம் பெறுதலைச் சிறந்த பேறாகக் கருதின. இவர் தொடங்கிய பிரபுலிங்கலீலை உரை முற்றுப்பெறவில்லை. இவருடன் பிறந்தவராகிய விசாகப்பெருமாளையருடைய வரலாறும் இவ்வரலாற்றினால் அறியப்படுதலை அறிந்து கொள்க.

## ௫௭௧. சரவணப்பெருமாள் பிள்ளை
## (1882)

இவர் இராமநாதபுரத்தில் இருந்தவர். அட்டாவதானஞ் செய்தலிலும் தேர்ச்சி பெற்றிருந்தாராகலின் இவருடைய பெயர் அட்டாவதானம் சரவணப் பெருமாள் பிள்ளை என்று நீண்டு நின்றது. இவர் திருச்செங்கோட்டில் எழுந்தருளிய மாதிமாதுடைய பரமன்மீது பதிகமொன்று பகர்ந்துள்ளார்.

"உன்னையே கதியென்று நம்புமெளி யேன்கலிக்
குள்ளாய் வருந்த லாமோ
உலகமுனை ஏசிடா தோவுயிர்க் குயிராய்
உறைந்தநீ அன்றி உலகில்
பின்னையே தொருதெய்வ மில்லையென் றுல்யான்
பெறுந்துய ரகற்றி டாயோ
பெருமோடி யாயிருந் தனையேனும் உன்னிடம்
பிரியா திருக்கு மெங்கள்
அன்னையே யாயினும் சொன்னாலும் வாய்முத்தம்
அந்தோ உதிர்ந்து விடுமோ
ஆதரவு வேறுள்ள தோவாகை யாலென்னை
ஆளவிது சமயம் ஐயா
மன்னையே றக்காலம் வைத்தமரர் முதலோரை
வாழ்வித்த தேவ தேவே
மங்குலே மெய்க்கனைய சங்கபா ணிக்கிளைய
மங்கைபா திக்க டவுளே."

என்பது அப்பதிகத்தில் ஒருபாட்டு.

## ௫௨௦. சரவணமுத்துப் பிள்ளை - சு
(20 - நூ.)

ஈழவளநாட்டிலே நல்லூரில் தோன்றி இலக்கண இலக்கியங்களையுஞ் சைவசித்தாந்த நூல்களையும் நன்கு கற்றுத் தேறியவர். சுத்தாத்துவித சைவசித்தாந்தப் பிரசாரகராக விளங்கியதுடன் 'உதயபானு' என்னும் பத்திரிகைக்கும் ஆசிரியராக இருந்து நடத்தினர். செய்யுள் பாடுவதில் திறமை மிக்க இவர், நாணிக் கண் புதைத்தல் என்னும் ஒருதுறைக் கோவைக்குப் பாடிய சிறப்புப்பாயிரப் பாடலுள் முழுமோனைக் கட்டளைக் கலித்துறையொன்றை அடியிற் காண்க:

"நாவலர் நாணி நயன நனிமறை நற்றுறைக்கே
நாவலர் நாளும் நவிலும் நயகவி நாடுசத
மாவலர் வாவி வயன்மேவு வண்ணை வயித்தியலிங்க
பாவலன் பாரிற் படிசீர் பரவப் பகர்ந்தனனே"

## ௫௨௧. சருக்கரைக்கருப்பன் செட்டியார்

பாண்டிவளநாட்டிலே செட்டிமார் நாட்டில் கீழச்சிவல்பட்டியில் இருந்த பாடுவார் முத்தப்ப செட்டியாருடைய மகன்

இவர். இவரும் நூல்களை நன்கு கற்றுப்பாடுந் திறம் பெற்றிருந் தார். ஒருநாள் வீட்டுமுன்றிலில் காயவைக்கப்பட்டிருந்த நெல்லைக் காக்கைகளின் கூட்டம் தின்றுகொண்டிருந்தது. இவர் அவைகளை விரட்டினார். அவைகள் அகலவில்லை. சினங்கொண்ட இவர்,

''காகா எனக்கதறும் காகங்காள்! இப்பொழுதே
போகாது போனாலோ பொல்லாப்பாம்—சாகாதீர்
நெல்லை அருந்துதற்கு நீர்வந்தீர் யானுமக்குச்
சொல்லிவைத்தேன் செல்வீர் தொலைந்து.''

என்று ஒருவெண்பாவைப் பாடினார் அவ்வளவிற் சில காக்கைகள் கீழே விழுந்து மாண்டன. காக்கைகள் இறந்து வீழ்ந்ததைக் கண்ட முத்தப்ப செட்டியார் மனவருத்தம் அடைந்தார். தம்முடைய மைந்தரைப் பார்த்துத் ''தலையிருக்க வால் ஆடுகிறதோ?'' என்று சினத்துடன் கூறினாராம். இதன்பிறகு சருக்கரைக்கருப்பன் செட்டியாருடைய பாடல்கள் பலிக்காமற் போய் விட்டனவாம். இவர் நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை.

## ரு௮௨. சர்க்கரை அருணாசலப் புலவர்

பாண்டிவள நாட்டினர். சருக்கரைப் புலவரின் வழிமுறையினர். இவர் பொன்பற்றிச் செல்லியம்மை ஊசல் என்னும் நூல் பாடியுள்ளார். தேரடிக் கறுப்பண்ணசாமி மீது இவர்,

''திக்க னைத்து மெச்சு மட்ட வக்க ரத்தை உச்ச ரித்த
சிட்ட ருக்க நுக்ர கத்தையே
வைக்கு மற்பு தப்ர சித்தர் மற்பி டித்த மர்க்க
ளத்தின் மத்த கத்தி னைத்த கர்த்தகோ
மெய்க்கொள் தத்து வத்தை யத்தை புத்தி ரற்கு
ளத்த ரக்கர் மெய்ப்பு யத்தினைத்து ணித்தநீள்
சக்க ரக்க ரத்தர் பத்தர் சத்த மிட்டி டித்தெ
ழுப்பு சப்ப ரத்த டிக்க றுப்பரே.''

என்னுஞ் செய்யுளையும் பாடியுள்ளார்.

## ரு௮௩. சரவணப்பெருமாள் படையாச்சி

கொங்குவள நாட்டில் சேலம் சிறுபிரிவைச் சேர்ந்த வேப்பிலைப்பட்டி என்னும் ஊரிற் பிறந்தவர். ஊரில் திண்ணைப் பள்

ளிக்கூடம் வைத்துக்கொண்டிருந்த பாலுச்சாமி உபாத்தியாயர் என்பவரிடத்திற் கல்விகற்றுப் புலமை பெற்றவர். தமிழறிஞர்களுக்குத் தம்மால் இயன்ற உதவிபுரிந்து கொண்டிருந்த இவர், "பழநிப் பதிற்றுப்பத்தந்தாதி" என்னும் நூலைப் பாடியுள்ளார். இவருடைய பெயர் மசயப்பெருமான் கவுண்டர் எனவும் வழங்கியது. இவர் அறுபத்தைந்தாண்டுகள்வரை வாழ்ந்து கொண்டிருந்து இருபத்தைந்தாண்டுகட்கு முன் காலமானார்.

## ருஅச. சர்க்கரை, சவாதுப் புலவர்கள்

தேவகோட்டைக்குப் பக்கத்திலே சிற்றூர் ஒன்றில் வாழ்ந்த இப் புலவர்கள் முறையில் மைத்துனர்கள். தமிழில் நன்குகற்ற கவிவாணர்கள்; முஸ்லீம் சமயத்தினர். சர்க்கரையார் ஒருநாள் பள்ளி வாசலில் தொழுதுகொண்டிருந்தார். அப்பொழுது சவாதுப் புலவர் அங்கே சென்றார். அங்கிருந்தோர் சவாதுப் புலவரை வரவேற்றுப் போற்றினர். அப்பொழுது சர்க்கரையார் மைத்துனராகிய சவாதுவைக் கேலிசெய்ய எண்ணினார். "நமது குர்ஆன் கூறுகிறபடி தொழுகை நடக்குமிடத்தில் விலக்கப்பட்ட பொருளாகிய சவாது வருதல் கூடாதே" என்று சொன்னார். சாதுரியமாகப் பேசுவதற்குச் சிறிதும் பின்வாங்காத சவாதுப் புலவர் சர்க்கரைப் புலவரைப் பார்த்து, "'சர்க்கரை தொண்டைமட்டும் சவ்வாது கண்டமட்டும்' என்னும் பழமொழியை நீவிர் அறியீர்போலும்" என்று விட்டுக்கொடாமலே பேசினார். அங்கிருந்தோர் இருவருடைய அறிவுத் திறமையையும் பார்த்து வியந்தனர். சர்க்கரைப் புலவர் மதீன் அந்தாதி பாடினார். சவாதுப் புலவர் ஆண்டவர்பிள்ளைத் தமிழ் பாடினார். இந்நாலை, அல்லாபிச்சைப் புலவர் 1874-இல் அச்சிட்டார். இருவரும் தனிநிலைக் கவிகள் பல பாடியுள்ளனர்.

## ருஅரு. சர்க்கரைப் பாரதி

சிவகங்கை நாட்டிலேயுள்ள வேம்பத்தூரிற் பிறந்தவர். சிலேடை வெண்பாக்களை மிக விரைவாகப் பாடும் ஆற்றல் பெற்ற பிச்சுவையர் என்னும் முத்துவேங்கட சுப்பையருக்கு இளையவர். தமிழ்க் கல்வியை நன்கு கற்றுச் சிறந்த இவர் தம்

முன்னவரைப் போலவே அறிவாற்றலிற் சிறந்து திகழ்ந்தார். பெருநிலக்கிழார் மீதும் செல்வர்கள்மீதும் பாடல்கள் இயற்றிக் கொண்டுபோய்ப் பரிசில் பெற்றார். 1893 ஆம் ஆண்டில் இறைவன் திருவடிநீழலை யடைந்தார். இவர் ஊற்றுமலைப் பெருநிலக் கிழார்மீது பாடிய பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க.

''மாதரங்க மாவெனச்சொன் மாவேகப்
பரிப்பவனி வருதல் கண்டு
மாதரங்க மாதுறங்க மனமின்றி
அனமின்றி வாடி னுள்பூ
மாதரங்க மாகிளுவை மருதப்பேந்
திரவொன்னுர் மடங்கச் செய்து
மாதரங்க மாநிகர்வாள் மனங்களிக்கச்
சேர்வையெங்கள் மன்ன ரேறே.''

இவரால் இயற்றப் பெற்ற தனிநூல்கள் தென்காசி ''உலகம்மை பதிகம்'' முதலியன.

''திருவென்றினு முறையும்படி சிங்காரம தான
மருமண்டிய புனை செண்பக மந்தாரநஸ் லாரம்
தெருவெங்கினு மணிகொண்டமர் தென்காசியில் வாழத்
தருமந்தழை உலகம்பிகை தன்தாள்மற வேனே.''

என்பது உலகம்மை பதிகத்தில் ஒருபாட்டு.

## ௫௬௬. சர்க்குணம் உவின்பிரேட் ஐயர் (1810 - 1879)

திருநெல்வேலியைச் சேர்ந்த வாழையடி முதலூர் என்னும் நாசரேத்திற் பிறந்தவர். தமிழ், ஆங்கிலம், இலத்தீன், கிரீக்கு, எபிரேயம் முதலிய மொழிகளைக் கற்றவர். சில ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்ததோடு, ''தாவீதரசன் அம்மானை'' ''உதிரமகத்துவம்'' ''இரத்தினவலி நாடகக்கதை'' முதலிய நூல்களையும் எழுதியிருக்கிருர்.

## ௫௬௭. சவுந்தரநாயகம் பிள்ளை

இவர் யாழ்ப்பாணம் வட்டுக்கோட்டையிலே தோன்றியவர்; கிறித்துவ சமயத்தினர். பீ.ஏ. பி.எல் வரை படித்துத் தேறி

யவர். பவணந்திமுனிவர் இயற்றிய நன்னூலைத் தழுவி நன்னூற் சுருக்கம் என்னும் நூல் ஒன்றை வெளிப்படுத்திய தன்றி மெய்ஞ் ஞானக் கீர்த்தனை என்னும் நூலையும் இயற்றி வெளியிட்டார்.

## ௫௪௪. சவியேர் ஹென்றிலேயோன்
(19 - நூ.)

மணப்பாட்டில் பெரும் புலவராக விளங்கியிருந்த அட்டாவ தானம் இன்பகவிராயருடைய பெயரராவர் இவர். இவருடைய பெயர் இரண்டாவது இன்பகவிராயர் எனவும் வழங்கியது. "பரதகுல பாண்டியர் பழமை" என்னும் நூலுக்கு இவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

"பொன்னுல காதியாம் பொருளெலாம் உதவிய
நன்னய அநாதியாம் நாதன்நல் அருளால்
தாழையங் கனிவிழத் தாற்றிளங் கமுகுசெந்
தேன்சினைப் பலவின் இன்கனி சிதைந்துபாய்
தேன்மடை யூடுபோய்ச் செந்நெலை வளர்க்கவும்
கான்மலி கன்னலங் கழைசெழித் தோங்கவும்
வால்வளை சூலுளைந் தீனும்வெண் மணிகளைப்
பால்வளை உழத்தியர் பரிவொடு பொறுக்கிக்
கனதனம் புனைந்து புனல்விளை யாடிடும்
இனியவம் புயக்கயம் எங்கணும் வளைதர
எழில்மிகு குமரிநாட் டியன்மிகும் அரசைப்
பழுதறத் தொகுத்த பரதகோத் திரத்தான்."

என்னும் இப்பகுதி பாயிரத்தின் முற்பகுதியாம். இவருடைய பாட்டனராகிய இன்பகவிராயரைப் பார்த்து ஒரு புலவர், "ஐயா! கட்செவிக்குக் காது உண்டா? சொல்லுங்கள்" என்று வினவினார் உடனே அவர்,

"மாதருவைப் பழித்தகொடை மம்மதுகா
சிம்புகழை மன்னர் மன்னர்
ஏதமறு முனிவர்சித்தர் கின்னரர்கிம்
புருடர்களும் இசைந்து பாடும்
ஆதரையில் இப்படியோர் புருடனிலை
எனுஞ்சிரசின் அசைப்பை நோக்கக்
காதரவுக் கில்லாமல் படைத்தனனே
கடிகமழுங் கமலத் தோனே."

என்று பாடினார் என்பர்.

## ௫௬௯. சவேரிமுத்தாப் பிள்ளை
(19 - நூ.)

இவர் புதுச்சேரியில் தோன்றியவர். சென்னையிற் குடியேறி வசித்திருந்தார். செய்யப்ப முதலியார் என்பவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமையடைந்தார். சென்னை கதீட்ரல் கல்விச் சாலையில் ஆசிரியராகப் பணிபுரிந்து கொண்டிருந்தார். தம்முடைய ஆசிரியர் இயற்றிய மும்மணிமாலை என்னும் நூலுக்கு இவர்,

''கடற்கலை யணி இ காசினித் திலக
மடற்சோலை உறாஉ மாணிரங் கோனகர்
மன்னிய சுகுண மாண்புடை நீத
மின்னிய ஒளியின் மிகுபிரக் கியாத
மார்க்கண் டன்றவ மதியனை பாக்கியன்
மார்க்கண் டன்மையாப் பகருமெய் வாக்கியன்
............ ............ ............''

என்று நீளும் ஆசிரியப்பாவால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௫௭௦ சவேரியாபிச்சைக் கொரேய்ரா
(19 - நூ.)

இவர் கிறித்துவ சமயத்தினர். வைப்பாறு சிப்பிகுளம் என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் சுவக்கினுக் கொரேய்ரா கொம்பஞ்ஞு அடப்பனார் என்பர். தமிழ் மொழியை நன்குகற்ற இவர் சிறந்த புலவராகவும் சமயபோதக ராகவும் விளங்கியிருந்தார். ''பரதகுல பாண்டியர் பழமை'' என்னும் நூலுக்கு இவர்,

''கார்நிறைந் தொழுகுமா சலநிதியின் அறல்தனைக்
காதலோ டுண்டு லாவும்
கனவுசித முகில்சொரிந் திலங்கு விளிதங்களாம்
காசினியின் மேன்மை எவரும்
காணும் படிக்கதி செழிப்பைக் கொடுக்குமக்
காரணம் போலும் இனிய
கவிச்சக்ர வர்த்திகள் வியந்ததி சயிப்பஉயர்
கலைமகளும் இதய மகிழப்

பேர்நிறைந் தொழுகுமறு பதினான்கு கலைகளாம்
பெருங்கடலின் ஆழமாய்ந்து
பெட்புறு புராதன புராணங்கள் யாவையும்
பேணியாங் காய்ந்து தேறிப்
பிரபலிய பரதபாண் டியர்பழமை என்னுமோர்
பெருங்காவி யம்பொ ழிந்து
பிரதான நங்குலத் தொளிசொலித் தோங்கவருள்
பெருமைசேர் வித்வ மணியாம்
சீர்நிறைந் தொழுகுமா கவிராசன் இன்பகவி
செல்வப் பவித்ர பௌத்ரன்
சீர்த்திக் கவிக்கடல் அன்னபூ பதிலெயோன்
செய்தவச் சேட்டபுத்ரன்
சிம்மரா யப்பரத பண்டித சிரோரத்ந
செயசீல சிம்ம வேறு
செகராச ராசரக மகிழ்ஞான காருண்ய
செபதபப் புண்ய புருடன்
பார்நிறைந் தொழுகுபுகழ் பெருகுமிந் நூலினைப்.
பார்த்திபர்கள் அரச னை
பாண்டியன் தொல்கபிரி யேல்மோத்த வாசுதுரை
பாக்கியன் சமுக முன்பும்
பவிசுபெறு வைப்பாறு சிப்பிகுளம் வாழ்ந்திலகு
பஞ்சவர்கள் பதிகள் முன்பும்
பலபரி சளிக்கவிவர் அவையரங் கேற்றினன்
பரமசோ பனசே யமே.''

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௫௬௧. சாகுமுகமத் அப்துல்காதர்

இவர் தென்காசியில் இருந்த ஷைக்முகமது ஹனீ வத்துல் காதிரிஷாகன் ஷாஆலிம் சாகிப் குமாரர். இவர் முரீதுவிளக்கம் என்னும் இரத்தினச் சுருக்க நூலை இயற்றினர். இந்நூல் உரை நடையில் அமைந்தது.

## ௫௬௨. சாத்தாங்குட்டிப் பிள்ளை
(20 - நூ.)

இவர் நாஞ்சில்வள நாட்டில் தெங்கம்புதூர் என்னும் ஊ னர். தமிழ்மொழியை நன்கு கற்றுச் சிறந்த புலமைபெற்

இவர் நாகர்கோயில் செயிண்ட் பிரான்ஸிஸ் வீ. எச். பள்ளியில் தமிழ் முனிஷியாகப் பணிபுரிந்தார். பறக்கை மாணிக்கவாசகம் பிள்ளை என்பவர் இயற்றிய திருச்செந்தில் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலுக்கு இவர் பத்துப்பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

" தேன்காட்டுஞ் செழுங்கமலம் திருமுகநல்
எழில்காட்டச் சிறந்த காவி
ஊன்காட்டும் விளிகாட்ட ஒண்குமுதம்
வாய்காட்ட ஒளிசேர் முத்தம்
வான்காட்டு நகைகாட்ட வாய்ந்தவன
நடைகாட்ட மலர்ந்த வாவிக்
கான்காட்டும் பூங்குழலார் கவின்காட்டும்
மங்கையெனக் கழறும் ஊரில்.

இசையேறும் எத்தொழிலும் ஏர்த்தொழிலுக்
கிணையாகா தென்று முன்னோர்
விசையேற உரைத்தமொழி மெய்ம்மையென
வெவ்வுலகும் விளங்கு மாறு
நசையேறும் உயர்நாஞ்சி னாறும்படையால்
வறுமைபசி நாளும் போக்கி
மிசையேறும் புகழ்போர்த்த வேளாளர்
மெய்ம்மரபு விளங்க வந்தோன்."

என்பன அவற்றுள் இரண்டு பாடல்கள்.

## ௫௯௩. சாத்திரம் ஐயர்

இவர் சமணசமயத்தினர். சமணசமய நூல்கள் பலவற்றையும் இலக்கண இலக்கியங்களையும் நன்கு கற்றுச் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். 'சமணசமய சித்தாந்தம்' என்னும் செய்யுள்நூல் ஒன்றை இவர் 1841 ஆம் ஆண்டில் இயற்றினார். இவர் காலமானது 1866 ஆம் ஆண்டில்.

## ௫௯௪. சாந்தக் கவிராயர்

இவர் பிறைசையென்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டு. திருக்குறள் நூற்றுமுப்பத்து மூன்று அதிகாரங்களினு மிருந்து நூற்றுமுப்பத்துமூன்று குறள்

களைத் தேர்ந்தெடுத்துக் குறளுக்குரிய கதையை முன்னிரண்டடி களில் அமைத்து இரங்கேசனை முன்னிலைப்படுத்தி இரங்கேச வெண்பா என்னும் பெயரோடு நூலியற்றியவர்.

"தாடகைதன் மைந்தர் தவமுனியை அச்சுறுத்தி
ஈடரக்க ராஞர் இரங்கேசா—நாடி
வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லைக் கெடும்."

என்பது, வெருவந்த செய்யாமை என்னும் அதிகாரத்திற் குரிய பாட்டு. இந்நாலுக்கு நீதிசூடாமணி என்று மற்ெருரு பெயரும் வழங்குகின்றது.

## ௫௬௫. சாந்தப்பக் கவிராயர் - கு

(19 - நூ.)

தென்பாண்டி நாட்டிலே திக்கெலாம் புகழும் திருநெல்வேலி மாவட்டத்திலே சிவைகுண்டம் பிரிவில் உள்ள சின்னநட்டாத்தி என்னும் ஊரில் அட்டாவதானி குமாரசாமிக் கவிராயர் என்பவருடைய அருமைத் திருமகனாக இவர் தோன்றினார். தந்தையார் பெரும் புலவரும் அட்டாவதானியும் ஆவர். இவர் தம் தந்தையாரிடத்திலேயே இலக்கண இலக்கியங்களைக் கற்றுச் சிறந்த புலமையடைந்து தாமும் பல மாணவர்கட்குக் கல்வி கற்பித்துச் சிறந்து விளங்கினார். விட்டிலாபுரத் தலபுராணம் முதலிய நூல்கள் இயற்றிய இளையபெருமாள் பிள்ளை என்பவர் இவருடைய மாணவராவர். இவர் தம்மாணவர் இயற்றிய விட்டிலாபுரத் தலபுராணத்திற்கு,

"நந்தசுதன் எனத்தரள முடிபு னைந்து
    கோலோச்சி ஞாலங் காக்கும்
சுந்தரபாண் டியநகரை யடுத்தவிட்டி
    லாபுரத்தில் துலங்கும் வள்ளல்
எந்தைமுத் தரசகுல நாதனது
    சரிதையதை யாவர்க்கும் இனிமையாகச்
செந்தமிழுக் குரியவல இளையபெரு
    மாள்கவிஞன் செய்தான் மாதோ."

என்று சிறப்புப்பாயிரங் கூறியுள்ளார். இவர் இயற்றிய நூல்கள் தனிப்பாடல்கள் முதலியவைகளைப் பற்றிய செய்திகள் எவையுந்

தெரிந்தில. மேற்படி புராணநூலார் தமது புராணத்துள் இவ ருக்குக் குருவணக்கங் கூறியுள்ளார். அப்பாடலை இளையபெரு மாள் பிள்ளை என்னுந் தலைப்பிற் காண்க.

## ருசுசு. சாந்தலிங்கக் கவிராயர்

பழமொழி விளக்கம் என்னும் தண்டலையார் சதகத்தைப் படிக்காசுப் புலவர் இயற்றினர் என்று படிக்காசுப் புலவர் வர லாறு கூறுகிறது. ஆனால் சாந்தலிங்கக் கவிராயர் இயற்றினர் என்று வேறு சில வரலாறுகள் கூறுகின்றன. படிக்காசுப் புலவர் துறவுபெற்றுத் தம்பிரானாக விளங்கியவர் என்று தெரி கிறபடியால், சாந்தலிங்கக் கவிராயர் என்னும் பெயர் படிக்காசுப் புலவருடைய இல்லறப் பெயராக இருத்தலுங் கூடுமென்று ஊகிக்கலாம் உண்மை நாளடைவில் துலங்கக்கூடும்.

"கானவருந் தமிழாற்ப னுதனுயர்
தண்டலையார் கருணை யாலே
பானவிலுஞ் சுவைமதுரம் பழுத்தபழ
மொழிவிளக்கம் பலரும் கேட்பத்
தானபரன் பாகைவரு செயராம
லிங்கதுரை சமுகந் தன்னில்
மானமிகுஞ் சொக்கப்பன் வரிசைசெய
அரங்கேற்றி வளம்பெற் றானே."

என்னும் பாடலொன்றும் தஞ்சை அரண்மனைப் புத்தகசாலைப் பிரதியில் காணப்படுகின்றது.

## ருசுஎ. சாந்தலிங்க சுவாமிகள்

இவர் திருமழிசை என்னும் ஊரில் இருந்தவர். ககஅ பாடல்கள் அடங்கிய 'வீராகமம்' என்னும் நூலை இவர் இயற்றி யிருக்கிறார். நூல் வீரசைவ சமயக்கொள்கைகள் அமைந்தது.

"எல்லையில் தவத்தி னாலே
இறையடி வழுத்தப் பெற்றும்
அல்லலாம் பிறவி நீக்கும்
அரனடி அடைந்தி டாமல்

நல்லவா னவர்கள் இன்பம்
  நயந்தருச் சனையில் வேண்டும்
புல்லரால் அறியொ ணாத
  பொற்பதும் வீர சைவம்.''

என்பது நூலில் ஒருபாட்டு.

## ருகூஅ. சாமா சூரியநாராயண பாரதியார்

பாண்டிவள நாட்டில் வேம்பத்தூரில் வாழ்ந்திருந்தவர். சிலேடைப்புலி பிச்சுவையர் என்பவருக்கு இவர் தந்தையார். இவருஞ் சிறந்த புலவர். ஒருகாலத்தில் இவருடைய ஊரில் பஞ்சம் உண்டாயிற்று. அப்போது இவர்,

''கானூர் முதலாகக் கல்லூ ருணிவிளைய
வான மிடித்து மழைபொழியா—தேனைக்
குளம்பெருகி நில்லா கொடுமறையோர் செய்த
விளம்பி வருட வினை.''

என்னும் வெண்பாவைப் பாடினர். இப்பாட்டின் பயனாக மழை பொழிந்து நாடு நலம்பெற்றதென்பர்.

## ருகூகூ. சாமாவையர்

இராமநாதபுரம் மாவட்டம் சிவகங்கைப் பிரிவில் உள்ள வேம்பத்தூரிலே கவிராச பண்டிதர் வழிமுறையில் தோன்றியவர். இவரை ஆண்டியப்பக் கவிராயர் என்றும் கூறுவர். இவர் திருவநந்தபுரத்தில் இருந்த ஆயிலியந் திருநாள் அரசர்மீது 'கங்காவிலாசம்' என்னும் இசை நூல் இயற்றி நன்கொடை பெற்றவர். இவருடைய திருமகனாகிய சௌந்தர பாரதி என்பவரும் சிறந்த புலவராகத் திகழ்ந்திருந்தார்.

## சா00. சாமி ஐயங்கார்

இவர் புதுக்கோட்டைச் சமத்தானத்திலே காரையூரிலே வரதராச ஐயங்கார் என்பவருக்குச் சாலிவாகனசகம் கஎஉகூ விகாரி ஆண்டு ஆவணிமுதல் நாளில் பிறந்து ஷை சகம் கஅஉஅ விசுவாவசு ஆண்டு தைத்திங்கள் பன்னிரண்டாம் நாளில் பரம

பதத்தை அடைந்தார். இவர் வடமொழியிலும் தென்மொழி யிலும் வல்லவர். காலக்கணித நூல்கள் இலக்கண இலக்கிய நூல்கள் முதலியவைகளை நன்கு கற்றுச் சிறந்த புலமை யடைந் திருந்தார். இவர் கணன விளக்கம் என்னும் காலக்கணித நூலை யும், வைகான சாச்சாரியர் அந்தாதி, காரையூர் சுந்தரராசப் பெருமாள் பதிற்றுப்பத்தந்தாதி, இரட்டைமணிமாலை முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார். கணனவிளக்கம், பரகிதாதிப் படலம், உபக்கிரகப் படலம், பஞ்சாங்கப் படலம், பாதசாரப் படலம், இரகணவிதிப் படலம், பொதுவிதிப் படலம் என்னும் ஆறு படலங்களையும் கஅஉ செய்யுட்களையும் உடையதாக விளங்குகிறது.

"மேவரும் உணர்வால் கணன நூல் உணர்ந்த
மேவலர் மொழிந்தஅம் முறையின்
ஆவலாய்ச் சிறியேன் அறிந்தன கொண்டே
அறைந்தனன் பதினெண்கோட் புடமும்
தேவரு மதிக்கும் வரருசி முனிவன்
செப்பும் வாக்கியவிதிப் படியே
பூவலயத்தோர் புகழ்பஞ்சாங் கத்தின்
புடஞ்சிறி தறைவனெண் டொடியே."

என்பது பஞ்சாங்கப் படலத்தில் ஒருபாட்டு. நூலுக்குச் சோழ வந்தான் அரசன் சண்முகனார் முன்னுரை யெழுதியிருக்கிறார். புதுக்கோட்டை புலவர் சுவாமி விளங்குளத்தார் ஐயாத்துரைப் பிள்ளை, பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், நெற்குப்பை இராமசாமி ஐயங்கார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கின் றனர்.

## சூ௦க. சாமி குப்புச்சாமி - தே. அ (20 - நூ.)

இவர் சென்னைமாநகரில் புரசவாக்கத்தில் வசித்திருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் அங்கப்பர். ஐயாக்கண்ணு தேசிகர் என்பவரிடத்தில் அருளுரை பெற்றவர். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள்:

க. குருஸ்தவம்
உ. போதவிளக்கம்

௩. சொரூபானந்த விளக்கம்
௪. அநுபவானந்த விளக்கம்
௫. சாமி விளக்கம்
௬. திருவள்ளுவர் தோத்திர விளக்கம்
௭. கற்பு விளக்கம்
௮. கருணை விளக்கம்
௯. அன்னதான விளக்கம்
௧௦. நன்மதி தீபம்
௧௧. விபூதி விளக்கம்
௧௨. ஞானசார விளக்கம்
௧௩. துறவுநிலை விளக்கம்
௧௪. இல்லற விளக்கம்
௧௫. அறிவுநிலை விளக்கம்

முதலியன. இவரோடு கோ. வடிவேலுச் செட்டியார் நெருங்கிய தொடர்புடையவராக இருந்தார். இவருடைய நூல்கள் ஒவ்வொன்றுக்கும் அறிஞர்கள் பலர் சிறப்புப்பாயிரம் அளித்துள்ளனர்.

> ''அண்ணுந்து நீற்றை அரகரா என்றணிவார்
> பண்ணுமா பாவம் பறந்தோடும்—விண்ணில்
> நெடுங்காலம் வாழ்வார் நிமலனடி சேர்வார்
> கடும்பிறவி மேவார் கதித்து.''

என்பது விபூதி விளக்கத்தில் ஒரு பாட்டு.

## ௬௦௨. சாமிக் கவிராசர்

இவர் கல்லிடைக் குறிச்சியில் இருந்தவர். சுப்பிரமணியக் கவிராயருடைய தந்தை. இவர் கல்வி கேள்விகளில் சிறந்தவர். திருவாவடுதுறை யாதீனத்தில் சுப்பிரமணிய தேசிகர் என்பவர் காலத்தில் உடனிருந்தவர். இவரால் செய்யப் பெற்ற நூல்கள் தொகை நிகண்டு, சாமிநாதம் என்னும் இலக்கண நூல் முதலியன. சாமிநாதம் என்னும் இலக்கண நூலைச் சுப்பிரமணிய தேசிகருடைய விருப்பப்படி செய்தார் என்பது,

"பூமிசைப் பன்மொழியின் வேங்கடமுக் கடற்குள்
புணர்தமிழைந் தியல்நிகண்டாய்ந் தார்எளி தின்உணரத்
தேரமின் முன்னூல் வழியொருநூல் வேண்டுமெனத் துறைசைச்
சுடர்மணிசுப் பிரமணிய குருமணிபார்த் தருள
ஆமிதெனக் குருபதமும் திருக்குறிப்புந் தலைக்கொண்
டகத்தியனைச் சிவசுப்ர மணியனென ஈன்ற
சாமிகவி ராசன்அதி குலத்தோன்கல் லிடையூர்ச்
சம்பனன்செய் தனன்சாமி நாதமென் றிந்நூலே."

என்பதனாற் பெறப்படும்.

## ௬௦௩. சாமிநாத ஆசாரி (தஞ்சை)
(19 - நூ.)

இவர் தஞ்சைமாநகரில் இருந்தவர். இராசமன்னார்கோயில் கன்னைய சுவாமிகள் என்னும் பெரியாருக்கு மாணவராகி இசைப் புலவரானார். இலக்கிய இலக்கணப் பயிற்சியும் இவருக்கு நன்கு அமைந்திருந்தபடியால் செய்யுள் பாடுந் திறமையுஞ் சேர்ந்திருந் தது. கோவிந்தராச பாகவதர் என்பவர் இயற்றிய 'பகவத்யான கீர்த்தனம்' என்னும் நூலுக்கு இவர், இரண்டு செய்யுட்களாற் சிறப்புப்பாயிரம் பாடினார்.

"சீதமலி வேலூர்வாழ் பள்ளிகொண்டான்
செய்தவநற் சிறப்பான் வந்த
போதமலி கோவிந்த ராசன்என்னும்
புலன்மிக்கான் புவிமடந்தை
நாதனடிக் குப்பகவத் யானகீர்த் தனமொன்று
நவின்றிட் டானவ்
ஏதமிலா இரும்புகழை நாவினால்
நுவல்வதெவ ரியல்வல் லோரே."

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## ௬௦௪. சாமிநாத தேசிகர் - ௬

இவர் திருக்கயிலாய பரம்பரைத் திருவாரூர் சுத்தாத்துவித சித்தாந்த சைவாச்சாரியர் கூட்டத்தில் ஒருவர். இவர் சந்தானா சாரிய புராண சங்கிரகம் என்னும் நூல் இயற்றியிருக்கிறார். அதனுள் மெய்கண்ட சிவாசாரியர் புராணம், அருணந்தி சிவா

சாரியர் புராணம், மறைஞான சம்பந்த சிவாசாரியர் புராணம், உமாபதி சிவாசாரியர் புராணம் ஆகியவைகள் அடங்கியுள்ளன.

"உரைத்தருளி வாழ்நாளில் சின்னாட் பின்னர்
உயர்வுடைய தங்குலத்துக் குரவரான
திருத்துறையூர் ஆகமபண் டிதர்தாம் தம்மைத்
தெரிசிக்கா திருக்கின்றான் திருவெண் காடன்
பொருத்தமுற நாமங்குச் சென்று காண்டும்
பூம்பொழில்வெண் ணெய்ப்பதியில் பொலிய வென்றே
வரச்சிலரை முன்விடுத்தார் அவர்கள் கூறும்
வாய்மைகேட் டகமகிழ்ந்தார் வெண்ணெய் வாழ்வார்."

என்பது மெய்கண்ட சிவாசாரியர் புராணத்தில் ஒருபாட்டு. தேவிகோட்டை வீர. லெ. சிங்கயச் செட்டியார், திருவாரூர்ச் சுந்தரேச பாரதியார், சுவாமிநாத பண்டிதர் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"திருவா ரூரின் ஒருவா மணஞ்செய்
குடிவாய் வருபழ அடியார் குழாத்துள்
அகத்திய கோத்திரம் மிகப்பொலி தரத்தோன்
ஒப்புயர் வகன்ற சுப்பிர மணிய
சற்குரு ராயன் முற்குயில் தவத்தால்
புத்திரன் என்ன இத்தலத் துதித்தோன்
சத்தினி பாதத் துத்தமர் பொருட்டால்
வந்த சைவ தந்திர நவிலும்
பாதம் நான்கும் ஏதமின் றறியூஉ
அகத்தும் புறத்தும் உகப்பி னாங் கன்பால்
ஈசனை வைகலும் பூசனை ஆற்றுவோன்
மூவகைத் தீக்கையும் மாஅபி டேகமும்
நிரலே பெற்று வரநெறி நின்றுளான்
தன்மா ணக்கரை நன்மாண் கதியில்
புகுத்தும் போதக மகத்துவம் படைத்தோன்
தென்மொழித் தெளிவும் பன்மொழிப் பயிற்சியும்
பாட்டிசை விரகுங் கூட்டர வுடையோன்
சீரார் கங்கைசூழ் வார ணசியைப்
பலமுறை போய்த்தொழு நலமலி தூயோன்
மேதகைச் சுவாமி நாததே சிகனே."

என்னும் சிங்கயச் செட்டியாருடைய சிறப்புப்பாயிரப் பிற்பகுதி இவருடைய வரலாற்றை ஒருவாறு விளக்குகின்றது. இவர் காசி மாநகர்க்குச் சென்று அங்கு இறைவன் திருவடிநீழலை அடைந்தா

ரென்பது பின்வருஞ் சுவாமிநாத பண்டிதர் செய்யுளாற் பெறப் படுகின்றது.

''சந்தாநு சாரியர்கள் புராணசங்
    கிரகமதைத் தமிழில் தந்தான்
நந்தாறு ஒலிசெய்யும் நற்றிருவா
    ரூர்ப்பிறந்து காசி நண்ணிப்
பிந்தாறு வவனருளால் பேசரிய
    அத்துவித முத்தி பெற்ற
முந்தாறு நற்சாமி நாததே
    சிதன்கலைகள் முற்ற வோர்ந்தே.''

## கூ௦டு. சாமிநாத தேசிகர் - சி (19 - நூ.)

இவர் திரிசிரபுரம் பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்களுடைய மாணவர்களில் ஒருவர். மேற்படி பிள்ளையவர்க ளிடம் கல்விகற்றுச் சிறந்த புலமையடைந்தார். "திருவநந்தபுரம் பல்கலைக் கழகத்திற்குத் தமிழாசிரியர் ஒருவர்வேண்டும். உங்கள் மாணவர்களில் தக்கவரைத் தெரியப்படுத்துங்கள்" என்று மேற்படி கழகத்தினர் கேட்டபோது பிள்ளையவர்கள் இத்தேசி கரையே மேற்படி பல்கலைக் கழகத்திற்கு ஆசிரியராக அனுப்பி வைத்தார். அரித்துவார மங்கலம் ப. சோமசுந்தர தேசிகர் என் பவர் இயற்றிய "சிவாலய மான்மியக்கோவை" என்னும் நூலுக்கு இவர்,

''மைக்கடல் வயிற்றிடு மைத்திரா வருணி
கையயிற் றந்த மொய்திரை நதியின்
வடகரை தென்கரை வளர்பொரு ளீழம்
பாண்டி மாமலை பார்புகழ் கொங்கு
நடுநா டுடனே தொண்டைநன் னாட்டும்
துளுவ நாட்டுஞ் சொல்வட நாட்டும்
மூவர் பதிகம் மொழிந்த பஃறலம்
மரீஇச் சிவாலய மான்மியக் கோவை
என்னும் நாமத் தியற்றின னொருநூல்
வெண்கடற் கருவிடஞ் செம்மிடற் றடக்கித்
தங்க ளுயக ரின்னுயிர் தந்தும்
மங்கலங் காத்த மாட்சிய னின்னும்
இடர்வரிற் போக்கும் அரனெனும் உண்மை

தெரிந்தர மகளிர் துணைவர் சேர்தர
வந்து வசிக்குந் தன்மையின் வண்மைய
மாதர்தந் தவரொடு மருவி வாழ்வுறுங்
குலாசலந் திரிந்தன கொடியணி மாளிகை
புக்கி லரங்கம் பொருவில் கல்லூரி
சித்திர கூடஞ் சிறப்புறு மன்றம்
மாகா றுலவு மேகாந் தஞ்சூழ்
அரித்து வார மங்கலத் தன்பொடு
கல்வி வாய்மை கனிப்பி னிறைந்த
பழனி யப்பப் பண்பினன் றவமே
ஒருருக் கொண்டதை யொப்பத் தோன்றி
இலக்கண விலக்கிய மினையி லாகமம்
ஒருங்கே யாய்ந்து பெரும்புகழ் வாய்ந்த
சோம சுந்தர தேசிகன்
எனப்பெயர் புனைந்த கவிஞரேறே.''

என்னும் நேரிசை யாசிரியப்பாவினால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௬௦௬. சாமிநாதபிள்ளை—சிவ, அ (1910)

இவர் சோழவளநாட்டில் தஞ்சைமாவட்டத்தில் வேதியர்புரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் அருணசல பிள்ளை. சிவநெறிச் செல்வராகிய இவர் திருத்தில்லையிலும் வாழ்ந்திருந்தார். வேளாள குலத்தினராகிய இவர் 'வேளாள சூளாமணி' என்னும் நூலை இயற்றியிருக்கிறார். வினவிடையில் அமைந்த அந்நூல் தக்க எடுத்துக் காட்டுகளோடு அமைந்துள்ளது. சதுர்வருண விளக்கம், சதுர்வருணதருமம், சூத்திரவிவரணம், வைசியரின் உட்பிரிவு, வேளாளரின் பூர்வநாம விளக்கம், வேளாள நாமவிளக்கம் முதலிய உட்பிரிவுகளைக் கொண்டு விளங்குகிறது.

நூலைப்பாராட்டிச் சுந்தரமூர்த்திப் பௌராணிகர், ந. மு. வேங்கடசாமி நாட்டார், திரிசிரபுரம் அமிர்தம் சுந்தரநாத பிள்ளை, மதுரை திருமலைமுத்துப் பிள்ளை, தஞ்சை இராமையா வஸ்தாது, தென்பிரம்பூர் நடராச ஐயர், வெள்ளாம் பிரம்பூர் துரைசாமிச் சோழகர், இராசேந்திரம் வைத்தியலிங்கம் பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். சித்திரகவிப் புலவர் ஒருவர்,

"சீர்பரவும் வேளாளர் வைசியரென்
றோர்நூலைத் திரட்டி யீந்தான்
பார்பரவுந் தில்லையரு ணாசலவேள்
தவத்தினிலும் பவித்த சீலன்
ஏர்பரவுஞ் செந்தமிழின் இயலுணர்ந்தோன்
இரக்கமுறும் இன்சொல் லாளன்
நீர்பரவு நெடுஞ்சடிலச் சிவபெருமான்
திருவடியை நீங்காத் தொண்டன்."

என்று புகழ்ந்துள்ளார்.

"கான்மேவும் வரிவேங்கைக் கொப்புறத்தன்
னுடலின்வரை காணத் தீட்டித்
தான்மேவும் பூசையெனக் கற்றறிந்தார்
போனடித்துத் தரணி மீதே
நான்மேவும் படிவேளாண் மரபினர்வை
சியரென்றே நவின்றேன் இந்த
நூன்மேவும் வழுவகற்றி அறிஞர்பொரு
ளோர்வரென்ற நோக்கத் தானே."

என்பது இவரியற்றிய அவையடக்கப் பாடல்.

## ௩௦௭. சாமிநாத பிள்ளை

இந்தியக் கிறித்துவராகிய இவர் கோயமுத்தூரில் தமிழாசிரியராகத் தொழில் புரிந்திருந்தார். கோவை கந்தசாமி முதலியார் "கிள்ளைவிடுதூது" என்னும் நூல் ஒன்றை இயற்றினர். இவர் அதற்கு மறுப்பாகப் "பிள்ளைவிடுதூது" என்னும் நூல் ஒன்றை இயற்றி வெளியிட்டார். பிறகு மறுப்புக்குமேல் மறுப்புக்கள் தோன்றிச் சிலகாலம் புத்தகப்போர் தாள்வாயிலாகவே நடைபெற்றது. இந்து சமயத்தில் தோன்றிய இவர் கிறித்துவராக மாறியும் பழைய பெயரை விடாமலே மேற்கொண்டிருந்தார்

## ௩௦௮. சாமிநாத பிள்ளை - பி
### (கி. பி. 1891-)

இவர் பாண்டிவளநாட்டிலே திக்கெலாம் புகழும் திருநெல்வேலிச் சிந்துபூந்துறையில் வசித்திருந்தவர். தந்தையார் பெயர் பிச்சையாப் பிள்ளை. இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த

புலமை யடைந்தபின் திருநெல்வேலிமாவட்டத் தலைவர் அலுவலகத்தில் உதவிக் கணக்காளராகத் தொழில் புரிந்தவர்.

ஓழிவு நேரங்களில் நூல்களைப் படிப்பதையும் இயற்றுவதையுந் தொழிலாகக் கொண்ட இவர் விநாயகபுராண சங்கிரகம் என்னும் நூலை இயற்றியிருக்கிறார். அந்நூல் ஆயிரத்து முந்நூற்றறுபது செய்யுட்களையுடையது. கச்சியப்ப முனிவரின் விநாயக புராணத்தை முதல்நூலாகக் கொண்டது.

''இலக்கணக் கச்சி யப்பநன் னாமம்
இயைந்தமா முனிதமி ழியலால்
துலக்குபா சலையே இலையே என்னத்
தொகுமிரு காண்டமாப் படலம்
விலக்குதொன் னூற்றொன் றுவிரு மூன்று
யிரத்திரு நூற்றிரு பதின்மூ
நிலைத்திரு விருத்தத் தமைத்தனன் நாமம்
விநாயக புராணமா நிறுவி.

அனையதொல் புராண விரிவினைப் பரிவில்
ஆய்பவர் இருக்கவ லையர்தம்
மனநிலைக் கெளிதாச் சுருக்கயாப் பினதா
வகுக்கவெண் மதியின்முன் னுதலும்
புனைபுகழ்ப் பாண்டி நாட்டில்நெல் வேலிப்
பொன்னகர்ப் பாங்கமர் பொருனை
எனுநதிச் சிந்து பூந்துறைச் சித்தி
விநாயகர் இனிதருள் செயலால்.''

என்பன நூல்வரலாற்றுப் பாடல்கள். இந்நூலைப் பாராட்டி அரன்வாயில் வேங்கட சுப்புப்பிள்ளை, தென்காசி கனக சபாபதியா பிள்ளை, புளியங்குடி முத்துவீரக் கவிராயர், திருநெல்வேலி சிவராம பிள்ளை, நெல்லையப்ப பிள்ளை, சிறுக்குளம் க. தாமோதரம் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். இந்நூல் 1890 ஆம் ஆண்டில் திருநெல்வேலி இந்துதேசாபிமானி பதிப்பகத்தில் அச்சிடப்பட்டு வெளியாகியுள்ளது. புளியங்குடி முத்துவீரக் கவிராயர் பாடலில் ஒன்றை அடியிற் காண்க:

''நாமிநா தரவுசெய்வோ நவைதீர
எனநவின்ற வரைப்பு ரந்த
பூமிநா தனையலைந்து புவியினுள
உயிர்க்கன்பு புரியு நீரான்

காமினு தலமெனும்பூங் குழலிடைமு
ரலர்விரும்பு கவின்சே ரரகன்
சாமிநா தனென்மகிபன் தயாதரும
சீலநிறை பொறைதழைத்தோன்.''

## கூ0கூ. சாமிநாத பிள்ளை (ஆரைமாநகர்)

இவர் பெருகுலயல் என்னும் ஊரில் எழுந்தருளிய இரணவெலி முருகன்பேரில் 'காதல்' என்னும் நூல் இயற்றியுள்ளார். அந்நூல் சர்வதாரி யாண்டில் பதிப்பித்து வெளியிடப் பெற்றுள்ளது.

'' போதின் மலையான் பொதியமெனு மாமலையான்
நேரா தனைமதியான் நேரார் தனை மதியான்
சூரர் தனைமதியான் துலங்கும்வைகை மாநதியான்.''

என்பன நூலின் சில அடிகள்.

## கூகO. சாமிநாத பிள்ளை - தா
### (19 - நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் பையனூரில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் வாழ்ந்திருந்தவர். இவர் தோன்றிய குலம் கருணிகர் குலம். தந்தையார் பெயர் தானப்ப பிள்ளை. இவர் திருப்போரூர் முருகக்கடவுள்மீது கலம்பகம் பாடி யிருக்கிறார். கலம்பகத்தைப் புகழ்ந்து, மயிலை சண்முகம் பிள்ளை, புதுக்கோட்டை தெய்வசிகாமணிப் பிள்ளை, திருவாவடுதுறை சிதம்பரதேசிகர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' சூலிவாழ் பிரணவமா மலையின் கீழ்பால்
துலங்குதிருப் போரூரில் சுடராய் நின்று
பீலிமேல் இவர்சாமி நாதன் தன்மேல்
பிரபந்தக் கலம்பகப்பாப் பேசி னானால்
சாலிவா கனசகமா யிரத்தெண் ணூறில்
தங்குமாச் சுரவருடந் தனிலே இந்தச்
சாலிவளர் பையநகர்க் கருண சீலன்
தானப்பன் சுதன்சாமி நாதன் தானே.''

என்பது ஆக்கியோன் பெயர் கூறும் பாட்டு.

"கார்க்குலங்காள் உம்மைக் கருதித் தொழுகின்றேன்
பார்க்குளுயர் போரூரன் பாற்போயத்—தீர்க்க
வடப்பந்தார்க் கொங்கைமின்னாள் மையலுற்றாள் என்றவன்
கடப்பந்தா ரைக்கொணர்வீர் காண்." [தோட்

என்பது கலம்பகத்தில் மேகவிடுதூது.

## சுகக. சாமிநாத பிள்ளை - கி
## (19 - நூ.)

இவர் பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் புதுச் சேரியில் இருந்தவர். இவர் ஏசுநாதர்மீது பிள்ளைத்தமிழ், ஞானதிக்கராயர் காப்பியம் ஆகியவைகளைப் பாடியிருக்கிறார். நூறுபாடல்களைக் கொண்ட இப்பிள்ளைத்தமிழ் 1864 ஆம் ஆண்டில் அச்சிற் பதிப்பிக்கப் பெற்று வெளிவந்திருக்கிறது. சிறுதேர்ப் பருவத்தில் ஒருபாட்டை அடியிற் காண்க:

"ஆறரிய மெய்ஞ்ஞான மேபலகை யாகவும்
அறமிரண் டாழி யாக
அழகொடு புணைந்துபொற் றேரென நடத்தியில்
அகிலமைந் தர்கள் அறியவே
கூறரிய மோட்சத் தூடத்துநெறி யோடுநடை
கொண்டண்ட மீதில் வைக்கக்
குணவாச னேதவத் துணைநேச னென்றுமே
கோடாத வெற்றி விருதோய்
மாறரிய நின்மகிமை வெண்கவரி தாய்வீச
மருவியரு ளேதமைக்க
வானுலகு மண்ணுலகு மற்றுயிரு மேவாழ்த்த
வல்லபத் துற்ற பரனே
தேறரிய நன்மறைமை தன்னைப் புகழ்ந்துநற்
சிறுதேர் உருட்டி யருளே
தெய்வீக ஏசுவே மைவிக வந்தவா
சிறுதேர் உருட்டி யருளே"

ஞானதிக்கராயர் காப்பியமென்பது, ஞானதிக்கன் வரலாற்றைக் கூறுவது முப்பது படலங்களையும் இரண்டாயிரத்து இருநூற்று இருபத்திரண்டு பாடல்களையுங்கொண்டது.

"வானதிக் கத்திருந்த வளிச்சுதனைக் கன்னிமுகைத்
தேனதிக் கஞ்சிதையாச் செழுமையுடன் பயந்தமரி

வேனுதி கப்பதத்தில் வீழ்ந்திறைஞ்சித் தவத்துயர்ந்த
ஞானுதிக் கன்சரிதை நயப்பயனை நவிலலுற்ரும்.''

என்பது நூலின் தொடக்கப் பாடல்.

'' புதுவை நகரில் புகழுற விருந்த
கங்கைகு லாதிபன் காவியந் தாரான்
சங்கைவே ளாளன் தண்கா ராளன்
உவரியை உடையா உடுத்தபூ வைசியன்
சவரிமுத் தென்பான் தந்தருள் தனையன்
சாமி நாதன் சாற்றியித் தமிழை
நேமி நாதன் நிலைமறை விளங்கக்
குன்றினில் வைத்த கொழுஞ்சுடர் விளக்கென
என்றுநின் றோங்கி இலங்கச் செய்தனன்.''

என்னுஞ் சிறப்புப்பாயிரப் பகுதியால் தந்தையார் பெயர், குலம் முதலிய செய்திகள் விளங்குகின்றன.

## ௬௧௨. சாமிநாத பிள்ளை - மு
## (19 - நூ.)

இவர் திரிசிரபுரம் கோட்டை ஆண்டார் தெருவில் முத்துக் கறுப்ப பிள்ளை என்பவருக்கு மகனுகத் தோன்றி ஆங்கிலம் தமிழ் முதலியவைகளை நன்கு கற்றுணர்ந்தார். அலுவலகம் ஒன்றில் எழுத்தாளராகப் பணிபுரிந்தார். தமிழிற் செய்யுளி யற்றும் ஆற்றல் பெற்ற இவர் வேலாயுதக் கண்ணி முதலிய நூல்களைப் பாடியுள்ளார் இந்நூலைப் புகழ்ந்து திரிசிரபுரம் நாராயண பிள்ளை, இராமநாத புரம் அட்டாவதானம் வேலாயுதக் கவிராயர், திரிசிரபுரம், சு. வைத்தியநாத பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' மண்ணுலகில் புல்லறிவெ லாந்திரண்டோர்
உருவாகி வந்ததேபோல்
எண்ணநடை பயினுமெனக் கிருமைவகை
தமிழ்நடையால் இயைய நோக்கும்
கண்ணுதலான் அருள்விருப்பான் கவிஞன்நா
ராயணன்தன் கழல்கள் போற்றி
விண்ணவர்கள் பயந்தொலைத்த வேலவன்தாட்
கொருகண்ணி மிலைதல் செய்வேன்.''

என்பது நூலில் குருவணக்கம்.

## ௬௧௩. சாமிநாதப் புலவர் (முகவை)

இவர் இராமநாத புரத்தில் இருந்த புலவர். இவர் சருக்கரைப் புலவரோடு ஒருங்கு கற்றவர். சருக்கரைப் புலவர் இயற்றிய வேதாந்த சூடாமணி உரைக்கு இவர்,

"உரைதருவே தாந்தசூ ளாமணியுட் பொருளை
உலகினுளோர் உணரஉரை செய்கவெனக் கடல்சூழ்
தரையரையன் சேதுபதி அமாத்தியனுந் தாமோ
தரன்கங்கா குலதிலகன் தகுதிபெறச் சாற்ற
வரையறுத்துச் சித்தாந்தப் பொருட்டிறனுந் தோன்ற
வகுத்தனனற் றுறைசைநமச் சிவாயதே சிகன்தாள்
பரவுசிவக் கொழுந்துநிதி யருள்கல்விக் கடலைப்
பருகுமுகில் சர்க்கரைநற் பாவலர்கோ மானே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௬௧௪. சாமிநாதப் புலவர்

கொங்குவள நாட்டிலே விசயமங்கலம் என்னும் ஊரிலே இப்புலவர் சிறந்து விளங்கியிருந்தார். வாக்குப் பலிதமுள்ள சிறந்த அறிஞர். புலவர்களையெல்லாம் பிடித்தாட்டிய வறுமை இவரையும் அடுத்தாட்டியது. அதனால் மிகுந்த தொல்லைக்குள்ளாகிய இவர் செல்வர்களை அடுத்துப் பரிசில்பெற விரும்பினார். அந்நாளில் பொன்கலூர் நாட்டில் புற்றிரைச்சல் என்னும் ஊரில் முத்தான் என்பவன் சிறந்த செல்வனாகத் திகழ்ந்திருந்தான். அவன் ஊர்த் தலைவனாகவும் இருந்தான்.

சாமிநாதப் புலவர் முத்தானிடஞ் சென்று, "வறுமைத் தொல்லை மிகுதியாக இருக்கிறது. நெல் உதவிசெய்யவேண்டும்," என்று வேண்டினார். அவன்மீது புகழ்ப்பாக்களும் பாடினார். அவனிடம் அப்போது நெல்மிகுதியாக இருந்தது. ஆயினும் அவன் இப்புலவருக்கு உதவிசெய்ய விரும்பவில்லை. "என்னிடத்திலே நெல்இல்லை வேறு எவரிடமாவது சென்று கேளும்," என்று கூறிவிட்டான்.

புலவர்க்கு மிகுந்த மனவருத்தம் உண்டாகியது.

"பாழ்த்தவவப் புற்றிரைச்சற் பாவிமுத்தான் குன்றையொப்ப
விழ்த்தநெற்போர் வெண்பொடியாய் வேகவின்றே-வாழ்த்தக்

*கொடாதான் இடாதான் குறுந்துணியுந் தோய்த்தே*
*உடாதான் பெருந்துயருள் உற்று."*

என்று வசைகவி ஒன்றைப் பாடினார். அவ்வளவில் முத்தானுடைய வைக்கோற் போர்கள் தீப்பற்றியெரிந்து சாம்பராகி விட்டன. கார்மேகக் கவிஞர் தாமியற்றிய கொங்குமண்டல சதகத்தில் இச் செய்தியைப்,

*"போயா தரவுட னெற்போர் கிடந்திடப் புற்றிரைச்சல்*
*தீயார வெந்து பொடிபட வென்றன்று செந்தமிழால்*
*ஓயாத வாக்கிதென் மங்கைச் சுவாமியென் றோர்புலவன்*
*வாயார அங்கதம் பாடின துங் கொங்கு மண்டலமே."*

என்று கூறியுள்ளார். கோவைக்கிழார் திரு. சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களிடம் உள்ள கையெழுத்துப் பிரதியில் சாமிநாதப் புலவர் என்னுந் தலைப்பின்கீழ் பின்வருஞ் செய்திகள் எழுதப்பெற்றுள்ளன. இருவரும் ஒருவரா வேறானவர்களா என்பது அறியமுடியவில்லை. இவருடைய வழிமுறையினரும் ஒரே பெயருடையவர்களாகவும் புலவர்களாகவும் விளங்கினார்களென்று தெரிகிறது.

இருநூறு யாண்டுகட்குமுன் கொங்குவள நாட்டில் ஆனைமலையில் சாமிநாத பிள்ளை என்னும் புலவர் ஒருவர் இருந்தார். அப்போது அங்கே வீரப்பமுதலி என்னுங் குடியானவன் ஒருவன் இருந்தான். அவன் பொன்தாலி கட்டினபெண்களைக் கண்டால் அதனைப் பிடுங்கிக்கொண்டு மரத்தாலியும் மண்தாலியும் கட்டி விடுவான். அவன்மீது ஒரு புலவன் நூல் ஒன்று பாடிக்கொண்டு வந்தான். அப்போது அங்கே சாமிநாத பிள்ளையும் இருந்தார். நூலில் குற்றம் இருந்தபடியினால் அப் புலவனை மிதியடிக்கட்டையினால் அடித்துவிட்டார் புலவர். அப் புலவன் இழிவடைந்து ஓடிப்போய் விட்டான்.

சிலநாளிற் சாமிநாத பிள்ளை இறந்தார். அவருடைய மகன் மருதநாயகம் பிள்ளை தம் மாமனார் சோழமாதேவி வயிரமுத்துப் பிள்ளையின் வீட்டிற்குப்போய்ச் சேர்ந்தார். அந்த வயிரமுத்துப் பிள்ளையும் இறந்துபோனார். பிறகு அவருடைய பெண்களை யழைத்துக்கொண்டு ஆனைமலைக்கே வந்து அங்கு வீரப்ப முதலியின் தங்கை அம்மணியம்மாளின் உதவியில் இருந்தார்.

அந்த அம்மாளுடைய செல்வாக்கினால் நாற்காலியில் உட்கார்ந்தே கட்டளையிடுவார். அப்போது முன் அடிபட்ட புலவன் வந்தான். அம்மணியம்மாள் மருதநாயகம் பிள்ளையை அப்புலவன் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுமாறு செய்தாள்.

ஆனைமலையில் மூன்று ஆண்டுகள் மழையில்லாமற் போய் விட்டது. மருதநாயகம் பிள்ளையை மழைக்கண்ணி பாடுமாறு வேண்டிக்கொண்டார்கள். உடனே மழைபெய்தது. அதற்காக அவருக்குச் செப்புப்பட்டயமுங் கொடுத்தார்கள். அவருடைய சீர்த்தி நாடு முழுவதும் பரவியது. அவர் உறங்கும்பொழுது அடுத்த வீட்டில் நெல்குத்தவுங்கூடமாட்டார்களாம். அவருடைய வசையின்மீது அவ்வளவு அச்சமாம்.

முன்புலவனை அடித்தபடியால் இவருடைய வழிமரபில் எவ்வளவு குழந்தைகள் பிறந்தாலும் ஒன்றுதான் கடைசியில் எஞ்சுமாம். அவருடைய மகன் சாமிநாத பிள்ளை உபாத்தியாயராக இருந்தார். அவர் மகன் முத்துச்சாமிப் பிள்ளை அவ்வூரின் பள்ளும் அபிராமியின் பேரிற் பதிகமும் பாடினார். பள்ளுகாணப் படவில்லை; பதிகம் இப்பொழுது வழங்கிவருகிறது. அதில் ஒரு பாட்டு,

"அன்பான ஆனைமலை மிகவும் வாழி
அதனில்வளர் குடிவரிசை அனைத்தும் வாழி
இன்பமுடனே எந்தத் திக்கும் வாழி
இயல்புபெற்ற சோமீசர் இனிது வாழி
பண்பான கவிவாழி படித்தோர் வாழி
பாரதனை அளந்தநெடு மாலும்வாழி
நண்பான செங்கோல்தான் நன்கு வாழி
நன்செய் புன்செய் அனுதினமும் நன்கு வாழி"

என்பது. இவருடைய மகன் கருப்பண்ண பிள்ளை மருத்துவத்திலுங் காலக்கணிதத்திலும் வல்லவர். இவர் நாட்டுராய சாமி பேரிலும் மகா மாரியம்மன் பேரிலும் மசானியம்மன் பேரிலும் இரண்டாயிரத்தைந்நூறு பாடல்கள் பாடியுள்ளார். சுப்பிரமணியம் என்னும் கணிதநூலுஞ் செய்திருக்கிறார். இவருடைய மகன் சாமிநாத பிள்ளை என்பவரும் தமிழிலும் காலக்கணிதத்திலும் வல்லவராயிருந்தார்.

## சுகரு. சாமிநாத முதலியார் - ஐ
(கி. பி. 20)

மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் மாணவராகிய தியாகராசச் செட்டியார் கும்பகோணம் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தபோது இவர் அவரிடம் தமிழ்க் கல்வி கற்றூர். உ. வே. சாமிநாதையரோடு இவர் குடந்தையில் இருந்து தஞ்சைக்குச் சென்றபோது, தஞ்சைக் கோயில் விமானத்தைக் கண்டவுடன் ஒரு வெண்பாப் பாடுமாறு ஐயர் இவருக்குக் கட்டளையிட்டார். இவர் உடனே,

> " ஊனப் பிறவி ஒழிப்பாயே நன்னெஞ்சே
> கானத்தில் நட்டமிடுங் காலுடையார்—ஞானத்
> திருவுடையார் அம்மைபங்கில் சேர்வுடையார் தஞ்சைப்
> பெருவுடையார் தம்மைநிதம் பேசு "

என்னும் வெண்பாவைப் பாடினூர். இவர் சாவித்திரியின் கதையை உஉச வெண்பாக்களாகப் பாடியிருக்கிறூர். நூலைப் பாராட்டிச், சூரியனூர் கோயில் ஆதீனம் முத்துக்குமார தேசிகர், தருமபுரம் சண்முக சுவாமிகள், உ. வே. சாமிநாதையர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> " பூமாரி வான்பெய்யப் பொன்மாரி கோன்பெய்தான்
> தூமாரி யைப்பெய்யச் சொற்றிடுவாள்—தேமாரி
> பெய்யுநறுங் கோதையினைப் பேணுமிளஞ் சாலுவர்கோன்
> துய்யவிரு தோளேற்றச் சூழ்ந்து "

என்பது நூலில் ஒருபாட்டு.

## சுகசு. சாமிநாத முனிவர்

இவர் சாத்திரம் சாமிநாத முனிவர் எனவுங் கூறப்பெறுவர். திருவாவடுதுறை ஆதீனம் பத்தாவது ஞானசிரியராக எழுந்தருளியிருந்த முன்வேலப்ப தேசிகருடைய மாணவர். அப்பெரியாரிடம் இலக்கண இலக்கியங்களையும் சைவசித்தாந்த நூல்களையுங் கற்றுத் தேறியவர். திருவாவடுதுறைப் புராணத்தை இரண்டாயிரத்தறுநூறு செய்யுட்களில் இயற்றித் தம்முடைய ஆசிரியர் முன்பு அரங்கேற்றினூர். தஞ்சையை ஆண்ட துளசேந்திர

மாமன்னரின் விருப்பப்படி ஆயிரத்து இருநூற்றெழுபது செய் யுட்களடங்கிய திருப்பெருந்துறைப் புராணத்தையும் இவர் இயற்றினார். மேற்படி சிவப்பதிக்குக் கலம்பகம் ஒன்றும் இவ ரால் இயற்றப் பெற்றது.

## ௬௧௭. சாமிநாதர் - மு

ஈழவள நாட்டில் வட்டுக்கிழக்கு என்னும் ஊரில் முத்துக் குமாரர் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். குமார மடப்பளி யார் என்னும் வகுப்பினர். இலக்கண இலக்கியங்களிலும் காலக்கணிதத்திலும் வல்லவர். இவருடைய மகனாகிய சண்முகச் சட்டம்பியார் என்பவரும் சிறந்த அறிஞராக விளங்கியிருந்தார். இருபாலைச் சேனாதிராய முதலியார் என்பவர் சாமிநாதரிடம் இராமாயணத்தைப் பாடங்கேட்டுணர்ந்தார். இவர் பலருக்குங் கல்விபோதிப்பதிலேயே தம்முடைய காலத்தைச் செலவிட்டார். இவர் தனிப்பாடல்கள் பல இயற்றியிருக்கிறார். நவாலியில் கலை யோடைக் கண்ணகையம்மன் கோவிலுக்கு இவர் சென்றபோது கோவிலுக்கு அண்மையான ஓரிடத்தில் கீரியும் பாம்பும் எலி யுங் கூடி விளையாடிக்கொண்டிருந்ததைக் கண்டு,

> "மலியா ணவமலி மாயைகையை நீக்கி மலர்ப்பதத்தைச்
> சொலியா தரவொடு தோத்திரஞ் செய்யச் சுகந்தருவாய்
> எலியா டரவொடு கீரியொன் றாகி இனிதிசைந்து
> கலியா ணமாயுறை யுங்கலை யோடையிற் கண்ணகையே."

என்று பாடினார்.

## ௬௧௮. சாமிநாதர்

ஏறக்குறைய நூற்றிருபது ஆண்டுகட்குமுன்னே யாழ்ப் பாணத்து மானிப்பாயிலே தோன்றியவர். வேளாண் குலத்தினர். தந்தையார் பெயர் அருணாசலம் பிள்ளை. இவர் இசைப்பயிற் சியில் வல்லுநர். இராமநாடகம், தருமபுத்திர நாடகம் முதலியன இவரால் இயற்றப் பெற்ற நூல்கள். இவர் இந்தியாவை யடைந்து இசைப்பயிற்சி பெற்றவர். இவருடைய குரல் குயிலின் குரல்போல் மிக இனியதாக விருந்ததென்பர்.

"ஆண்டுகொண் டவனிமுதல் அன்றிலங் கையிலுறையும்
அரியரா வணநிசிசரன்
அழகுசெறி சீதையைச் சிறைவைக்க ராமனாய்
அவதரித் திடு மாயவன்
தூண்டவனு மான்சென் றறிந்துவந் தேசொலத்
தொடுகடலே அணைகட்டியே
சுக்கிரிப னொடுசேனை சூழ்ந்திட இலங்கையில்
தொகுதியொடு போயடைந்து
வேண்டியம ருக்குவரு தம்பியும் பிள்ளைகளும்
வெகுமூல பலமுமழிய
விறலிரா வணன்மடிய நொடியிலே சிறைமீட்ட
வீரரா கவன் மருகனே
நீண்டவன் பிலேயெனினும் ஆண்டுகொண் டிடுமடிமை
நீயருளெ னக்குதவுவாய்
நிகரில்தொண் டமனாற்றில் நிலவுசந் நிதிமேவும்
நிமலகுரு பரமுருகனே."

என்பது இவர் முருகப் பெருமான்மீது பாடிய தோத்திரப் பாடல்களில் ஒன்று.

## ௬௧௬. சாமிநாதைய தேசிகர்
(கி. பி. 1759)

இவர் துறைமங்கலம் கருணைச் சிவப்பிரகாசையர் என்பவருடைய மகனாக ஏறக்குறைய இருநூறுயாண்டுகட்குமுன் தோன்றியவர். இவர் விருத்தாசலம் என வழங்கும் பழமலையில் எழுந்தருளிய இறைவன்மீது கோவையொன்று பாடிச் சாலிவாகன சகம் ௧௬௮௨ இல் அரங்கேற்றினார். இவருடைய மரபு வீரசைவ மரபாகும்.

"பூவும் பொழியும் புயலுங் கயல்களும் பூங்கனியும்
வாவும் பசும்பொற் குடங்களுங் கொண்ட மலர்க்கொடியைப்
பாவும் புகழ்தற் கருஞ்சீர்ப் பழமலைப் பண்ணவனார்
மேவுஞ் சிலம்பினில் கண்டனம் இன்று வியப்புறவே."

என்பது கோவையின் முதற்பாட்டு. இக்கோவை "பழமலைக் கோவை" என்னும் பெயருடையதாகும். இந்நூல் பல ஆண்டுகட்கு முன்னர் அச்சிற் பதித்துப் புத்தகமாக வெளிவந்திருக்கிறது.

## ௬உ0. சாமிநாதையர் - மதுரை
(கி. பி. 20 - நூ.)

இவர் மதுரையில் சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராக வேலைபார்த்துக்கொண்டிருந்தார். தமிழ்ப் புலமை நிரம்பப் பெற்றவர். சுப்பிரமணிய ஐயர் என்பவர் இயற்றிய சாவித்திரி நாடகம் என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பாயிரம் கூறியுள்ளார்.

''நிறைமொழி மாந்தர் போற்றும் நீர்மையான் நேசர் அன்பன்
மறைமொழி ஆத்தி ரேயன் மரபினில் உதித்த மாண்போன்
குறைவிலாத் தேவ பாடை குறுமுனி வகுத்த பாடை
முறையுடன் ஆங்கி லேயம் மூன்றுமே கற்ற சான்றோன்.''

''எண்ணிய கவியில்ஐயா யிரந்தனில் கற்பு மேன்மை
நண்ணிய புகழ்ச்சா வித்திரி நற்கதை அங்க மேழாய்
மண்ணில்நா டகமதாக மாண்புசேர் தமிழி னாலே
நுண்ணிய அறிவால்ஆய்ந்தே நால்வலோர் வியக்கச் செய்தான்.

## ௬உக. சாமிநாதையர்

மழவையூரினராகிய இவர் கல்விகற்றுச் சிறந்த அறிஞராகிச் சிலேடைப் பாக்கள் பாடுவதினும் அட்டாவதானஞ் செய்வதினும் வல்லவரானார். பலருக்குக் கல்வி புகட்டிக்கொண்டு காரைக்குடியிலே வாழ்ந்திருந்தார். "சிவோச்சீவன சன்மார்க்கப் பிரகடனம்", "சிறுவாச்சியூர் மதுராம்பிகை பதிகம்", "ஆறுமுகன் பதிகம்" என்னும் சிறு நூல்கள் இவரால் இயற்றப் பெற்று 1916 ஆம் ஆண்டில் வெளிவந்தன.

## ௬உஉ. சாமி நாயகர்

இவர் சென்னைமாநகரில் திருவல்லிக்கேணியில் இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்தவர். இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகளாதீனம் ஈசூர் சச்சிதாநந்த அடிகட்கு மாணவராகி வேதாந்த நூல்களை ஓதியுணர்ந்தார். செய்யுள் பாடுந் திறமையும் அமையப்பெற்றவர். "அறிவறியாமையாதார விளக்கம்'' என்னும் நூலுக்கு இவர்,

"தேரறிவு முனிவரருந் தேவருமற்
றெத்திறத்துச் செயல்வல் லோரும்
பாரறியப் படர்கானில் கொடுந்தவத்தால்
உயிர் சாம்பிப் பலன்கா ணுமல்
பேரறிவு மறைமுடிவைச் சுப்பராய
யக்குரவன் பிறங்கச் செய்து
சீரறிவு அறியாமை யாதார
விளக்கமதாற் சிறந்தா ரன்றே"

என்னும் அறுசீராசிரிய விருத்தத்தைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௬௨௩. சாமுவேல் பவுல் ஐயர்
(1844 - 1900)

இலக்கண இலக்கியங் கற்றுப் புலமைபெற்ற இவர் முதலில் பள்ளிக் கூடம் ஒன்று அமைத்துக் கணக்காயராக இருந்தார். பிறகு கிறித்துவ சமயபோதகரானார் "நற்போதகம்" என்னும் பத்திரிகைக்கு ஆசிரியராக இருந்து அதை நடத்தினர். இவருடைய தொண்டுகளை வியந்த அரசினர் இவருக்கு 'இராவ்சாகிப்' என்னும் பட்டமளித்தனர் "பரதேசியின் மோட்சப் பிரயாணம்" முதலிய பல நூல்களை இவர் எழுதியிருக்கிறார்.

## ௬௨௪. சாமுவேல் பிள்ளை - இ
(19 - நூ)

" நறைவார் சோலைப் பிறையா றெனுநகர்
வதிதரு சோழ வேளாள மரபில்
பதிதரு தாணட வ ராயவேள பயந்த
நாட வருசுவி சேடசித் தாந்தி
செங்குவளை யந்தார் தங்குமணி மார்பன்
நாமவே லைப்புவி நயக்கும்
சாமு வேலெனுந் தகைமை யோனே,"

என்று அறிஞர்களாற் புகழப் பெற்ற இவர் தொல்காப்பியம் நன்னூல் முதலிய பல நூல்களைக் கற்றுச் சில நூல்களை இயற்றியிருக்கிறார். இவருடைய நூலுக்குப் புதுவைப் பொன்னுச்சாமி முதலியார், தரங்கம்பாடிச் சண்முகக் கவிராயர், புரசை அட்

டாவதானம் சபாபதி முதலியார் முதலிய பலர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். இவருடைய தந்தையார் சோழிய வேளாளர், சைவ சமயத்தினர்; சிறந்த புலவர்; பள்ளிக்கூடம் ஒன்று அமைத்து மாணவர் பலருக்குக் கல்வி போதித்தார். சிறந்த சைவ ராகிய தாண்டவராய பிள்ளைக்கு மகனைத் தோன்றிய இவர் கிறித்து சமயம்புகுந்து தடுமாறலானார்.

## ௬௨௫. சாமுனு லெப்பை

இவர் காயற்பட்டணம் கலிமான் லெப்பை என்பவருடைய மகன். 187 செய்யுட்கள் அடங்கிய "இருஷாதுநாமா" என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது. இந்நூல் 1902 ஆம் ஆண்டில் அச்சாகி வெளிவந்துள்ளது.

## ௬௨௬. சாம்பசிவக் கவிராயர்
(19 - நூ.)

தொண்டைவள நாட்டில் சென்னைமாநகரில் நுங்கம்பாக் கத்தில் இருந்தவர். அகிலாண்டேசுவரியம்மன் பதிகம், அகத்தீசு வரர் பதிகம் முதலிய நூல்கள் இயற்றியிருக்கிறார்.

## ௬௨௭. சாம்பசிவ நாயனார் - மு
(20 - நூ.)

சோழவள நாட்டிலே தஞ்சைக்கு அண்மையில் உள்ள சாலியமங்கலம் என்னும் ஊரில் இருந்தவர். தந்தையார் பெயர் முத்துசாமி நாயனார். செந்தமிழ் மொழியில் உள்ள இலக்கண நூல்களையும் இலக்கிய நூல்களையும் சாம்பசிவ நாயனார் நன்கு கற்றுத் தேறினார். "கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறி வன், நற்றாள் தொழாஅர் எனின்" என்பது தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் திருவாக்கு. இவர் இறைவழிபாட்டின் பொருட்டுச் சிவப்பதிப்பயணஞ் செல்லுதலை மேற்கொண்டு வட நாடு தென்னாடு முதலிய எல்லாவிடங்கட்கும் பயணஞ்செய்த தன்றி அவ்வவ் ஊர்களுக்கும் செல்லும்வழி புகைவண்டி நிலைய

விளக்கம் முதலியவைகளை விளக்கிச், "சிவக்ஷேத்திர யாத்திரானுகூலம்" என்னும் உரைநடை நூல் ஒன்றையும் எழுதினார். அந்நூலைப் பாராட்டி அன்னப்பன் பேட்டை யாதீனத்துச் சபாபதித் தாயுமான பண்டாரச் சந்நிதிகள், கும்பகோணம் சு. நடேசய்யர், தஞ்சை முத்துசாமி அய்யர், சாலியமங்கலம் து. வீ. கோபாலசாமி நாயுடு ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"மடல்விரிந் தொழுகு மதுமழை தன்னால்
தடவயல் செழிக்குஞ் சாலிய மங்கலம்
தழைத்தவன் முத்துச் சாமி நாயனார்
இழைத்த மாதவம் எழில்பெற வந்தோன்
சிவனடித் துணையே சிந்தனை செய்பவன்
அவனடி யார்தமக் கடியவன் செந்தமிழ்ப்
புணரியை அறிவெனும் புணையாற் கடந்தொருங்
குணர்ந்தவன் யாவரும் உணர்ந்திடத் தக்கோன்
சாம்பசிவப் பெயர் தழைத்த
மேம்படு சைவத் தோங்குவித் தகனே."

என்பது முத்துச்சாமி அய்யருடைய சிறப்புப்பாயிரத்தில் ஒரு பகுதி.

## கூஉ௬. சாம்பசிவ பிள்ளை - மா
## (20 - நூ)

"ஆங்கிலஞ்செந் தமிழ்பயின்ற அருங்கலையின் ஆதரவால்
பாங்குபெறத் துரைத்தனத்துப் பல்லொழிலும் உஞற்றி முனம்
நீங்கொறுக்கு நலந்தொண்டத் திறலதிகா ரமும்வகித்து
வாங்குகடல் உடுத்தபுவி வயங்குபுக ழுடைத்துடையான்.
ஆரதிரு முறையாய்வின் அதிநுட்ப நூல்கண்டான்
ஓரதிரும் ஆர்வமுளான் ஒரமொரு பால்விண்டான்
பேரதிரு மானேயம் பெரிதுடையான் சிவமுண்டான்
சீரதிரு மாசாம்ப சிவநாமங் கொண்டானே."

என்று அறிஞர்களாற் பாராட்டப் பெற்ற இவர் சோழவள நாட்டிலே திரிசிரபுரத்திலே மாசிலாமணிப் பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றினார். தமிழையும் ஆங்கிலத்தையும் நன்கு கற்றுத் தேறினார். சமய நூல்களினும் ஆழ்ந்த பயிற்சியுடையவராய்ச் சிறந்து விளங்கினார். திருநெல்வேலி கா. சுப்பிரமணிய பிள்ளை செந்தமிழ்ச் செல்வி திங்கள் இதழில் "திருநான்மறை

விளக்கம்'' என்னும் பெயரோடு நான்மறை ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றை எழுதினர். இவர் அக்கட்டுரையை மறுத்துத், "திரு நான்மறை விளக்க ஆராய்ச்சி" என்ற ஓர் நூலை வெளியிட்டார். இவ்வாராய்ச்சியைப் பாராட்டி உ. வே. சாமிநாதையர், சீர்காழி ப. அ. முத்துத் தாண்டவராய பிள்ளை, யாழ்ப்பாணம் நல்லூர்க் கார்த்திகேயக் குருக்கள், நவநீத கிருட்டின பாரதியார், குமார சாமிக் குருக்கள், சபாபதிக்குருக்கள், தச்சநல்லூர் இலக்குமணப் போற்றி, சிவபாத சுந்தரம்பிள்ளை, தஞ்சை சீநிவாசபிள்ளை, த. கைலாச பிள்ளை, திருச்சி ஆ சுப்பிரமணிய பிள்ளை, அம்பாசமுத் திரம் காந்திமதிநாத பிள்ளை, சிதம்பரராமலிங்கம் பிள்ளை, சிவக் கவி மணி கோவை க. சுப்பிரமணிய முதலியார், சிவசுப்பிர மணிய சிவாசாரியர், வைத்தியலிங்கப் பிள்ளை, சீ. முருகேச ஐயர், அருளம்பலம், கனகசபாபதிக் குருக்கள், முத்துக்குமார சாமிக் குருக்கள், சுப்பிரமணிய சாத்திரிகள், ஆறுமுகம் பிள்ளை, சீர்காழி சோமசுந்தரம் பிள்ளை, ச. சதாசிவ முதலியார், உறையூர் தே. பெரியசாமி பிள்ளை, யாழ்ப்பாணம் கணேச பண்டிதர், சுவாமி நாதபண்டிதர் ஆகியோர் முன்னுரை எழுதியுள்ளனர்.

இவர், "திருப்பெருந்துறை விளக்கம்'' திருத்தொண்டர் புராணத்தில் "திருமலைச் சருக்க ஆராய்ச்சி", "சிவஞானபோத முதனூல் ஆராய்ச்சி", "திருக்குறளின் திருவுள்ளக் கருத்து," "இராமரும் இராவணனும்'' "மூவாநான்மறைச் சொற்ருெடர் ஆராய்ச்சி," "சைவசித்தாந்த வரலாறு ஆராய்ச்சி," "கோகழிப் பெயர் உண்மை", "மெய்கண்டார் சாத்திர முன்னுரையா ராய்ச்சி," "வேதமுஞ் சைவத்திருமுறைகளும்," "திருவாசக விரி வுரையில் காணப்படும் பிற ஆசங்கைகளும் ஆராய்ச்சியும்'' எனப் பல ஆராய்ச்சிகளையும் மறுப்புரைகளையும் எழுதியுள்ளார்.

## கூஉகூ. சாயிற்முஹியித்தீன் சூல்தான்பிள்ளை ஆலிம் சாகிப்

இவர் திருவாங்கூர் பூவாற்றூர் போக்கு முசாமரைக்காயர் மகனின் மருகர். இவர் அரபு மொழியில் பெயர்பெற்ற இருசா துல் இபாத் என்னும் இத்தாபைத் தமிழில் மொழிபெயர்த்தவர். இது 1901 ஆம் ஆண்டில் அச்சிடப்பட்டு வெளிவந்தது.

## ௬௫௦. சாலிவாடீசுர ஓதுவார்
## (19 - நூ.)

திக்கெலாம் புகழும் திருநெல்வேலியில் பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இவர் சிறந்து பெரும்புலவராக விளங்கியிருந்தார். கல்விச் சங்கம் ஒன்றை அமைத்து அதில் இவர் பலருக்குந் தமிழ்க் கல்வியை நன்கு கற்பித்துவந்தார். இவரிடங் கல்விகற்றுச் சிறந்த புலவர்களானவர்கள் பலர். இவர் காலத்தில், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், இராமநாதபுரம் முத்துவீரப்ப பிள்ளை, திருநெல்வேலி அம்பலவாணக் கவிராயர், மாவடி சிதம்பரம்பிள்ளை, புதூர் வள்ளிநாயகம் பிள்ளை, கல்லடை நகர் அ. சிதம்பரநாத கவிராசர் முதலிய பலர் சிறந்த புலவர்களாக விளங்கியிருந்தார்கள். இவரால் ஆராயப்பெற்று வெளியிடப்பட்ட நூல்கள் பல. இவர் காலத்துப் புலவர்கள் தாமியற்றும் நூல்களை இவருடைய சிறப்புப்பாயிரம் இல்லாமல் அச்சிடமாட்டார்கள். இவரிடஞ் சிறப்புப்பாயிரம் பெறுவதைப் பெரும்பேறெனக் கருதினர். இவரும் சிறப்புப்பாயிரம் விரும்பி வந்த எல்லோருக்குஞ் சிறப்புப்பாயிரம் கொடுத்து மகிழ்வித்தார். சிதம்பரநாதக் கவிராசர் என்பவருக்குக் கூர்மபுராண உரைக்காக இவர் கொடுத்த பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" திருமகள் நித்திய மகிழ்வின் அமர்ந்துயர்
செல்வம் அளித்திடலால்
சீர்நனி மேவிய கல்லடை நகர்வரு
திவ்ய குணக்குரிசில்
அருமைஇ யற்புகழ் அம்பல வாணமன்
ஆற்று தவப்பயனே
ஆகிஉ தித்தசி தம்பர நாதபேர்
அறிஞர் சிகாமணியான்
தருமமு தற்பல பொருள்களும் எய்துத
யாநிதி முன்திருமால்
தான்ஒரு கூர்மம தாகிய ரன்கதை
சாற்றுபு ராணநவில்
உரிமைவி ழுப்பொருள் உலகம் உணர்ந்துய
உண்மையின் உரைசெய்தான்
ஓர்தலில் நேர்அறு சேடனும் நாடிஉ
ளங்களி கூர்தரவே "

## ௬௱௪௧. சானகிராம ஐயர் - ௩௱

இவர் திரிசிரபுரத்திற்கடுத்த உறையூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் நாராயணசாமி ஐயர். சானகிராம ஐயர் அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளையிடம் இலக்கண இலக்கியங் கற்றுச் சிறப்புற்ருர். அமிர்தம் சுந்தர நாதப் பிள்ளை இயற்றிய ஆதிவயலூர் வெண்பாவந்தாதிக்கு இவர்,

> " மங்கையிடம் வைத்தவரன் மாபாலன் கந்தனெனும்
> துங்கவய லூர்முருகன் தோள்மருவ—எங்கடமிழ்
> நல்லாசான் சுந்தர நாதனென்பான் சூட்டினன
> சொல்லாரந் தாதியொன்றைச் சூழ்ந்து "

என்னும் வெண்பாவால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௬௱௪௨. சிக்கந்தர் முகையதீன் புலவர் - த. இ (19 - நூ.)

செந்தமிழ் நாட்டிலே தமிழ்மொழியைக் கற்றுத் தமிழ்ப் புலவர்களாக விளங்கிய முகமதியர்கள் பலர். அவர்களில் இவர் ஒருவர். இவர் பாண்டி நாட்டில் கடலாடி என்னும் ஊரில் விளங்கியிருந்தார் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் கந்த புராணம், பெரிய புராணம் முதலிய சைவ புராணங்களையும் ஐயந்திரிபறக் கற்று அரும் புலமை பெற்று விளங்கினர். இவர் இராமலிங்கம் பிள்ளை என்பவர் இயற்றிய கந்தபுராண வண்ணம் என்னும் நூலுக்கு,

> " அஞ்சக் கரநாதன் அங்குமரன் சூரனுயிர்
> அஞ்சக் கரவேலால் அன்றெழித்த—மிஞ்சுகதை
> வண்ணப் பொழில் பொதுவை வாழ்விசய ராமலிங்கம்
> வண்ணப் பொழிலுரைத்தான் மால்."

> " சாமள மான்மரு கோனறு மாமுகன் தன்சரிதை
> பூமிசை வைகும் புலவோர்க் கமுதம் புகட்டவென்று
> பாமக ணுறக் கார்சொரிந் தொக்கப் பகர்விசைய
> ராமலிங் கக்கவி நாவல வன்வண்ணம் நாட்டினனே"

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௬௩௩. சிங்கவனம் சுப்புப் பாரதியார்

சிங்கவனம் என்னும் ஊரினர். திழ்வேளூர்ச் சுப்பிரமணிய தேசிகர், மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் ஆகியோரிடங் கல்வி கற்றுச் சிறந்து விளங்கியவர். மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களோடு பல விடங்கட்கும் உடன் சென்று உறுதுணையாக இருந்தார்.

## ௬௩௪. சிங்காரவேலு முதலியார். சு. வே

இவர் தொண்டைவள நாட்டிலே சென்னைமா நகரிலே நுங்கம்பாக்கத்தில் இருந்தவர். வடபழநியாண்டவர் அன்னதான சபைக் காரியதரிசி அ. சிங்காரவேலு முதலியார் என்பவர் கேட்டுக்கொண்டதற் கிணங்கி வடபழநி யாண்டவர்மீது மும் மணி மாலை என்னும் நூலைப் பாடியிருக்கிறார். நூலைப் புகழ்ந்து, திருக்குருகூர் ஞானசித்த சுவாமிகள், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், சிவபுரம் வி. வேலாயுத முதலியார், குளப்பாக்கம் அரங்கசாமி நாயுடு, நின்றை தங்கவேலு முதலியார், ம. திரிபுராந்தக முதலியார், பண்டிதை மனோன்மணி அம்மையார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> ''பேசாத அன்பருக் கேயருள் தந்திடும் பெட்பினைப்போல்
> கூசாத நெஞ்சினன் நாயேனை ஆண்டு குவலயத்தென்
> மாசாத வன்முன் பனிநீங்கு மாறெனை வாட்டிடுவாய்
> காசாத மென்னு வுறுவரார் ஒற்றியில் கந்தையனே.''

எனபது மும்மணிமாலையில் ஒரு பாட்டு. மற்றும் இவரால் இயற்றப்பட்ட நூல்கள் (௧) திருக்குருகூர் ஞானசித்த சுவாமிகள் சிங்காரப் பதிகங்கள் (௨) திருமணலூர்த் தோத்திரப் பதிகங்கள் (௩) திருமணலூர்ச் சிங்கார வழிநடைப்பதம் (௪) திருமண லூர்த் தோத்திர சங்கீர்த்தனம் (௫) திருமணலூர்த் தோத்திர மஞ்சரி (௬) திருவொற்றியூர்ப் பதிகங்கள் (௭) திருமயிலாப்பூர்ப் பதிகங்கள் (௮) திருவாலங்காடு தியானமஞ்சரி (௯) திருவிற் கோலம் தோத்திரமஞ்சரி (௧௦) விநாயகர் பதிகம் (௧௧) சுப்பிர மணியர் பதிகம் (௧௨) கந்தகோட்டம் இரட்டைமணி மாலை (௧௩) திருமுல்லை வாயில் பதிகங்கள் (௧௪) திருத்தணிகைப் பத்தி

மாலை (௧டு) திருவான்மியூர்ப் பதிகங்கள் (௧௬) பஞ்சபூதத் தலப் பதிகம் என்பன. இப்புத்தகங்கள் நூலாசிரியர் காலத்திலேயே அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டன. இவர் தந்தையார் வேங்கடாசல முதலியார் என்பதும், அவர் கூவம் என்னும் ஊரில் இருந்தவர் என்பதும் அடியில்வரும் பாடலாற் பெறப்படுகின்றன:

"சீர்மணக்கும் தமிழ்ப் புகழும் திருமணக்கும்
பொருட் புகழும் செழிக்குங் கூவப்
பார்மணக்கும் வேங்கடா சலமுகில்முத்
தலமதனிற் பரிந்து வாழ்த்தற்
கேர்மணக்கும் எழிற்றவமோர் உருவமென
எடுத்தசிங் கார வேலப்
பேர்மணக்கும் புலவனுரை பெரிதலர்ந்து
விரிசுடர்போல் பிறங்கும் மன்னோ."

## ௬௩௫. சிங்காரவேலு முதலியார் - கி

இவர் திருப்போரூர் மாலை என்னும் நூல் பாடியிருக்கிறார். வெண்பாவால் ஆகிய அந்நூல் ௧0௨ பாடல்களைக்கொண்டது.

"ஆறு முகமுடையான் ஆறிரண்டு தோளுடையான்
தேறு பதமுடையான் தேசுடையான்—வீறும்
அயிலுடையான் அங்கைசில வாகுலத்தை நீக்க
மயிலுடையான் போரூர்வாழ் மன்"

என்பது அம்மாலையில் ஒரு பாட்டு

## ௬௩௬ சிங்காரவேலு முதலியார் - ப.

பச்சையப்பன் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தவர் இவர். திருப்பெரும் பேற்று முருகன் பிள்ளைத் தமிழ், தலத் துதிகள், எச்சரிக்கை, திருவூசல், திருப்பள்ளி எழுச்சி முதலிய நூல்கள் இயற்றியிருக்கிறார்

"பங்கமுறு கங்குலலைவ யிரியவரு வாயடியர்
பவவிருள் பறக்க வருவன்
பனிவிசும் பொன்றே யூந்திடுவை யிவண்பரிய
பலஅண்ட மதில் உலவுவன்

கங்கைமுடி வேணியரன் கண்ணுக்கு வையிவன்
கண்ணிலுறு மணியு மாவன்
காமன்னு தேவர்கட் கமுதளிப் பாயிவன்
கருதுமதைக் காத்து தவுவன்
சங்கையின் மானையா கத்தனைக் குவாயிவன்
சார்வள்ளி மானை யணைவான்
சலனமூறு சிந்துவின இடையுதிப் பாயிவன்
சற்சுகோ நதியு திப்பான்
அங்கமறு உடையநீ ஒப்புரு யாதலால்
அம்புலி ஆட வாவே
அன்பகத் தடியவர்கள் இன்பமாங் கந்தனுடன்
அம்புலி யாட வாவே.''

என்பது இவர் இயற்றிய திருப்பெரும்பேற்று முருகன் பிள்ளைத் தமிழில் ஒரு பாட்டு.

## சூ௩எ. சிங்காரவடிவேல் வன்னியமுண்டார்

''சென்னிவள நாட்டில் திருவானைக் காக்குணபால்
துன்னுமிரு காவதமாந் தூரத்தில்—பொன்னியின் றென்
வன்னியமுண் டம்பலத்தர் வாழ்பதிசான் றோர்புகழ்ந்து
பன்னுகச்ச மங்கலமாம் பார் ''

என்னும் கச்சமங்கலத்தில், கஅஅ௬ ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் இரண்டாம்நாள் இவர் பிறந்தார். பள்ளிக் கல்வியைப் பாங்குடன் கற்றபின் புலமைக் கல்வியும் கற்றுச் செய்யுள் பாடுந் திறமும் பெற்றார். வேதாந்தம், சித்தாந்தம், தருக்கம், இலக்கணம், சங்கநூல்கள் முதலிய எல்லாவற்றினும் வல்லவர்.

இவர், திருக்கச்சமாலை, உயிர்வருக்கமாலை, இரட்டைமணிமாலை, திருப்பழநி வெண்பாமாலை, திருமுருகாற்றுப் படை வெண்பா, அகிலாண்ட நாயகி பதிகம், திருவானைக்காவந்தாதி முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார். இவர் நூலுக்கு நாவலர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் முகவுரையெழுதியிருக்கிறார். திருவானைக்கா அந்தாதி யமகமாக அமைந்தது.

''வரந்தர வாநின் றிருவடி காட்டியான் வாழவிரு
வரந்தர வாய்மண் ணரசெய்த வேண்டு வரமவர
வரந்தர வாயி றுகைக்கும் கரிக்கா வனத்தமைக
வரந்தர வாக நமனுயிர் பற்ற வருந்தினத்தே.''

என்பது அந்தாதியில் சூ௩ ஆவது பாடல்.

## ௯௩௮. சிங்காரவேற் பிள்ளை - ப
### (20 - நூ.)

சோழவள நாட்டிலே மூவலூரில் தோன்றிய இவர் கல்வி கற்றுச் சிறந்த புலமையடைந்தபின் தஞ்சைமாவட்டத்திலே உள்ள குற்றாலம் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களால் இயற்றப் பெற்ற திருத்துருத்திப் புராணத்திற்கு இவர் உரை நடை குறிப்புரை முதலியன எழுதி வெளிப்படுத்தியுள்ளார். இவரைப் பாராட்டிக் கா. நமசிவாய முதலியார்,

"நல்லதமிழ் தேர்புலவன் நற்குணத்தான்
அன்பர்நலம் நாடுஞ் சீரான்
பல்லவையில் துணிந்துரைக்கும் பண்புடையான்
பதிநூலிற் பற்று நீங்கான்
மல்லலஞ்சேர் மூவலூர் எனும்பதியான்
குற்றாலம் வதிவோன் பண்ணில்
வல்லவனுஞ் சிங்கார வேலனெனுஞ்
செந்தமிழின் வாணன் மாதோ."

என்று பாடியுள்ளார். சிங்காரவேற் பிள்ளை தருமபுர ஆதீனத் தலைவர்மீது பாடிய உரிமையுரை,

"திருவளர் மார்பனும் உருவளர் பூமனும்
அவ்விய மின்றிச் செவ்விதேர்ந் திறைஞ்ச
அமரர்கோன் பூசையைக் கமழுறக் கொண்டருள்
வள்ளல் தலைவன் நள்ளுறுங் கமலையில்
ஞானசம் பந்தமில் ஞானசம் பந்தனூர்
அருள்வழி வந்த தெருளார் தருமையில்
புத்தமு தென்னச் சித்தாந் தத்தேன்
அடுத்தநன் மாணவர்க் கெடுத்தெடுத் தூட்டி
இன்னருள் புரியும் பொன்னாலம் மிக்கு
வருமுது குரவரில் இருபதொடு நான்கென
எண்முகப் புகழ்வளர் சண்முகக் குரவ
ஏழைக் கிரங்கும் மாழைச் செல்வ
பன்னூற் பொருளெலாம் தன்னல மின்றி
என்னரும் உணரப் பொன்னருள் புரிவோய்
அருளின் கொள்கலம் தெருளி னிருக்கை
தானென நின்றே வானென வழங்கும்
வள்ளல்நின் உரிமை தெள்ளுற நின்ற

துருத்தித் தலத்தின் விருத்தியைப் புகலும்
பயனருள் புராணப் பதிப்பின் வளரும்
நலமுங் கொண்டு நலமுற
அருள்செய் வாய்நின் அருள்வா ழியவே.''

என்பதாகும்.

## சுருக. சிதம்பர அடிகள் (மதுரை)
### (18 - நூ.)

இவர் மதுரைமா நகரில் திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனத்தில் எழுந்தருளியிருந்தார். அந்நாளில் தப்புந் தவறுமாக வழங்கிவந்த சிதம்பர புராணம் என்னும் நூலினைச் செப்பஞ் செய்து திருந்திய முறையில் வெளியிட்டார். இவர் மெய்ஞ்ஞானச் செல்வராகவும் திருந்திய நல்லொழுக்கம் அமைந்தவராகவும் கொண்ட கோலத்திற்குத் தக்க நடக்கையுடையவராகவும் விளங்கியபடியால் இவரை அனைவரும் போற்றிப் பாராட்டினர். திருவருட் பிரகாச வள்ளலார் சிதம்பரம் இராமலிங்க அடிகள் இந்நூலுக்கு அகவற்பாவாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். அச் சிறப்புப்பாயிரத்தில், ''சிதம்பர புராணம் இதம்பெறத் திருத்திய சிதம்பர முனிவன் பதம் பரவியது'' என்று தலைப்புக் கொடுத்திருப்பதோடு,

'' ...... ............ .......... .. .
ஞான சம்பந்த நாயகன் அருளால்
ஈன சம்பந்தம் எல்லாம் ஒழித்தோன்
நரைவரும் என்றெணி நல்லறி வாளர்
இரைவுறு குழவி யிடத்தே துறந்தார்
என்னும் நாலடிக் கிலக்கியம் ஆனவன்
மன்னுமா தவரெலாம் வழுத்தும் அருந்தவன்
எல்லா உயிர்க்கும் இதஞ்செயல் அன்றிப்
பொல்லாமை ஒன்றும் புணராப் புண்ணியன்
வாய்மையும் மாண்பும் வயம்பெறு மனனும்
தூய்மையும் தெளிவும் சுற்றமாக் கொண்டோன்
கனவினும் உலகைக் கருதாக் கருத்தினன்
நனவினிற் சுழுத்தி நண்ணிய திறத்தோன்
முப்பொருட் டிறனும் முழுதுணர் முனிவன்
எப்பொருட் கண்ணும் மெய்ப்பொருள் உணர்ந்தோன்
சிவமலா தொன்றும் சிந்தைவைத் தறியான்

பவமிலா நெறியே பற்றிய நிலையினன்
காமம் வெகுளி மயக்கெனுங் கரிசினை
நாமங் கெடஉள் நலிவித்த வித்தகன்
துறவரில் துறவன் சுத்தமெய்ஞ் ஞானி
அறவரின் அறவன் அன்பரின் அன்பன்
திகழ்சிவ யோகி சிவன் முத்தன்
புகழிகழ் வொன்றும் பொருந்தாப் புனிதன்
சிவ நூல் முழுவதும் தெளிந்த சத்துவன்
பவநூல் மறந்தும் பாராத் திறலோன்
என்போன் றவர்க்கும் இன்னருள் புரிவோன்
தன்போன் றவரிலாச் சாந்த வேந்தன்
சைவம் பழுத்த தனித்தரு நங்குல
தெய்வமா மதுரைச் சிதம்பர தேவன்
புண்ணிய சிதம்பர புராணந் தன்னை
நுண்ணிய அறிவால் நேசக்கு திருத்தம்
ஏர்பெற இயற்றி யாவரும் பயின்றுய்யப்
பாருறும் அச்சிற் பதிப்பித் தருளிய
உதவியை நினைந்துளம் உவந்துமுப் பொழுதும்
பதம்அருள் அவனருட் பதமிறைஞ் சுதுமே.''

என்று கூறியுள்ளார். இதனால் இப்பெரியாருடைய சிறப்புக் களையெல்லாம் நாம் ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

## ௬௪O. சிதம்பர கவிராயர்

இவர் ஏறக்குறைய இருநூறு ஆண்டுகட்கு முன்னர்த் திருநெல்வேலியில் தோன்றியவர். தமது ஊரைவிட்டுப் புறப் பட்டுப் பல ஊர்களினுஞ் சுற்றிக்கொண்டிருந்தார். உடுமலைப் பேட்டையை அடுத்த தளிநகரத்திலே சுக்கிரிகவுண்டர் என்பவருடைய ஆதரவிலுஞ் சிலகாலம் வாழ்ந்திருந்தார். பிறகு பொருளாட்சி என்னும் பொள்ளாச்சி, பாலைக்காடு, யானை மலை முதலிய இடங்களில் வசித்திருந்தார். உசிதசூடாமணி என்னும் நூல் ஒன்று இவரால் இயற்றப்பெற்றது. அந்நூலில் மனிதர்கள் இலக்கணம் விலங்குகள் இலக்கணம் முதலியன கூறப்பட் டுள்ளன.

''மாதர் மனத்தை நிகர்மனத்தாய்
வாய்ந்த நிறத்தைங் கதியுடைத்தாய்த்
தீதி லாத சுழியுளதாய்த்
திருக்கி லாநல் குணத்தினதாய்

*ஓதும் எழுசாண் அமைதிபெறும்*
*உயர்விற் கதலி மடற்செவியாய்ப்*
*பாதம் முன்பின் விருத்தியுமாம்*
*பகர்மன் னவர்க்காம் பரியியல்பே.''*

என்பது அந்நூலிற் கூறப்பட்டுள்ள பட்டத்துக் குதிரையின் இலக்கணப் பாடலாகும். இந்நூல் ௧௬0௬ ஆம் ஆண்டில் உரைக் குறிப்பு முதலியவைகளுடன் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. நூல் பதினெட்டுப் பிரிவுடையதாகவும் ௧௨௮ பாடல்களுடைய தாக வும் அமைந்திருக்கிறது. நூலைப் பாராட்டி வை. மு. சடகோப ராமாநுசாச் சாரியார், தியாகராசச் செட்டியாரின் மாணவர் சபாபதிப் பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். சிதம்பர கவிராயருடைய தந்தையார் பெயர் சங்கரமூர்த்திப் பிள்ளை

## ௬௪௧. சிதம்பர கிருட்டிண அய்யர்
## (20 - நூ.)

கன்னியா குமரியில் சிறந்த தமிழ்ப் புலவராக விளங்கி யிருந்தவர். திருவேங்கடபுரம் சங்கரநாராயண பாரதியார் என் பவர் பாடிய கன்னியாகுமரி பகவதியம்மன் பதிகம் என்னும் நூலுக்கு இவர்,

*'' சீர்கொண்ட செந்தமிழ்க் கடலிற் படிந்தினிய*
*செஞ்சொலெனு முத்தை யள்ளித்*
*திகழுமிப் பதிகமணி மாலையொரு நாவினில்*
*செவிதாக வேதொ டுத்துப்*
*பேர்கொண்ட குமரியம் பகவதி பவானியெம்*
*பிராட்டிசிவ காமி யன்னையின்*
*பெருமையாந் திருவடிக் கருமையாந் திறைவைத்துப்*
*பேறெலாம் பெற்று நின்றோன்*
*கார்கொண்ட மேனியுமை பங்கன்ற னடியரைக்*
*கழல்பணிந் தேத்தும் அன்பன்*
*கவிராச ருஞ்சேது புவிராச ரும்போற்று*
*கலைஞான மிக்க வல்லான்*
*பார்கொண்ட புகழோங்கு திருவேங்கடத்திலுயர்*
*பார்ப்பார் குலத்து வந்தோன்*
*பாவலன் சங்கர நாராய ணன்சுகுண*
*பாரதி சிகாமணி யரோ.''*

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௬௪உ. சிதம்பர சுவாமிகள் - சி
(19 - நூ.)

இவர் பழமலையில் இருந்தவர். குழந்தைவேல் சுவாமி என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்றவர். பல சிவாலயத் திருப்பணிகளைச் செய்தவர். இவர் திருவருள் பெற்ற அருட் கவியாக விளங்கினர். தண்டபாணி பதிகம், உபதேசவுண்மை, தோத்திரமாலை முதலிய நூல்களைச் செய்தார்.

"கங்கைவார் சடையும் திங்களோர் முடியும்
காதிலார் மகரகுண் டலமும்
மங்கையோர் புறமும் பொங்கரா வணியும்
வண்டலை மாலைமார் பழமாய்த்
துங்கநான் மறைகள் துதித்திட வைந்து
தொழில்புரி நீதனே எனையாள்
சங்கராவேத சிரோணிவாழ் பரனே
சம்புவே தண்டபா ணியனே."

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

"வேத சிரோணி விமலன் சிவாலயத்
தோதும் திருப்பணி உள்ளன எலாம்பர
பத்தியால் செய்துயர் பஞ்சபர் வத்துடன்
நித்திய விழாக்கள் நெடிதுறப் புரிந்து
பிரமோற் சவமுதல் பெருவிழா என்றும்
நிரமாய் நிகழ்வுறச் செய்வித் ததுமலால்
தண்டபா ணியனூர் தனித்தேர்த் திருப்பணி
மண்டல முழுதும் மதித்திடச் செய்வோன்
திடமுற இனும்பல சிவாலயப் பணியும்
மடமறச் செய்தருள் வள்ளல் மனப்பகை
விட்டிமெய்ப் போதகன் ஆகிமெய் யடியவர்
சுட்டும் பவப்பிணி எலாம்ஒரு நொடியில்
போக்குஞ் சிதம்பரப் புண்ணியன் உயிர்த்தொகை
தாக்கும் பவப்பெருஞ் சாகரந் தாண்டியும்
முத்தியங் கரையிடை முந்திமா மகிழ்வுறச்
சத்திய மாகத் தனதகங் கருதியோ
அறிவறிந் தேயோ அறிவறி யாமலோ
பிறிவறிந் தேயோ பிறிவறி யாமலோ
அன்பினு லேயோ அன்ப தின்றியோ
வன்பினுலேயோ வனப தின்றியோ

இலக்கியம் இலக்கணம் எனுமிரு வகையின்
துலக்கம துணர்கிலாத் தோன்ற லாகியும்
முற்பவந் தன்னின் முதிர்வுறப் பயின்ற
நற்றவப் பேற்றால் நவிலுப தேச
உண்மையு மதன்கட் டளையு மகந்துரைத்
தெண்மைநீர் தோத்திர மாலையும் இயற்றித்
தேவருக் கமுதம திருமால் சந்தென
ஆலவாய் மெய்யடி யார்க்களித் தனனே.''

என்பது சிறப்புப்பாயிரத்தில் ஒரு பகுதி.

## கூசங. சிதம்பர ஞானியார்

இவர் திருத்தில்லையில் தங்கிக் கூத்தப்பிரானை வணங்கி வழிபட்டுக்கொண்டிருந்தமையின் இப்பெயர் எய்தினர்போலும். "இவர் சிதம்பர ஞானிப்பாட்டு'' என்னும் நூலைப் பாடியுள்ளார். முந்நூறு பாடல்கள் வரையில் நூலில் அடங்கியிருப்பதாகத் தெரிகிறது.

''முந்தித் திருநடன முனிவோர் பதஞ்சலிமுன்
திந்தித்தோ மென்னவுமே சென்றாடு கின்றதுபோல்
வந்தித்துப் பாதம் வணங்கி அகமகிழ்ந்து
தந்தித்தா மென்னவே தான்சபையைச் சுற்றிவந்தான்.''

என்பது நூலின் இறுதிப்பாட்டு. இந்நூல் முழுவதும் அச்சாகி வெளிவந்ததாகத் தெரியவில்லை.

## கூசச. சிதம்பரஞ் செட்டியார் - அ
(20 - நூ.)

சோழவள நாட்டில் திருச்சிமாவட்டத்தில் உள்ள பூவாளூரில் தோன்றியவர். திரிசிரபுரம் சி. தியாகராயச் செட்டியாரிடத்தில் கல்வி பயின்றவர். இவர் ஆனைமுகக் கடவுள்மீது பதிற்றுப்பத் தந்தாதி ஒன்று பாடியுள்ளார். மேற்படி அந்தாதிக்கு, சு. சாமிஐயா தேசிகர், அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், பெருவள நல்லூர்ச் சுப்பையர், அடஞ்சூர் துரைசாமிப் பிள்ளை, பூவாளூர்ச் செல்வக் கணபதிச் செட்டியார், சி. சபாபதிச் செட்டியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"கற்றற் குரிய மெய்ந்நூல்கள்
கல்லே னன்றிக் கற்றவர்பால்
நிற்றற் குரிய நன்னிலையில்
நில்லேன் நிலவும் நின்னருளைப்
பெற்றற் குரிய பெரியரெலாம்
பெரிதும் பேசப் பேருலகில்
மூற்று முழல்வேன் என்செய்வேன்
மொய்மா முகத்தெம் மொருதேவே."

என்பது மேற்படி அந்தாதியில் ஒன்பதாவது பாட்டு.

## கூசரு. சிதம்பரஞ் செட்டியார்
(19 - நூ.)

இவர் தேவிகோட்டையில் இருந்தவர். இளையாற்றங் குடிக் கோயில் பெருமரபூர் வகுப்பு தி—வகையைச் சேர்ந்தவர். தந்தையார் பெயர் மாயாண்டிச் செட்டியார். இவர் தில்லைக் கற்பக விநாயகர்மீது வெண்பாவந்தாதி பாடியிருக்கிறார். நூலைப் பாராட்டி, சுவாமிநாத பண்டிதர், தில்லை கோபாலசாமி தீட்சிதர், காரைக்குடி, ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"ஆம்பல் பகன்மலர ஆர நிலாவெறிக்கும்
பூம்பழனத் தில்லைப் பொதுநடிக்கும்—சாம்ப
சிவன்மகனே என்றுகளு நீசனே நூல் செப்பும்
இவனவனே பேதம் இலை."

என்பது நூலில் ஒரு பாட்டு. திருக்காளுயிற் புராணத்தை உரை நடையாகவும் இயற்றியிருக்கிறார்.

## கூசகூ. சிதம்பரஞ் செட்டியார் - அரு
(19 - நூ.)

பாண்டிவள நாட்டில் சண்முக நாதபுரம் என்னும் ஊரில் நாட்டுக்கோட்டை நகர தனவைசிய குலத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் அருணசலஞ் செட்டியார். இவர் குன்றக்குடி முருகர் காவடிச் சிந்து முதலிய நூல்கள் பாடியிருக்கின்றார்.

"வணிகனரு ணசலகு மாரன் (செல்வ) மதி
வதனன் சிதம்பர மாகவிரு நீரன்
மணியெனச் செய்தகவி மாலை (நல்ல) சிகண்டி
மலையில்வாழ் முருகன் அணிந்தான் தோள்மேலே"

என்பது சிந்தில் இரண்டடிகள் இச்சிந்து சேலம் கல்லூரித் தமிழாசிரியர் சரவணப் பிள்ளை என்பவராற் பார்வையிடப் பெற்று கஅகூசு ஆம் ஆண்டில் பதிப்பித்து வெளியிடப்பட்டிருக்கிறது.

## கூசள. சிதம்பரதாண்டவ மதுரகவிராயர்

பாண்டிவள நாட்டிலே கருவை நல்லூரிலே சைவ வேளாளர் குலத்தில் தோன்றிய இவர் ஏறக்குறைய நானூறுயாண்டுகட்கு முன்னிருந்தவர் என்று எண்ணுகின்றனர். இவரால் 'மாந்தைப் பள்ளு' என்னும் நூல் இயற்றப் பட்டிருக்கிறது. அப்பள்ளினுள் மூத்தபள்ளி வரல், இளைய பள்ளிவரல், குடும்பன் வரல், பள்ளியர் குடித்தரங் கூறல், நாட்டுவளம், நகர்வளம், மழை வேண்டிக் கடவுட்பரவல் முதலிய நாற்பத்தெட்டிற்கு மேற்பட்ட அரியசெய்திகள் கூறப்படுகின்றன.

"வேணிக்கண் ணநிமிலைந்தார் விளம்பியருள் பலமகிமை
மாணிக்க மிவையென்ற வயிரமுதல் நவமணிகள்
ஆணிப்பொன் விளங்குகண்ணு ளர்க்கடிமைப் பள்ளியரும்
பேணித்தம் பேர்ப்பெருமை பிரியமுற்றுப் பேசுவரே."

என்பது பள்ளியர் தம்பெயர்ப் பெருமை பகர்தலில் ஒரு பாட்டு.

## கூசஅ. சிதம்பரத் தொண்டைமான்

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலியில் இருந்தவர். திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கட்குப் பாட்டனார். இவர் திருப்புகழ்ச் சுவாமிகள் முருகதாச சுவாமிகள் என்று புகழ் பெற்ற தண்டபாணியடிகளிடம் நெருங்கிப் பழகி மாணவராக இருந்தவர். இவர் தனிப்பாடல்கள், நெல்லைப் பள்ளி என்னும் நூல் முதலியன பாடியுள்ளார்.

''உமிழ்மது துன்று கொன்றையார்
விடைகொண்டெங்கும் திரிபவர்
உமையாள் கொழுநன் உலகசயனன்
கலையாள்கொழுநன் உபயற் கறிதற் கரியவர்
அமிழ்தினின் சுவைபனுவல் மூவருக்
கரியநற்பதம் அளிப்பவர்
அயிலை நிகர்த்த விழியாள் காந்தி
மதியோடமர்ந்த நெல்லையர்
தமிழ்தருமுனி மலையினின்றிழி
தாம்பிரபரணிபாய்க் கழனியில்
தழைகொள்தொளியில் மிதிகொள்பள்ளர்
சரசமொழிகள் மொழியவே
குமிழ்தமூலையைக் காட்டிநின்று
குறைப்பொழுதையும் போக்குநீர்
குரவையொழித்து முடியை அவிழ்த்துக்
குனிந்து நடுங்கள் பள்ளியரே.''

என்பது நெல்லைப்பள்ளியில் ஒரு பாட்டு.

## கூசகூ. சிதம்பர தாண்டவராய முதலியார்

கொங்குவள நாட்டில் தொண்டா முத்தூர் என்னும் ஊரில் இருந்தவர். இவர் நானூறு பாடல்கள்கொண்ட பட்டீசுவரக் கோவை, திருப்பேரூர்ச் சிகையறுத்தான் வண்ணம் முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார்.

## கூ௫௦. சிதம்பரநாத கவி
## (கி. பி. 1561)

இவர் சிவபெருமானுடைய திருவிளையாடல்களைக் கூறுவதாகிய சங்கரவிலாசம் என்னும் நூலை இயற்றியிருக்கிறார். திருமழபாடிப் புராணம் என்னும் நூலும் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது. சங்கரவிலாசம் உபமன்னியர் திருப்பாற் கடல் பெற்றது, சிவன் தாருகாவனத்தில் பலியிரந்தது, சுவேத முனிவர் காலனைக் கடந்தது, சிவன் தாருகாவனத்து இருடிகளுக்கு அருள் புரிந்தது, ததிசிப் பிரமரிடி வச்சிரவாக்கை வரம்பெற்றது, நந்திகேசுரர் வரலாறு, திருமாலுக்குப் பிருகுவின் சாபம் வந்தது, திருமால் காமனைப் பெறச் சிவபூசை செய்தது, ஆழிப்படை பெறச்

சிவவழிபாடு செய்தது, வசுசுருதன் பத்தியோகப் பெருமை, பிருங்கி பிரதக்கிணப் பெருமை, இராசா பிரதக்கிணஞ் செய்தது, ஐந்தெழுத்துப் பெருமை, சிவநாமப் பெருமை, திருநீற்றுப் பெருமை, உருத்திராக்கப் பெருமை, சோமவார விரதச் சிறப்பு, கமலாலயப் பெருமை, காஞ்சிபுரச் சிறப்பு, திருக்காளத்திச் சிறப்பு, திருச்சைலச் சிறப்பு முதலிய செய்திகளைச் செப்புகின்றது. ஆயிரத்துநானூற்று முப்பத்தைந்து பாடல்கள் அடங்கப் பெற்றது.

> "நரக யாதனை தவிர்ந்திடும் நல்விழை வகுத்த
> விரியும் வெண்படத் தெழுத்தினை வெந்தழல் சுதுவத்
> திரியுந் தன்மையில் திரிந்திடுந் தீவினை எழுத்துப்
> பரவும் வெண்டிரு நீற்றினைப் பரிவொடுந் தரிக்கில்."

என்பது திருநீற்றுப் பெருமையில் ஒரு பாட்டு. இவருடைய பெயர் சிதம்பரநாத பூபதி எனவும் வழங்கியது.

## சூருக. சிதம்பரநாத கவிராசர் - அ
(19 - நூ.)

பாண்டிவள நாட்டிலே கல்லடை நகர் என்னும் ஊரில் இருந்தவர். தந்தையார் பெயர் அம்பலவாணன் கவிராசர். சிதம்பரநாத கவிராசர் திருவாவடுதுறை ஆதீனத்தை யடைந்து ஆதினச் சீடர்களில் ஒருவரானார். இலக்கண இலக்கியக் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கிய இவர் அதிவீரராம பாண்டியன் இயற்றிய கூர்மபுராணத்திற்கு உரை யெழுதியுள்ளார். உரைச் சிறப்புப்பாயிரத்துள்,

> "..................................................
> பாய்சுடர்க் கயிலையம் பரம்பரை வந்தருள்
> தங்குமெய் கண்டான் சந்தா னம்மெனுந்
> திங்கள்தோய் நெடுமதில் திருவா வடுதுறை
> ஆயவா தீனத் தளியேன் தன்னையும்
> தாயெனப் புரந்தருள் சற்குரு பதமலர்
> போற்றிமா தவம்புரி புங்கவர் தம்முள் நூல்
> சாற்றிடு நெறிவழாச் சாந்தசா கரமாம்
> சுப்பிர மணியமெய்த் தொன்முனி வரன்தாள்
> எய்ப்பற நினைந்துரை யியற்றனுற் றனனே."

என்று குறிப்பிடுகின்றார். உரையைப் பாராட்டித் திருவாவடு துறையாதீனம் நமசிவாய தேசிகர், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், இராமநாதபுரம் முத்துவீரப்ப பிள்ளை, திருநெல்வேலிச் சாலிவாடீசுர ஓதுவாமூர்த்தி, அம்பலவாணக் கவிராயர், மாவடிச் சிதம்பர பிள்ளை, சிவசுப்பிரமணிய பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## சுடுஉ சிதம்பர நாத தேசிகர்

இவர் திருவாரூரில் அபிடேகத்தர் மரபில் இலக்கண விளக்கம் இயற்றிய வைத்தியநாத தேசிகர் என்பவருக்குத் திருமகனாகத் தோன்றியவர். இவர் தம் தந்தையாரிடமே வடமொழி தென்மொழியில் உள்ள இலக்கண இலக்கியங்களையும் ஆகம முடிபு வேதமுடிபு முதலியவைகளையும் நன்கு கற்றுத் தெளிந்தவர் நால்வகையான செய்யுட்கள் இயற்றுவதினும் வல்லவர். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் தசகாரியம், வில்லிவாக்கப் புராணம், பதிபசு பாசப்பனுவல் உரை, சிவஞான சித்தியார் பொழிப்புரை முதலியன. இவற்றுள் தசகாரியம் கூ0உ செய்யுட்களையுடையது. இவருடைய காலம் ஏறக்குறைய முந்நூறுண்டுகட்கு முற்பட்டதாகும்.

## சுடுரு. சிதம்பரநாத முதலியார் - கொ. அ

திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனப் புலவராக இருந்தவர். இவருடைய சொந்தவூர் வேலூர் மாவட்டத்தில் உள்ள கொடுவூர். தந்தையார் பெயர் அருணாசல முதலியார். சிதம்பரநாத முதலியார் சிறந்த புலமை அமையப் பெற்றவர். அரசிலியந்தாதி முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். அரசிலியந்தாதியைப் பாராட்டித், தருமபுர ஆதீனம் சட்டைநாதத்தம்பிரான், வைத்தீசுவரன் கோயில் இராமலிங்கத் தம்பிரான், ப. அ. முத்துத் தாண்டவராய பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். அந்தாதி நூறுபாடல்களைக்கொண்டு திரிபு என்னும் சொல்லணி நயம்பெற்று இலக்கியச் சுவையுடன் விளங்குகின்றது.

"கடற்கம லத்தை யடக்கி மடுத்த கலைத்தமிழோன்
மடற்கம லக்கை குவித்து வணங்கி வழுத்துநக
ரடற்கம லப்படு வித்தெனை யாளு மரற்கடலை
நடற்கம லற்கிட மாந்தென் னரசிலி நன்னகரே"

என்பது அந்தாதியில் முதற்பாட்டு. இவ்வந்தாதி தருமபுர ஆதீனம் உசு ஆவது குருமூர்த்தி சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பண்டார சந்நிதியவர்கள் பொருளுதவியால் வெளியிடப்பட்டுள்ளது

## சூருச. சிதம்பர நாதன் - க

(20 - நூ.)

இவர் ஈழவளநாட்டில் தொல்புரத்தைச் சேர்ந்தவர். யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியிலும் சென்னையிலுங் கல்வி பயின்றவர். ஆங்கிலத்திலும் தமிழிலும் நன்கு தேர்ச்சி பெற்றவர். சமயப்பற்றும் நாட்டுப்பற்றும் இவரிடம் நன்கு குடிகொண்டிருந்தன. யாழ்ப்பாணத்தில் மட்டுமன்றி இலங்கையின் பல பாகங்களினும் மிகுந்த புகழோடு விளங்கியிருந்தார். யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் ஆசிரியராக இருந்ததன்றி வழக்கறிஞராகவும் இருந்தார். தமிழ் வளர்ச்சிக்காக இவர் நன்கு உழைத்தார்.

முருகக் கடவுள்மீது பேரன்புகொண்ட இவர் கதிரைமலைக் கந்தன்மீது பிள்ளைத் தமிழும் வேறு பல பாடல்களும் பாடியுள்ளார். சத்தியவான் சாவித்திரி என்னும் நாடகநூல் ஒன்றும் இவரால் இயற்றப் பெற்றது. நாற்பத்தோர் ஆண்டுகளே இவ்வுலகில் வாழ்ந்த இவர் ககூஉ ஆம் ஆண்டில், இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடி நீழலை எய்தினர்.

## சூருரு. சிதம்பர முதலியார் - சி

சென்னைமா நகரில் சிந்தாதிரிப்பேட்டையில் ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்கு முன்னிருந்தவர். சிறந்த தமிழ்ப்புலவர். அப்பாவுப் புலவர் என்பவர் இயற்றிய "நெஞ்சறிவுறுத்தல்" என்னும் நூலுக்கு இவர்,

"மணியார்ந்த கடலாடை வயங்குபுவி
அண்டவகை வகுத்தான் தன்னை
அணியார்ந்த உந்தியினின் றளித்திட்டங்
கெப்பொருளும் அளிக்கும் ஆற்றல்
நிணியார்ந்த மணிமுடியின் உரகணையில்
செல்வியொடுந் துளவம் நாளும்
கணியார்ந்த மார்பினெடுங் *கிராத்திக்
கண்வளரும் கண்ணன் ஆய்ந்தே."

என்னும் இது முதலிய ஆறுபாடல்களால் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

## சுருசு. சிதம்பர முனிவர்

இவர் காஞ்சிபுரத்தில் இருந்தவர். மாதவச் சிவஞான முனிவரிடம் இலக்கண இலக்கிய நூல்களை நன்கு கற்றுணர்ந்தவர். முருகக்கடவுளிடத்து மிகுந்த பேரன்புடையவர். க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ், காஞ்சி காமாட்சியம்மை பிள்ளைத் தமிழ் ஆகிய இரண்டு பிள்ளைத் தமிழ் நூல்கள் இவரால் பாடப் பெற்றுள்ளன.

எட்டி குடி

"இட்டமுறு பூதப்ப டைத்தலை மாமோகம்
என்னும்நித் திரையொ ழியவே
இருவருடன் இந்த்ராதி இமையோர்கள் முகமலரும்
இதயகம லமுமலரவே
துட்டக்கிர வுஞ்சகிரி மாயையிரு ளழியவே
துங்கப்பிர சண்டகோடி
சூரியர்கள் உதயமென வெற்றிவேல் விட்டருள்செய்
சுப்பிரமணி யன்வருகவே
மட்டுவிரி செந்தா மரைத்தடஞ் சூழ்கழனி
வளர்செந்நெல் கன்னல்நிகராம்
வளர்கன்னல் பூகநிக ராங்கமுகு தெங்கொக்கும்
வளர்தெங்கு வானளக்கும்
எட்டிகுடி வாழ்குமர இமையோர் குழாம்பணியும்
இருபதாம் புயன்வருகவே
இபமா முகத்தனெனும் ஐங்கரவி நாயகற்
கிளையசண் முகன்வருகவே."

என்பது க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழில் ஒரு பாட்டு.

---

* கிராத்தி—பாற்கடல்.

## கூ௫எ. சிதம்பரம்பிள்ளை - மாவடி

(1868)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலியில் வாழ்ந்திருந்தவர். கல்லிடைக் குறிச்சி சிதம்பரநாத கவிராசரிடம் கல்வி கற்றுப் புலமை பெற்றுத் திருநெல்வேலி, "சைவ சமயப்ரகாச வித்யா சாலை"யில் ஆசிரியராக விருந்தவர். இவர் இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவருக்கு எழுதிய பாடல்களில் ஒன்று,

"ஓங்குவரை யறையமடற் பூகந்தெங்
 குளபொழில்வான் உறவு காட்டும்
தாங்கெழிலார் புதுவைவளர் பொன்னுச்சா
 மிப்புயல்வண் டளவத் தாராற்
கூங்கியற்சீர் புனையுமுத்து விரப்ப
 நாவலநின் னுரிமை வேட்டே
ஆங்கிளங்கன் றின்பால்வேட் டானையலைழத்
 தவிஞெருதுக் காய்ந்துய்த் தேனே."

என்பது.

## கூ௫அ. சிதம்பரம் பிள்ளை - ச

பொள்ளாச்சி தாலுகா ஊற்றுக் குழியில் சங்கர மூர்த்திப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர், "உசித சூடாமணி" என்னும் நிகண்டு ஒன்றை இயற்றியிருக்கிறார்.

## கூ௫கூ. சிதம்பரம் பிள்ளை – வே. ஆ

(20 - நூ.)

இவர் ஈழவளநாட்டிலே பருத்தித் துறையென்னும் ஊரினர். தந்தையார் பெயர் ஆறுமுகம் பிள்ளை. சிதம்பரம் பிள்ளை ஆங்கிலமொழியையுந் தமிழ் மொழியையும் நன்கு கற்றுத் தேறியவர். இவர் "பழமொழித் தீபிகை" என்னும் உரைநடைநூல் ஒன்று இயற்றியிருக்கிறார். அந்நூல் "அக்கரை மாட்டுக்கு இக்கரை பச்சை," "அடம்பங்கொடியுந் திரண்டால் மிடுக்கு," "அடுத்த வீட்டுக்கூரை வேவுங்கால் தன் கூரைக்கு மோசம்" என்பன முதலிய பழமொழிகளை நன்கு விளக்குகின்றது. நூற்று அறுபது பழமொழிகள் இதில் விளக்கப்படுகின்றன. இதற்குச்

சிறப்புப்பாயிரம் பாடிய பருத்தித் துறை - புலோலி. வ. குமாரசாமிப் புலவர் அவர்கள்,

"............... .....................................
திருத்தகு பழமொழித் தீபிகை இயற்றிய
கருத்த னியாரெனிற் கழறுதும் இலங்கை
வடபா கத்து மருங்கியாழ்ப் பாண
வடபா கத்து மகோததிக் கருகாம்
பருத்தித் துறையிற் பச்சிமத் துற்ற
வருத்தமி லவ்வாய் வடக்கினில் வாசன்
விறுடைச் சுகிர்தமும் வியன்செல் வமுமுறும்
ஆறு முகவேட் கருமைப் புதல்வன்
கல்விசெல் வங்களாற் கற்றோர் சார்பால்
சொல்வித ரணங்களாற் சுருங்கா இயல்பினன்
வாய்மை ஒழுக்கம் வழுவிலா நீதி
தூய்மை யாதியஉத் துங்கமும் உள்ளோன்
நிதஞ்சிவ சிந்தனை நிகழ்த்தும்
சிதம்பரப் பிள்ளைச் சிரோன் தானே."

என்று குறிப்பிடுகின்றார்.

## கூகூ௦. சிதம்பரம் பிள்ளை (சங்குவேலி)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலே யாழ்ப்பாணத்தில் சங்குவேலி என்னும் ஊரில் இருந்தவர். தமிழ் ஆங்கிலம் தருக்கம் முதலிய கலைகளிலே வல்லவராக விளங்கியிருந்தார். மொழி பெயர்ப்புச் செய்வதில் சிறந்து விளங்கினார். ஆங்கிலத் தமிழ் அகராதி ஒன்றை இயற்றினார். வின்சிலோ அகராதி இயற்றும்போது துணையாக இருந்தார். ஆங்கிலத் தருக்க விதிகள் சிலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாட்டும் உரையுமாக நியாய இலக்கணம் என்னும் பெயருடைய நூலாக இயற்றி அச்சிட்டு வெளிப்படுத்தினார். இலக்கிய சங்கிரகம் என்னும் பெயருடன் ஒரு திரட்டுநூல் இயற்றினார். தமிழ் வியாகரணம் என்னும் ஒருநூலும் இயற்றினார். இவரால் இயற்றப் பெற்ற தனிப் பாடல்கள் பல.

## கூகூக. சிதம்பரம் பிள்ளை-வி.

இவர் சேலத்தைச் சேர்ந்தவர். வீரசைவ சமயத்தினர். இவருடைய தந்தையார் பெயர் விசுவலிங்கம் பிள்ளை. இவர் கைலாச நாதர் சதகம் என்னும் நூலை இயற்றினார்.

" ஆதிகலி நாலா யிரத்துத் தொளாயிரத்
தாகுமுப் பானி ரண்டில்
ஆயிரத் தெழுநூற் றைம்பத்து மூன்றுவரு
டஞ்சகாப் தம்விகிர்தி யாம்
நீதிசே ராண்டுமே டந்திங்கள் குருவார
நேர்ந்தபனி ரண்டாந் தினம்
நிறைகன்னி திதியைந்தி ரேடமிர்த யோகமிவை
நீடிரே பதிநா ளினில்
சாதியினில் விரசை வன்விசுவ லிங்கமன்
தருசிதம் பரவாணன்யான்
சதகமெனும் இப்பனுவல் நின்னடிக் கன்புகொடு
சாற்றினன் உவந்தா ளுவாய்
காதலுடன் அடியர்தொழு கறைமிடற் றண்ணலே
கற்பகவி ராச மேவும்
கங்கைபுனை ஈசனே மங்கைமகிழ் நேசனே
கயிலையங் கிரிவா சனே."

என்னும் இப்பாடலால் இவருடைய பெயர் தந்தையார் பெயர் நூலியற்றப் பெற்ற காலம் முதலியன விளங்குதல் காண்க.

" கொற்றவர் இடத்திலும் கோக்களின் வாலினும்
குணவரன்கள் வதனத்திலும்
குடத்திலுறு பாலினும கடவா ரணத்திலும்
கொடியினுந் துரகத்திலும்
சுற்றநிங் காதமனை தன்னிலுங் கற்புமிகு
தோகையர் இடந்தன்னிலும்
சொல்லரிய சிவிகைபே ரிகைதனங் களினுமது
சூதனன் திருமார்பிலும்
சற்றுயி னும்வாய்மை தவறார் இடத்திலும்
சலத்திலுந் தானியத்தும்
சாதிமலர் அதனிலும் புண்ணியர் இடத்திலும்
தங்கதவ ரத்திநத்தும்
கற்றவர் இடத்திலும் திருமகள் இருப்பிடம்
கற்பகவி ராசமேவும்
கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே
கயிலையங் கிரிவாசனே."

என்பது திருமகளிருப்பிடங் குறித்துச் சதகத்தில் பாடப்பெற்ற பாட்டு.

## சசஉ. சித்தமக் கவிராயர்

(19 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் வால சுப்பிரமணியபுரம் என்னும் ஊரில் இருந்தவர். இராமலிங்கம் பிள்ளை என்பவர் இயற்றிய கந்தபுராணவண்ணம் என்னும் பாடலுக்கு இவர்,

"சீரிலகும் பொதுவைநகர் சிறப்புந் ரேங்கிச்
சிறந்தகவி வாணரின்மீ நாலு மன்னாய்ப்
பாரிலகும் புகழ்க்கினிய கலைகள் யாவும்
பண்புறவே பரிவுணர்ந்து பானு வொண்போல்
நேரிலகும் பேர்விசய இராம லிங்கம்
நிகழ்த்தினன்ஈஞ் ஞான்றுலகில் நிலைகற் றேங்க
ஆரிலகும் கொன்றைசடி லத்தன் சேய்மன்
ஆற்றலாங் காந்தமதை வண்ண மன்றே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். பூலாறுசாமி பிள்ளையின் புதல்வராகிய ஆறுமுகம் பிள்ளை யென்பவர் (முதுகுளத்தூர்) இவரோடு சிறப்புப்பாயிரம் பாடியிருத்தலின், இவர் அவர் காலத்தவர் என்று புலனாகிறது.

குமாரமுத்துச்சடை ஈசுவரர் என்று பெயர் பெற்று விளங்கிய ஆண்டிச் சுவாமி என்பவர் இவருக்கு ஆசிரியராவர். இவர் இயற்றிய 'சிதம்பரத்தவம்' என்னும் நூலுக்குப் புலவர் நாராயணசாமிப் பிள்ளை என்பவர்,

"சுத்தசை தன்ய மாய்த்தொடர் கிற்கும்
அத்துவி தப்பொருள் வாழ்வமர் தில்லை
நற்றவ மொன்று நயந்துரை செய்தான்
சித்தம னெனவரு தேசிகன் மன்றே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## சசங. சித்தர்

இவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. சித்துக்கள் செய்தபடியினால் சித்தர் என்னும் காரணப் பெயர் நிலைபெற விடுகுறிப்பெயர் மறைந் தொழிந்தது போலும். இவருடைய ஊர் காலம் முதலிய யாதுந்தெரிந்தில. திருவானைக்காவில் எழுந்தருளிய அகிலாண்ட நாயகிமீது இவர் ஓர் அந்தாதி

இயற்றியுள்ளார். அவ்வந்தாதி "சித்தரந்தாதி" என்னும் பெயருடையது; கலித்துறையாலாயது. இக் காலத்தில் இருபத்திரண்டு செய்யுட்களே உள்ளன. நூலின் இறுதியில் அமைந்துள்ள இரண்டு பாடல்கள் நூலாசிரியர் பெயர், நூற்பயன் முதலியவைகளை,

"மூலையில் வாழுங் கிழவியை முற்றத் தழைத்தவடன்
மேலுற வாகமம் வேதாந்தந் தன்னில் விரித்தவுரை
கோலமுன் சித்த ருரைத்தவந் தாதியைக் கூறிநித்தம்
ஞால மிருப்பவர் பால்நம னூர்செல நாணுவரே

சுத்தரந் தாதிப் பிறவிக் கடலைக் குலைத்துநெஞ்சே
புத்தரந் தாதித் துறைபெற லாமுதி ராமுலையாள்
அத்தரந் தாதி அகிலாண்ட நாயகி அம்மையுட
சித்தரந் தாதி இருபத்தி ரண்டையுஞ் செப்பிடவே."

என்னுஞ் செய்யுட்கள் புலப்படுத்துகின்றன. உரையோடு கூடிய இவ்வந்தாதி அச்சிடப்பட்டு வெளியாகியுள்ளது.

"காரண மென்னென் றறிகின் றிலங்கட லும்பலையு
மாரண மும்மகி லாண்டமு மண்டரண் டம்பொதிந்த
பூரண மும்மக முஞ்சக மும்புற மும்புறத்து
வாரண மும்பெண் பிள்ளைவிளை யாடு மணற்சிற்றிலே."

என்பது நூலில் ஒரு பாடல்.

## ௯௯௪. சித்திரபுத்திர பிள்ளை - தி. செ

திக்கெலாம் புகழுந் திருநெல்வேலியில் செந்தில் நாயகம் பிள்ளை என்பவருக்கு அருந்தவப் புதல்வராகத் தோன்றியவர். வண்ணச் சரபம் தண்டபாணி யடிகளுக்குப் பின் பிறந்த உடன் பிறந்தாரவர். தம்முடன் பிறந்தாராகிய தண்டபாணி யடிகளிடமே நூல்களையும் ஓதியுணர்ந்தார். இவர் பல பதிகங்கள் சிறப்புப்பாயிரங்கள் முதலியன பாடியுள்ளார். உடன் பிறந்தாராகிய தண்டபாணி யடிகள் இயற்றிய திருவாமாத்தூர்ப் புராணத்திற்கு இவர்,

"தூலவுடல்வளர ஊனை நுகர் கொடியர்
சோக முடனழிய நிதநேர்குவோன்
சோலைமலி திருநெல் வேலியதனிலொரு
தூய னதுதவசில் உருவாகினன்

ஞாலமகள்மனது வாடவிலதுமகிழ்
ஞாயமுளவரசர் கொடிநீடவே
நாடுமெழின்முருக தாசனுலகுயவி
நாளினுயர்தமிழ்கொ டினிதோதினன்
காலனுயிர்கவரும் ஈசர்மலர்கொடெதிர்
காமனுடல்பொடிய முனிபார்வையார்
காளைமுதுகினுமை யாளுநடுவிலொரு
கான்முளையு நிலவ வருசீர்கொள்வார்
ஆலமரவடியில் நால்வர்களுமுணர
ஆதிமறைமுடிவை அருள்வார்முனுள்
ஆவினினமகிழ மாதைநகரில்விளை
யாடல்களையெவரு மெளிதோரவே.''

என்னும் பாடலையும் மற்றும் நான்கு பாடல்களையுஞ் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## சுரு. சித்துப் புலவர்

இவருடைய இடுகுறிப்பெயர் சிதம்பரம் பிள்ளை. இவர் ஈழவளநாட்டிலே உடுவிலைச் சேர்ந்த சுன்னாகக் குறிச்சியிலே வேளாளவருணத்திலே ஏறக்குறைய நூற்றைம்பது யாண்டுகட்கு முன் தோன்றியவர். இவர் புலவராக விளங்கியதும் அன்றி விடநோய்களைத் தீர்ப்பதிலும் வல்லவராக விளங்கினர். இவர் பல பதிகங்களையும் தனிப்பாடல்களையும் பாடியிருக்கிறார்.

''கல்லாத புல்லர் மனையணு காமல் கவியவர் மேல்
சொல்லாமல் நல்குர வில்லாமல் நித்தம் துயர்க்கடலுள்
செல்லாமல் நல்ல வரந்தரு வாய்செந் திருமருவு
நல்லாய் மயிலணி வாசா செவ்ய நரசிங்கமே.''

என்பது இவர் பாடிய நரசிங்கப்பதிகத்தில் ஒருபாடல்.

## சுசு. சிந்துக்களஞ்சியப் புலவர்

இவர் தமிழ்நாட்டிலே முன்னாளில் இருந்தவர். வசைகவி யாண்டான் கவிராயர் முதலியோர் இவர் காலத்திலிருந்த அறிஞர்களாவர். சிந்துப் பாடல்களை மிகுவிரைவாகவும் கணக்கின்றியும் பாடியபடியால் இவருக்குச் சிந்துக்களஞ்சியப் புலவர் என்று பெயர் உண்டாகியது.

இவர் நாடெங்குஞ்சென்று ஆங்காங்குள்ள புலவர்களைக் கண்டு அவர்களோடு சிந்துப் பாடல்கள் பாடி வெற்றிகொண்டு அவர்கள் அளிக்குந் திறைப் பொருளைப் பெற்றுக்கொண்டு திரிந்தார். திரிமூர்த்தியாக இருந்த இவரை அடக்கவேண்டுமென்று சிலர் முடிவுசெய்தனர். வசைகவி யாண்டான் கவிராயரைக் கண்டு சிந்துக்களஞ்சியப் புலவருடைய செய்திகளை யெல்லாங் கூறினார்கள் சிந்துக் களஞ்சியத்தை அடக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். வசைகவி யாண்டான் கவிராயர் மற்றைப் புலவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கினார். சிந்துக் களஞ்சியப் புலவ ருறைவிடத்திற்குச் சென்று அவரைக் கண்டு வரப்புறப்பட்டார். கையில் ஒரு தேங்காயையும் எடுத்துக் கொண்டுபோனார்.

சிந்துக்களஞ்சியப் புலவர் உயரிய இருக்கையில் அமர்ந்து திண்டிற் சாய்ந்துகொண்டிருந்தார். வசைகவி யாண்டான் கவிராயர் சிந்துக்களஞ்சியப் புலவருடைய இருக்கையில் அமர்ந்து தாமும் அவரைப்போல் திண்டிற் சாய்ந்தார். சிந்துக்களஞ்சியப் புலவருக்கு மிகுந்த சினம் உண்டாகியது. வசைகவி யாண்டானைப் பார்த்து, "நீ என்னைப்போற் சிந்துப் பாடல்களைப் பாட வல்லையோ?" என்று உசாவினார். வசைகவி யாண்டான் இக் கேள்விக்கு நேராக மறுமொழிகூறவில்லை. தாம்கொண்டு சென்ற தேங்காயைச் சிந்துக்களஞ்சியத்தின்முன் வைத்தார் "துண்டு துண்டு துண்டு" என்று அடுக்கொலிச் சொற்கள் சிலவற்றை மொழிந்தார். இவர் இயம்பிய அத்தனை துண்டுகளாயின கொண்டு சென்ற தேங்காய்.

வசைகவி யாண்டான் சிந்துக்களஞ்சியத்தைப் பார்த்துப் "பார்த்தாயா தேங்காய்பட்ட பாட்டை. இதைப்போல் உன் தலையையும் உடைக்க வல்லேன். நீயும் இவ்வாறு செய்யவல்லையா?" என்று உசாவினார். சிந்துக் களஞ்சியப் புலவர் அஞ்சினார். வசைகவி யாண்டானை வணங்கித் தாம் வந்தவழியே சென்றார். இவரைப்பற்றி இதற்குமேல் யாதும் புலனாகவில்லை.

"கொண்டுவந்த தேங்காயை அவன்முன் வைத்துப்
பார்த்தியெனக் கூறி யப்பால்
துண்டுதுண்டென் றடுக்கொலிச்சொல் சிலசொன்னான்
அத்தனைதுண் டாயிற் றந்தோ

கண்டுகொண்டா யோவினனம் தலையுடைக்க
வல்லாயோ கழறு கென்றான்
மண்டுபய முற்றெழுந்து வணங்கியவன்
முன்புவந்த வழிச்சென் றானே.''

## ௬௬எ. சிம்மராய பரத பண்டிதர்

(19 - நூ.)

இவர் மணப்பாடு என்னும் ஊரில் இன்ப கவிராயருடைய வழிமுறையில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பாட்டனர் ஆகியோரும் சிறந்த அறிஞர்கள். இவர்கள் கிறித்து சமயத்திற் சேர்ந்து அதனைப் பின்பற்றியவர்கள். இவர். ''பரதகுல பாண்டியர் பழமை'' என்னும் பெயருடைய நூல் ஒன்றை இயற்றியுள்ளார். இவருடைய தந்தையார் பெயர் அன்னப்பூ பண்டிதர் என்பர்.

'' இந்து குலத்தில் எழுந்த பரதரின்
முந்து சாதி முறைமை சொலத்துணை
தந்த ஆதி தநயன் திருவடி
எந்தம் சென்னியில் ஏந்தி இறைஞ்சுதும்.''

என்பது நூலின் கடவுள் வாழ்த்து. மனுவேல் பிரான்சிங்கு வேங்கடசாமி நாயுடு, சவரிராய பிள்ளை, சவேரியா பிச்சைக் கொரேய்ரா, சவியேர் ஹென்றிலேயேன் என்போர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## ௬௬அ சிராமலைக் கோவை யாசிரியர்

இவர் ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகட்குமுன் சோழவளநாட்டிலே திரிசிரகிரியிலே வாழ்ந்திருந்தவர். இவர் அந்நாளில் திருநெல்வேலியில் சிறந்த புலவராகத் திகழ்ந்த முத்துக்குமார கவிராசர் என்பவரிடங் கல்விகற்றுச் சிறந்த புலமை யடைந்தார். ஆசிரியரிடத்திலே இவர் மிகுந்த பேரன்பு கொண்டவர்.

'' அருளே திருவுருவா யம்புவியின் மேலாம்
பொருளே தமியேன் பொருட்டா—இருடீர
வந்தருளு முத்துக்கு மாரசா மிக்குருவைப்
பந்தமற நெஞ்சே பணி.''

என்பது, இவர் தம்முடைய ஆசிரியருக்கு எழுதிய கடித முகப்பு ஒன்றில் எழுதிய பாட்டு. இவர், "சிராமலைக் கோவை" என்னும் நூலைப் பாடியிருக்கிறார். அக் கோவை நானூற்று ஐம்பத்தெட்டுப் பாடல்களை யுடையது.

*"சீர்கொண்ட தாமரை நீலந் தளவு செழுங்குமிழ்கோங்*
*கேர்கொண்ட காந்தண் மணந்துசெவ் வந்தியொடேய்ந்த கொன்றைத்*
*தார்கொண்ட வேணியர் வாழுஞ் சிராமலைச் சாரலின் பாற்*
*கார்கொண்ட சோலையின் வாயொரு வல்லியென் கண்ணுற்றதே."*

என்பது கோவையின் முதற் பாட்டு. இக் கோவையைப் பாராட்டிச் சாமிநாதக் கவிராயர் என்பவர்,

*"பூவார வேதியர் நல்வேத மென்பர்ந போதனர்கள்*
*நாவார வாகம மென்ப ரெழுத்தென்பர் நாவலர்கள்*
*மேவார வேண்மனு நூலென்பர் காமுகர் வேந்தர்சைவர்*
*தேவார மென்பர் சிராமலைக் கோவையைச் செப்பிடிலே.*

*சத்தாந் தனிமறை யாகம சாத்திர மாமங்கமாம்*
*சித்தாந்த மாமுழு வேதாந்த மாஞ்சித்ர காவியமாம்*
*முத்தாந்த மூவர்சொல் வாசக மந்த்ர முதுபொருளாம்*
*கொத்தாந் தலைமனு நூலாஞ் சிராமலைக் கோவையதே."*

என்று பாராட்டிப் பாடியிருக்கிறார்,

## சுகக. சிவகடாட்சம்மாள்

## (20 - நூ.)

இவ்வம்மையார் சிதம்பரத்தில் திருக்கோயில் கொண்டுள்ள மௌனசுவாமிகளிடத்திலும் அம் மடத்தில் உள்ள அடியார்களிடத்திலும் பேரன்பு கொண்டவர். அட்டாவதானம் பூவை, கலியாணசுந்தர முதலியாரிடத்தில் தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலமை பெற்றார். இவ்வம்மையாருடைய கணவரும் இவ்வம்மையாரோடு கல்வி பயின்றார். இவ்வம்மையார் தம்மாசிரியர்மீது இயற்றிய பாடல் ஒன்றை அடியிற் காண்க:

*"கல்வியைஎன் கணவர்க்கும் எளியேற்கும்*
*கற்பித்துக் கயிலைக் கௌரிச்*
*செல்வியைஎன் இதயத்தி லேயிருத்தி*
*உபாசிக்கச் செய்வித் தென்றன்*

வல்வினையைக் கரைத்திடவும் வரும்வினையைத்
தடுத்திடவும் வகைபுரிந்த
பல்வினையின் உயர்பூவைக் கவியான
சுந்தரன்தன் பாதம் போற்றி.''

## ௬எ௦. சிவகாமிநாத பிள்ளை

எட்டையபுரத்தில் ஆண்டியப்ப பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். கருத்தமுத்துப் பிள்ளை என்பவருக்கு உடன்பிறந்தார். இவர் ஐந்திலக்கணங்களையும் நன்கு கற்றுத் தேர்ந்திருந்தபடியினால் ஐந்திலக்கண சாகரம் என்று எல்லோ ராலும் பாராட்டப் பெற்றவர். கழுகு மலையில் எழுந்தருளிய முருகக்கடவுள்மீது 'கழுகாசலக் கோவை' என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார். இவருடைய காலம் நூறாண்டுகட்கு உட்பட்டதே. வல்லிபரதம் என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப் பாடலை அடியிற் காண்க:

''சீர்பூத்த இளசையம் பதியின் மனுமுறையரசு
செய்குமா ரெட்டமேந்திர
சீதரன் துணைவேங்க டேசுரெட் டேந்திரன்
திகழுவண கிரிவேலன்முன்
ஏர்பூத்த சிற்றிடைக் குறவள்ளி நாயகியை
இன்பமுடன் மணமியற்றும்
எழில்மேவு காதைதனை நாடகம தாகவே
இயற்றுகௌ ஞவிசைக்கக்
கார்பூத்த பாற்கடல் கடைந்தஅமு தம்புலவர்
காதலுற வேகொடுத்த
கருணைமால் போலவே சாந்தமாங் கடலினுள்
கருதுசிங் காரமுதலாய்ப்
பேர்பூத்த நவரசம் தருவள்ளி நாடகப்
பேரமுது புலவர்யாரும்
பெற்றின்பு றக்கொடுத் தான்கடிகை நமசிவா
யப்பெருங் கவிவலோனே.''

## ௬எக. சிவகுருநாத ஆசாரி-௪

இவர் சென்னைமாநகரில் விசுவப்பிரம குலத்தில் சடகோபக் கவிராயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினார். தந்தையா ரிடமும் வேறு சில அறிஞர்களிடமுங் கல்வி கற்றார். வீரபாரதி

யார் என்பவர் இயற்றிய திருப்போரூர் சிவசுப்பிரமணியக் கடவுள் இரட்டையாசிரியப் பதிகத்திற்கு இவர்,

"சமரபுரி தனிலெழுந் தென்வினையனைத்து
நீக்கியருள் தந்து காக்கும்
குமரகுரு பரனடியில் இரட்டையா
சிரியமொன்று கூறி னுறல்
பமரமுரல் பொழில்வளஞ்சேர் பௌண்டரீக
புரமெனும்பொற் பதியான் சில
அமரர்புகழ் வீரபா ரதியெனப்பேர்
படைத்தோங்கும் அண்ணல் தானே."

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கூஎ௨. சிவசங்கர பண்டிதர். கா. சி

(20 - நூ.)

இவர் சென்னை திருவேட்டீசுவரன் பேட்டையில் வாழ்ந் திருந்தவர். செய்யுள் பாடுந் திறம் பெற்று விளங்கிய இவர் "பழனி அமுதகவி" என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்று விளங்கினார் 'சிவமலை சந்நிதி முறை' என்னும் சுப்ரமண்ய பசனை பாடிய உதவிப் பொறியாளர் (சப் இன்சினியர்) ஏ. எஸ். விசுவநாதையர் என்பவருடைய வரலாற்றை இவர் ௬௩-பாடல் களாகச் செய்துள்ளார்.

"சிந்தையெலா மரனடிக்கீழ்ச் செலுத்து தமிழ்த்
தேவாரஞ் செப்பி யந்நாள்
சுந்தரனுர் முதலையுண்ட பாலகனை
வரவழைத்த தூய சீர்கொள்
கந்தமலி மலர்ச்சோலை அவிநாசி
யூருடையார் கற்புப் பூத்த
நந்தவிலா மீனுட்சி நாயகர்சுப்
பிரமணிய நலமிக் காரே."

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## கூஎ௩. சிவசிதம்பர ஐயர்-கா

(20 - நூ.)

ஈழவளநாட்டில் யாழ்ப்பாணம் காரை நகரில் இருந்தவர். மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர்களிலும் ஒருவராக இருந்தார்.

சைவசமயச் சொற்பொழிவுகள் பல இவர் செய்திருந்தார். அதனால் இவருக்கு இந்துமதப்பிரசாரகர் என்னும் சிறப்புப் பெயர் உண்டாகியது. கந்தபுராணத்திற்கு இவர் பதவுரையும் எழுதியுள்ளார்.

## ௬எச. சிவசிதம்பரம் பிள்ளை-அ

## (1906)

இவர் சதுரங்கப்பட்டினம் என்னும் ஊரில் தோன்றியவர். சீர்கருணிக குலத்தினர். தந்தையார் பெயர் அருணாசலம் பிள்ளை. சொர்க்கபுரம் அழகிய திருச்சிற்றம்பல ஞானி என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறினார். சுப்பராயச் செட்டியார் என்பவரிடம் வடமொழி, மலையாளம் ஆகியவை களைக் கற்றுணர்ந்தார். 'ஒன்பானென்பது' என்னும் அற நூல் ஒன்று இவரால் திரட்டப்பெற்றுள்ளது. நூலில் அற நெறிகளைக் கூறுஞ் செய்யுட்கள் பல ஒருங்கே திரட்டப் பெற்றுள்ளன. பெரும்பொருள் விளக்கம், தினகர வெண்பா, முத்துறை முப்பத்தாறு, குணாகரம், கோபருவதமாலை, இரும்பல் காஞ்சி, தகடூர்மாலை, நீதி சாரானுபவத்தெருட்டு, நீதிசாரக்கரு, ஆசிரியமாலை, முத்தொள்ளாயிரம், அகவிருளொழிக்கும் ஆதித் தன், வளையாபதி, நீலகேசித்திரட்டு முதலிய நூல்களின் செய்யுட் களும் திரட்டப்பட்டுள்ளன. இந் நூலுக்கு அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், சா. சுப்பராயச் செட்டியார் ஆகிய இருவரும் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"இலக்கியவி லக்கணமா தியநூல்கள்
ஆராய்ச்சி இனிது நாளும்
கலக்கமறக் கண்டேமுக் கனிரசநேர்
கவிகள்பல கழற வல்லோன்
துலக்கமுறச் சிவபத்தி யினிற்றிளைத்து
வைதிகநல் துரிய ஞானம்
பலக்கவுயர் குணசீலன் சிவசிதம்
பரப்பேர்கொள் பாவ லோனே."

என்பது பூவை கலியாணசுந்தர முதலியார் பாடலில் ஒன்று.

## சுஎரு. சிவசிதம்பர முதலியார். க. ரா

(கி. பி. 19 - நூ.)

இவர் திருப்பாதிரிப்புலியூரில் வேளாண் குலத்தில் தோன்றியவர். பெரும் புலவர் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத்தேறிச் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தவர். திருப்பாதிரிப்புலியூரின் அண்மையில் உள்ள கரையேறவிட்ட நகருக்கு இவர் புராணம் இயற்றியுள்ளார். அப்புராணம் கரையேறவிட்ட நகர்ப்புராணம் என்னும் பெயரோடு வழங்குகின்றது. புராணத்தைப் பாராட்டி, சி. மு. சாமிநாதையர், முருகதாச சுவாமிகள் என்னுந் தண்டபாணி சுவாமிகள், சிதம்பரம் முத்துக்கற்பக தேசிகர், சேற்றூர்ச் சமத்தானவித்துவான் சிவகாசி அருணாசலக் கவிராயர், புதுப்பாளையம் பெரியசாமிப் பிள்ளை, பு. வேங்கடசாமிப் பிள்ளை, புதுப்பாளையம் பொன்னுச்சாமிப் பிள்ளை, கழுகுமலை திரவியம் பிள்ளை, விருதைச் சிவஞானயோகிகள், வெ. ப. சுப்பிரமணிய முதலியார், திருநெல்வேலி நெல்லையப்ப பிள்ளை, எட்டையபுரம் கருத்த முத்துப் பிள்ளை, சோ. நாராயணவேங்கடாசல நாயகர், க. சி. முருகேச முதலியார், க. சி. வா. இராசப்ப முதலியார் என்பவர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"காட்சியளித் தெம்பெருமான் கரந்திடவும் புவிவிழ்ந்தே
மாட்சியுறப் பணிந்தெழுந்து மலர்க்கணீர் உகத்தொழுது
தாட்சியில்பா திரிப்புலியூர் தனையடைந்தெம் பெருமாற்கே
ஆட்சியுறத் திருப்பதிகம் அறைந்ததிகைப் பதியணைந்தார்."

என்பது கரையேறவிட்ட படலத்தில் ஒரு பாட்டு. இவர் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூல் ஒன்று இயற்றினரெனவும் அந்நூலுக்குத் திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகள் சிறப்புப்பாயிரம் வழங்கினரெனவுந் தெரிகிறது.

## சுஎசு. சிவசுப்பிரமணியக் கவிராசர்

(18 - நூ.)

பாண்டிவளநாட்டில் கல்லிடைக் குறிச்சியில் தோன்றியவர். இவருடைய தந்தையாருஞ் சிறந்த புலவர். பொதிகை நிகண்டு முதலிய நூல்களை இயற்றியவர். 'சாமிக் கவிராயர்' என்னும்

பெயரினர். சிவசுப்பிரமணியக் கவிராசர் 'நாமதீப நிகண்டு' என்னும் பெயருடைய நிகண்டு ஒன்றை இயற்றியிருக்கிறார். இந் நூல் எண்ணூற்றெட்டுப் பாடல்களைக் கொண்டது. உயர் திணைப் படலம், அஃறிணை உயிர்ப்பொருட் படலம், குணநாமப் படலம் என்னும் பிரிவுகளைக் கொண்டது. ஏறக்குறையப் பன்னீராயிரம் சொற்களுக்குப் பொருள் கூறுவது.

"கந்தன்முரு கன்குமரன் கார்த்திகே யன்கவுரி
மைந்தன்காங் கேயன்மயி லூர்திசிவன்—மைந்தன் வள்ளி
தெய்வானை மன்புலவன் செட்டிகுகன் வீரர்முன்னோன்
வைவேல வன்குறிஞ்சி மன்"

என்பது முருகக்கடவுளுடைய பெயர் கூறும் பாடலில் ஒன்று.

## கூஎஎ. சிவசுப்பிரமணிய சிவாசாரியார்

(20 - நூ,)

ஈழவள நாட்டில் வட்டுக்கோட்டையில் நாகராசக் குருக்கள் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். ஏகாதசிப்புராணம், கந்தசட்டிப் புராணம், திருத்தென் கோயிற் புராணம், முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். சிறந்த அறிஞர். "......செந்தமிழ் வித்துவ சிகாமணி, நாகேசையன் வாகுயர் புதல்வன், கவி மழை மேகம் புவிபுகழ் சீலன், சிவாகமம் என்னும் உவாநிறை பௌவம், தூண்டிய புந்தியிற் றூண்டிய விரகன்'' என்று இவரை ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை பாராட்டியுள்ளார். நூலைப்பாராட்டி வே. கனகசபாபதி ஐயர், அ. குமாரசாமிப் புலவர், நூலாசிரியரின் புதல்வராகிய ஞானசுப்பிரமணியக் குருக்கள், அண்ணுச்சாமிச் சாத்திரிகள் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். ஏகாதசிப் புராணம் முந்நூறு பாடல்களையுடையது.

"மலையர மங்கையர் வான ரம்பையர்
நிலைசசி ரோகிணி நீட ருந்ததி
விலைவரம் பகன்மணி மேவு நாகர்தம்
தலைமைசால் மங்கையர் தாமும் ஈண்டினார்."

என்பது ஏகாதசிப் புராணத்தில் ஒரு பாட்டு. கந்தசட்டிப் புராணம் எட்டுச் சருக்கங்களையும் ஆயிரத்தொன்பது செய்யுட்களையுங் கொண்டது. இதற்கு யாழ்ப்பாணம் மாதகல் சு. ஏரம்

பையர், காரைநகர் மு. கார்த்திகேய ஐயர், மு. சிதம்பரப் பிள்ளை, ஊர்காவற்றுறை நீதிபதி கதிரைவேற் பிள்ளை, சி. வை. தாமோதரம் பிள்ளை, சுன்னாகம் அ. குமாரசாமிப் பிள்ளை, மு. ரா. கந்தசாமிக் கவிராயர் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"ஆறுவகைச் சமயமத முடிவாகி அடியாகி
அப்பா லாகித்
தேறுமெழிற் சித்தாந்த சைவநறுஞ் செழும்பொருளைத்
தெளிந்தே உய்ய
ஆறுமுகந் திருமேனி ஒன்றுடையார் மயிலுடையார்
அயில்வேல் ஏந்தி
மாறுபடுஞ் சூர்குடைந்தார் மலர்ப்பதங்கள் தொழுதுவினை
மாற்று கிற்பாம்."

என்பது நூலிற் சுப்பிரமணியக் கடவுள் வணக்கம்.

## ௬௭௮. சிவசுப்பிரமணிய தேசிகர்

(19 - நூ.)

இவர் விருத்தாசலம் என்னும் பழமலை குமாரதேவர் ஆதீன வழி முறையைச் சேர்ந்தவர். வேத சிரேணி என்னும் வேளைச் சேரிச் சுவாமிகளாகிய சிவசிதம்பர தேசிகருடைய திருவடித் தொண்டர். இவர் சுபோத சிகாமணி, திருவருணசல தேசிகர் பிள்ளைத்தமிழ், இராயபுரம் பதிற்றுப்பத்தந்தாதி முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார். இவைகளைப் பாராட்டிப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், சச்சிதாநந்தப் பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"இருவினை வாழைக் காடுமுறித்தெறி
இபமே தாலே லோ
ஈறில வித்தை வேழமுரித்தருள்
ஏறே தாலே லோ
பொருவரு மாயைக் கோளரியடுசிம்
புள்ளே தாலே லோ
பொங்கிய தாபக் கனலற அருள்பொழி
புயலே தாலே லோ
கருவெனு நஞ்சம் ஒழித்துறும் அமுதக்

கடலே தாலே லோ
கலியது தீரப் படிமிசை வந்தருள்
கண்ணே தாலே லோ
பரசுகம் உதவும் கற்பகம் எனவரு
பண்பா தாலே லோ
படிறனை யாளுங் கருணை யைகுரு
பரனே தாலே லோ.''

என்பது பிள்ளைத்தமிழில் ஒரு பாட்டு.

## கூஎகூ. சிவசூரியம் பிள்ளை

(20 - நூ.)

கொங்குவளநாட்டில் ஆனைமலை என்னும் ஊரில் சேரகுல வேளாளர் குலத்தில் காசியப கோத்திரத்தில் இவர் தோன்றினர். இவருடைய தந்தையார் பெயர் ஆதிநாராயணப் பிள்ளை. தாயார் பெயர் நாச்சியார் அம்மாள். இவர் தோன்றிய காலம் 1869ஆம் ஆண்டு (பிரமோதூத) ஆவணித் திங்கள் உடுஆம் நாள்.

இளம்பருவத்திலேயே தந்தையார் இறந்துபோகத் தம்முடைய சொந்த முயற்சியினால் கல்வி பயின்றார். 1893 ஆம் ஆண்டில் போர்டு பாடசாலையில் வேலையில் அமர்ந்தார். பிறகு பல இலக்கியங்களைக் கற்று 1900ஆம் ஆண்டில் எல். எஸ் தேர்வில் தேறினார். தம் கல்வியை மேன்மேலும் வளர்த்து வந்தார். அவ்வூர்த் தலைமைக் கணக்கு முத்துவீரப்ப பிள்ளையிடமும் பல நூல்களைக் கற்றார். போடிப்பட்டி அருணாசல அடிகளிடம் வேதாந்த நூல்களை ஓதி உணர்ந்தார்.

சிவசமயத்தில் பற்றுமிகுந்து ஈசுவரத் திருப்பணியில் ஈடுபட்டார். அவ்வூர்க் கூத்தப்பிரான் திருக்கோயிலைச் சீர் செய்து மதில்கள், தூபிகள் முதலியவைகள் கட்டுவித்தார். பழைய கோயிலான சோமேசர் கோயிலையுஞ் சீர்திருத்திக் கள்ளியெடுத்துச் சௌந்தரிய நாயகி உருவமும் ஏற்படுத்திவைத்தார். சிற்றூரின் தென்பால் அமைந்த மசானி அம்மையின் பெருமை தெரியும் வண்ணம் திரௌபதியம்மன் திருவிழா நடத்திவைத்தார். பிற சமய நூல்களையும் படித்து அறிவை வளர்த்துக்கொண்டார்.

இவர் காளமேகம் போன்று பல செய்யுட்களைப் பாடியுள்ளார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் :

க. பழநித் திருவருட் பாசுர அந்தாதி
உ. மசானி அம்மன் தோத்திரம்
௩. மாரியம்மன் தோத்திரம்
௪. பிள்ளையார் பதிகம்
௫. உண்ணாமுலை யந்தாதி
௬. சோமேசர் சௌந்தரியநாயகி பதிகம்
எ. நரசிம்ம தண்டபாணி பதிகம்
அ. சபாநாதர் பதிகம்
௯. நரசிம்மசுவாமி வெண்பா
௧௦. வேனிஸ் வணிகவெண்பா
௧௧. அன்னிபெசன்ட் அம்மை
௧௨. காந்தியடிகள் அந்தாதி - முதலியன.

இரௌத்திரியாண்டு கார்த்திகைத் திங்களில் இவர் இறைவன் திருவடி நிழலையடைந்தார். அப்பொழுது இவருடைய குமாரர் பாடிய இரங்கற்பாக்களில் ஒன்று ;

"அப்பா ! எனையீன் றிருந்தி இனிதொன்றும்
செப்பாது சென்றீர் சிவபதம்—ஒப்பாரில்
புத்திரராம் யாங்களும் போற்றியிடும் புண்ணியமும்
வித்தகமாய் வாழ்கவே வேண்டு."

என்பது.

## ௬௪௦. சிவஞானக் குருக்கள்
(19 - நூ.)

இவர் திரிசிரபுரத்தில் இருந்தவர். பள்ளிக்கூடத்தில் கணக்காயராக அமர்ந்து தொழில் புரிந்த இவர் சுப்பிரமணியர் அட்டகம், கொரட்டிச் சண்முகன் பதிகம் முதலிய நூல்கள் இயற்றியுள்ளார்.

"கொரட்டிப் பதிவாழ் குகன்சண்முகன்மேல்
திரட்டிப்பா மாலைதனைச் சூட்ட—கொரட்டிதனில்
ஆலயத்தின் கண்ணுள்ள ஐங்கரத்தான் பாதமலர்
சாலவணி கொள்வேன் தலை."

என்பது சண்முகன் பதிகத்தின் காப்புச் செய்யுள்.

## ௬௯௧. சிவஞானப்பரன் பிள்ளை

இவர் வேளாளர் குலத்தில் தோன்றியவர். திருத்தூங்கானை மாடம் எனவும் பெண்ணாகடம் எனவும் வழங்கும் திருக்கடந்தையூரின் சிறப்பினைக்கூறும் திருக்கடந்தைப் புராணம் பாடியிருக்கிறார்.

'' தவஞானத் தவர்க்கருளும் தற்பரனார் உமைக்குரைத்த
நவஞானந் தருகடந்தை நற்றலமான் மியந்தனைத்தத்
துவஞானம் பயில்வேளாண் தொன்மரபில் தோன்றியசீர்ச்
சிவஞானப் பரன்தமிழால் செய்துலகோர்க் களித்தனனால்.''

என்பது ஆக்கியோன் பெயர் உரைக்கும் பாடல்.

'' திருவளர் சுயம்பு லிங்கம்
தெளிவுறு தீர்த்த மேன்மை
மருவிய கடந்தை தன்னின்
மறையவர் ஆதி சைவர்
அரனடி யவர்கட் கெல்லாம்
அகன்மனை பூதா னங்கள்
பெருகிய தருமஞ் செய்தோர்
பிரளயப் பரனைச் சேர்வார்.''

என்பது திருத்தலச் சருக்கத்தில் ஒரு பாட்டு.

## ௬௯௨. சிவஞானவள்ளலார் I
(18 நூ.)

இவர் சீகாழிப் பதியில் இருந்தவர். சுயம்பிரகாச அடிகள் என்னும் பெரியார் அறிவாசிரியராக இவருக்கு அமைந்து நின்றார் என்பது குருவணக்கத்தால் அறியப்படுகிறது. வேதாந்த சித்தாந்த சமரசமாக இருபது நூல்களை இவர் இயற்றியிருக்கிறார். அவை சத்திய ஞானபோதம், பதிபசுபாச விளக்கம், சித்தாந்த தரிசனம், உபதேசமாலை, சிவஞானப்பிரகாச வெண்பா, ஞான விளக்கம், அத்துவிதக்கலி வெண்பா, அதிரகசியம், சிவாகமக்கச்சிமாலை, கர்நாமிர்தம், சுருதிசார விளக்கம், சிந்தனை வெண்பா, நிராமயவந்தாதி, அறுபத்துநாலு சங்கை, தசவழக்குச் சிந்தனை, குருமரபு சிந்தனை, அனுபவ சந்திரிகை, திருமுகப்பாசுரம், அதிகாரப்பிள்ளை யட்டவணை, மரபட்டவணை என்பன. இவர்

சீகாழிப்பதியினர் என்பது பின்வரும் பாடலாற்றெரிகிறது, காழிக்கண்ணுடைய வள்ளலுக்கும் சிவஞான வள்ளலுக்கும் தொடர்புண்டா என்பதும் புலனாகவில்லை.

''சத்திய ஞான போதஞ் சாற்றுமுப் பொருள்வி ளக்கம்
சுத்தசித் தாந்தக் காட்சி சூனுப தேச மாலை
மெத்தஞா னப்ர காச மெய்ஞ்ஞான விளக்கம் மேலாம்
அத்தனத் துவித வெண்பா அதிரக சியமு மன்றே

சிவாகமக் கச்சி மாலை செழுங்கர்நா வமிர்தம் அன்பர்
தவாகரச் சுருதி சாரம் சான்றசிந் தனையின் வெண்பா
அவாவறு நிராம யம்பின் அறுபத்து நாலு சங்கை
உவாவன தசவ ழக்கோ டுயர்குரு மரபு மாலை.

அனுபவ சந்திரிகை அவிர்முகப் பாசு ரம்பின்
மனமயல் அகன்ற பிள்ளை அட்டவணை மரபி னோடும்
தினகரன் உதயம் என்னத் திருவுளம் மகிழ்ந்து ரைத்தான்
புனலிடை அமிழாக் காழிப் புரிவரு போத வள்ளல்.

இருபதிவ் வுண்மை நூலும் இயம்பிய ஞான வள்ளல்
திருவடி தொழுது போற்றித் தெளிதரத் தேர்ந்த மேலோர்
மருவுதம் பவங்கள் நீங்கி மாறுப்பே ரின்ப வெள்ளம்
பெருகிய சுவானு பூதி பெற்றுவீற் றிருப்பர்தாமே.''

''ஆலயமே காயம் அறிவே சிவலிங்கம்
மாலயனுங் காணாத வள்ளலுக்குச்—சீலமுறும்
அன்பே அபிடேகம் அன்பேநல் அர்ச்சனையும்
அன்பேநை வேத்யமும் ஆம்''

என்பது சிவஞானப்பிரகாச வெண்பாவில் ஒரு பாட்டு.

## சுஅரு. சிவஞானவள்ளலார் II

இவர் காஞ்சீபுரத்தில் எழுந்தருளிய ஏகாம்பரப் பெருமான் மீது நூறு பாடல்கள் அடங்கிய 'கச்சிமாலை' என்னும் நூலைப் பாடியிருக்கிறார். புராண வரலாறு, திருத்தொண்டர் வரலாறு அந்நூலில் அடங்கியுள்ளன. இஃது ஒரு பாட்டு.

''நல்லாரைப் போன்றிட் டிருப்பினும் வஞ்சகர் நல்லரல்லர்
பொல்லாரைப் போன்றிட் டிருப்பினும் நல்லவர் புண்ணியரே
உல்லாச மாமலர் கொண்டெறிந் தானன் றுருவழிந்தான்
கல்லாலெறிந்தவன் முத்திபெற் றான்கச்சி யேகம்பனே.''

## கூ௰௪. சிவஞானச் செட்டியார் பெ. மு (1897)

இவர் சென்னைமாநகரில், முருகப்ப செட்டியார் என்பவருடைய புதல்வராகத் தோன்றினர். புலவராக விளங்கி மோசூர் முனிசாமி முதலியார் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறினர். வரசித்தி விநாயகர் தோத்திரம், இசைப்பாடல் முதலிய சிறிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

'' தந்தையே புகலென் றடைந்தஇத் தமியேன்
தன்முகம் பார்த்திரங் கிலையால்
முந்தையே புரிந்த இருவினைப் பெருக்கை
மூர்க்கனெவ் வகைதொலைத் திடுவேன்
நிந்தையே புரியு நீசரிற் கடையேன்
நின்னடித் துணையினைப் பெறவே
சிந்தைசற் றிளகிச் சிறியனை யாள்வை
சித்திவி நாயக மணியே.''

என்பது சித்திவிநாயகர் தோத்திரத்தில் ஒரு பாட்டு. தம்முடைய ஆசிரியராகிய மோசூர் முனிசாமி முதலியாருடைய நூல்களுக்கு இவர்,

'' சீர்பூத்த கடலாடை உடுத்தசக தலமதனிற்
சீர்த்திசெறி சான்றோர்களைத்
திருத்தமொடு கொண்டநா டெனுந்தொண்டை நாட்டிலகு
திருப்பதிமுப் பானிரண்டு
ஏர்பூத்த பாங்கிஞெடு மமரவப் பதிகளுக்
கிணையில்தோத் திரக்கோவையை
இன்னலற இயற்றமிழி னிசைத் தனனரிய
இன்பவா ரியின்மூழ்கவே
பார்பூத்த சென்னையா னடியவரி லொருவனும்
பன்னும்வே ளாண்மரபினைப்
பகர்ந்தவன் மதராசு பியர்டிராபிக் கோவர்சீர்
பகருமா யுள்பண்டிதன்
கார்பூத்த எனதுவெம் பிறவிக்கடல் நீந்துநல்
கல்விநலம் ஈந்திட்டவன்
கங்கைகுலம் ஓங்கவரு மோசூர்வாழ் முனிசாமி
கவிவாணன் இனிதாகவே''

என்று சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

## ௯௩௫. சிவஞானம் பிள்ளை-பொ

இவர் ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்கு முன்பு பாண்டிவள நாட்டிலே ஆற்றங்கரைச் சமத்தானம் என்னும் ஊரில் மேற்படி சமத்தானத்து மேலாளராக விளங்கியிருந்தவர். செந்தமிழ்ப் புலமை நன்கு அமையப்பெற்றவர். இவர் இறைவன் இறைவி இவர்களின் திருவிளையாடலாக, "ஊடற் கலிவெண்பா" என்னும் நூலை இருநூற்று முப்பத்தைந்து கண்ணிகளிற் பாடியுள்ளார். அந்நூல் இறைவனும் இறைவியும் ஒருவருக்கொருவர் உள்ள சிறுமைகளைக் கூறிச் சொற்போரிட்டுக்கொண்டு ஊடுவதாக அமைந்துள்ளது.

"சந்திரனைப் பாத்திரமாய்த் தானே பொதிந்துகொண்டு
வந்திதையே பத்திரமா வைத்திருந்து—தந்திடுமென்(று)
அந்நாள் ஒருவன் அகத்தில்வைத்துச் சோரமிட்டுப்
பன்னாள் கழித்துவந்தென் பாத்திரத்தை—இந்நாளில்
தாருமென்று சொல்லிமெத்தத் தர்க்கமிட்டுக் கொண்டுவழக்
கூருண்முன்னே பேசிநமக் குண்மையிவர்—பாரிதனைத்,
தாம்பிடித்துச் சொல்லித் தரவேண்டு மென்றுமெத்த
விம்படித்த புத்தியின்று வேறுமோ.........."

என்பது 64, 65, 66, 67 ஆவது கண்ணிகளாகும். இவைகளில் திருநீலகண்ட நாயனாரிடம் இறைவன் செய்த திருவிளையாடலை இறைவி சுட்டிக்காட்டிக் குறைகூறுதல் காண்க

ஆற்றங்கரை சமத்தான வித்துவான் சிதம்பரகுமாருக் கவிராசர், ஒட்டப்பிடாரம் குமாரசாமிக் குருக்கள் இருவரும் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௯௩௬. சிவத்தியானானந்த மகரிஷி

(20 - நூ.)

இவர் சென்னைமாநகரில் இராயப்பேட்டையில் இருந்தவர். வேத மொழிபெயர்ப்பு, சத்திநிபாதக் கோவை முதலிய பல நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

"மதிமுகம் வாய்ந்திரு கண்மலர் பெற்று மகிழ்விநெரு
சுதிமுகந் தோற்றுஞ் சுவையென விண்பந் துதைந்தெதிர்ஸ்
துதிமுகங் கூர்தரு செய்யோன் வரையினில் தூயபுலன்
விதிமுகந் தீட்டிய நல்லுருத் தோன்றி விளங்கியதே."

என்பது சத்திநிபாதக் கோவையில் ஒரு பாட்டு. இவர் அண்மைக் காலம் வரையில் வாழ்ந்திருந்தவர்.

## ௬௱௭. சிவபுரம் பிள்ளை

இவர் திருவாவடுதுறையில் அம்பலவாண தேசிகரிடம் கல்வி கற்றுத் தேறியவர். தம் ஆசிரியர்மீது தோத்திரப் பதிகம் ஒன்று பாடியுள்ளார். வேறு நூல்கள் இவரால் பாடப்பட்டில போலும். இஃது ஒன்றுதான் எனத் தெரிகிறது

"அந்தமலைத் தத்துவித மானபணி யாலகற்றி
வந்தமலத் தத்துவிதம் வைத்தாயே—எந்தாய்
திருவா வடுதுறைவாழ் தேசிகா பொய்யின்
மருவாத அம்பலவா ணா."

என்பது அப் பதிகத்தொரு பாட்டு.

## ௬௱௮. சிவப்பிரகாச அடிகள்-திருமழிசை

திருப்போரூர்ச் சிதம்பர அடிகளார் ஆதீனத்தில் பதினோராவது பட்டத்தில் அமர்ந்திருந்தவர். சிறந்த கல்விமானாகிய இவர் சித்தாந்த சிகாமணி உரைக்கு ௧௮௮-அடிகளைக் கொண்ட இணைக் குறளாசிரியப்பாவினால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"........................................................
தாவரு நோன்மைஇ ரேவண கோத்திரத்
துற்பவ முற்றுளிர் அற்புத விற்பனன்
திசைபுகழ் சென்ன பசவநா மேந்த்ரன்
அருந்தவப் புதல்வன் திருந்துமுத் தமிழோ
டாங்கில முந்தேர்ந் தோங்குமிச் சென்னை
சென்ட்ரல் செயில சிஸ்டெண்ட் செயிலர்
என்னும்உத் யோக மன்னுமென் நண்பன்
அன்பருள் ஈகை என்பதோ ருருக்கொண்
டெய்திற் றென்ன ஐதிற் பொலிவுறு
வாகார்ந் திலகு நாகேந்த்ர வள்ளல்
வாழிய பெரிதே வாழிய பெரிதே
........................................................"

என்பது, அச் சிறப்புப்பாயிரத்திற் சில அடிகள்.

## கூஅகூ. சிவப்பிரகாச உபாத்தியாயர்
(20 - நூ.)

இவருடைய தந்தையார் பெயர் தாண்டவராயர். இராமாநுசபுரம் என்னும் ஊரினர். இவரை அத்துவித பண்டிதர் என்பர். இவர் திருவாவடுதுறை யாதீனத்துப் பெரும் புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் கல்வி கற்றவர். திருக்குடந்தைக் கும்பநாத செட்டியார் என்பவர் இயற்றிய திருக்குடந்தைப் பதிற்றுப்பத் தந்தாதிக்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். முதற்பாட்டின் அடியிற் காண்க.

"பொன்மணி கொழிக்குந் தரங்கமாக் கடலைப்
போர்த்திய புவனமா திணுக்கோர்
மன்னும் ஆனனம தாகுஞ்சோ ணாடங்
வதனத்தின் விழியென வயங்கும்
தன்னிக ரெழில்கொள் பொன்னகர் முத்தி
தருநகர் எனநிதம் பரவும்
நன்னக ராகும் பொலன்மலி மாட
நணுகிய குடந்தைமா நகரம்."

## கூகூ௦. சிவப்பிரகாச ஐயர்-தி. வி.
(20 - நூ.)

இவர் வீரசைவர். புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரிடம் மாணவராகி இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறினார். தொண்டைமண்டலம் துளுவவேளாளர் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராக அமர்ந்து பணிபுரிந்தவர். திருமழிசை வீரசிம்மாதன மடம் சாந்தலிங்க சுவாமிகள் ஆதீனத்தில் சமய தீட்சை பெற்றவர். இவரிடம் மாணவர்கள் பலர் கல்வி கற்றுச் சிறந்த புலவர்களாயினர். இராயபுரத்தில் இருந்த செகராவு முதலியார் என்பவர் இயற்றிய "பொன்னுச்சாமி உலா" என்னும் நூலுக்கு இவர்,

"நலமலியுந் திருப்பாலி நதிமலியும்
எழில்தொண்டை நாட்டில் சென்னைத்
தலமலியுத் தரத்தணித்தாம் தண்டையார்
வளநகரில் தழைக்கும் பானுக்

குலமலியும் அரசகுலக் கோமான்மைந்
தமிழ்க்குலவும கொண்மூ என்னப்
புலமலியும் புலவர்புகழ் பொன்னுச்சா
மிச்சகுணப் புனிதன் மீதே.''

என்பதை முதலாகக் கொண்ட மூன்று பாடல்களாற் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## ௯௬௧. சிவப்பிரகாச பண்டிதர்

ஈழவளநாட்டு நீர்வேலி என்னும் ஊரிலே ஏறக்குறைய நூறுண்டுகட்கு முன், வேளாளர் குலத்திலே சங்கர பண்டிதர் என்பவருக்கு மகனுகத் தோன்றியவர். இவர் தம் தந்தையாரிடமே தென்மொழி வடமொழி எனுமிருமொழியையும் நன்கு கற்றுத் தேறினர். பாலாமிர்தம், பாலபாடம் முதலிய நூல்களை இயற்றியதன்றித், திருச்செந்தூர்ப் புராணவுரை, சிவாநந்தலகரி உரை முதலிய உரைகளும் இயற்றியவர். மொழிபெயர்ப்பு நூல்கள் சிலவும் இயற்றினர்.

'' இச்செயலால் ஈதுவரும் என்றுராயாமலே
எச்செயலு மேலோர் இயற்றார்தாம்—இச்சையொடு
வல்லே இயற்றுவரேல் வந்திடுமே மாறுக
அல்லலவர்க் கென்றே அறி.''

என்பது இவருடைய பாலாமிர்தப் பாடலில் ஒன்று.

## ௯௬௨. சிவப்பிரகாசப் பிள்ளை-சா
## (1877)

புதுச்சேரியில் சாமிப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றி இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்ற இவர் மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக்கொண்டு ஆசிரியராக விளங்கியிருந்தார். இவர் நளனுடைய கதையை 'நளச்சக்கரவர்த்தி வாசகப்பா' என்னும் பெயரோடு இயற்றியிருக்கிறுர். மேற்படி நூல் நாடக முறையில் அமைந்துள்ளது. பாடல்கள் பல இனிமையாக இருக்கின்றன. பலவகையான இசைப்பாடல்களும் அமையப் பெற்ற இந்நூலைப் பாராட்டிப் புதுவை

பொன்னுபாத்தியாயர், புதுவை இராமசாமி முதலியார், சுப்பராய உபாத்தியாயர், ஆ. பெ. கோவிந்தராசுப் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர் நூலின் பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க.

### புட்கரன் சொல்லுதல்

"என்றனக்கு வேண்டுவதை உரைக்கக்கேளும்
எவ்வுலகில் உள்ளோரும் உம்மைப் போலச்
சந்ததமுங் குறிப்பறிந்து கொடுப்பார் உண்டோ
சத்தியனே உத்தமனே மகிழ்வு கூர
உன்றனுடன் சூதுதனை ஆட எண்ணி
உவந்துவந்து கேட்டதலால் வேறொன் றில்லை
பந்தயமுன் நாட்டைவைப்பாய் யான்தோற் றாலோ
பணிசெய்ய உனக்கடிமை ஆவே னையா."

## சுகூரு. சிவப்பிரகாசனார்

இவர் திருவாவடுதுறை யாதீனத்தில் சிறந்து விளங்கியவர். பெயர் தில்லைச்சிற்றம்பலவர் என்றும் வழங்கியது. சைவ சித்தாந்த நூல்களிலே மிகு புலமை பெற்றவர். உய்யவந்த தேவநாயனார் இயற்றிய திருவுந்தியாருக்கு இவர் உரை செய்துள்ளார். இவரைக் குறித்து ஓர் அறிஞர்;

"சேடன் படிபுரக்கும் தென்கடவூர் உய்யவந்தான்
பாடுங் களிற்றுப் படிதனக்கு—நீடிமையோர்
தேடும் புகழ்ச்செஞ்சொல் சிவப்பிரகாசன் திருந்த
நாடியுரை நாடா நயந்து.

என்று பாடியுள்ளார்.

## சுகூசு. சிவராச பிள்ளை கே. என்
## (20 - நூ.)

இவர் நாஞ்சில் நாட்டில் நாகர்கோயிலில் தோன்றியவர். தென்மொழி, வடமொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழியினுஞ் சிறந்த புலமை பெற்றவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்தவர். புறநானூற்றின் பழமை, மேகமாலை முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

" சடசட என்று சாடுவேன்
படபட என்று ஒடுவேன்
மடமட என்று பாடுவேன்
தடதட என்று ஆடுவேன்—
மேல்ஸ்டிராம் போல்
விறுவி றென்று சுற்றுவேன்
வேண்டும் பொருளெலாம் பற்றுவேன்
வேண்டாம் அவையென எற்றுவேன்
வினையெலாஞ் செய்து முற்றுவேன்."

இவை மேகமாலையில் இரண்டு சந்தம்.

## சூகூரு. சிவராம பிள்ளை-பா
## (19 - நூ.)

பாண்டிவள நாட்டில் தென்றல் வந்துலவு திருநெல்வேலியில் மேலைத் தேர்த் தெருவில் வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் பால்வண்ணம் பிள்ளை சிவராம பிள்ளை சிறந்த புலவராகத் திகழ்ந்தார். சாமிநாத பிள்ளை என்பவர் இயற்றிய விநாயக புராண சங்கிரகம் என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சிறப்புப் பாயிரத்துள் ஒரு பகுதி;

" முந்துபூஞ் சினையெலாம் முனைந்து மதுத்துளி
சிந்துபூந் துறைவாய் சிந்துபூந் துறைவாய்
வேண்டுவார் வேண்டிற் றனைத்தையும் வேண்டியாங்
கீண்ட வளித்திசை பூண்டு களிக்கும்
சித்திப் பெயரிய தெய்வதக் களிற்றின்
முத்திப் பயத்த முடிவருஞ் சீர்த்தியை
உருகி யன்ப ருளங்கொளப் பருகுவான்
பிருகு பேசிப் பிறங்கிய வடகடல்
நச்சி யாவரு நணுகரி தாகலின்
விச்சையிற் சான்ற புலவர்கள் மெச்சி
உச்சிமேற் கொள்ளும் கச்சியப் பன்பகர்
தென்கடலாய திருப்பாற் கடலிடைப்
பல்கலைக் கடலின் பஃறுறை போயதன்
மதியேனுங் கூரிய மந்தர நிறீஇக்
கடைந்தெழும் அமிழ் தினைக் கணிப்பில்சீர் விநாயக
புராணசங் கிரகமாம் பொற்குடந் தளித்தனன் "

என்பதாகும்.

திருநெல்வேலி சர்வகலா சாலையில் தமிழாசிரியராகத் தொழில் புரிந்தார். இரமண சமுத்திரம் என்பது ஓர் ஊர். இஃது இரமணையெனவும் பெயர் பெறும். இவ்வூர் அம்பாசமுத்திரம் தாலுகாவில் கடையத்தின் பக்கத்தில் உள்ளது. அப்பதியில் எழுந்தருளிய கடவுளின்மீது இவர் இரமணை இரட்டைமணிமாலை என்னும் நூல் பாடியுள்ளார்.

" சொல்லுவதென் துய்ப்பதுவும் தூங்குவதுந் தோகையரைப்
புல்லுவதுந்தானே பொருளாகத்—தொல்லுலகில்
பன்னாட் கழித்தேனே சொக்கலிங்கன் பாதத்தை
எந்நாட் பணிவேன் இனி "

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௬௬௬. சிவராமலிங்கம் பிள்ளை-இ. ச
(20 - நூ.)

இவர் பாண்டிவளநாட்டில் இலவை என்னும் ஊரில் தோன்றியவர். தந்தையார் பெயர் சங்கரலிங்கம் பிள்ளை சென்னைமாநகரில் கலியுகவர்த்தமானி என்னும் பத்திரிகை நடத்திக்கொண்டிருந்த கந்தசாமிப் பிள்ளை என்பவரிடங் கல்விகற்றுத் தேறினர். இவருடைய தந்தையார் தமிழ் நூல்களை நன்கு கற்றுத் தேறியிருந்ததோடு காலக் கணிதத்திலும் வல்லவராக இருந்தார் இவர் தென்காசியில் இராமாநுசம் பிரஸ் என்னும் பெயரோடு அச்சகம் ஒன்று நடத்திக்கொண்டிருந்தார். அவ்வச்சகத்தில் பல நூல்கள் வெளியாயின. சிலையெழுபது உரை என்னும் நூலுரைக்கு இவர் ;

" பதியுறைவோர் புறவிழிப்பா லவர்குறையைத்
தீர்க்குமலர்ப் பதியன் தெய்வ
நிதியெனவே முதற்படைத்த நிருவர்வன்னி
குலக்கரும்பின் நிறையைக் கம்பனீ
துதியுளசெஞ் சிலையெழுப தெனக்கவிசற்
கரைவட்டாய்த் தொகுத்தான் யார்க்கும்
மதியுளநற் றுரைசாமி வள்ளலுரை
யெனும்பாகாய் வழங்கி னுறல்."

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## சு கூஎ. சிவராமலிங்கம் பிள்ளை
(20 - நூ.)

திருவாங்கூர் அகத்தீசுவரந் தாலுகா குலசேகரபுரத்தில் இவர் தோன்றினர். இவருடைய பெயர் முருகேசக் கவிராயர் எனவும் வழங்கும். இவர் ஆய்க்குடி முருகன்மீது பிள்ளைத்தமிழ் ஒன்று பாடியுள்ளார். நூலுக்குத் திருநெல்வேலி சண்முகசுந்தரம் பிள்ளை, அனவரத விநாயகம் பிள்ளை எம். ஏ., கோட்டாறு—சதாவதானி செய்குத்தம்பிப் பாவலர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

''வழிக்குத் துணையாய் வருங்குருவே
வளர்மெய்ஞ் ஞான மாந்தருவே
வளருங் கரும்பே மாங்கனியே
வடிவேல் பிடித்த சேவகனே
அழித்தல் அளித்தல் படைப்பெனுமூன்
றுன தொழிலைத் தான்புரிய
அறுமா முகனாய் வந்துதித்திங்
கமரர் சிறையை விடுத்தோனே
விழிக்கு மையிட் டுமைவருந்த
மென்பால் சுரப்ப விளையாடி
வினையெமையுந் துன்புறுத்த
வேண்டாம் அமுதம் தானருந்திச்
செழிக்க வளருஞ் சிவபோகச்
செல்வா சிற்றில் சிதையேலே
தெங்கு நெருங்கும் ஆயர்குடித்
தேவே சிற்றில் சிதையேலே.''

என்பது பிள்ளைத்தமிழில் ஒரு பாட்டு. சமதக்கினீசுரர் பதிகம் என்னும் சிறு நூலொன்றும் பாடியுள்ளார்.

## சு கூஅ. சிவவாக்கியர்

திருமழிசை என்னும் பதியில் பிருகுமகாரிடி என்பவர் தம் முடைய பொறிகளையெல்லாம் அடக்கித் தவஞ் செய்து கொண்டிருந்தார். சிவபெருமானுடைய திருவடியை எண்ணி நெடுங் காலந் தவஞ் செய்து கொண்டிருந்த இவருடைய தவத்தை இந்திரன் அறிந்தான்; தவத்தைக் கெடுக்க எண்ணினன்; ஒரு

தேவமாதை அவரிடத்திற்கு அனுப்பினுன். அவள் முனிவர் தவத்தைக் கெடுத்து அவரைச் சேர்ந்தாள். பிருகு முனிவர்க்குப் பிறந்த குழந்தை, "சிவ சிவ" என்று சிவநாமத்தை உச்சரித்துக் கொண்டே பிறந்தது. இவ்வாறு பிறந்த குழந்தையைத் தாயுந் தந்தையும் கவனிக்காமல் விட்டுவிட்டார்கள்.

அக் குழந்தை அழுதுகொண்டு ஓரிடத்தில் கிடந்தது. அவ் வழியே வந்த பிள்ளைப்பேறற்றவனுன திருவாளன் என்னும் பெயருடையான் ஒருவன் அக்குழந்தையைக் கண்டெடுத்துக் கொண்டுபோய்த் திருமழிசையான் என்று பெயரிட்டு வளர்த்தான். திருவாளன் வைணவ சமயத்தினன். திருமழிசையார் வளர்ந்து பெரியவரான பின் சமய ஆராய்ச்சி செய்யத் தொடங்கினுர். வைணவ சமயத்திஞல் பயனில்லை என்று உணர்ந்தார். சைவ சமயத்தையே பின்பற்றிச், "சிவ சிவ" என்னும் மொழியையே எக்காலும் உரைத்துக் கொண்டிருந்தார். இதனுலும் பிறந்தபோதே "சிவசிவ" என்று சொல்லிப் பிறந்தபடியாலும் இவருடைய பெயர் சிவவாக்கியர் என்று வழங்கலாயிற்று. இவர் பாடிய பாடல்களும் "சிவவாக்கியர் பாடல்" என்று உரைக்கப் பெற்றன. இரண்டு பாடல்களை அடியிற் காண்க.

"அரியுமல்ல அரனுமல்ல அயனும்அல்ல அப்புறம்
கருமைசெம்மை வெண்மையுங் கடந்துநின்ற காரணம்
பெரியதல்ல சிறியதல்ல பெண்ணுமாணு மல்லவே
துரியமுங் கடந்து நின்ற தூரதூர தூரமே.

கறந்தபால் முலைபுகா கடைந்த வெண்ணெய் மோர்புகா
உடைந்த சங்கின் ஓசையும் உயிர்களும் உடல்புகா
வடிந்தவோ ரடையிஞேடு திர்ந்தபூ மரம்புகா
இறந்துபோன மானிடர் இனிப்பிறப்ப தில்லையே."

## சாகூகூ. சிவன் பிள்ளை

கொங்குவள நாட்டில் வேளாளர் குலத்தில் தோன்றி ஆங்கிலமுந் தமிழும் நன்கு கற்றுப் பள்ளிக்கூடங்களின் பரிசோதகராகத் தொழில் புரிந்துகொண்டிருந்தவர். பிங்கலந்தை முதலிய நூல்களை இவர் அச்சிற் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறுர். இதனைத் தவிர வேறு நூல் செய்திலர் எனத் தெரிகிறது.

## எ00. சிவாக்கிரயோகிகள்

பதினாறும் நூற்றாண்டில் இருந்த சைவசித்தாந்தப் புலவர். தஞ்சைமாவட்டத்தில் சூரியனார் கோயில் ஆதீனத்தில் தலைவராக இருந்தார். தமிழிலும் வடமொழியிலும் வல்லவர். சிவஞான சித்தியார் சுபக்கத்திற்குச் சிறந்த விரிவுரை எழுதியுள்ளார். வடமொழிச் சிவஞான போதத்திற்குப் பன்னீராயிரம் கிரந்த முடைய ஒரு பேருரை எழுதினார். மற்றும் இவரால் எழுதப் பெற்ற நூல்கள், சைவபரிபாடை, தத்துவ தரிசனம் சித்தாந்த தீபிகை, வேதாந்த தீபிகை முதலியன.

## எ0க. சிவானந்த சுவாமிகள்-திரு

இவர்,

'' விளங்குறுஞ் செல்வ வளங்கொ ளாரூரில்
துளங்குவன் மீகக் களங்கமில் புரத்தில்
திகழுறுஞ் சீர்சால் தெட்சணா மூர்த்தியின்
புகழுறு மடத்தின் பொற்பமர் தலைவ''

ராக இருந்தவர் கோயிலூர்ச் சிதம்பரஞான தேசிகரை ஆசிரிய ராகக் கொண்டு வேதாந்த நூல்கள் பலவற்றையும் ஓதியுணர்ந் தவர். நாநாசீவ வாதக்கட்டளை வியாக்கியானம், தட்சணாமூர்த்தி சுவாமிகள் சரித்திரம் முதலிய நூல்களை இவர் இயற்றியிருக் கிறார். நாநாசீவவாதக் கட்டளை வியாக்கியானத்தைப் பாராட் டிச் சிதம்பரம் மௌன தேசிகராதீனம் செல்லப்பஞான தேசிகர் திருநயம் நரசிம்ம பாரதியார், ஈசானியமடம் இராமலிங்க அடிகள் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' பருதிவிளக் குறுசகத்தை மின்மினிதான்
விளக்கவெழு பான்மை போலச்
சுருதியுணர் பெரியோர்கள் விரித்துரைக்கத்
தக்கதுவாய்த் துலங்கும் இந்நூல்
பொருளதனைக் கல்வியறி வின்றியயான்
விரித்துரைக்கப் புகுந்தந் தோவென்
மருளதனை யாவர்கட்கும் வெளிப்படையாய்க்
காட்டினனிவ் வையத் தன்றே.''

என்பது அவையடக்கச் செய்யுள்.

## ௭௦௨. சிவாநந்த தேசிகர்
## (18 - நூ.)

சோழவள நாட்டிலே தஞ்சைமா வட்டத்திலே பதினெட்டாம் நூற்றாண்டிலே வாழ்ந்திருந்தவர். குடவாயில் சிவப்பிரகாச தேசிகர் என்பவர் இவருடைய ஆசிரியராவர் இவர், "சைவ சித்தாந்த சாரம்," "சித்தாந்த நிச்சயம்" முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார் இவற்றுள் சைவசித்தாந்த சாரம் ஐம்பத்தொரு செய்யுட்களை யுடையது.

*"ஆசிதமே யறுத்தருளோ டடைநெறியி தவநெறியோர்*
*பேசிகல்நின் றுருவலனிற் பெற்றிமையி துனதுமல*
*மோசிகனு மெனத்தனதாள் முடிமிசைவைத் தெனையாண்ட*
*தேசிகனுங் குடவாயிற் சிவப்பிரகா சனைப்பணிவாம்."*

என்பது நூலின் குருவணக்கப் பாடல்.

## ௭௦௩. சிவானந்த முனிவர்

இவர் தருமபுர ஆதீனத்தில் எட்டாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த அழகிய திருச்சிற்றம்பல தேசிகர் காலத்தில், அவ்வாதீனத்திலே கல்வி கற்றுச் சிறந்து விளங்கியவர். சம்பிரதாய தீபம், சிவானந்த போதசாரம், சிவானந்தமாலை முதலிய நூல்களை இயற்றியவர்.

*"வடிவுறக் கண்டு மலமெனத் தெளிந்து*
*தெடிதுற ஆங்கவை நீங்கலிவ் வேழும்*
*தத்துவ ரூபம் தத்துவ தெரிசனம்*
*தத்துவ சுத்தி தன்னுள் அடங்கும்."*

என்பது சிவாநந்த போத சாரத்தில் ஒரு பாட்டு.

## ௭௦௪. சிவானந்தமூர்த்தி
## (19 - நூ.)

இவர் புதுச்சேரியில் வாழ்ந்திருந்தவர்; செங்குந்த மரபினர். இவருடைய பெயர் பொன்னையா முதலியார் எனவும் வழங்கியது. இவருக்குக் கல்விக் கற்பித்தவர் புதுவைச் சுப்பராய முதலியார் என்ப. இவர் வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவர்.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் விநாயகர் திருப்புகழ், போற்றிக் கலிவெண்பா, விநாயகர் அநுபூதி, விநாயகர் அலங்காரம், சிவாநந்த லகரி, தேவிமானத பூசை, சிற்சத்தியட்டகம், முருகர் மும்மணிக்கோவை, முருகேசர் பதிகங்கள், குருதோத்திர பஞ்சகம், அருணசலேசர் அநுபூதி, ஆத்ம சுவரூப விளக்கம், ஞானவாசிட்ட வமலராமாயணம், சொரூபலட்சண விருத்தி, சொரூபாநுசந்தானம், வல்லம் தலபுராணம் முதலியன.

"உண்ணு டுயர்யோ கியருள் ளொளியாம்
கண்ணு டுலகும் பர்கதிப் பொருளாம்
உண்ணு முலைபா கம்உவந் தருளும்
அண்ணு மலையார் அருள்அற் புதமே"

என்பது அருணசலேசர் அநுபூதியில் ஒரு பாட்டு.

## எ௦௫. சிவாநந்தன்
## (கி. பி. 19)

இவர் தமது பெயருக்கு முன்னால் சங்கர கிங்கரசரண சேகரன் என்று அடை கொடுத்துள்ளார். உரைநடையில் உள்ள நாஞசிவ வாதக் கட்டளையை இவர் க௦௫ பாடல்களாகப் பாடியுள்ளார்.

"உலகம் யாவினும் உள்ளும் புறம்புமாய்
இலகு சோதி எதுவெ தியாவர்க்கும்
அலகி லானந்த மாவதவ் வாத்தும
நலமி குந்தெய்வ நற்பதம் நாடுவாம்."

என்பது காப்பு மங்களத்தின் முதற்பாட்டு.

மற்றும் இவர் அகோரரந்தாதி என்னும் நூலும் பாடியுள்ளார். அகோரர் என்பது திருவெண்காட்டில் எழுந்தருளிய அகோர மூர்த்தியை.

"புண்ணிய னேபுல னைந்தையும் நீத்தநற் புந்தியருக்
கண்ணிய னேமிகச் சேயவ னேஉன தன்பினர்க்கரக்
கண்ணிய னேகரு ணகர னேஎன் கருத்தினிலே
நண்ணிய னேதா வகோரஉன் பாத நளினமதே."

என்பது மேற்படி அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௭௦௬. சிறிய இரத்தின கவிராயர்

இவர் பாண்டிவளநாட்டிலே ஆழ்வார் திருநகரி என்னும் ஊரில் இருந்தவர். இவர் வாழ்ந்திருந்த காலம் ஏறக்குறைய இருநூறு யாண்டுகளுக்கு முன்னர் என்பர். இவருடைய முன்னோர்களில் இரத்தின கவிராயர் என்னும் பெயர் உடையவர் ஒருவர் இருந்தார். அவர் மாறன் அலங்காரம் என்னும் நூலுக்கு உரையெழுதியவர். அவர் பெயர் திருமேனி இரத்தின கவிராயர் எனவழங்கும். அவரின் நின்றும் வேறு பிரித்தறிதற் பொருட்டே இவருக்குச் சிறிய என்னும் அடைகொடுக்கப்பட்டது. கல்விச் செல்வமும் பொருட் செல்வமும் ஒருங்கெய்தி வள்ளலாகவும் மச்சபுராணம், நீடூர்த்தல புராணம் முதலிய நூல்களின் ஆசிரியராகவும் விளங்கிய இரசை-வடமலையப்ப பிள்ளை என்பவர் பேரில் இக் கவிராயர் ஆற்றுப்படை ஒன்று பாடியுள்ளார். அந்நூல் திருச்சிராப்பள்ளியிலே கொல்லமாண்டு அ௬அ-இல் அரங்கேற்றஞ் செய்யப்பட்டுள்ளது. அவ்வாற்றுப்படை சொற்சுவை பொருட்சுவை ஆகியவைகளில் சிறந்து விளங்குகின்றது.

"பார்புகழ் நெய்வப் பசுந்துழாய் பூத்த
கார்முகின் மேனிக் கருணையங் கடவுள்
அண்டமும் அகண்டமும அனைத்தும் பூத்த
முண்டக நாபி முளைத்தெழும் பிரமன்
இசைமுகப் பழமறை ஈர்ந்தேன் உவட்டெறி
திசைமுகப் பரிமளச் செந்தா மரையினும்
மேனிலா வியமுகை மென்முலைக் குடைந்த
பானிலா வெள்ளிதழ்ப் பங்கே ருகத்தினும்
வெண்டுகில் வெண்பணி வேய்ந்துவீற் றிருந்த
பெண்டகை வெண்ணிறப் பேடை ஓதிமம்"

என்பது ஆற்றுப்படையின் முதல் பத்து அடிகள்.

## ௭௦௭. சிறியசரவணக் கவிராயர்

இவர் சேதுநாட்டிற் பிறந்தவர். அருணாசலக் கவிராயருடைய மகன். இவர் பெரிய அவதானி. குன்றைச் சிலேடை வெண்பா, திருச்சுழியலந்தாதி, மதுரை யமகவந்தாதி முதலிய நூல்கள் இயற்றியவர். சேதுபதியிடம் பல்லக்கு முதலிய வரிசைகள் பெற்றவர்.

## எ௦௮. சிற்றம்பல உபாத்தியாயர்
(1876)

கொங்குவள நாட்டில் சிறந்து விளங்கிய புலவர்களில் இவர் ஒருவர். திருச்செங்கோட்டுத் தலபுராணத்திற்கு இவர் உரை யெழுதியுள்ளார். இவர் உரையெழுதிய காலத்தைப் பின்வருஞ் செய்யுள் விளக்கமாகக் கூறுகிறது.

"ஏர்விளம்பி வருடமதில் சிரவணத்திங்
    களிற்பதினுன் கினிய தேதி
சீர்விளம்பு மதிக்கிழமை அமரபக்கம்
    பதின்மூன்றுந் தேதி பூசம்
தேர்விளங்கு திருவிதி நாககிரி
    மான்மியத்தைத் தெளிந்து தேர்ந்து
சூர்விளங்கு புலனமைசிற் றம்பலவன்
    உரையெழுதத் தொடங்கி னனே."

## எ௦௯. சிற்றம்பலக் கவிராயர் (ஆதி)
(கி. பி. 1647)

தொண்டைவள நாட்டில் மகாபலிபுரம் என இந்நாளில் வழங்கும் மாமல்லபுரத்தில் இருந்தவர். அந்நாளில் பாண்டிவள நாட்டில் சிறந்த வள்ளலாக விளங்கியிருந்த வெங்களப்ப நாயகர் என்பவர்மீது இவர் ஒரு குறவஞ்சி பாடி மிதிலைப் பட்டியை முழு உரிமையாகப் பெற்றார். அழகிய சிற்றம்பலக் கவிராயர் இவருடைய வழிமுறையினரேயாவர். இவருடைய முன்னோர் களும் பின்னோர்களிற் பலரும் சிறந்த புலவர்களாக விளங்கியிருந் தனர். இவரும் இவருடைய முன்னோர் பின்னோரும் பாடிய நூல்கள் பல இவர்கள் பெருநிலக்கிழார்களாலும் சிற்றரசர் களாலும் சிற்றூர்கள் பலவற்றை வரிசையாகப் பெற்றுச் சிறப் புடன் வாழ்ந்திருந்ததன்றி மற்றைப் புலவர்கட்கும் உதவி செய் பவர்களாக வாழ்ந்திருந்தனர். இவர் இயற்றிய நூலின் பெயர், "வெங்களப்ப நாயகர் குறவஞ்சி" என்பதாகும். அந்நூல் சிறந்த நாடக நூல் எனவும், குற்றாலக் குறவஞ்சி போன்ற சொற்சுவை பொருட்சுவையுடைய நூல் எனவும் கூறுகின்றனர். அச்சிற் பதித்து வெளிவந்ததாக நாம் கண்டிலம்.

## எகo. சிற்றம்பலக் கவிராயர்
(20 - நூ.)

மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் வகையைச் சேர்ந்தவர். புதுக்கோட்டை நாட்டில் உள்ள பெரிய கள்ளுவயல் கலங்காப்புலி கறுப்பண்ணசுவாமி பேரில் சந்தக்கலி வெண்பா, ஆசிரிய விருத்தம் ஆகியவைகளை இவர் இயற்றியிருக்கிறார்.

"சீரிலகு கத்தியரி வாள்தாங்கு செங்கையும்
செய்யகே யூரபுயமும்
திகழ்சந்திர காவியுறு மாற்கட்டு கொண்டையும்
சிறந்திடு மதிவதனமும்
தாரிலகு மாலையா பரணநிறை மார்பமும்
தருகருங் கச்சையுடையும்
தண்டையொடு கிண்கிணி யொலித்திட அசைந்தாடு
தாமரை நிகர்த்தபதமும்
பாரினுயர் அடியார்கள் தரிசிக்க இகபரம்
பாலிக்கும் வரதசீலா
பண்ணைசூழ் கள்ளுவயல் ஆலயந் தன்னிலே
பரிவா யிருந்த முதலே
காரிலகு காயாம்பூ வண்ணனே தண்ணளித்த
கருணா லயப்பிரதாபா
கலன்பூத்த மார்பரிரு நிலம்போற்ற வேவளர்
கலங்காக் கறுப்பண்ணனே."

என்பது ஆசிரிய விருத்தத்தில் ஒரு பாட்டு.

## எகக. சிற்றம்பலவையா

இவர் சேதுநாட்டில் சிறுகம்பையூரில் இருந்தவர். தந்தையார் பெயர் சுப்பிரமணிய பிள்ளை. சிற்றம்பலவையா கலைமகள் அருள் பெற்றவர். மருதூர்ப் புராணத்தைப் பாடி இரகுநாத சேதுபதியின் அவையிலே அரங்கேற்றஞ் செய்தார்.

## எக௨. சிற்றம்பலப் புலவர்

ஈழவளநாட்டில் மாதகல் என்னும் ஊரில் இருநூறு ஆண்டுகட்கு முன்னே இருந்தவர். வேளாண்குலத்தினர். திருமறைக்காட்டில் இருந்த பஞ்சலக்கணக் கணபதி ஐயர் என்பவரிடம்

இலக்கண இலக்கியங் கற்றுத் தேறியவர். இருபாலைச் சேனாதி ராய முதலியார், அராலி அருணாசலம் பிள்ளை முதலியோர் இவரிடங் கல்விகற்றுத் தேறியவர்கள். இவர் கண்டியரசன்மீது கிள்ளை விடுதூது என்னும் நூல் ஒன்று பாடி அதனை அரங் கேற்றச் சென்றபோது அவ்வரசன் ஆங்கிலேயரால் சிறைப்படுத் தப்பட்டான் என்னுஞ் செய்தியைக் கேட்டு வருந்தித் திரும் பினார்.

## ௭௩௩. சிற்றம்பல முதலியார்

இவர் சைதாபுரம் என்னும் ஊரில் இருந்தவர். தந்தையார் பெயர் ஐயாச்சாமி முதலியார். காயை முருகலிங்கையர் என்பவ ரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறினார். காலக்கணித நூற் பயிற்சியிற் பெரிதுந் தேர்ச்சி பெற்றவர். காலக்கணித நூல் ஒன்றை இயற்றுமாறு இவருடைய தந்தையார் இட்ட கட்டளைக் கேற்ப அவருடைய பெயரால் 'ஐயாச்சாமீயம்' என்னும் காலக்கணித நூல் ஒன்று இயற்றினார். செய்வித்தோன் பெயரையும் நூலுக்குப் பெயராக இடுதல் மரபாக உண்மை யின், இவர் தந்தையாராகிய செய்வித்தோரது பெயரையே நூலுக்குப் பெயராக இட்டார். நூலைப் புகழ்ந்து ஆசிரியராகிய காயை முருகலிங்கையர், இராமாநுசக் கவிராயர், சென்னை நயனப்ப முதலியார் முதலியோர் சாற்றுக் கவிகள் வழங்கி யுள்ளனர். அம்மணீயம் என்னும் ஒரு நூலையும் தம் பாட்டியார் பெயரால் இவர் இயற்றினார்.

"ஆர்ந்தறிவோர் முன்னேயான் ஐயாச் சுவாமியம்
தேர்ந்தபுன்சொல் வெண்பாவிற் செப்பவே—சேர்ந்தநீர்ச்
சேற்றில் விளைந்தநறுஞ் செங்கழுநீர்ப் புட்பமென
மாற்றிநல மாக்கொள்ளு வார்."

என்பது ஐயாச்சுவாமீயத்தின் அவையடக்கச் செய்யுளாகும். இந்நூலிலே நூற்றைம்பது வெண்பாக்கள் உள்ளன.

## ௭௩௪. சின்மயானந்த அடிகள்
## (1907)

சோழவள நாட்டிலே காவிரிப்பூம்பட்டினத்திலே சிவராச யோகமடத்தில் இருந்தவர். கண்ணங்குடிச் சுவாமிகள் என்னும்

பெரியவர்க்கு அடியவராகி அறிவுநூல்களை ஓதியுணர்ந்தார். இவர் இறைவன்மீதும் இறைவிமீதும் பல பாடல்களை இயற்றி யுள்ளார். அவை சிவசத்தி கவசம், சிவசத்தி அகவல், சிவசத்தி பதிகம், சிவசத்தி நவகம், உய்கைப் பதிகம், தற்போத விழுப்பு, திருவருள் வியப்பு, சிவசத்தி யலங்கார உண்மை முதலிய பல தலைப்புக்களைக் கொண்டவை.

"நண்ணூர் கடலுங் கரையின்றித்
தங்கிநிற்குந் தன்மையதும்
விண்ணூர் நெடுமீன் தாரகைகள்
வெகுவாய் நிலையாய் நிற்பதுவும்
ஒண்ணு ரொளியாஞ் சிவசத்தி
உயர்வாம் நிலையென் றுணர்வாயே
திண்ணூர் செயலாய் எனைநலியத்
தினமும் விரியும் மடநெஞ்சே."

என்பது தற்போதவிழுப்பில் ஒரு பாட்டு. இந்நூலுக்கு அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், திருவொற்றியூர் இராமைய தேசிக சுவாமிகள் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## எகரு. சின்னக் கவுண்டர்

இவர் கல்வி கேள்விகளில் மிக வல்லவராய்ப் பெரும் புலவராய்த் திகழ்ந்திருந்தமையின் இவர் மகாவித்துவான் எனவும் வழங்கப்பெற்றார். இவர் திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள உண்ணாமுலையம்மன்மீது உண்ணாமுலையம்மன் சதகம் என்னும் நூலைப் பாடியிருக்கிறார். பெரும்பாலுஞ் சதகங்களெல்லாம் அறநெறியைக் கூறுதலே முறைமையாகக் கொண்டவாறுபோல இச் சதகமும் கூறுகிறது. சதகத்தில் ஒரு பாட்டை அடியிற் காண்க:

"மேதினியின் மேன்மக்கள் கெட்டாலும் அவருக்கு
மேன்மைமரி யாதைஉண்டு
வேய்வளைந் தாலுமது திகழ்கின்ற சிவிகையின்
மேற்கொண் டிருப்பதுண்டு
நீதரச வாதமுறை கெட்டாலும் வைத்தியம்
நேர்ந்தே பலிப்பதுண்டு
நிகழ்கரி இறந்திடினும் வீணல்ல அத்திதனை
நிதிதந்து கொள்வதுண்டு

சூதிலா யோகிகட் கிகமதில் சுகமில்லை
சொர்க்கத்தின் முத்தியுண்டு
சுகமதன ரூபியென் றூலும் ரதிமாட்டுஞ்
சுரூபமொடு தோற்றம்உண்டு
தாதகியில் வாசமில் லாவிடினும் அரனுடைய
தலைமீ திருப்ப துண்டு
தருமேவும் அருணகிரி நசர்பால் உறையுலகு
தாயுண் முலையம்மையே.''

## எகசு. சின்னச் சருக்கரைப் புலவர்

இவர் சருக்கரைப் புலவரின் வழியில் வந்தவர். இவர் மிழலைச் சதகம், வண்டுவனப் பெருமாள் ஊசல், திருவாடானைச் சித்திரகவி மஞ்சரி முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். மிழலைச் சதகம் பிரதாபசிம்ம அரசர் தஞ்சையை ஆண்ட காலத்தில் வேங்கடாசலமால் என்பவர் அமைச்சராகவும் மாணிக்கவாசக வேள் சம்பிரதியாகவும் இருந்தகாலத்தில் துளுவவேளாண் மக்களைச் சிறப்பித்துப் பாடியது.

'' அடுக்கப் படிக்கின்ற செந்தமிழ்ப் பாவலராரிணையும்
தடுக்கப் படிக்கின்ற கல்விகல் லாரிந்தத் தாரணியில்
கொடுக்கப் படிக்கின்ற கல்விநன் றுய்வந்து கூடியபின்
நடக்கப் படிக்கின்ற நாட்டார் மிழலை நராதிபரே.''

என்பது அச் சதகத்தில் ஒரு பாட்டு.

## எகஎ. சின்னச்சாமிச் சாத்திரியார்

இவர் தொண்டைவளநாட்டிலே காஞ்சீபுரத்திற்கடுத்த குத்தனூர் என்னுஞ் சிற்றூரிலே கி. பி. 1829ஆம் ஆண்டிலே பிறந்தார். தந்தையார் பெயர் சேஷையர்; தாயார் பெயர் கங்காபவானியம்மாள். பள்ளியில் விடப்பட்ட இவர் அகவை பத்தொன்பது முடியும் வரையில் பொதுவான கல்வியைக் கற்றுக்கொண்டிருந்தார். பிறகு தெய்வத்திருவருளால் இசைப் பாடல்களை இயற்றும்படியான தன்மை பெற்று இசைப் பாடல்கள் பலவற்றைப் பாடலானார். இவரால் இயற்றப்பட்டவை உருக்குமாங்கத சரித்திரக் கீர்த்தனை, அம்பரீடசரித்திரக் கீர்த்தனை, ததிபாண்ட சரித்திரக் கீர்த்தனை, குசேலமாமுனி சரித்திரக்

கீர்த்தனை, சுபத்திரா கலியாண சரித்திரக் கீர்த்தனை, பாஷ்யகார சரித்திரக் கீர்த்தனை, இராமதாச சரித்திரக் கீர்த்தனை என்பன.

இவருடைய இசைப்பாடல்களைப் புகழ்ந்து; திரிசிரபுரம் வி. கோவிந்தப் பிள்ளை, புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், கோ. இராசகோபால பிள்ளை, காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு, சின்னச்சாமிப் பிள்ளை, காஞ்சிபுரம் இராமாநுச பிள்ளை, திருமயிலை சண்முகம் பிள்ளை, கந்தாடை துரைசாமி ஐயங்கார், தஞ்சாவூர் கோவிந்தசாமி ராவ் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

''விப்பிரர்தங் குலமணியாம் சின்னச் சாமி
வித்தகனோ ரைவரையும் அறுவ ராக்கிச்
செப்பறுசீர்த் திருமாலின் சரிதம் என்னும்
செழுந்தேனை அன்பருக்குப் புகட்டுந் தூயோன்
ஒப்பில்புகழ் மேவும்எழில் இராம தாசன்
ஒண்சரிதந் தனித்தமிழ்நா டகத்தமைத்தான்
இப்புவியோர் ஈடேற இதயத் துன்னி
இவ்வரிய உதவிக்குக் கைம்மா றுண்டோ.''

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## எகஅ. சின்னச்சாமிப் பிள்ளை
(20 - நூ.)

இவர் திருவாரூரிலே இருந்தவர். புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரிடம் இலக்கிய நூல்களையும் இலக்கண நூல்களையும் நன்கு கற்றுப் புலமை பெற்றவர். திருக்குருகூர் ஞான சித்த சுவாமிகள் என்னும் பெரியாரோடு தொடர்புடையவர். இவர் மேற்படி சுவாமிகள் அருளிய நூல்களுக்கு,

''இலகுபொன் னுலகத் திமையவர் மடவார்
எய்திநாள் தொறுங்கமழ் கூஞ்சல்
நலமுறு பந்தம் மனைபயில் சீர்சால்
நளிரிமா சலமகளாரைக்
கலைமதி மிலைந்த கண்ணுதற் பெருமான்
கடிமணம் புரிந்தவக் காலை
உலகொரு மூன்றும் ஆங்குற வடபால்
இழிந்துதென் பாலுயர்ந் திடலும்.''

என்பது முதலிய பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். மேற்படி சுவாமிகளது வரலாற்றை இவர் ஞானசித்தபுராணம் என்னும் பெயருடன் புராணமாகப் பாடியுள்ளார்.

## எகக. சின்னச்சாமிப் பிள்ளை - (சென்னை) (1868)

சென்னைமாநகரில் வாழ்ந்திருந்தவர். புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரிடத்தில் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமையடைந்தவர். புத்தகங்கள் கேட்டு இராமநாதபுரம் பொன்னுச் சாமித் தேவருக்குப் பதினைந்து பாடல்கள் எழுதினர். அவற்றுளொன்று:

'' அங்க மாதெனு வாக்கிய அண்ணலார்
அன்ப நின்னறைக் கண்ணியை நாடியே
எங்க மாவென் றடிக்கடி கேட்டுயிர்ப்
பெறிந்தெறிந்து வருந்துகின் றுளந்தோ
தங்க மாதந மாவத னைத்தனில்
தையல் இன்னுயிர் தான்தரிப் பாளையா
துங்க மாதவர் சூழும் புதுவை வாழ்
துய்ய னேபொன்னுச் சாமியொய் யாரனே,''

என்னுங் கட்டளைக் கலிப்பாவாகும்.

## எஉ௦. சின்னத்தம்பி உபாத்தியாயர்-க (20 - நூ.)

ஈழவள நாட்டில், அல்வாய் தெற்குச் சைவப்பிரகாச வித்தியாசாலையில் ஆசிரியராக அமர்ந்து பலருக்குக் கல்வி போதித்தவர். இவரிடம் கல்விகற்ற பலர் சிறந்த பண்டிதர்களாயினர். இவர் பல நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். பாடல்கள் இனிமையும் பொருள் நுட்பமும் நன்கு அமையப் பெற்றவை. வல்லிபுரமாயன் மும்மணிமாலை என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சிறப்புப் பாயிரங்களுள் ஒன்றை அடியிற் காண்க.

'' கலைசூர்வாழ் புலோலிக் குணதிசை
யமர்வோன் கருதுறு சாமவே தத்தன்
நிலையுறு வாத ராயண னென்ன
நிகழ்த்துகோத் திரமுளோன் தூய

*பலமுறு மையாற் றுப்பரம் பரையன்*
*பரசிவ சங்கர மறையோன்*
*தலைமையின் உதவும் சுதனுயர் பஞ்சாட்*
*சரகுரு நாமபண் டிதனே.''*

## எஉக. சின்னத்தம்பிப் புலவர் (இணுவில்)

ஈழவள நாட்டிலே இணுவில் என்னும் ஊரிலே ஏறக்குறைய நூற்றறுபது ஆண்டுகட்கு முன் தோன்றியவர். இவருடைய குலம் வேளாளர் குலம். இவருடைய தந்தையார் பெயர் சிதம்பர நாதர். இளமையிலேயே பாடுந் திறம்பெற்ற இவர் ஒல்லாந்த அரசினரிடம் எழுத்து வேலையில் அமர்ந்திருந்தார். அவ் வேலையில் ஒரு தவறு ஏற்பட்டது. அரசினர் இவரைச் சிறையில் அடைத்தனர். சிறையின் கதவுதானே திறக்குமாறு தம் வழிபடு தெய்வமாகிய இணுவைச் சிவகாமசுந்தரி அம்மைமீது ஒரு பதிகம் பாடினுர்.

மற்றும் ஒல்லாந்த அரசனின் அமைச்சன் மகனுகிய கயிலாய நாதன் என்பவன்மீது, பஞ்சவர்ணத் தூது என்னும் ஒரு சிறு நூலும் பாடினுர். இளந்தாரி புராணம் என்னும் நூல் ஒன்றும் இவரால் செய்யப்பட்டதாகத் தெரிகிறது.

*'' பெற்றவள்நீ யானுனது பிள்ளையுல கோரறிய*
*அற்றமிலாச் செல்வம் அருளிவளர்த் தன்புதந்தாய்*
*இற்றைவரை யுந்தனியே யான்வருந்த எங்கொளித்தாய்*
*சிற்றிடையின் அன்னைசிவ காம சவுந்தரியே.''*

என்பது இவர் பாடிய பதிகத்தில் ஒரு பாட்டு.

## எஉஉ. சின்னத்தம்பி நாட்டார்

இவர் பருவதராச புராணம் என்னும் நூலை இயற்றியிருக்கிருர். இது நூற்று அறுபத்தேழு பாடல்களைக் கொண்டது. இவர் புதுச்சேரியில் இரிசப்ப உபாத்தியார் என்பவருடைய மகனுகத் தோன்றியவர். நூல், விட்டுணுகுலத்தோர் என்னுஞ் செம்புப்படவோர் குலப்பெருமையைக் கூறுகிறது. நூல் நுவல் பொருள் முதலியன பின்வருஞ் செய்யுளாற் பெறப்படுகின்றது

"சீரோங் கிமாசலச் சந்ததி எனுங்கவியில்
செம்புநற் படவோ ரெனும்
சீராம தத்வவன் னிக்குரிய மோனரெனும்
செய்யமலை யிறையோ ரெனும்
பேரோங்கு உயர்குலப் பெற்றியோன் புதுவைநகர்
பெரியோர் தமக்கொரு மணி
பேசருங் கல்விச் சிகாமணி காகமதை
பேசவைத் திடுமென் மணி
ஏரோங்கு மிரிசப்ப பூபன் தவத்துதித்
திலகுமிரு பாலர் தம்முள்
எழில்கொள்வி ராசாமி என்னுமால் சோதரன்
இங்கித மிகுந்த சிலாக்யன்
காரோங்கு பருவத குலப்பெருமை வையமிசை
கண்ணுளா ரேத்த அறைமெய்க்
கண்யசின் னத்தம்பி வேளிரவி மதிநாள்
களிப்புற்று வாழி மாதோ."

## எஉரு. சின்னப்ப நாயக்கர்

இவர் பழநிப் பிள்ளைத்தமிழ் என்னும் நூல் செய்திருக்கிறார். அந்நூல் காப்புச் செய்யுளோடு முப்பத்தொரு பாடல்களைக் கொண்டது. ஒவ்வொரு பருவத்தினும் மும்மூன்று செய்யுட்களே உள்ளன. இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலிய பிற செய்திகள் தெரியவில்லை. இவர் பாடல்கள் சொன்னயமும் பொருணயமும் அமைந்து ஒழுகிய வோசையும் விழுமிய பொருளும் வாய்ந்திருக்கின்றன.

"கங்கைக் கொருமா மகனே! குகனே!
கனியே! கண்மணியே!
கருணை லயமே! மறையோர் தவமே!
கருதும் பெருவாழ்வே!
திங்கட் சடிலன் மகிழுங் குருவே!
தேவர்கள் பணிகோவே!
தெய்வச் சுருதிப் பொருளே! பொருளின்
தெளிவே! களிகூரும்
துங்கப் புயனேர் திருமால் மருகா!
சோதிச் சுடரொளியே!
தோகைக் குடையாய்! நீபத் தொடையாய்!
சொல்லுக் கினியானே!

சங்கத் தொருவா ! பழநித் தலைவா !
தாலோ தாலேலோ
தமிழால் உயருஞ் சிவமா மலையாய்
தாலோ தாலேலோ.''

என்பது தாலப்பருவத்தில் ஒரு பாட்டு.

## எஉச. சின்னப்பா பிள்ளை-சி வை (20 - நூ.)

இவர் சி. வை. தாமோதரம் பிள்ளையின் உடன்பிறந்தார். தம் தமையனாரிடமே இலக்கண இலக்கியங்கற்றுச் சிறந்த புலமை பெற்றார். இவர் தம் தமையனாருடைய பழந்தமிழ் நூல் வெளியீட்டுத் தொண்டுக்கு உறுதுணையாக அமைந்து நின்றார். க. வைத்தியலிங்க பிள்ளை என்பவர் இயற்றிய ஒருதுறைக் கோவை நூலுக்குப்பின் வருஞ் செய்யுள் உள்பட நான்கு செய்யுட்களைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளனர்.

'' சொற்சுவை யோடு பொருட்சுவை யாப்பணி தோன்றவழி
அற்புத மாக நவரு பகங்கள் அமைத்தினிதே
கற்பவ ரோடு கலைவல்ல மாந்தருங் கண்டவற்றின்
பொற்பை வியப்ப இசைத்தானிவ் வீழம் புகழ்பெறவே.''

## எஉரு. சின்னப்பாவு முதலியார்-ச (1891)

திருமயிலைப் புலவர் சண்முகம் பிள்ளையால்,

'' கன்னற்பா இனுஞ்சுவைய செய்யுள்பல
தொடுத்திறைவன் கழற்கே சாத்தும்
பொன்னப்பா எனுங்குணத்தான் பொன்னிவளந்
தருநாடு பொலிய ஓங்கும்
அன்னப்பார்ப் பகன்வயல்சூழ் சொக்கபுர
இராமலிங்க அடிகட் கன்பேய்
சின்னப்பா எனயாரும் உரைசெய்கவிப்
பாவலனுஞ் சிறி யோனே.''

எனவும், திருவையாறு முத்துச்சாமிப் பாரதியார் என்ற பெயர் பெற்ற சிறந்த புலவரால்.

''மன்னுதிரு வொற்றியூர் மான்மியமே
லாந்தமிழில் வசன மாகப்
பன்னயமும் பொருந்தவுயர் புலவரெலாம்
குதுகலிப்பப் பரிந்து செய்தான்
மின்னுபல நூலுணர்ந்தோன் அரியபிர
பந்தமெலாம் விரைவிற் செய்வோன்
துன்னுபழ வையில்வாழ்சின் னப்பாவு
முதலியெனுஞ் சுகுணன் தானே.''

எனவும் பாராட்டப் பெற்ற இவர் சடையப்ப முதலியார் என்பவருடைய அருமைப் புதல்வராகத் தோன்றினார். புலமைக் கல்வி கற்றுச் சிறந்த புலவராக விளங்கினார். சென்னை செயிண்ட்மேரி கல்லூரியில் தமிழாசிரியராக அமர்ந்து மாணவர்கட்குக் கல்வி கற்பித்தார். இவர் இயற்றிய நூல்களில் திருவொற்றியூர்த் தலபுராண உரைநடை என்பதொன்று அறியப்படுகிறது. பிற நூல்களைப்பற்றிய விவரந் தெரியவில்லை. இவருடைய உரைநடை நூலுக்குத் திருமயிலை சண்முகம் பிள்ளை, திருவையாறு முத்துச்சாமிப் பாரதியார், சின்னச்சாமிப் பிள்ளை, குன்றத்தூர் மாணிக்க முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## எஉசு. சின்னுரெட்டியார்-மு
(19 - நூ.)

இவர் உரத்தூர் என்னும் ஊரில் முத்துக்குமரப்ப ரெட்டியார் என்பவரின் மைந்தராகத் தோன்றினார். தக்க அறிஞர்களிடத்தே கல்வி கற்றுச் சிறந்த தமிழ்ப்புலமை பெற்றார். தண்டபாணியடிகள் என்னும் முருகதாச சுவாமிகளிடத்திலே மெய்யன்பு கொண்டு விளங்கிய இவர் அப் பெரியார் இயற்றிய திருவாமாத்தூர்ப் புராணத்திற்கு,

''உம்பர்களு நாடுதிரு ஒங்குபுகழ்
நடுநாட்டில் உமைமணாளன்
வெம்புதழற் கிரியான அருட்பதிக்குக்
குணதிசையில் வேட்கை யாவும்
அம்புவியிற் பசுவினங்கள் அடையவன்னி
வனத்திலிங்க மாகித் தன்னை
நம்பியடைந் தோர்க்கிந்த நலம்பலவும்
வடமொழியார் நவின்றார் மன்றே.''

என்பதை முதலாகக் கொண்டு ஐந்து பாடல்களாற் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## எஉஎ. சின்னைய நாயகர்
## (கி. பி. - 20)

இவர் தொண்டவள நாட்டில் திருவிசைநல்லூரில் தோன்றியவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேர்ச்சி பெற்றவர். சாது இரத்தின சற்குருவின் வேதாந்த சபையில் தொண்டு செய்தவர். இவர் பகவதநுகீதை என்னும் நூலை சுசுடு செய்யுளாகப் பாடியிருக்கிறார். நூலைப் பாராட்டிச் சோழவந்தானூர் அரசஞ் சண்முகனார், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், கோ. வடிவேலுச் செட்டியார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். இவருடைய தந்தையார் பெயர் வேங்கடாசல நாயகர்.

> ''திருவிசை நல்லூர் சிறக்க வாழும்
> திருவுறு வேங்கடா சலவேள் தவத்தால்
> வந்தவன் குணக்கடன் மாசறு கேள்வியன்
> தொல்காப் பியங்கள் தோமறக் கற்றவன்
> நல்லா சிரியனாய் நாட்டுயர்ந் தொளிரும்
> சொல்லார் இரத்தின தூயவன் அடிமலர்
> உள்ளத் திருத்தும் உரநன் கோர்ந்தவன்
> என்னுயிர் நண்பன் எழில்வே தாந்தம்
> பன்னும் பாக்கியம் பளகற வாய்ந்தவன்
> அந்நல மெல்லாம் அழகுறக் கொண்ட
> சிந்நயன் என்னுஞ் சீரி யோனே.''

என்பது. கோ. வடிவேலுச் செட்டியாரின் சிறப்புப் பாயிரத்தில் ஒரு பகுதி.

> ''உலகெலாம் புகழும் வாசு
> தேவனர்ச் சுனனும் ஒன்றூர்
> பலரையும் வென்று மிக்குப்
> பரவும்அச் சபையின் கண்ணே
> நலமிகு மேன்மை யோராம்
> இருவர்க்கும் நடந்த வார்த்தை
> வலமிகும் அரசன் கேட்ப
> வைசம்பா யனருஞ் சொல்வார்.

என்பது நூலின் தொடக்கம்.

## எஉஅ. சின்னையா முதலியார்

அரிகரபாடி என்னும் ஊரில் தோன்றியவர். திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகளாதீனம் ஈசூர் சச்சிதானந்த அடிகளிடம் வேதாந்த நூல்களை ஓதி உணர்ந்தவர். "தாயாதி துன்பசாரம்'' என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். அறிவறியாமை ஆதார விளக்கம் என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப்பாயிரப் பாடல்களுள் ஒன்று,

'' இந்திரபீ டத்தெழுந்த எந்தைசச்சி தானந்த
சுந்த்ர னடிசுப்ப ராயக்கோன்—தொந்தமுற்று
முப்பதாண்டும் நன்றாக மூதறிவி லேபழகிச்
செப்பினன் நாலுலகிற் சீர்.''

என்பது. தாயாதி துன்பசார நூலின் போக்கு இத்தகைய தென்று தெரியவில்லை.

## எஉகூ. சீகாழித் தாண்டவராயர்

இவர் சீகாழியில் சிறந்து விளங்கியிருந்தவர் என்பது பெயருக்கு முன்னால் அமைந்து விளங்குஞ் சீகாழி என்னும் அடைச்சொல்லினால் நன்கு பெறப்படுகிறது. திருவாரூரில் இருந்த குருசுவாமியடிகள் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றுச் சைவசித்தாந்த நூல்களிலும் பிற நூல்களிலும் சிறந்த புலமையடைந்து திகழ்ந்தார். தம் ஆசிரியரிடம் கேட்டுத் தெளிந்தபடியே திருவாசகத்திற்குச் சிறந்த விரிவுரையெழுதினார். அவ்வுரை கலியுகம் 4945 சாலிவாகனம் 1756 செய ஆண்டு தைத்திங்கள் பூசநாளில் அம்பலவாணர் திருமுன்பு தொடங்கப் பெற்று மறு ஆண்டில் எழுதி முடிக்கப்பட்டது என்னுஞ் செய்தி சிறப்புப் பாயிரத்தில் இருந்து அறியப்படுகிறது.

'' குறுமுனி யேழு கடலையும் பருகும்
    கொள்கைபோல் தில்லையில் நடஞ்செய்
துறுபவன் மகிழத் திருவுளச் சீட்டங்
    குதவுமுத் தரலினாற் சிறந்த
மறுவிலா விடையான் திருவடிப் பெருமை
    வாதவூர் ஐயன்முன் வகுத்த
சறுவநற் கருத்தும் தாண்டவ ராயன்
    தகுமுரை செய்தனன் தமிழால்.''

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று. உரையாசிரியர் தம்முடைய உரையைப் பற்றி உரைப்பாயிரத்தில், "இவ்வநுபூதியுரை கருணைச் சம்பிரதாய உபதேசமாகும். திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த இவ்வருள் நூலிற் சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து பொதியாசல முனி அருளிய கருத்தநுபூதியான சூத்திரங்களை எமது குரவரான குருசுவாமி அவை விளங்கப் பொழிப்புரை அநுபூதியை அடியேற் குபதேசித்தபடி, அடியேன் கருத்தில் உறைவதான திருவருளையுங் கலந்து சிவனடியார்கள் அனுக்கிரகப்படி பதவியாக்கியானமும், அவைகட்கு நுட்பமும் விரிவும் எழுதியுள்ளேன்." என்று குறிப்பிடுகின்றார். பின் வரும் சற்குரு வணக்கப் பாடலை உரைக்குமுன் இயற்றியுள்ளார்.

"அறுநிகே வலத்தி லாழ்ந்திடு மல்ல
லதுதனை யருட்கணால் நோக்கி
மறுதிய கடந்து மறிவிலா துழலும்
வகைகண்டு மன்னுமெய் கொண்டே
எறுதுபா சங்க ளொழுவிதத் தானு
மீடழித் தின்பவா ரிதியாந்
தனுதுமெய்ப் பதங்கள் தருகுரு சுவாமி
சரணடைந் திவ் வுரை பகர்வாம்."

இவ்வுரை ரா. விசுவநாதையர் என்பவரால் ஆராய்ந்து வெளியிடப்பட்டுள்ளது.

## எருo. சீதாராம தாசர்-பாகை

இவர் 'இராமாநுச சரிதை' என்னும் நூலைப்பாடியுள்ளார். அந்நூல் சஉசுகு செய்யுட்களையுடையது. இந்நூல் இராமாநுசருடைய வரலாற்றைக் கூறவந்ததேனும் ஆழ்வார்களுடைய பெருமையையும் எடுத்துக் கூறுகின்றது.

## எருக. சீனிச் சர்க்கரைப் புலவர்
### (19 - நூ.)

இவர் வழி வழியாய்ப் புலமை அமையப்பெற்ற குடும்பத்தில் தோன்றியவர். இராமநாதபுரம் சமத்தான வித்துவானாக

விளங்கிய சர்க்கரைப் புலவர் என்பவருடைய மகன். மயூரகிரிக் கோவை இயற்றிய சாந்துப் புலவருக்கு இளவல். இவர் திருச் செந்தூர்ப் பரணி, புகையிலை விடுதூது முதலிய நூல்கள் இயற்றி யுள்ளார்.

புகையிலை விடுதூதில் புகையிலையின் பெருமையை வேடிக் கையாக வியந்து பாடியுள்ளார்.

'' தாம்பூல நாவுக்குச் சாரமது தானுமுன்றன்
காம்பில் அடக்கமன்றோ கட்டழகா—விம்பாகப்,
பூராய மான பொருளை வெளிப் படுத்தும்
சாராயந் தானுனக்குத் தம்பியோ—நேரா
யதனகா மீசுரமா யார்க்குமயல் பூட்டும்
மதனகா மீசுரமச் சானே—விதனமற
மோகப் பயிராய் முளைத்த புகையிலையே
தாகப் பயிரான சஞ்சீவி—ஆகத்தின்.''

என்பன தூதின் சில கண்ணிகள். இத்தூது ௧௬௧ கண்ணிகளையே கொண்டது.

## ௭௩௨. சீனிப் புலவர்

இவருடைய தந்தையார் சர்க்கரைப் புலவர். சர்க்கரைப் புலவருஞ் சிறந்த புலவராவர். இவர் திருச்செந்தூர்க் கோவை, வேதாந்த சூடாமணிக்குச் சித்தாந்த உரை முதலியன இயற்றிப் புகழுடன் வாழ்ந்திருந்தவர். சீனிப் புலவர் திருவாவடுதுறை யாதீன குருமூர்த்தியாகிய திருச்சிற்றம்பல தேசிகர்மீது கலம்பகம் இயற்றியுள்ளார். திருச்சிற்றம்பல தேசிகரிடத்திலே சிவஞான அருளுரையும் நிருவாண திக்கையும் பெற்றுச் சிவபூசையை முறைப்படி செய்தவர். திருவாவடுதுறை யாதீனத்திலே மிகுந்த பற்றுடையவர். தம் ஞானாசிரியராகிய திருச்சிற்றம்பலதேசிகரை மிகப் பெருமையாக இக் கலம்பகத்தில் பாராட்டுகிறார். இவ ருடைய முன்னோரும் பின்னோரும் ஆதீனப் புலவர்களாகச் சிறந்து விளங்கியவர்கள்:

'' சிங்காச னுதிபதி திருத்துறைசை
ஊராளி செகத்தோ ரெல்லாம்
மங்காமல் உபதேசம் புரிதிருச்சிற்
றம்பலவன் வண்மை பாரீர்

சங்காழி மாயவனும் அறியாத
திருவடியைத் தந்தான் மற்றை
வெங்கானில் துரும்பனைய எனைக்கொண்டான்
இதுவுமொரு விளையாட் டாமே.''

என்பது திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகத்தில் ஒரு பாட்டு.

## எரு௫. சீநிவாச ஐயங்கார்
## (20 - நூ.)

பாண்டிவள நாட்டிலே பெரியகுளம் பிரிவைச் சேர்ந்த அநுமந்தன்பட்டி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவருடைய கவிகள் மிக இனிமையுடையனவாக விளங்கியமையின் இவருக்கு 'மதுரகவி' என்னும் பெயருண்டாகியது. இவருடைய உடன் பிறந்தாராகிய கிருட்டிணசாமி ஐயங்கார் என்பவரும் சிறந்த புலவராகத் திகழ்ந்தார். பெருமாளையங்கார் என்பவர் இயற்றிய பல திரட்டு மங்களப் பிரபந்தம் என்னும் நூலுக்கு இவர்,

'' வடகயிலை யெடுத்தவன்தோள் வரையனைத்தும்
ஒருகணையால் மண்மேல் விழப்
படர்சிலைகால் வளைத்தபரா பரன்பதுமப்
பைங்கழன்மேற் பத்தி மாருத்
திடவிசய வனவரத தீரனிவன்
பெருமைவலன் செயன்மற் றெல்லாம்
கடலுலகில் அறியாதார் அறியாதார்
அறிந்தவரெங் கண்ணு வாரே.''

என்பதை யுள்ளிட்ட ஐந்து பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளார். வடமொழியிலும் வல்லவராகிய இவர் வடமொழியில் உள்ள கோதாஸ்துதி என்னும் நூலைத் தமிழில் மொழிபெயர்த் துப் பாடியிருக்கிறார்.

'' மென்னடைய செந்நிறக்கால் அன்னம் பாடி
விளையாடும் புனற்றுறைக்கா வேரி சூழ
மன்னரங்கன் செவிக்கமுத மழையே போல
மதுரமுற ஒலித்திடுநின் மலர்த்தாள் வேய்ந்த
நன்னரெழிற் சிலம்பின்மணி நாதம் என்ன
நலனழகு கெம்பிர நடைகள் மேவி
வன்னமுறு நினதுதுதிக் கேற்ற தாய
வாக்கருள்பூங் கோதையெனு மயிலன்னுளே.''

என்பது மொழிபெயர்ப்புப் பாடல்களுள் ஒன்று. இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் பல.

## எ௩௪. சீநிவாச ஐயங்கார் (குடந்தை)
(20 - நூ.)

மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் கல்விகற்றவர். குடந்தை நேடிவ் ஹைஸ்கூலில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார் முதலிய பலர் இவருடைய மாணவர்களாவர். திருக்கூடலையாற்றூர் மும்மணிக்கோவை, திருக்குடந்தை மான்மியம், கோல்டுஸ்மித்து வரலாறு முதலிய நூல்களை இவர் எழுதியிருக்கிறார். ௧௯௫௭ஆம் ஆண்டு ஜூன் திங்கள் ௨௨ஆம் நாள் இவர் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

"பூமாதும் சயமாதும் புகழமைந்த புண்ணியமும்
நாமாதும் இனிதுறையும் நலமிகுந்த நன்னாடு
தீமையந் தனைத்தவிர்க்கும் தேவகுலம் பலமிகுந்து
தோமாறு தனை நீங்கு புகழ்பெருகு சோணாடு."

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## எ௩௫. சீநிவாச தாதாசாரிய சுவாமிகள்

ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்கு முன் ஸ்ரீமுஷ்ணத்தைச் சேர்ந்த பரூர் என்னும் ஊரில் இருந்தவர். பூவராகரந்தாதி, வேத நாராயணன் போற்றி மாலை முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். இவருடைய நூலைப் பாராட்டிப் புகழ்ந்து கோமளபுரம் இராசகோபால பிள்ளை, எய்யலூர் மணியம் இராமசாமி ரெட்டியார், வலையமாதேவி நயினார் வரதராமாநுசம் பிள்ளை, ரெட்டியூர் கணக்குத் தெய்வநாயகம் பிள்ளை, பரூர் நாராயண தாசர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"பூவரா கத்தவம் போருகத் தாடண் புனலுடுக்கும்
பூவரா கத்தவ சங்காழி யத்தவம் பொன்னிற் கொன்றைப்
பூவரா கத்தவ நற்றிரு முட்டமென் பொற்புரியில்
பூவரா கத்தவப் பேர்தரித் தோயுனைப் போற்றுதுமே."

என்பது பூவராகர் அந்தாதியில் ஒரு பாட்டு.

## எருசு. சீநிவாசபாரதி சுவாமிகள்
(கி. பி. 19)

இவர் திருத்தலையூர் என்னுஞ் சிவப்பதியில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். புலவராக விளங்கிய இவர் தாம் தோன்றிய பதியின் புராணத்தை ௬0௧ பாடல்களாகப் பாடினர். அப் புராணம் திருத்தலையூர்த் தலபுராணம் எனப் பெறும்.

"ஆயிரம் நாவால் சேடன்
அமரர்கட் குரைத்த காதை
தூயதார்க் கிகரை வர்க்கும்
சொல்வட மொழியை ஆய்ந்து
வாயிரு மறைவை நிகம்
வளர்சீநி வாசன் தென்சொல்
பாயிர முடன்பன் னொன்று
பகுதியும் பகர்ந்தா னன்றே."

என்பது நூலாசிரியர் இயற்றிய சிறப்புப்பாயிரம்.

## எருஎ. சீனிவாச முதலியார்
(20 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் ஆனைமலை என்னும் ஊரினர். ஆங்கில மொழிப்பயிற்சியும் தமிழ்மொழிப்பயிற்சியும் நன்கு அமையப்பெற்றவர். ஆங்கில மொழியில் செகப்பிரியர் (ஷேக்ஸ்பியர்) இயற்றிய "ரோமியோ-சூலியத்"தின் கதையை இவர் தமிழில் செய்யுளாகப் பாடியுள்ளார். உவமை, தற்குறிப் பேற்றம், நீதிபோதனை ஆகியவைகளைத் தமிழ்மரபுக்கு ஏற்ற வாறு ஏற்றவிடத்திலே அமைத்து மூந்நூற்றெழுபத்தாறு செய்யுட்களாகப் பாடியுள்ளார்.

"திருவாரும் ஆங்கிலத்தில் செய்யு ளாக
ஷேக்ஸ்பியரென் றுரைத்திடுமோர் சீர்த்தியாளன்
விரிவாகத் தந்தகதை ஆகும் ஈது
மேரிலாம்ப் சார்லஸ்லாம்ப் என்போர் மேனாள்
அரிதாய கத்தியமா ஆங்கி லத்தின்
அமைத்திட்டார் மற்றதனை ஆராய்ந் தேயான்
ஒருவாறு தமிழ்ப்பாவில் உரைக்க லுற்றேன்
உள்ளபிழை பொறுத்தல்கடன் உரவோர் கட்கே."

என்று நூலாசிரியர் நூலின் வரலாற்றை நூலின் தொடக்கத்திலேயே குறிப்பிடுகின்றார்.

"இப்பிர பஞ்ச மெல்லாம் இந்நகர் மதிற்குள் அன்றோ
எப்படிப் பிழைப்பேன் என்றன் இன்பநா யகியை நீங்கித்
தப்பில்அன் புள்ளாள் வைகும் தலம்தே சுவர்க்கம் அல்லால்
எப்புரம் எனினும் பொல்லா எம்புரம் ஆகும் அன்றே."

என்பது நூலில் ஒரு பாட்டு. ஆசிரியர் இந் நூலைத் தமிழறிஞர் புலவர். ம. கோபாலகிருட்டிண ஐயரவர்கட்கு உரிமையாக்கி வெளியிட்டுள்ளார். இந் நூலுக்கு ஆனைமலை சிவசூரியன் பிள்ளை, சேற்றூர்ச் சமத்தானப் புலவர் மு ரா. அருணாசலக் கவிராயர், ஆனைமலை வேங்கடராம பாரதி, கோயமுத்தூர் சி. கே. சுப்பிரமணிய முதலியார், தி. பொ. பழநியப்ப பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## எருஅ. சீநிவாச ராகவாச் சாரியார்

இவர் சென்னைமாகாணக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தார். வடமொழி தென்மொழி என்னும் இருமொழிகளிலும் வல்லவர். உத்தர ராமாயணத்தையும் விட்டுணு புராணத்தையும் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார். அணியிலக்கணமாகிய தண்டியலங்கார நூலின் சாரமாகத் தண்டியலங்கார சாரம் என்னும் நூல் ஒன்றையும் இவர் இயற்றியிருக்கிறார்,

## எருகூ. சீநிவாச நாடார்

பாண்டிவள நாட்டிலே அம்பா சமுத்திரம் பிரிவில் உள்ள கீழக்கடையம் என்னும் ஊரினர். இவருடைய தந்தையார் பெயர் சிவனுபாண்டியனார். இவர் தோரணமலை முருகக் கடவுள்மீது சதகம் ஒன்று பாடியுள்ளார். அச் சதகம் முருகேச சதகம் என்னும் பெயரால் வழங்குகின்றது. சதகத்தின் போக்குக் குமரேச சதகத்தை அடியொற்றிச் செல்லுகிறது. அந்தணர் இயல்பு, அரசர் இயல்பு, வணிகர் இயல்பு, வேளாளர் இயல்பு, அறநெறிகள் உலகவழக்குக்கள் முதலியன ஒவ்வொரு பாடலினும் அமைந்துள்ளன.

"சூரனவ னானாலும் தனக்குரிய தளகர்த்தர்
சூட்சமறி வேண்டும் வேண்டும்
துரிதமுள புத்தியுயர் வானாலும் வேறொருவர்
சொற்புத்தி கேட்க வேண்டும்
தீரமுள சங்கீதத் தெளிஞனா யினுஞ்சுருதி
தீட்டவொரு பாலன் வேண்டும்
சிறப்பான ஆசுகவித் தீரனா னாலுமறி
தெளிஞர்களைச் சேர வேண்டும்
பாருலகை யாண்டாலும் தன்வாயிற் கருத்துள்ள
பகையிலா அமைச்சன் வேண்டும்
பசுங்கனக சுடராயின் விளங்கிடத் தூண்டுகோல்
பண்பாக வேண்டு மன்றோ
மாரனையும் ஏமனையும் கடிந்தவரன் தந்தவறு
மாமுகா குகனே கந்தா
வளமலியுங் கடையநகர் குடபாலில் தோரணமா
மலைமேவு முருகேசனே."

என்பது சதகத்தில் ஒரு பாட்டு. பாடல்கள் பிழைகளுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

## ௭௪௰. சீநிவாசன்

இவர் கோவலவெண்பா என்னும் நூலைச் செய்துள்ளார். ஆக்கியோன் பெயர் என்னும் தலைப்பின்கீழ் உள்ள பாட்டு:

"செங்குவளைத் தேன்பாய்ந்து செந்நெல் விளைகழனி
எங்கும் பரந்த எழிற்புன்னைத்—தங்கிய
சீநிவா சன்னெடுத்துச் செய்தான் பலகதையின்
பானிறைந்த கோவலவெண் பா."

என்பதனால் நூலாசிரியரின் பெயர் சீநிவாசன் என்று பெறப்படுகிறது. புகார்க்காண்டம் அறுபது வெண்பாக்களையும் மதுரைக் காண்டம் நூற்றுப்பத்து வெண்பாக்களையும் வஞ்சிக் காண்டம் அறுபது வெண்பாக்களையும் கொண்டு விளங்குகின்றது. பாடல்கள் நளவெண்பாவைப்போல் சிறந்து விளங்குகின்றன:

"புன்னைநறுந் தாதுகுப்பப் பூங்கைதை சூழ்ந்திருப்ப
மன்னுதரு நீழற்கண் வண்மணன்மேல்—துன்னினரால்
தேனுண்டு வண்டுறங்குஞ் செம்மா மலர்க்குழலும்
கானுண்ட தாரவனுங் காண்.

என்பது புகார்க்காண்டத்தில் ஒரு பாட்டு.

## எ௪க. சீநிவாசாச்சாரியார்

(19 - நூ.)

இவர் ஏறக்குறைய அறுபது ஆண்டுகட்கு முன்பு வேலூரில் கல்லூரியொன்றில் தமிழாசிரியராக இருந்தார். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள், பிரகலாதாழ்வான் சரிதை, மன்பதையாற்றுப் படை, திருக்கச்சித் தேப்பெருமாள் அந்தாதி, மார்க்கண்டேய சரிதம், விசயத்தவசியும் சிவவேடனும், இடைக்காடர் சரித்திரம், திருவள்ளுவர் சரித்திரம், தசரதராமசதகம், வாமன சரித்திரம், நம்பாடுவான் சரித்திரம் என்பன. மன்பதையாற்றுப் படை என்பது உத்தர சீரங்கத்தலத்துப் பெருமாள்மீது இயற்றப் பெற்றது. ௪00 அடிகளையுடைய நேரிசை யாசிரியப் பாவால் ஆகியது. திருக்கச்சித் தேப்பெருமாளந்தாதி காஞ்சியில் எழுந்தருளிய வரதராசர்மேல் இயற்றப்பெற்றது. நூறு வெண் பாக்கள் அடங்கியது.

> *"பாலன் தனக்காப் பருந்தூண் இடைவந்த*
> *கோல நரசிங்கக் கோமானும்—வாலறிஞர்*
> *சிந்தையில் சேருஞ் செழுஞ்சுடரின் சேவடியைச்*
> *சந்ததமும் நெஞ்சமே சார்."*

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## எ௪௨. சீரங்காச்சாரியார் - தி. கோ.

இவர் வைணவ சமயத்தினர். ஏறக்குறைய ஐம்பதாண்டு கட்கு முன் சென்னைமாநகரில் வாழ்ந்திருந்தவர். வைணவ நூல் களில் மிகுந்த பயிற்சியுடையவர். ஆசாரியர்கள் சரித்திரம் முதலிய உரைநடை நூல்கள் பல இயற்றியுள்ளார். 'சனப்பிரியன்' என்னும் பெயருடைய திங்கள் இதழ் ஒன்றையும் இவர் நடத்தினுர் என்று அறியப்படுகிறது. காரப்பங்காடு கோபாலாச்சாரியார் என்பவரிடம் இவர் தமிழ் கற்றுத் தேறினுர் என்பது ஆசாரியர்கள் வரலாற்றில் இவர் கூறியுள்ள,

> *"சந்தமர்கா ரப்பநகர் தன்னில்வரு தண்ணிரவி*
> *செந்தமிழால் என்னைத் தெருட்டியநல்—அந்தணர்கோன்*
> *சீரியகோ பாலகுரு சேவடிசிந் தித்துரைப்பேன்*
> *ஆரியர்தம் நற்சரிதத் தை."*

என்னும் ஆசிரிய வணக்கச் செய்யுளாற் பெறப்படுகிறது.

## எசங. சீவரத்தின கவிராசர்

இவர் சையிது முகமது என்னும் முகமதியப் புலவருக்கு மகனுகத் தோன்றினர். வெகுநாள் வரையிற் கல்விகற்காமல் திரிந்துகொண்டிருந்தார். தந்தையாராகிய புலவர் தம்முடைய இறுதிக் காலத்தில் மைந்தரை அழைத்தார். அவரைப் பார்த்துச் சில மந்திரங்களைச் சொன்னர். தமது வாயின் உமிழ்நீரை அவர் மீது உமிழ்ந்தார். அதுமுதல் மகனுக்கு அறிவு விளக்கந் தோன்றியது. தந்தையார் காலமானவுடனே இரங்கற்பாக்கள் பாடினர். பிறகு பலவிடங்கட்குஞ் சென்று பெரும் புலவர்களிடத்தில் கல்வி கற்ருர். சிரிய கல்வி அறிவு உண்டாயிற்று. இவருக்கு இடப்பெற்ற பிள்ளைப் பெயர் சையிது மீராலெப்பை. இப்பெயர் மாறி சீவரத்தின கவி என்னுஞ் சிறப்புப் பெயர் வந்தது. நூல்களுஞ் செய்யத் தொடங்கினர். மணி அலங்காரம், மதீனக் கலம்பகம், வாள் விருத்தம், பரி விருத்தம், யானை விருத்தம் முதலிய நூல்கள் இயற்றினர்.

"ஆதரவுதேடி அறுகில் துயின்றநபி
பாதம் பெறப்பனுவல் பாடவே—கோதற்
றவனத் தவனத் தவனத் தவனத்
தவனத் தவனத் தவண்."

என்பது மதீனக் கலம்பகத்தின் காப்புச் செய்யுளாகும். இவரை அறிஞர்கள் "தேனமரும் கவிமாரி பொழியும் மேகம், சீவரத்னக் கவிராச சிங்க மன்றே" என்று பாராட்டியுள்ளனர்.

## எசச. சீவலமாறபாண்டியனர்

இவர் சங்கர நாராயணசாமி கோயிற் புராணத்தை இனிய பாக்களாகப் பாடியுள்ளார். இவர் தோன்றி விளங்கியிருந்த நாடு பாண்டிநாடு என்பதைவிட வேறு விவரம் யாதுந் தெரியவில்லை.

"போனகங்கள் பொருந்துவ சத்திரம்
பூவையன்னவர் போர்விழி சத்திரம்
வான நாட்டை மருவுமிற் கேதனம்
வாரி யிவர் வறியவர்க் கேதனம்

கானம் எங்கும்நற் காய்கனி மூலமே
கருத்தில் உன்னல்பஞ் சாக்கர மூலமே
மோன யோகர் மடங்களின் ஞானமே
முயல்வ தாற்கெடு மோகவஞ் ஞானமே.

மன்னர் ஊருவ மாவிர தங்களே
மகான்கள் செய்வது மாவிர தங்களே
பொன்னின் அன்னவர் பூண்முலைச் சந்தமே
புனைந்து வீசல் பொதியவச் சந்தமே
தென்னை வாழை வருக்கைகள் காமரம்
சேர்ந்து வண்டுகள் செப்புவ காமரம்
கன்னல் அன்ன கடவுள்தன் காதையே
கருதுங் கேள்வியில் வைப்பர்தங் காதையே.''

என்பன மேற்படி புராணத்தில் நாட்டுச் சருக்கத்தில் உள்ள இரண்டு பாடல்கள். புராணத்தின் சில பகுதிகள் முத்துவீரக் கவிராயர் என்பவரால் செய்யப்பட்டதாகவும் தெரிகிறது. இப் புராணம் ௧௯௦௬ஆம் ஆண்டில் மு. ரா. அருணாசலக் கவிராயரால் அச்சிற் பதிப்பித்து வெளியிடப் பெற்றிருக்கிறது.

## ௭௩௫. சுகாத்தியர்
### (19 - நூ.)

இவர் ஓர் ஆங்கிலேயர். மேனாட்டில் இருந்து சமயத் தொண்டு செய்தற்கு வந்த இவர் தமிழ்மொழியைக் கற்றார். செய்யுள் இலக்கணத்தையும் நன்கு ஓதியுணர்ந்தபடியால் செய்யுள் பாடுந் திறமும் உண்டாயிற்று. இவர் தம்முடைய அறிவை ஆக்கவேலையிற் பயன்படுத்தாமல் அழிவு வேலைக்கே பயன்படுத்தினார். திருக்குறளில் எதுகை மோனை முதலியவை கள் சரியாக இல்லை. இவைகளைத் திருத்தி ஒழுங்குபடுத்த வேண்டும் என்று முடிவு கட்டினார். சிறிதும் அஞ்சாமல் திருத்தவுந் தொடங்கினார்.

''அகர முதல வெழுத்தெல்லா மாதி
முகர முதற்றே உலகு.

மக்கள் மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர்
இக்குசொ லின்பஞ் செவிக்கு.''

என்னுமாப்போல் பல திருத்தங்களைச் செய்து அவைகட்குத் தாமே உரையும் எழுதினார். அந்நாளில் இருந்த சிறந்த

தமிழறிஞர் சிலரிடங் கொண்டுபோய் அவைகளைக் காட்டினர். இவருடைய திருத்தத்தைப் பார்த்த அவர்கள் "அந்தோ திருக்குறளையா திருத்தினீர்கள்?'' என்று கேட்டுத் தலையில் அடித்துக் கொண்டார்கள். இவர் சிறிதுங் கவனியாமல் தமது திருக்குறளை அச்சிட்டார். புத்தகம் விற்பனையாகாமல் அப்படியே இருந்தன. பாண்டித்துரைத் தேவரைக் கண்டு தாம் திருக்குறளைத் திருத்தி அச்சிட்டிருக்கிற செய்தியைக்கூறித் திருக்குறளையுங் காட்டினர்.

பாண்டித்துரை பார்த்தார் திருக்குறளை. வயிறு எரிந்தார். "எவ்வளவு புத்தகம் அச்சிட்டிருக்கிறீர்கள்? விலை என்ன? எல்லாவற்றையும் நானே எடுத்துக்கொள்ளுகிறேன்'' என்றார். இவர் தமக்கு அச்சிட்ட செலவு கிடைத்தால் போதுமென்று கூறி அச்சான செலவைத் தெரிவித்தார். பாண்டித்துரை அத்தொகையைக் கொடுத்துவிட்டுப் புத்தகங்களை இராமநாதபுரத்திற்கு அனுப்பச் செய்தார். திருத்தியச்சிடப்பட்ட திருக்குறள் யாவும் இராமநாதபுரத்திற்கு அனுப்பப்பட்டன. பாண்டித்துரைத்தேவர் குழியொன்று பறிக்கச் செய்து திருத்தப்பட்ட திருக்குறட் பிரதிகள் முழுமையும் அக் குழிக்குட்போட்டுத் தீயை வைத்துவிட்டார். இவ்வாறு அக் குறள் முழுவதும் தீக்கடவுளால் நன்கு உண்டொழிக்கப்பட்டது. இச் செய்தியை உணர்ந்த சுகாத்தியர் இனிமேல் இத்தகைய திருத்த வேலைகளில் ஈடுபடுவதில்லை யென்று உறுதி செய்துகொண்டு வேறு வேலைகளில் ஈடுபட்டுவிட்டார். பாண்டித்துரை புத்தகங்கள் யாவற்றையும் விலைக்கு வாங்கித் தீக்கடவுளுக்கு நல்லுணவாக வழங்குவதற்கு முன் இப் புத்தகங்களிற் சில படிகள் சிலவிடங்கட்குப் போய்விட்டன. அப்புத்தகங்கள் மட்டும் அழிவுறாமல் இன்று வரை நின்று சுகாத்தியர் பெருமையை நமக்கு விளக்கிக் கொண்டிருக்கின்றன.

## எசகூ. சுந்தரஞ் செட்டியார் - ம. மு. (20 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டிலே மதுரைமா வட்டத்திலே திருமங்கலம் பிரிவில் உள்ள பேரையூர் முத்துச்சாமிச் செட்டியார் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றினர். தக்கார்பால்

கல்விகற்றுப் புலமைபெற்ற இவர், "வைசிய குலவிளக்கம்" என்னும் உரைநடை நூலை இயற்றினார். அந் நூல், மானிடத் தோற்றம், நான்கு வருணத்தாரது தொழில், பெருமை சிறுமை, சாதிகளின் வரிசை முறை, வேளாளர் சூத்திரரே, வேளாளரே மருதநில மக்கள், வேளாளர் வைசியர் அல்லர் என்பன போன்ற செய்திகளைத் தக்க நூலாதாரத்தோடு விளக்குவது. நூலைத் திருவிசைநல்லூர் சின்னைய நாயகர் என்பவர் ஆராய்ந்து வெளிப் படுத்தினார். பிறகு இந்நூலுக்குக் கண்டனங்களும் தோன்றின.

"..................................................
...........அவனியில் வைசியர்
நாமெனக் கூறும் நாலாங் குலத்தர்
ஆயவே ளாளர் அவர்களிவ் வுலகில்
சூத்திரர் அல்லது தூய்மையார் வைசியர்
அல்லர் என்பதே அன்றியும் பிறரும்
வணிகர்நாம் என்று வழுத்து புன்மையும்
உண்மையாய் உலகில் உயர்குல வைசியர்
இன்னவர் என்ப தெளிதில் உணரவும்
கடல்நீர் பருகிக் கார்மழை சொரியக்
கண்டதை ஒப்பநாங் காட்டுதும் என்றுச்
சிறுர்குட நீரில் சிறுதழை நனைத்து
மழையிது வாம்என வழங்குதல் போலும்
எழுத்துச் சொற்பொருள் யாப்பணி ஐந்தும்
முற்றுணர் புலவர்கள் முன்பவா அதனால்
சொற்பயில் எளியெனத் தொகுத்தவர் கூறிய
வழியே இதுவை சியகுல விளக்கம்
என்ப தாக எழுதினன் இதன்கண்
வழுப்பல இருப்பினும் வழக்கிது சரியென
இகழா திதனை ஏற்பது புலமையோர்
மாண்பமை குணமென... ... ... ...

என்பது அவையடக்கத்தில் ஒரு பகுதி.

## ௭௭௭. சுந்தரராச ஐயர்
(20 -நூ.)

மதுரைமாநகரில் இருந்தவர். ஆங்கிலமுந் தமிழுங் கற்றுத் தேறிய இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உதவிக் காரியதரிசி யாகவிருந்தார். நூறு பாடல்களுக்குமேல் அமைந்த 'செந்தமிழ்ச்

சிறப்பு' என்னும் நூலை வெண்பாவால் இயற்றியிருக்கிறார். அதில் தமிழ்நாட்டுப் பெரியார்களைப் பாராட்டிப் பாடியுள்ளார். அவற்றுள் உ. வே. சாமிநாதையரைப் புகழ்ந்து பாடிய இரண்டு செய்யுட்களை அடியிற் காண்க :

" உத்தம தானபுரம் ஓங்கத் தமிழாய்ந்து
புத்தக தானம் புரிந்தோம்பி—முத்தமிழ் நூல்
ஆய்வோர்க் கமுதிங் கருள்சாமி நாதப்பேர்த்
தூயோனை நெஞ்சே துதி.

மன்னர் மதிப்ப மகாமண் டலமதிப்பப்
பன்னரும மஹாமஹோ பாத்யாயர்—என்னவரும்
உத்தமப்பேர் பூண்டிங் கொளிர்சாமி நாதனைப்போல்
முத்தமிழ்க்கார் தொண்டுசெய்தார் முன்."

## எசஅ. சுந்தரமாணிக்கயோகீசுரர் - (ஈ)
(20 - நூ.)

இவர் சென்னைமாநகரினர். திருவாதவூரடிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகத்திற்கு 'உண்மைஞான விளக்கம்' என்னும் பெயரையுடைய உரை யொன்றை எழுதினார். அவ்வுரை பொழிப்பாக அமைந்தது. குறிப்புரை மேற்கோள் முதலியவைகளைக் கொண்டது. யோகமார்க்கப் பொருளை விளக்குவது. அவ்வுரை சென்னை வேப்பேரி பிரம வித்தியா சங்கத்தாரால் ககஉகஆம் ஆண்டில் அச்சியற்றி வெளியிடப்பட்டிருக்கிறது. உரையின் போக்கை அடியிற் காண்க :

திருவுந்தியார்

" வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புர முந்தீபற
ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற."

(பொழிப்புரை) (ஓங்காரமானது) வில்லாய் வளைந்தது. அதனால் ஞானதத்துவங்களுக்கும், அஞ்ஞானதத்துவங்களுக்கும் சண்டையுண்டாயிற்று. மும்மலமாகிய முப்புரம் வேதனைப்பட்டது. இதற்காக நாபிக் கமலத்தில் உள்ள அக்கினியை வெளிப்படுத்து. அந்த அக்கினி வெளிப்பட்டதினால் திரிபுரமாகிய மும்மலமானது முற்றிலும் அக்கினியினால் வெந்தவழியாகும்.

## ஏசக. சுந்தர முதலியார் - வி

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிற் சென்னைமாநகரில் வாழ்ந்திருந்த புலவர்களில் இவர் ஒருவர். இவர் சென்னைக்கு அணித்தாக உள்ள வியாசர்பாடி என்னும் இடத்தில் வசித்திருந்தார். திருமயிலை சுந்தராம்பிகை பதிகம் என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது.

> "ஞாலந் தனிலுன் பதசேவை
> நயந்து செய்யா தனுதினமும்
> காலங் கழித்து வருமிந்தக்
> கடையேன் உய்யக் கடைக்கணியாய்
> சீலம் மிகுந்த மாமுனிவர்
> சித்தத் தொளிரும் மணிவிளக்கே
> கோலஞ் செறிந்த திருமயிலைக்
> குமரி சுந்த ராம்பிகையே."

என்பது அப் பதிகத்தில் ஒரு பாட்டு.

இப்பதிகத்தைத் தவிரச் சிவநாம சங்கீர்த்தனம் எனப் பெயரிய இசை நூலையும் இவர் இயற்றியிருக்கிறார். அந்நூலுக்குக் கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலர், பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, சி. தியாகராசச் செட்டியார், உ. வே. சாமிநாதையர், திரிசிரபுரம் மாதுருபூதம் பிள்ளை, அரன்வாயில் வேங்கடசுப்புப் பிள்ளை, திருநெல்வேலி ச. சுப்பிரமணிய பிள்ளை, புனல்வேலி அனந்தசுப்பையர், திருத்தணிகை விசாகப்பெருமாளையர், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், திருக்கழுக்குன்றம் சிவஞான அடிகள், தொழுவூர் வேலாயுத முதலியார், சோதிடக்களஞ்சியம் சிற்றம்பல முதலியார், காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு, திருமயிலை சண்முகம் பிள்ளை, தண்டலம் பாலசுந்தர முதலியார், க. வ. திருவேங்கட நாயுடு, திருவோத்தூர் - ம. தி. பானுகவி, நரசிங்கபுரம் வீராச்சாமி முதலியார், ஈக்காடு இரத்தினவேலு முதலியார், குன்றத்தூர் மதுரகவி மாணிக்க முதலியார், தசாவதானம் பேறைச் செகநாத பிள்ளை, திருச்சிவபுரம் வேலாயுத முதலியார், திருமயிலை செந்தில் வேல் முதலியார், பூவை வீரபத்திர முதலியார், திருமயிலை முத்துக்கிருட்டிண முதலியார், பொன்னேரி சுந்தரம் பிள்ளை,

திருமயிலை வெ. சுப்பராய முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். பூவை கலியாணசுந்தர முதலியார்,

'' சோதிபதி பூதிநிதி சோதிமதி நீதிவிதி
சோதியிவை யென்னி லென்னத் தோன்றியுறை—நீதில்
மயிலைநற் சுந்தர மாகவிஞன் செய்யுள்
வியன்முப் பழச்சுவைக்கு மேல்.''

என்று பதுமபந்த ஓவியச் செய்யுளாகச் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

## ௭௫௦. சுந்தரமூர்த்திபௌராணிகர் (1910)

பாண்டிவளநாட்டில் திருநெல்வேலியில் வண்ணார்பேட்டையில் இருந்தவர். சைவ நூல்களையும் நன்கு கற்றுத்தேறிய இவர் சைவசமயச் சொற்பொழிவுகள் செய்து சமயத்தொண்டு செய்தார். செய்யுள் செய்வதில் வல்லுநராகிய இவர் பல நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார். வேளாளசூளாமணி என்னும் நூலுக்கு வழங்கிய செய்யுள்களில் ஒன்றை அடியிற் காண்க.

'' பன்னூலும் விதந்தோதும் வைசியவே
ளாளரின்மெய்ப் பரிசு காட்டும்
பின்னூவின் முன்னூலே யொன்றினென்று
சிறந்தனவாப் பிறங்கிற் றேனும்
முன்னூலிற் கடைந்தெடுத்த வைசியரத்
தினமென்ன மொழியிந் நூலே
எந்நூலின் பொருள்காட்டு மாடியெனு
முன்னூலா யியம்ப லாமே.''

## ௭௫௧. சுந்தரப் புலவர் (20 - நூ.)

கொங்குவள நாட்டில் ஏரகாம்பட்டி என்னும் ஊரில் பழநி நாவலர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் 'கந்தமாலை' முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

'' கற்றிடும் கவிஞர் மறையவர் முனிவர்
கழலிணை சென்னிமேல் வைத்து
உற்றிடுஞ் சிறியேன் புன்சொலுக் கிரங்கி
உண்மைசேர் பெரியவர் தம்பால்

மற்றது மசகம் கருடன்முன் பறந்த
மாய்கைபோல் நானுரைத் திட்ட
நற்றமிழ் விளங்கும் பழனியில் வாழும்
நாதனே கந்தநா யகனே.''

என்பது கந்தமாலையில் ஒரு பாட்டு.

## எருஉ. சுந்தர முதலியார் - சே (1865)

இவர் சேலத்தில் நியாயமன்றத்தில் எழுத்தாளராக இருந்தவர். ஆங்கிலக் கல்வியோடு தமிழ்க் கல்வியையும் நன்கு கற்றிருந்த இவர் தமிழிற் செய்யுளியற்றுவதிற் றேர்ந்து விளங்கினர். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், திருப்போரூர்ப் பதிகம், திருத்தணிகை நிரோட்டப்பதிகம், சிவமலைப்பதிகம், திருப்பரங்கிரிப்பதிகம், பணிகிரிப்பதிகம், திருப்பழனி வண்ணக் கொச்சகப் பதிகம், திருச்செந்திற்பதிகம், விராலிமலைப்பதிகம், சென்னிமலைப் பதிகம், வட்டமலைப்பதிகம், திருச்செங்கோட்டுப்பதிகம், மயிற் பதிகம், அடைக்கலப்பதிகம், திருப்பழனி அலங்கார பஞ்சகம், திருச்செங்கோட்டுக் கலம்பகம் முதலியன. இவருடைய நூல்களைப் பாராட்டிப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், புரசை பொன்னம்பல முதலியார், திரிசிரபுரம் சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார், பழநி மாம்பழக்கவிச்சிங்க நாவலர், சேலம் சில்லா, சார்வாய் கதிர்வேற் கவிராயர், செவ்வாய்ப் பேட்டை கந்தசாமிப் பிள்ளை, சேலம் இராமலிங்க செட்டியார், குழந்தைச் செட்டியார், மானுவேல்துரை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

'' நீரார்ந்த நதிதனைச்செஞ் சடிலஞ் சேர்த்த
நித்தனிடச் சத்திகரத் தெடுத்து நித்தம்
சீரார்ந்த தனக்கலசந் தருசே யேநின்
திருத்தாளைக் கருத்தாறச் சிந்தை செய்தேற்
கேரார்ந்த நலனளித்துக் காத்தாள் நீங்கா
திணங்கியதிக் கணங்கள்கிளைத் திறையேநீலத்
தாரார்ந்த நறுந்தடத்தில் எகினச் சாலம்
தயங்கிநனி இயங்குதிருத் தணிகையசனே.''

என்பது நிரோட்டப் பதிகத்தில் ஒரு பாட்டு.

## எருரு. சுந்தரமூர்த்தி முதலியார் - கா.
(19 - நூ.)

தொண்டைவள நாட்டில் காஞ்சிமாநகரில் இருந்தவர். பெரும் புலவராக விளங்கிய கந்தசாமி முதலியார் என்பவரிடம் கல்வி கற்றுத் தேறியவர். சைவநூற்பயிற்சியும் மிக்க இவர் திருவுந்தியார் உரை, திருக்களிற்றுப்படியார் உரை, இருபா இருபஃது உரை, உண்மை விளக்கம் உரை, திருவருட்பயன் உரை, போற்றிப்பஃறொடை உரை, உண்மைநெறி விளக்கவுரை முதலிய சைவசித்தாந்த நூல்களை உரையுடன் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

## எருச. சுந்தரம் ஐயர் - சி
(20 - நூ.)

பாண்டிவளநாட்டில் இராமநாதபுரம் மாவட்டம் சிவகங்கை நாட்டைச் சேர்ந்ததும், புவனேக வீரபாண்டியபுரம், மழவாபுரி என்னும் பெயர்களையுடையதுமாகிய மழவராயனேந்தல் என்னும் ஊரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் சிதம்பரபாரதிகள் எனவும், சின்னச்சாமிப் பாரதிகள் எனவும் வழங்கியது. தந்தையாரும் சிறந்த செந்தமிழ்ப்புலமை யடைந்து விளங்கினர். சுந்தரம் ஐயர் அட்டாவதானஞ் செய்யவும் அறிந்திருந்தார். இவருடைய உடன்பிறந்தார் பெயர் சுப்பராமையர் எனவும் இராமசாமி ஐயர் எனவும் வழங்கியது. தந்தையும் மக்களுஞ் சேர்ந்து பெரிய புராணத்தை இசைப்பாடல்களாகப் பாடியுள்ளனர்.

> "திருநீல கண்டர் தெரிசனையே செய்யத்
> திருநீல கண்டர் செலவே—தெருவூடே
> வீசுமழைக் காற்றூது வெட்கியப் பக்கமுறுந்
> தாசிகிர கத்தினுழைந் தார்."

என்பது இவர் இயற்றிய திருநீலகண்ட நாயனார் இசைப்பாடலில் ஒரு பாட்டு. பாடல்கள் வெண்பா, கலித்துறை, விருத்தம் முதலிய பலவகைப் பாக்களுமாக அமைந்துள்ளன. அப்பாடல்கள் சொன்னயம் பொருணயங்கள் சிறந்து விளங்குகின்றன.

## எ௫௫. சுந்தரம் பிள்ளை - பொ
(1900)

இவர் சென்னைமாநகரில் இருந்தவர். இவருடைய பிறப்பிடம் பொன்னேரி என்பர். இராமலிங்க அடிகளின் தமயனாருடைய மருகர். திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளிடம் பேரன்பு வாய்ந்தவர். அவர்மீது தோத்திரப் பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

"உத்தர ஞான சிதம்பரம் என்றே
உரைத்தனை ஒருபொருள் உரைக்கின்
சுத்தவை.தீக ஞானம தொன்றே
உறுபொருள் தோமிலா வடலூர்
முத்திக்கு வித்தா உறுமிடம் இஃதென்
றுரைத்தனை முழுச்சிதம் பரமப்
புத்தமு துறுபொன் னம்பலம் வெளியோ
டுறுசைவம் பொலிவது கண்டே."

என்பது அப்பாடல்களில் ஒன்று. இந்நூலுக்கு இவருடைய மருகராகிய சிதம்பரம் வடிவேலுப் பிள்ளை என்பவரும் மகனாகிய பரமசிவம் பிள்ளை என்பவருஞ் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். இராமலிங்க அடிகள்மீது இவர் இயற்றிய பிள்ளைத்தமிழ் நூல் ஒன்றும் உளது.

"சீரார் கருணைக் கற்பகநல்
தெய்வத் தருவே வருகவருட்
செம்மல் வருக மன்பதைக்கோர்
தெய்வப்பொருளே வருகபவத்
தீராப் பிணிக்கட் டவிழ்த்துமயல்
தீர்த்துக் கதிதந் தருளுமென்றும்
தெவிட்டா தென்னுட் டித்திக்கும்
தெய்வக் கனியே வருகநல்ல
ஏரார் பிரம வெளிக்குள்வளர்
இனிய சச்சி தாநந்த
இன்பக் கடலே வருக என்னுள்
இனிக்கும் எந்தாய் வருகஎழில்
காரார் சோலை புடைவளரக்
கர்க்கும் வடலூர் அரசேஎம்
கண்ணே வருக இராமலிங்கக்
கருணா நிதியே வருகவே."

என்பது அப் பிள்ளைத்தமிழில் ஒரு பாட்டு.

## எருசு. சுந்தரம் பிள்ளை க

இவர் மதுரைக்கு அண்மையில் உள்ள சோலைக் குறிச்சி என்னுஞ் சிற்றூரில் இருந்தவர். தந்தையார் பெயர் முத்துப் பிள்ளை. இவர் ஊர்க்கணக்கராக இருந்ததோடு தமிழ் நூல்களை நன்கு கற்றுப் புலவராகவும் தேவி வழிபாட்டினால் மெய்ஞ் ஞானம் கைவரப்பெற்றவராகவும் விளங்கினர். மெய்ஞ்ஞானம் என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது. தாயுமானவர் பாடல்களின் பொருள்கள் பல இந்நூலில் பல பாடல்களினும் சிறப்புற அமைந்துள்ளன.

> '' விண்ணாகி மண்ணாகி விராட்டு மாகி
> விராட்டினுக் கப்பாலோர் அண்ட மாகிக்
> கண்ணாகிக் கண்ணுக்குள் ஒளியு மாகிக்
> கலையான பனிரெண்டில் நான்கு மாகி
> எண்ணாகி எண்ணுக்கோர் இயல்பும் ஆகி
> ஏகமாய் நின்றபரஞ் சோதி யான
> அண்ணாவே ! என்றனை நீ அடிமை கொண்டு
> அருளொளியை இப்பொழுதே அருள்செய் வாயே.''

என்பது அந்நூலில் ஒரு பாட்டு.

## எருஎ. சுந்தரம் பிள்ளை உ

இவர் திரிசிரபுரத்தில் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை காலத்தில் இருந்தவர். வயலூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலை இவர் பாடியிருக்கிறார். அந்நூலுக்கு மீனாட்சி சுந்தரம் பிள்ளை,

> '' தந்தையென வரையகப்பெண் தழுவிநெடுங்
> கொக்கிறுத்துச் சயிலங் கைக்கொண்
> டந்தமுறு தலையாறு கொண்டுவய
> லூர்மருவி அடியார்க் கின்பம்
> சந்ததமுந் தருங்குமர வேளுககோர்
> அந்தாதி சாற்றி னானால்
> கந்தமிகு தமிழுணர்ந்த சுந்தரநா
> வலனென்னுங் கருணை யோனே.''

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## எருஅ. சுந்தர ராகவ ராசு
(20 - நூ.)

இவர் இராம்நாதபுரம் புலவர் அழகிரிராசு என்பவரின் தமையனார் மகனுவார். அழகிரிராசு திருவாவடுதுறை ஆதீனத்தில் பெரும் புலவர் மீனுட்சிசுந்தரம் பிள்ளையிடம் கல்விகற்றுச் சிறப்புற்றவர். பாண்டித்துரைத் தேவருக்கும் ஆசிரியராக இருந்தவர். சுந்தரராகவராசு தம் பெரிய தகப்பனுரிடமும் பிற அறிஞர்களிடமும் கல்வி கற்றவர். இராசசிங்கமங்கலம் முத்துச் சாமிப் பிள்ளை என்பவர் இயற்றிய நூல்களுக்கு இவர் ;

'' பகலவன்தோன் றிடவுமந்த காரம் நீங்கிப்
பண்புறல்போற் பராபரனுர் பாலமேலோர்
அகமகிழ்கந் தப்பதிகம் குமர வேண்மீ
தார்பதிக மங்கருவைப் பதிகந் தம்மோ(டு)
இகபரசா தனமருளும் பிரமா நந்தம்
எனும்பதிக மிவையடியார் வினைபோய் உய்யச்
சகமதனின் மெய்ஞ்ஞான தீபம் என்னச்
சாற்றினன்முத் துச்சாமி தமிழ்வல் லோனே.''

என்னும் பாடலாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## எருகூ. சுந்தரராச ஐயங்கார் - ஏ
(20 - நூ.)

இராமநாதபுரத்தில் எஸ். பி. சி. உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக இருந்தவர். முத்துச்சாமிப் பிள்ளை என்பவர் இயற்றிய பிரபந்தத்திரட்டு என்னும் நூலுக்கு இவர் ;

'' கற்றவர்கள் களிகூரக் காசினியெ
லாம்பரிக்குங் கருணைச் சேடன்
உற்றமுடி துளங்கவெழி லுயர்கந்தப்
பதிகமுமெண் ணேங்கின் பென்னப்
பெற்றபரா பரமாலைப் பிரமாநந்
தப்பதிகம் பிறங்கு சந்தப்
பற்றுமோர் வேற்குமரப் பதிகமுறு
நற்கருவைப் பதிகமும் மால்.''

என்பதை முதலாகக் கொண்ட இரண்டு செய்யுட்களால் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## எகூ௦. சுந்தரராசம் ஐயங்கார்
(19 - நூ.)

இவர் சோழவளநாட்டில் திருவரங்கம் -பெரிய கோயிலில் கோயிற் புலவராக இருந்தவர். இவருடைய பெயருக்கு முன்னுல் 'கத்தூரி திலகம்' என்னும் அடைமொழியுங் காணப்பெறு கின்றது. இராசயோகாநந்த வேங்கடப்ரபந்நசாமி என்பவர் இயற்றிய பிரமோற்சவத் தத்துவதீபிகை க்ஷேத்திர காண்டம் என்னும் நூலுக்கு இவர் ;

" ஓதிவரும் உற்சவத்தின் ஒப்பற்ற தத்துவத்தை
காதிலுப தேசிங்குங் கந்தூாடை—வேதியனும்
அப்பனரு ளிச்செயலை அந்தணர்கள் காமிப்பர்
அப்பமொடு தோசைவடை யாய்.

அம்மவெம தப்பன் அருள்ஞான தீபிகையை
நம்முனிக ணஞ்சியர் நம்மாழ்வார்—வம்மினென
வாங்கி மகிழ்ந்துமிக வாசிப்பர் உற்சவத்தின்
பாங்கிநெறி என்றே பரிந்து."

என்னுஞ் செய்யுட்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## எகூக. சுந்தரராமாநுசப்பிள்ளை
(1868)

சென்னைமாநகரில் புரசவாக்கத்தில் வாழ்ந்திருந்தவர். அந்நாளில் சென்னைமாநகரில் வீரணன் தோட்டத்தில் இருந்த அட்டாவதானம் வீராச்சாமிச் செட்டியாரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றுர். இவர் இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவர்க்கு எழுதிய பாடல்களில் ஒன்று ;

" முத்தமிழ்க் கவிஞர் முறைமுறை வதியும்
மூதெயிற் புதுவைமா நகரப்
பத்திநல் லொழுக்கப் பண்ணவ நிகாந்தம்
பரவிப மால்பொன்னுச் சாமி
சித்தகம் நிறைந்த சுகுணனே சிறியன்
செப்பிய புத்தகம் அனைத்தும்
எத்தலத் தவரும் வியப்புற வளித்தால்
இருங்களிப் பெய்துவ னன்றே."

என்பதாகும்.

## எகூஉ. சுந்தரலிங்க தேசிகர்
(20 - நூ.)

இவருடைய தந்தையார் பெயர் நமசிவாய தேசிகர். தருமபுர ஆதீனப் புலவராக இருந்தவர். இவர் திருவாரூர்த் தியாக ராசப் பெருமானுடைய அருள்விளையாடல்கள் பலவற்றைச் சிந்தாகப் பாடியுள்ளார்.

"கல்லார் பிழையறியார் கற்றவரும் பிழையுரையார்
அல்லாதென் போல்வார்சொல் ஆவதென்ன—எல்லாம்
அறிந்தவரு மில்லை அறியாரும் இல்லை
அறிந்துமகிழ் கொள்ளுமறி வோர்."

என்பது அவையடக்கப்பாடல். அந்நூலின் பெயர், "தியாக ராசர் அருள்விளையாடற் சிந்து" என்பது.

## எகூரு. சுந்தரலிங்க முனிவர்

இவர் திருவாவடுதுறை ஆதீனம் திருச்சிற்றம்பல ஞான தேசிகருடைய மாணவர். இவருடைய காலம் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். இவரியற்றிய நூல் திருப்பெருந் துறைப் புராணம். இப்புராணம் ஐம்பத்தொன்பது சருக்கங்களை யும் உ0எக செய்யுட்களையுங் கொண்டது. இதன்கண் மாணிக்க வாசகர் குருந்தமரத்தடியில் அருளுரை பெற்றதும், திருவாசகச் சிறப்பும், அவர் பொருட்டுச் சிவபெருமான் புரிந்தருளிய திருவிளையாடல்களும் பிறவுங்கூறப் பெற்றுள்ளன. சொன்னய மும் பொருள்நயமும் நன்கு அமையப்பெற்றது.

"பொன்வரைமேல் தாழருவி போலமத
தாரைதிகழ் பொருவின் வேழம்
மன்னுமிளந் திங்களெனக் கிம்புரிதாங்
கொருகோட்டு வள்ளல் முன்னாள்
கன்னிஇமா சலையருச்சித் தேத்திவரங்
கொள்ளவருள் கடவுள் யார்க்கும்
முன்னவனும் வெயிலுவந்த கணபதிமுண்
டகமலர்த்தாள் முடிமேற் கொள்வாம்."

என்பது இப் புராணத்தின் விநாயக வணக்கச் செய்யுள்.

## எகூச. சுந்தராச்சாரியர் - கி
(20 - நூ.)

தொண்டைமண்டலத்தில் சென்னைமா நகரில் விசுவப் பிராமண குலத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் கிருட்டிண ஆச்சாரியார். சுந்தராச்சாரியர் ஆ. மே. சென்னகேசவுலு நாயுடு விடம் கல்வி கற்றுத் தமிழ்ப்புலமை பெற்றவர். கலைவாணி சதகம், சரசுவதிபஞ்சரத்தினம் முதலிய நூல்களை இவர் இயற்றி யுள்ளார். இந் நூல்களைப் பாராட்டி, கா. கோபாலாச்சாரியர், கோ. வடிவேலுச் செட்டியார். வரகவி - அ. சுப்பிரமணிய பாரதியார், வா. மகாதேவ முதலியார், சி. பங்காருப்பத்தர், ம. இராசகோபால பிள்ளை, தி. மாணிக்க நாயகர், மௌனகுரு ருத்திரமூர்த்தி ஆச்சாரியர், திருவிசை நல்லூர்ப் புராணிகர் சின்னைய நாயகர், வீரை சண்முக சுந்தரம் பிள்ளை, தி. மு. முக்கண்ணுசாரியார், பழநிமுத்தாச்சாரியர், கிருட்டிணமூர்த்தி ஆச்சாரியர், கா. சொக்கலிங்க ஆராத்திரியார், பூ ப. செல்வக் குமாரு கவண்டர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' சீர்மல்குநல் லறமும்பெருந்
திருவும்வளர் தருமின்பமும்
நார்மல்குவண் ணிலையுங்குல
நாலுங்கொடைக் காலுங்கடல்
பார்மல்கியுன் பதுமத்துணைப்
பதமேவவிங் கிதமேவியே
கார்மல்கிடத் தயைகூர்ந்தருள்
கலைவாணியே கலைவாணியே.''

என்பது கலைவாணி சதகத்தில் ஒரு பாட்டு.

## எகூடு. சுந்தரானந்தர் - மு
(1870)

இவர் முத்துக்கிருட்டிண பிரமத்தின் அடியார்களுள் ஒருவர். முத்துக்கிருட்டிணபிரமத்திடம் வேதாந்த நூல்களை ஓதியுணர்ந்து அருளுரை பெற்றுப் புலமைத்திறம் வாய்து விளங்கினர். தம் முடைய ஆசிரியராகிய முத்துக்கிருட்டிண பிரமம் இயற்றிய சுருதிசாரம் என்னும் நூலுக்கு இவர் ;

" திருமருவு சோதியாய் வளர்வியாச முனியாதி
சௌனகரால் சுகர்த னக்கே
திண்செவியிற் போதனைசெய் சுருதிசா ரம்மெனும்
சிறப்புற்ற நூலுக்கு மெய்க்
குருவான சிவரகசியம் ஆதியா மாகமங்
கொண்டுமிகு மேற்கோ ளுடன்
குறியறிந் தவரெலாம் சங்கையற நிச்சயம்
கொண்டாட இந்நா ளிலே
பெருமைபெறும் இவ்வுலகில் அச்சிட் டளித்தனன்
பெரியதிரு மூலர் மரபில்
பேர்பெற்ற வேதாந்த சித்தாந்த சமரசப்
பிரிவிலா நந்த போதம்
கருவுருவில் வாராது கண்கண்ட தெய்வமாய்க்
கருத்திற் பொருந்தி யாடும்
கண்மணி தனக்குரிய முத்துகிருட் டிணபிரமம்
அப்பனுங் கடவுள் மாதோ."

என்னுஞ் செய்யுளால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## எசுசு. சுந்தரானந்தர் - உ

இவர் கந்தாரூடம் என்னும் காலக் கணித நூலை இயற்றி யிருக்கிறார் :

" அன்னமே மிதுனங்கன்னி ஆதித்தன் செவ்வாய் நின்றால்
அன்னமே ரிஷபங் கன்னி அரசனும்மதியும் நின்றால்
அன்னம்போல் ராசயோகம் அம்மனைக் காகுஞ் சொல்லு
அன்னமே செல்வம் புத்ரன் அரசாளும் ராசயோகம்."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## எசுஎ. சுந்தரேச பாரதியார் - சு
(20 - நூ.)

இவர் சிங்கவனம் சுப்புப்பாரதியார் என்பவருடைய புதல் வராகத் தோன்றியவர். சுப்புப்பாரதியார் பெரும் புலவர் (மகா வித்துவான்) சுந்தரேச பாரதியார். தம்முடைய தந்தையினிடமே கல்வி கற்றுச் சிறந்த புலமை யடைந்து பாரதியானார். திருவாரூர் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராக அமர்ந்து மாணவர்கட்குக் கல்வி கற்பித்தார். இவர் இயற்றிய நூல்களைப்பற்றிய விவரம்

ஒன்றுந் தெரியவில்லை. சந்தானுசாரியர் புராணசங்கிரகம் என்னும் நூலுக்கு நேரிசை ஆசிரியப்பாவில் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"மாவும் மணியும் மேவும் மார்பனும்
அன்னம் ஊரும் பொன்னிறத் தொருவனும்
அடியும் தேடுங் முடியுங் காணுக்
குயிலை இடங்கொள் கயிலையங் கடவுள்
அந்தி வண்ண நந்தியெம் பிரசற்கு
முனம்உப தேசித் தனமறைப் பொருள்களைத்
தெளிசித் தாந்த வளிவருந் தேனைத்
தமிழ்நா டுய்ய அமிழ்தெனத் தந்த
பொய்கண் டில்லா மெய்கண்ட தேசிகன்."

என்பது சிறப்புப்பாயிரத்தின் முற்பகுதி. இதிலிருந்து இவர் செய்யுள்கள் பல பாடி நன்கு தேர்ச்சி பெற்றவரென்பது நன்கு பெறப்படுகின்றது.

## எ௬அ. சுப்பராமையர் க

இவர் உடையார் பாளையம் தாலுகா திருக்குன்றம் இராமசாமி ஐயருடைய மகனுகத் தோன்றியவர். இசைப்புலவர். இசைப்புலவர் கனம் கிருட்டிண ஐயருக்குத் தமையனுர். இசைப் பாடல் முதலிய பாடல்களைப் பாடுவதிற் சிறந்தவர். இவர் கபித்தலம் இராமபத்திர மூப்பனுருடைய சிறந்த குணங்களையும் உதவிகளையும் பாராட்டிக் குறவஞ்சி நாடகம் ஒன்று இயற்றி அரங்கேற்றினுர். இராமபத்திர மூப்பனுர் குறவஞ்சியைக் கேட்டு மகிழ்ந்து சிறந்த பரிசுகள் வழங்கினுர். வைத்தீசுவரன் கோயிலில் எழுந்தருளிய முத்துக்குமாரசாமிமீது இசைப்பாடல்கள் பல இயற்றியிருக்கிறுர்.

## எ௬௯. சுப்பராமையர்–ம உ
(19 - நூ.)

சிவகங்கைச் சீர்மையைச் சேர்ந்த மழவாபுரம் என்னும் ஊரில் இருந்தவர். அட்டாவதானம், தசாவதானம் சோடசாவதானம் சதாவதானம் முதலிய அவதானிகளைப்பற்றி அறிந்திருக்

கிறோம். ஆனால் இதுவரையில் கேள்விப்படாதவாறு இவரை இருநூறவதானம் என்று அறிகிறோம். இவர் பழனி வெண்பா என்னும் நூலுக்குப் பின்வருஞ் செய்யுளைச் சாற்றுக் கவியாகப் பாடியிருக்கிறார்.

'' அருந்துவரை யிதழெண்ணு சிகைவள்ளி
யைப்புணர்ந்த அன்பர் நீதா
திருந்துவரைத் தோட்டேவீ சேயர்பழ
நிக்கந்தர் திர மிக்காய்ப்
பொருந்துவரைந் துடனென்று முகத்தர்மேல்
மாலைவெண்பாப் புவியின் மால
விருந்துவரைக் கண்ணனு ராயணநா
வலன்செய்தான் விரும்பத்தானே.''

## எஎ0. சுப்பராமையர் ௩

## (1909)

இவர் மதுரைமாநகரில் வாழ்ந்திருந்தவர். தமிழறிஞர்களிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறித் தமிழ்ப்புலவராக விளங்கிய இவர் மதுரைக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்ததன்றி ஓய்வு நேரங்களில் இல்லத்திலும் பலர்க்குக் கல்வி போதித்தார். இவரிடம் கல்வி கற்ற பலர் சிறந்த தமிழறிஞர்களாக விளங்கினர் இவருடைய மாணவர்களில் ஒருவர் சங்கரவிசயம் பாடியுள்ளார். அந் நூலுக்கு இவர் அளித்த சிறப்புப் பாயிரப்பாடல்களில் ஒன்றை அடியிற்காண்க.

'' முந்திய வருணத் தோனும் முத்துச்சுப் பையமேலோன்
தந்தநன் மகவா யின்னுன் தந்தையென் னேற்ற னென்ன
முந்தைநூல் பலவு மென்பால் முறையுடன் கற்றுத் தேர்ந்து
சிந்தையுள் மகிழ்கோ விந்தன் சீர்பெற வாழு நாளில் ''

## எஎக. சுப்பராய அடிகள்

## (19 - நூ.)

இப்பெரியார், நித்தியாநந்த அடிகள் என்னும் பெரியார்பால் வேதாந்த நூல்களையும் இலக்கண இலக்கியங்களையுங் கற்றுணர்ந்தார். இவர் ஐந்திலக்கணங்களினும் வல்லவராக விளங்கியபடியால் ''பஞ்சலட்சண வித்துவான்'' என்னும்

சிறப்புப்பெயரும் இவருக்கு வழங்கியது. இவர் தம்முடைய பரமாசிரியர்மீது பிள்ளைத்தமிழ் என்னும் நூல் இயற்றியுள்ளார். அப் பிள்ளைத்தமிழ் ''அருணாசல ஞான தேசிகர் பிள்ளைத்தமிழ்'' என்னும் பெயருடையது. அப் பிள்ளைத்தமிழ் பார்வைக் ககப் படாமையின் செய்யுளொான்றெடுத்துக்காட்ட முடியவில்லை.

## ௭௭௨. சுப்பராய ஆச்சாரியார்
### (கி. பி. 19 - நூ)

இவர் தண்டறை என்னும் ஊரில் தோன்றியவர். திருத் துருத்தி இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகள் ஆதீனம் ஈசூர் சச்சிதாநந்த அடிகள் என்னும் பெரியாரிடத்தில் வேதாந்த நூல் களைக் கற்றுத் தேறினார். முன்னரே அமைந்திருந்த இலக்கியக் கல்வியாலும் வேதாந்தக் கல்வியாலும் புலமை நிரம்பப்பெற்றவ ரானார். இவர் தமது அநுபவத்தில் கண்ட உண்மைகளை நூலாக இயற்றி அந் நூலுக்கு அகம்புற ஆராய்ச்சி விளக்கம் என்று பெயர் சூட்டி வெளியிட்டுள்ளார்.

''எவ்வுயிரும் தேகோகம் எய்தியதால் உட்புறமும்
அவ்வவ் வுயிர்க்கும் அமைந்தனவே—ஒவ்வா
அறிவறியா மையால் அடுக்கனந்த பேத
வெறியிவற்றால் நேர்ந்தனவாம் மெய் ''

என்பது பாயிரத்தில் ஒரு பாட்டு.

இருபது பிரிவுகளைக்கொண்ட இந்நூல், முகவுரை, சிறப்புப் பாயிரம், நாட்டபேத ஆராய்ச்சி, ஐம்பொறி ஆராய்ச்சி, அந்தக் கரண ஆராய்ச்சி, சிவபோத ஆராய்ச்சி, கூடத்த சைதன்ய இலட்சியார்த்த விளக்கம், துவைத சித்தாரோப ஆராய்ச்சி, துவைத இன்பாரோப ஆராய்ச்சி என்பன அக ஆராய்ச்சியாகவும் மற்றவை புற ஆராய்ச்சியாகவும் அமைந்துள்ளன. நூலினைப் பாராட்டிக் காஞ்சி இராமசாமி நாயுடு, திருமழிசை வடிவேலு முதலியார், தே சுப்பராய முதலியார், மழவை தங்கவேலையர், ஆறுமுக முதலியார், அரிகரபாடி சின்னையா முதலியார், தே. வேலு நாயகர், உறையூர் வைத்தியலிங்க ஆசாரியார், உறையூர் பெருமாள் செட்டியார், மாயூரம் அட்டாவதானம், சந்திரசேகர உபாத்தியாயர், உறையூர் தொ. மு. நல்லசாமிப்பிள்ளை, உறையூர்

சதாசிவசெட்டியார், உறையூர் அருணாசல ஆசாரியார் என்போர் சாத்துக் கவிகள் தந்துள்ளனர்.

"சண்முக ஞானத் தலத்துறை எங்கோன்
சச்சிதா நந்தன் சரணமேற் கொண்டவன்
பூரண நோக்கம் புரியப் பெற்றவன்
பந்தமித் தையதாய்ப் பார்த்தசிற் கண்ணன்
எத்தகை யோர்க்குஞ் சித்தமால் களைந்து
தத்துவார்த் தங்களைச் சாற்றி மகிழ்பவன்
கருணைக் களஞ்சியன் காட்சிக் கினியன்
உபசாந் தத்திற் குறைவிட மேலோன்
ஒப்புயர் வில்லா ஒருவன்
சுப்ப ராயநந் தூயவின் ணவனே."

என்பது மழவை தங்கவேலையர் பாட்டின் ஒருபகுதி.

இவர் அறிவறியாமை ஆதார விளக்கம் என்னுஞ் செய்யுள் நூலும் இயற்றியுள்ளார். அந்நூல் ஆயிரத்தைந்நூற்றறுபத் தேழு வெண்பாக்களைக் கொண்டது.

"கடவடிவங் காரியமோர் காலத்த தென்னில்
படர்மண் ணிருகாலப் பாங்காந்—திடமதுறும்
என்னிற் கடபேத மீங்கிலதான் முன்னெடுபின்
பன்னு முதற்கருவி பார்."

என்பது நூலில் ஒரு பாட்டு.

இந் நூலுக்கு மீனாட்சி சுப்பராய முதலியார், கோவளம் துரைசாமி நாயுடு, தெ. சுப்பராய முதலியார், சேலம் சேணியப்ப நாயகர், அரிகரபாடி சின்னையா முதலியார், திருவல்லிக்கேணி சாமி நாயகர், சேலூர் இராமசாமி நாயகர் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். நூல் ஆறு பிரிவாக அமைந்துள்ளது.

## எஎரு. சுப்பராய உபாத்தியாயர்-சி
## (19 - நூ.)

தொண்டை மண்டலத்தில் கந்தமங்கலம் என்னும் ஊரில் சின்னைய நாயகர் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். இலக்கண நூலில் இவர் மிகவல்லவர். திருப்போரூர் முருகர் அந்தாதி முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். அரங்கக்குடி

சபாபதிப்பிள்ளை, திருவெவ்வுளூர் இராமசாமிச் செட்டியார் அணைக்கட்டு நாராயணசாமி நாயகர், சிவகங்கை இராகவ முதலியார் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். கட்டளைக் கலித்துறையாலாகிய இவ்வந்தாதி நூறு பாடல்களைக் கொண்டது.

' திருவு மிமையவர் கோனிகர் செல்வமுஞ் சேர்ந்துமனு
மருவுந் நிகழ்சம ராபுரி என்று மகிழ்ந்தெவரும்
உருகும் படியத் தலமீ துவந்துறை உத்தமனல்
தருவும் மதிக்க அருள்வான் தனைநம்பிச் சாற்றுவர்க்கே ''

என்பது நூலின் முதற்பாட்டு.

## எஎச. சுப்பராய ஐயர்-சே (1904)

பாண்டி நன்னாட்டிலே திருப்புத்தூர்த் தாலுகாவிலேயுள்ள சிறுகூடற்பட்டி என்னும் செந்நெற் குடியிலே இவர் அந்தணர் குலத்தில் தோன்றினார். இவருடைய பெயர் சாமிக்குட்டி ஐயர் எனவும் வழங்கும். இவருடைய தந்தையார் பெயர் சேடப்ப ஐயர். இச் சேடப்ப ஐயரும் இவருடைய வழிமுறையினரும் தமிழ் கற்றுச் சிறப்புற்றவர்கள். இந்தச் சேடப்ப ஐயருடைய மற்றொரு மகனாகிய விமகவி என்பவரும் சிறந்த புலமைபெற்றுத் திகழ்ந்தவர். இவ்வழிமுறையினர் கல்வி கற்றபின் சேதுநாடு சென்று சேதுபதியின் அவைக்களப் புலவர்களாக அமர்ந்து சேதுபதி சமுகத்தைச் சிறப்பிப்பவர்கள். சுப்பராய ஐயர் கல்வி கற்றுச் சிறப்புற்றபின் அரியக்குடிக்குச் சென்று அங்குத் தங்கி வசிக்கலானார். அன்பர்கள் சிலர் இவரைப்பார்த்து வடமொழியில் உள்ள விட்டுணு புராணத்தைத் தமிழ்மொழியிலே மொழிபெயர்த்துப் பாடவேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். இவரும் அதற்கிசைந்து அவ்வாறே மொழிபெயர்த்துப் பாடத் தொடங்கி, நாலாயிரத்து நானூற்று நாற்பத்தாறு செய்யுட்களாற் பாடிமுடித்தார்.

இந்நூலில், உலகத்தோற்றம், தேவர் முதலானோர் படைப்புகள், திருமகள் பெருமை, திருமகள் பிறப்பு, துருவன் வரலாறு, பிரகலாதன் வரலாறு, பூகோள ககோளங்கள், பாதாள உலக

வருணனைகள், நரக வருணனைகள் முதலியனவும் மற்றும் பல செய்திகளும் நன்கு விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

இந்நூலுக்கு, உ வே. சாமிநாதையர், சேது சமத்தான வித்துவான் இராகவ ஐயங்கார், சென்னை—கா. கோபாலாச்சாரியார், அரியக்குடி கிருட்டிணமாச்சாரியார், மு. இராகவ ஐயங்கார், நூலாசிரியரின் உடன் பிறந்தாராகிய வீமகவி, காஞ்சீபுரம் - இராமசாமி நாயுடு, திருமயிலை - சண்முகம்பிள்ளை, அமராவதி புதூர் - அ. இராமநாதச் செட்டியார், அரியக்குடி - அரங்கநாதச் செட்டியார், பண்டிதமணி - மு. கதிரேசச் செட்டியார், மதுரை - த. குப்புச்சாமி நாயுடு, கோட்டையூர் சுப்பையர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கின்றனர்.

''வேதநாயகனே போற்றி வேள்விகட் கதிப போற்றி
பூதநா யகனே யார்க்கும் புலப்படாய் போற்றி வேள்வி
ஆதியின் உருவமான அண்ணலே போற்றி யென்றும்
போதினில் உறையுஞ் செல்வப் பொன்மகள் மணாளபோற்றி.

பூதமாம் பொருட்கும் பின்னும் பொருள்கட்கும் அதிப ஆருய்
ஓதுறுங் குணத்த எண்ணில் உருவத்த உலைவொன் றில்லாய்
தாதுலாங் கமல நாபித் தற்பர தயாள திவ்ய
சோதியின் வடிவ எம்முன் தோன்றிநின் றருளவேண்டும்.''

என்பன இலக்குமி தேவியார் திருவவதாரம் உரைத்தலில் இரண்டு பாட்டு.

மற்றும் இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் திருக்கோட்டியூர்ச் சௌமிய நாராயணமூர்த்தி பிள்ளைத்தமிழ், திருக்கச்சியந்தாதி என்பன.

## எஎ௫. சுப்பராய சுவாமிகள்

இவர் ஏறக்குறைய எண்பதாண்டுகட்கு முன்னர்ச் சிதம்பரத்தில் இருந்தவர். விருத்தாசலம் குமாரதேவர் திருத்தாலாட்டு முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

''நல்ல மணிமுத்தா நதிசூழ் விருத்தகிரிச்
செல்வக் குமார தேவரெனும் தேசிகரோ
சாந்தலிங்க தேசிகனார் தந்தருளும் விஞ்ஞானக்
காந்தையினைக் கூடிக் களித்திருக்கும் நாயகரோ.''

என்பன மேற்படி தாலாட்டில் இரண்டு கண்ணிகள்.

## எஎசூ. சுப்பராயச் செட்டியார்-திரிசிரபுரம் (20 - நூ.)

இவர் திரிசிரபுரத்தில் இருந்தவர். பெரும்புலவர் மீனுட்சி சுந்தரம் பிள்ளையிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றவர். இவர் பதினறு அவதானங்கள் செய்தற்குப் பழகியிருந்தமையின் சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் என்று அழைக்கப்பெற்ருர். இவர் இயற்றிய நூல்களைப்பற்றிய செய்தி தெரியவில்லை. திருக்குறள், திருக்கோவையார் முதலிய நாவலர் பதிப்பு நூல்களுக்கும் பிற பழங்காலத்து நூல்கள் பலவற்றிற்கும் இவருடைய சிறப்புப்பாயிரப் பாடல்கள் காணப்பெறுகின்றன. பருத்திநகரந்தாதி என்னும் நூலுக்கு இவர் அளித்த சிறப்புக் கவியை அடியிற் காண்க:

*''தேனுறுந் துளவலங்கல் பெருமானே டயன்முதலோர்*
*துதித்தெஞ் ஞான்றும்*
*பானுறும் பல்வளனும் பெறவருளும் பருத்திநகர்ப்*
*பரமன் றேறல்*
*கானுறுங் கடம்புகமழ் கழன்மீதோ ரந்தாதிக்*
*கண்ணி சூட்டி*
*வானுறும் புகழ்படைத்தான் சுப்பரா யப்புலமை*
*வல்லோன் மாதோ.''*

## எஎஎ. சுப்பராயச் செட்டியார்-அ (19 - நூ.)

தொண்டைமண்டலத்தில் ஆதமாநகர் என்னும் ஊரில் கௌரி குலத்தில் அருணசலச் செட்டியார் என்பவருடைய அருந்தவப் புதல்வராக இவர் தோன்றினர். நன்னூல் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களையும் புராண இதிகாச காப்பியங்களாகிய இலக்கிய நூல்களையும் இளமைப் பருவத்திலே நன்கு ஓதியுணர்ந்த இவர் பிருங்கிமலையை அடுத்து விளங்கும் பருத்திமாநகரில் எழுந்தருளிய முருகக் கடவுள்மீது, தோத்திரப்பா, சுந்தர விநாயகர் தியானமஞ்சரி, சூரபத்மன் விலாசம், இடும்பன் கவசம், கடம்பன் கவசம் முதலிய நூல்களை இயற்றியிருக்கிருர்.

"சிலைமுருகா! மஞ்ஞை மீதுதிகழ் மாமுருகா!
தீப்பிணி அகற்று முருகா!
செல்வமுருகா! கிருபை நல்குமுருகா! வெற்பைச்
சிலுக்கத் தொளைத்த முருகா!
ஞாலமது புகழ்திரு மாலின்மருகா முருகா
நான்மறைகள் ஏத்தும் முருகா!
நாலுமுகனைச்சிறையில் வைத்தமுருகா! என்பை
நங்கைசெய் வித்த முருகா!
வேலுமுருகா! அநுகூலமுருகா! மேரு
மீதுவிளையாடு முருகா!
மெய்யன்பிலாக்கொடிய பொய்யன் புடையேனை
மேவிவந் தாண்ட முருகா!
கோலஞ்சிறந்திடுசேவற்கேதனமுருகா
குறைகளைந் தாளு முருகா!
குமரகுரு வேமுருகா அமரர்தொழு தாள்முருகா!
குமரபுரி வேள்முருகனே."

என்பது சுப்பிரமணியர் தோத்திரப்பா என்னும் நூலின் பாடலில் ஒன்று இந்நூலைப் பாராட்டிப் பேறைச் செகநாதபிள்ளை, புலவர்-சிவப்பிரகாசையர், சிதம்பர முதலியார், பறங்கிமலை - சிதம்பர உபாத்தியாயர், காஞ்சி - தருமலிங்க முதலியார், செஞ்சி - வேம்புலி உபாத்தியாயர், பூவை - கலியாண சுந்தர முதலியார், சே. கோவிந்த ராமாநுசதாசர் ஆகிய கற்றுவல்ல அறிஞர்கள் பலரும் தனித்தனி சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளனர்.

"அருணை சலமால் அளித்த புதல்வன்
சுத்தநற் சைவ சித்தாந் தத்தினில்
பத்திமை வாய்ந்து பான்மை மிக்கோன்
சிவனடி யாரைச் சிவமென எண்ணித்
தவமது செய்யுந் தன்மை உள்ளோன்
பவசா தனத்தைப் பாரினில் ஒழிக்கச்
சிவசா தனத்தைச் சிக்கெனப் பிடித்தோன்
பிரமந் தானெனப் பிதற்றும் பேயரைக்
கண்டு மனத்தால் கசிந்தே உருகி
அப்பா வணிந்தோன் அருளினை ஊட்டும்
சுப்பராயன் என்னுஞ் சுகுண நாவலனே."

என்பது பூவை கலியாண சுந்தர முதலியார் இயற்றிய சிறப்புப் பாயிரத்தில் இறுதிப்பகுதி.

## எஎஅ. சுப்பராய நாயகர்-சூ
(19 - நூ.)

சென்னைமாநகரில் சிறந்த புலவர்களாக விளங்கியவர்களில் ஒருவர். சென்னை வேதாகமோத்தம சைவசித்தாந்த சபையாருள் ஒருவராக இருந்து பணியாற்றியதன்றிக் கிறிஸ்தியன் காலேஜ் தமிழாசிரியராகவுமிருந்தார். இவர் கந்தபுராணத்திற்குப் பொழிப்புரை இயற்றியுள்ளார்.

## எஎகூ. சுப்பராய பிள்ளை-கா
(19 - நூ.)

இவர் தஞ்சைமாநகரில் இருந்த ஐயாச்சாமிப்பிள்ளை என்னும் புலவரிடம் கல்வி கற்றுப் புலமையடைந்து தரங்கம்பாடி மிஷன் உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழ்ப் புலவராக விளங்கியிருந்தார். தம்முடைய ஆசிரியர் இயற்றிய தில்லை யமக வந்தாதி உரைக்கு இவர்,

> "உலகுபுகழ் தருந்தில்லை அம்பலவா ணப்பெருமான்
> ஒண்டாட் கண்பாய்ப்
> பலைகலைதேர் புலவர்புகழ் மீனாட்சி சுந்தரவேள்
> பண்பிற் சொற்ற
> இலகனுறும் யமகவந்தா திக்குரையைப் பாவலர்கள்
> இறும்பூ தெய்த
> அலகில்புகழ்த் தஞ்சையில்வாழ் ஐயாச்சாமிக்குரிசில்
> அமைத்தான் மாதோ."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## எஅ௦. சுப்பராய பிள்ளை-மு
(19 - நூ.)

இவர் திருமந்திரநகர் என்னும் தூத்துக்குடியில் 19 ஆம் நூற்றுண்டின் இறுதியில் வாழ்ந்திருந்தவர். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் சுப்பிரமணிய சுவாமி பசனைக் கீர்த்தனை, திருச்செந்திற் குமரேசர் பதிகம், திருச்செந்திற் குமரேசர் அந்தாதி, திருச்செந்தில் வெண்பா, கப்பற்சிந்து முதலியன. நூல்களைப்

பாராட்டி, சிதம்பரநாத கவிராசர், அரன்வாயல் வேங்கடசுப்புப் பிள்ளை, அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், அ. தங்கவேலுப்பிள்ளை ஆகியவர்கள் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளனர்.

"சீர்மேவு மலர்மாது கேள்வனும் விதியுமுன்
தேடியறி யாமுதல்வர்தந்
திகழ்மதலை யாய்ச்செந்தி னகர்வளர் குகாநினது
சேவடியென் முடிசூடவும்
கார்மேவு குழல்மாதர் பொன்பூமி என்னவே
கருதுமூ வாசைவலையில்
கட்டுண்ட பறவைபோல் தட்டுண் டிடாதென்
கருத்துனது பாற்செல்லவும்
பார்மேவு நின்னடித் தொண்டரொடு கூடிமுற்
பவவினை தொலைத்துய்வணம்
பல்காலும் உன்னையான் பூசிக்க வுங்கிருபை
பாலிக்க வேண்டும் ஐயா
கூர்மேவு வேல்விடுத் தமரர்சிறை மீட்டவா
கோதண்ட பாணி மருகா
குறமகட் குறுநேச பரமனுக் குபதேச
குரவநற் குமரேசனே"

என்பது திருச்செந்திற் குமரேசர் பதிகத்தில் ஒரு பாட்டு.

"பன்னிரண்டு தோளும் பதாம்புயமும் சண்முகமும்
என்னிரண்டு கண்முன் இலங்கிடவே—துன்னுமயில்
வாகனத்தில் வேல்பிடித்து வள்ளிதெய்வ யானையிரு
பாகம்வைத்து வாமுருகப் பா.

என்பது திருச்செந்தில் வெண்பா—96

"கண்டாலும் செந்தில் தலத்தினை அல்லதக் காட்சியினை
விண்டாலும் போமெவ் வினையுமென் றுல்வடி வேலவன்தாள்
கொண்டாடிப் போற்றிப் பணிந்திட்ட பேர்க்குக் குவலயத்தில்
உண்டாகு நன்மைக் கெவர்சொல்லு வார்மதிப் புத்தமரே."

என்பது திருச்செந்திற் குமரேசர் அந்தாதி—55

## எ௩௧. சுப்பராய முதலியார்-தே (1884)

இவர் சென்னைமாநகரில் இருந்தவர். திருமூலர் மரபில் எழுந்தருளிய சதாசிவப்பிரமேந்திர யோகீசுரர் என்பவரை

அறிவாசிரியராகக்கொண்டு அறிவுரை பெற்றுச் சிறப்படைந்தவர். திருமயிலைக் கபாலீசர் நான்மணிக் கோவை, கற்பகவல்லியம்மன் பதிகம் என்னும் நூல்கள் பாடியிருக்கிறார். அவை சொற்சுவை பொருட்சுவைகளும் சைவசித்தாந்தக் கருத்துக்களும் உடையனவாயும் கற்பவர்க்குத் தெய்வ பத்தியை உண்டாக்குவனவாயும் உள்ளன.

"அருள்புரி மயிலை நாயகி அடியேன்
அவித்தையோ டாசையும் அறுத்துத்
தெருள்புரி மடவார் மையலும் நீக்கிச்
சிறியனேன் சிந்தையைத் திருத்தி
தருமமே உரைத்தா பாசமும் போக்கித்
தன்மயம் ஆக்கிநா யேனும்
கருவுரு வண்ணம் காத்தருள் புரிவாய்
கற்பக வல்லிஎன் தாயே."

என்பது கற்பகவல்லியம்மன் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௭௩௨. சுப்பராய முதலியார்-வேலூர்

இவர் தொண்டை வளநாட்டிலே இராயவேலூரில் வாழ்ந்திருந்தவர். இவருக்கும் முத்திராமக்கவிராயர் என்பவருக்கும், கொ. அருணாசல முதலியார், கொ. சிங்காரவேலு முதலியார் என்னுஞ் செல்வர்கள் பொருள் உதவிசெய்து பாரதத்தை நாடகமாகப் பாடும்படியாக வேண்டிக்கொண்டனர். இவர்களும் அவ்வாறே பாடிமுடித்தனர். அந்நூலில் தொளாயிரத்திற்கு மேற்பட்ட இசைப்பாடல்கள் அடங்கியுள்ளன.

"அண்டமொ டெண்டிசை யுங்கிடு
கிடெனவ திர்ந்திட மதவீமன்
ஆசைகொள் தாயொடு சோதரர் நால்வரை
ஆர்சடை போல்வாரிக்
கொண்டெவ ருஞ்செல நெஞ்சுத ளர்ந்து
குழைந்திட வழிமேவும்
கோடுயர் நீள்மரம் வேரொடு வீழுவ
கோரம காவிரக்
கண்டக வெம்புலி கண்டும ருண்டு
கலங்கிட இமையாமுன்
காடுகள் தூள்பட ராவினி லேகியோர்
காலனும் நாடாத்

> தண்டனி டும்பன்இ ருந்தவ ணம்புகத்
> தங்கையு மணமாலை
> தானிட வேழுகில் சூழ்வன நாடிநி
> தானமொ டுற்றனனே ''

## எஅரு. சுப்பராயலு நாயுடு

இவர் மதுரவாயல் சேஷாசல நாயுடு என்பவருடைய மகனாகத் தோன்றியவர். திருவெவ்வுளூர்த் தாலுகா குண்ணத்தூர்ப் பெருநிலக்கிழாராக இருந்தவர். இவருக்குச் சுதரிசனதாசர் என்றும் பெயருண்டு. இவர் திருவெவ்வுளூர் வீரராகவப் பெருமாள்மீது அந்தாதி ஒன்று இயற்றியிருக்கிறார். சிறப்புப்பாயிரம் பலர் வழங்கியுள்ளனர்.

> ' தாளைப்பின் னைக்கென்றே நாளைக் கழிக்காதுன்
> தாளைத்தந் தென்வினையைத் தாழ்த்தியுடன்—ஆளாமல்
> தேனே இராகவா தேவா எனதுபெரு
> மானேஎன் றோடேனோ வாது.''

என்பது அந்தாதிப்பாடல்களில் ஒன்று.

## எஅச. சுப்பராயலு நாயகர்
## (1893)

இவர் காரைக்காற்சீமை கோட்டுச்சேரி என்னும் ஊரில் இருந்த புலவர். வித்துவான் என்று அனைவராலும் போற்றப் பெற்றவர். இவரிடம் பலர் கல்வி கற்றுப் புலவர்களாயினர். இவர் திருப்பனந்தாட் காசிமடத்தலைவர் சாமிநாத சுவாமிகள் மீது பல செய்யுட்கள் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று,

> '' உலகெலாம் பரந்த தவமெலாந் திரண்டே
> ஒருரு வாகிவந் துதித்து
> நலமெலா மலிந்த பனசைமா நகரின்
> நாயக மாகியங் கடைந்தோர்
> புலமெலா மலிந்து மலமெலாம் அகலப்
> புகன்றவைக் கேற்குமா புனைந்தே
> இலகலாஞ் சாமி நாதமா முனிவ
> இசைப்பரார் நினதுபே ரிசையே.''

என்பது.

## எஅரு. சுப்பா முதலியார்-தொ
(1894)

இவர் திருப்பணிப் பேட்டை என்னும் ஊரில் வாழ்ந் திருந்தவர். தந்தையார் பெயர் தொப்பை முதலியார். இவர் திருவாரூர்த்தியாகேசர்மாலை என்னுஞ் சிறிய நூலைப் பாடியிருக் கிறார். மேற்படி மாலை இரண்டடிப் பாடல்கள் கக௪ - அமையப் பெற்றது.

*"இந்திரன் முசுகுந் தன்பால்*
*ஈந்திட அவனுந் தாங்கி*
*வந்திடக் கமலை ஆரூர்*
*வதிந்தவா தியாக ராசா."*

என்பது மாலையில் ஒரு பாட்டு. நூலைப் பாராட்டித் திருவாரூர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் சிங்கவனம் சுந்தரேச பாரதியார், திருவாரூர் வ சு சாமிநாத தேசிகர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

மற்றும் இவர் கண்கொடுத்த வணிதம் நயனவரதர்மாலை, திருப்பணிப்பேட்டைச் சுந்தரேசர் திருத்தொண்டர்மாலை முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

*"உடையானை அன்பர்க் குரியானைச் சூலப்*
*படையானை முக்கட் பரனை—விடையூரும்*
*கொற்றவனை நற்கண் கொடுத்தவணி தத்தகலா*
*துற்றவனை நெஞ்சே உரை."*

என்பது கண்கொடுத்த வணிதம் நயன வரதர்மாலையில் ஒரு பாட்டு.

## எஅசு. சுப்பிரமணிய அய்யர்-சு
(கி. பி. 20 - நூ.)

பாண்டி வளநாட்டிலே பழந்தமிழ் நகரமாகச் சிறந்து விளங்கும் மதுரைமாநகர்க்கு அண்மையிலே உள்ள பழங்கா என்னும் ஊரிலே அந்தணர் குலத்தில் இவர் பிறந்தார். இளமைக் கல்வி கற்றபின் ஆங்கிலக் கல்வியுங்கற்று மதுரையிலே வழக் கறிஞராகத் தொழில்புரிந்தார். தமிழ் நூல்கள் பலவற்றையும்

நன்கு கற்றுத் தமிழ்ப் புலமையும் நிரம்பப்பெற்றார். சாவித்திரியின் கதையை நாடகமாக இயற்றத்தொடங்கிப் பதிவிரத பாரம்மியம் என்னும் பெயரோடு இயற்றி முடித்தார். அந்நாடகம் ஏழு அங்கங்களையும் அவ்வங்கங்களில் இருபத்து மூன்று வெண்பாக்களையும் பத்துக் கலித்துறைகளையும் அறுபத்தொன்பது விருத்தங்களையும் கொண்டு விளங்குகின்றது. இந் நாடகத்தைத் தவிர வேறு சில நூல்களையும் இயற்றியுள்ளார் என்பது,

*"அன்னவன் அணிசேர் சொல்லால் அரிய நூல் பலவி யற்றித்*
*தென்னவன் நாட்டினுக்கோர் திலகமாய் விளங்கி நிற்போன்*
*கன்னலும் பாலுந் தேனுங் கண்டருஞ் சுவையுஞ் சேர்ந்த*
*சொன்னலந் தெரிந்து சொல்ல வல்லனோ யானும் அம்மா."*

என்னுஞ் சிறப்புப்பாயிரச் செய்யுளாற் பெறப்படுகின்றது. இந் நூலைப் பாராட்டி மதுரைச் சேதுபதி உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் சாமிநாதையர் என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

*"வண்டார் மலர்க்குழல் பெண்ணர சாமிவள் வார்தனத்தைக்*
*கண்டால் முனிவர்கள் தாம்விடு வாரவர் காரியங்கள்*
*கொண்டாடு பூசையும் வேதாந்த மும்மதக் கொள்கையும்போம்*
*பண்டாரமேது மடமேது சைவமும் பாழ்த்திடுமே."*

*"வந்திடும் அமுதம் வேண்டா தொழித்திடும் மதியர் உண்டோ*
*அந்தமா யனுகும் பூமா தகன்றிட உதைப்பார் உண்டோ*
*சிந்தையிற் கினிய ளாம்நின் செல்வியை ஏற்க வென்றன்*
*தந்தைதாய் இசைவரென்கில் தமியனுக் கதுமேலாமே."*

என்பன அந்நாடகத்தில் இரண்டு பாடல்கள்.

## எஅஎ. சுப்பிரமணிய ஐயர்-அட்டாவதானம் (1869)

*"தேவமா புரியுறை செவ்வேள் மீதினில்*
*பிள்ளைக் கவியினைப் பெட்புறச் செய்தனன்*
*கள்ளைக் குவளை கவிழ்க்குமந் நகரினன்*
*வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பினன்*
*நலம்பெறு முத்தமிழ் புலம்பெற உணர்ந்தோன்*
*அவதானம் எட்டையும் அணிபெறச் செய்வோன்*
*சிவஞானச் செல்வச் சீர்மைமிக் குடையோன்*
*ஒப்பிலா ஒழுக்கமெய் உணர்வுநன் குடையோன்*
*சுப்பிர மணிய சுகுணவே தியனே."*

என்று இயற்றமிழாசிரியராகிய திருத்தணிகை விசாகப்பெருமாளையராற் புகழ்ந்து பாராட்டப்பெற்ற இவர் பாண்டிவளநாட்டில் தேவகோட்டையில் இருந்தார். அந் நகரத்துத் தனவணிகர்கள் சிலர் விரும்பியபடி அந்நகரில் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய முருகக்கடவுள்மீது, "தேவைப் பிள்ளைத்தமிழ்" என்னும் பெயருடன் பிள்ளைத்தமிழ் ஒன்றைப் பாடினார். அந் நூலுக்கு விசாகப்பெருமாளையர், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார், வீர - லெ. இராமசாமிச் செட்டியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"அகலா தவம்பெருகு பருமணிச் சுடிகைகொளும்
ஆயிரந் துத்திப்பணத்
தரவின் சிரங்கள் கிடுகிடெனக் கலங்கியுளம்
ஆடத்த ரங்கமோது
மகரால யங்களோர் ஏழையும் இடைக்கிசைய
வளைதரளை யாக்கொண்டபேர்
வையந் தனைக்கருது மனவேக மாகவொரு
மாத்திரையில் வலம்வந்தவிண்
புகரா முடுக்களின் கணமுதிர்த் திருளினைப்
பொருபகல வன்திங்களைப்
புயன்மறைத் தாலென மறைக்குங் கலாபம்விரி
பொற்பரி நடத்தித்தினந்
திகழ்பாக தேவைநகர் உறைகந்த குமரகுக
சிறுதேர் உருட்டியருளே
தினகரர்கள் ஒருகோடி உதயமென
வொளிர்வேல சிறுதேர்உருட்டியருளே."

என்பது மேற்படி பிள்ளைத்தமிழில் ஒரு பாட்டு.

## எஅஅ. சுப்பிரமணிய ஐயர் - க
## (1898)

இவர் புதுக்கோட்டைக்கடுத்த திருக்கோகன்னம் என்னும் ஊரில் கணபதி ஐயர் என்பவருடைய மகனாகத் தோன்றியவர். இவரை,

"கணபதி ஐயன் கசடற நோற்ற
வினையறு தவத்தின் எச்சமா யுதித்தோன்
இலக்கண இலக்கியம் எனுமிரண் டினையும்
மலைப்பற உணர்ந்த மகாமே தாவி
விற்பனர் மெச்சும் வித்வ சிகாமணி."

என அறிஞர்கள் புகழ்ந்துள்ளனர். இவர் திருக்கோகன்ன அந்தாதி என்னும் நூலைப் பாடியுள்ளார். அவ்வந்தாதியைப் பாராட்டி, குடுமிமாமலை இயற்றமிழ் வித்துவான் சுப்பிரமணிய பாரதி, நரசிம்ம பாகவதபாரதி, சரவணபிள்ளை, வயித்தியலிங்க உபாத்தியாயர், மருதநாயகம்பிள்ளை என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். அந்தாதி நூறு பாடல்களைக்கொண்டு கட்டளைக் கலித்துறையால் அமைந்தது.

"மொழிவளம் பூத்த மறையவர் நன்கு முதுமறையால்
தொழுதுளம் பூரித் தனுதினம் வைகத் துணைவியொடு
முழுவளம் பெற்றுல் குய்ந்திட வெண்ணி முதிர்வகுள
நிழலிடங் கொண்டமர்ந் தானையன் கோகன்னம் நேசமொடே."

என்பது அந்தாதியின் முதற் பாட்டு.

## எஅகூ. சுப்பிரமணிய ஐயர்-கவீசுரர்

ஆங்கிலமுந் தமிழும் நன்கு கற்றுணர்ந்த இவர் கொங்கு வளநாட்டில் கோயமுத்தூரில் அலுவலில் அமர்ந்திருந்தார். செய்யுள் இயற்றும் ஆற்றல் இவருக்கு நன்கு அமைந்திருந்த படியால் அறிஞர்கள் இவருக்குக் 'கவீசுரர்' என்று சிறப்புப் பெயர் வழங்கினர். மீனாட்சியம்மை ஊஞ்சல் முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

## எகூ௦. சுப்பிரமணிய ஐயர் (திரு)
## (20 - நூ.)

இவர் சென்னை திருவேட்டீசுரன் பேட்டையில் வாழ்ந்திருந்தவர். பள்ளியின் ஆசிரியராகப் பணிபுரிந்ததன்றிப் பொதுநலச் செயல்களிலும் ஈடுபட்டிருந்தார். இவர் நடராச தத்துவம், இடும்பியின் தந்திரம், மீனடாபஞ்சகம், ஞானப்பிரகாசம், இராம விக்கிரமம், திருவேட்டீசுரச் சிற்றம்பலவன் இரட்டை மணிமாலை

முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார். நடராச தத்துவ நூலைப் பாராட்டி, பு. ப. மாசிலாமணி முதலியார், கோ வடிவேலுச் செட்டியார், வரகவி - அ. சுப்பிரமணியபாரதி முதலியோர் பாராட்டுரை வழங்கியுள்ளனர்.

நடராச தத்துவத்தில் நடராச மூர்த்தியின் உண்மைத் தத்துவம், வழிபாட்டுச் சிறப்பு, கூத்தின் நுண்பொருள் முதலிய பல செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

“சரணஞ் சிவசர ணென்றே தொழுதுநின் தாளிணையுள்
கரணம் புகுத்தி நிறுத்திய அந்தணக் கான்முளையின்
மரணந் தவிர்த்தருள் வான்மதிசூடிய வாளரவா
பரணந் தரித்துத் திருவேட்டி வாழும் பரஞ்சுடரே.”

என்பது இரட்டை மணிமாலையில் ஒரு பாட்டு.

## எகூரு. சுப்பிரமணிய ஐயர் - சு

மதுரைக்குக் கிழக்கேயுள்ள மழவாபுரியில் சுந்தர ஐயர் என்னும் அந்தணருக்கு மகனாகத் தோன்றியவர். பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு திருவிளையாடல் செயல்களை இசைப் பாடல்களாகப் பாடினார். திருவிளையாடற் கீர்த்தனை என்னும் அந்நூல் எண்ணூறுக்கு மேற்பட்ட பாடல்களைக் கொண்டது. இந்நூலை வியந்து, விசாகப்பெருமாளையர், தாண்டவராயத் தம்பிரான் முதலிய பலர் சாற்றுக் கவிகள் வழங்கியுள்ளார்கள். இது சாலிவாகன சகாப்தம் ௧எஎ௪-க்குச் சரியான கலி ௪௯கூ௪ ஆம் ஆண்டு பரிதாபி ஆவணித்திங்கள் உ௪ ஆம் நாளில் மதுரை மீனாட்சிகோயிலில் அரங்கேற்றஞ் செய்யப்பெற்றது.

## எகூஉ. சுப்பிரமணிய ஐயர் - ரா
### (20 - நூ.)

இவர் சோழவளநாட்டில் வையை என்னும் ஊரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுப் புலவரானமையின் தஞ்சையில் உள்ள செயிண்ட் பீட்டர்ஸ் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக இருந்தார்.

செய்யுள் பாடுவதில் வல்லவர். இவர் செய்யுள் ஒன்றை அடியிற் காண்க.

"மணிகொண்ட கடலாடை உலகத் துயிர்க்கெலாம்
மாருமல் உருகும்உளமும்
மன்னவன் குடைநிழல் வைகிவாழ் நன்றியினை
மறவாமல் உருகும்உளமும்
பணிகொண்ட பாயலான் பாதார விந்தத்தில்
பத்தியாய் உருகும்உளமும்
பண்டைநம் பெரியோர்கள் பார்த்தெனெ உள்ளொளி
பரிந்துபார்த் துருகுமுளமும்
கணிகொண்ட வேர்வடி வெடுத்தகெ உலகில்வரு
காருண்ய சிலஸோலன்
கார்பொழி வளஞ்செறி அரித்வார மங்கலம்
கவின்பெற விளங்கும்வள்ளல்
அணிகொண்ட கோபால சாமிரகு நாததுரை
ஆயுவொடு செல்வம்நீடி
அரிமருகன் முருகனெனு மழகுபெறு மகவினுடன்
அகிலமிசை வாழிவாழி."

## ௭௬௩. சுப்பிரமணியக் கவிராச மூர்த்திகள்

இவர் ஏறக்குறைய நூறு யாண்டுகட்குமுன் தஞ்சை மாவட்டத்திலே அட்டவீரட்டங்களுள் ஒன்ருகிய திருக்கடவூரில் இருந்தவர். இவரும் இவருடைய வழிமுறையினருஞ் செந்தமிழ்ப் புலமை அமையப்பெற்றவர்கள். இவர், திருக்கடவூர் உலா, திருக்கடவூர்ப் புராணம், திருநள்ளாற்றுப்புராணம், மயிலைக்கோவை, மயிலையந்தாதி முதலிய நூல்களை இயற்றியிருக்கிருர். திருக்கடவூர் உலா சஙஅ-கண்ணிகளையுடையது. நூலைப் பாராட்டித் தரங்கம்பாடி ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை, நூலாசிரியரின் இளவலாகிய திருப்பனந்தாள் சிதம்பர சுவாமிகள், நூலாசிரியரின் புதல்வர்களாகிய சோமசுந்தர சுவாமிகள், அமிர்தலிங்க ஓதுவாமூர்த்தி ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"ஆதியா யெல்லோரும் அன்பில் அரகரவென்
ருேதிவே லாவலையம் ஒத்தொலிப்பக்—கோதில்
மணலால் இலிங்கம் வகுத்து மணஞ்சேர்
இணரலர்ச் சிப்பதனை எண்ணு—துணர்வின்றி

மிண்டுபுரி யத்தன்பால் மேவும் பிதாவின்கால்
கண்டஞ்செய் திட்ட கரத்தோனும்—கொண்டா(டு)
அனமுயர்த்தோன் போற்றும் அரன்பாகத் தன்னை
வனமுலைப்பால் வெள்ளத்தின் மாந்திப்—புனையுமதி.''

என்பன உலாவிற் சில கண்ணிகள்.

## எகூச. சுப்பிரமணியக் கவிராசர்-மே. சொ (1906)

திருக்குற்றாலத்தலபுராணம் முதலிய நூல்கள் இயற்றிய வரும் பாண்டி நாட்டிலே திருநெல்வேலி மாவட்டத்திலே உள்ள மேலகரம் என்னும் ஊரினரும் ஆகிய திரிகூடராசப்பக் கவிராசரின் வழிமுறையில் தோன்றியவர். திருநெல்வேலியில் உள்ள இந்துக் கல்லூரியில் விரிவுரையாளராக விளங்கியிருந்தவர். அப்பாச்சாமி முதலியார் என்பவர் இயற்றிய, ''சுத்தாத்துவித சைவசித்தாந்த பரபோதம்'' என்னும் நூலுக்கு இவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

'' அந்நாட்டில் எவ்வளமும் அமைந்தகன்னி
புத்தூராம் அதன்கண் தோன்மைக்
கொன்னாட்டு குடிமல்கு வேளாளர்
குலஞ்சிறந்து குலவும் அந்த
முன்னூட்டு குலம்பெருக வருவீரா
சாமியெனு முதல்வன் செய்த
சொன்னாட்டு தவப்பயனு உதித்த அப்பாச்
சாமியெனுந் தூய்மை யோனே.''

என்பது அச் சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## எகூரு. சுப்பிரமணியக் கவிராயர்

இவர் பாண்டிநாட்டினர். உலக விவகாரங்களோடு தமிழ்க் கல்வியையும் நன்கு கற்றுத் தேர்ந்தார். சூரங்குடி, சாத்தூர் முதலிய இடங்களில் வசித்திருந்தார். இரவண சமுத்திரம் மீனம்பிகை பதிகம், திருப்பரங்குன்றம் முருகக்கடவுள் பதிகம், கழுகுமலை முருகக்கடவுள் பதிகம் முதலியன செய்திருக்கிறார். பாடல்கள் செம்பாகமாக அமைந்துள்ளன.

"வஞ்சகங் குறைந்து பெருந்தவ நிறைந்து
வளர்கலை முழுமையுஞ் சிறந்து
விஞ்சிடும் படிக்கு நற்றவம் அதனை
விளைத்துமெய்ஞ் ஞானமாம் உனது
செஞ்சரண் வணங்க முத்தியை இணங்கச்
செய்வதுன் பாரமாம் ஐயா
அஞ்சம்வாழ் தடஞ்சூழ் கழுகுமா மலைவாழ்
அப்பனே ஒப்பிலா மணியே"

என்பது கழுகுமலைப் பதிகத்தில் ஒரு பாடல்.

## எ௯௬. சுப்பிரமணியக் கவிராயர் (ஆ)

இவர் சேதுநாட்டைச் சேர்ந்த சிவகங்கைப் பக்கத்தில் உள்ள ஆண்டுகொண்டான் என்னும் ஊரில் தோன்றியவர். வடமொழி தென்மொழி என்னும் இருமொழிப் புலமையும் அமையப்பெற்றவர். இசைப்பதங்கள் பாடுதலில் வல்லவர். இவரை ஆண்டுகொண்டான் கவிராயர் என்றுங்கூறுவர். பெரிய புராணக்கீர்த்தனை பாடிய மழவராயனேந்தல் சின்னச் சாமி ஐயர் என்பவர் இவர்பாற் கல்வி கற்றவர். இவர் சேதுபதி மந்திரி கோட்டைச்சாமித்தேவர்மீது திருமணக்குறவஞ்சி என்னும் நூல் பாடிப் பரிசுபெற்றார்.

## எ௯எ. சுப்பிரமணிய சாத்திரிகள்
(19 - நூ.)

பாண்டி வளநாட்டில் வீரகேரளம் புதூரில் இருந்தவர். திருந்திய பெருந் தமிழ்ப்புலமை அமையப்பெற்றவர். ஊற்றுமலைப் பெருநிலக்கிழார் இருதயாலய மருதப்பத்தேவர் காலத்தில் இருந்தவர். அவர்மீது பாடல்கள் பல இயற்றிப் பரிசுபெற்றுள்ளார். அப் பாடல்களில் ஒன்று,

"பாகன ராகவ சந்தப் பயோதரப் பாவையன்றுள்
மோகன ராகவ சந்தமுங் கேட்டுள மோகித்துப்புள்
வாகன ராகவ சந்ததங் காவெனும் வந்தணைவாய்
மாகன ராகவ சந்தணர்க் கீமரு தப்பமன்னே."

என்பது.

## எகூஅ. சுப்பிரமணிய சாத்திரிகள்-ச
(20 - நூ.)

ஈழவளநாட்டில் யாழ்ப்பாணம் பருத்தித்துறை தும்பை நகரில் சபாபதி ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றி வடமொழி தென்மொழி முதலியவைகளைக் கற்றுணர்ந்தார். கந்தபுராணத்திற்கு இவர் சீரிய உரை வரைந்துள்ளார். செய்யுள் செய்வதினுந் திறம்பெற்றிலகிய இவர் இயற்றிய கடவுள் வணக்கச் செய்யுள் ஒன்றை அடியிற்காண்க. இவருடைய உரை ஆங்கிலம் 1907 இல் வெளியாகியுள்ளது.

"நேரறத் துலங்கு பொன்னகர் மகவான்
 நீள்முடி கவித்தர சாளச்
சீருறத் தரும நெறிமிகத் தழைப்பத்
 தேவர்தஞ் சிறைத்துயர் நீரப்
போரிலுத் தவுனர் குழுவினை வாட்டிப்
 பொருவிலாத் தெய்வத மாதை
ஏருற மணந்த விமலனைக் குகனை
 எந்தையைப் பணிந்திடர் தீர்ப்பாம்"

## எகூகூ. சுப்பிரமணிய சிவாசாரியர்
(கி. பி. 20 - நூ.)

இவர் யாழ்ப்பாணம் வட்டுக்கோட்டையில் இருந்தவர். சிவராத்திரிப் புராணம் என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றுள்ளது. அந்நூல் சிவநிசிச்சருக்கம், சிவசோதிச் சருக்கம், முச்சோதிச் சருக்கம், சிவசோதி பாதச்சருக்கம், பராசத்திச்சருக்கம், சிவநிசி நிருபணச் சருக்கம் என்னும் ஆறு சருக்கங்களையும் ௩௦௧ பாடல்களையுங் கொண்டிருக்கிறது. நூலைப்பாராட்டி திருமறைக்காடு - மு. சுப்பிரமணிய தேசிகரும், சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவரும் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சித்தொளிர் சுயம்புலிங்க சிவநிசிப் புராணஞ் சொல்லும்
உத்தமக் கவிஞர்முன்னர் ஒருரை தானுந் தேராப்
பித்தனேன் சொலமு யன்று பேரவா நசைது லக்கி
வைத்தனன் எனினும் இந்நூல் மாண்பொருள் கொள்வர் மேலோர்."

என்பது நூலின் அவையடக்கப் பாடல். வேறு பலரும் சிவராத்திரிப்புராணம் பாடியுள்ளனர்.

## அ00. சுப்பிரமணிய சுவாமிகள்

இவர் திருத் தில்லையில் வசித்திருந்தார்; கோயிலூர் முத்து ராமலிங்க ஞானதேசிகரின் மாணவர். ஞானநந்ததீபம், ஆத்ம விளக்கம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

*"சொன்னவுடன் சருவாத்ம சொருப மாகும்*
*தூயபிர மச்சொருபம் தானென் றேர்ந்த*
*அன்னதுவே சம்பவப்ர மாணம் இவ்வா*
*றுருமட்டப் பிரமாணத் தானு மாத்மா*
*என்னுமவர் தமையறியும் அதுவே வேதம்*
*இயைந்தபுரு டார்த்தமென இயம்பிற் றன்றே*
*சொன்னவிவ்வா ருத்மாவை யறிந்து ளோர்கள்*
*தூயமுத்தி அடைதல்திண்ணம் திண்ணந் தானே."*

என்பது ஆத்ம விளக்கத்தில் ஒரு பாட்டு.

## அ0க. சுப்பிரமணிய செட்டியார் - ம
(1893)

கொங்குநாட்டில் திருப்பூரில் இருந்தவர். சேற்றூர் அ. கணபதிக் கவிராயர் என்பவரிடங் கல்வி கற்றவர். இவர் தம்மைப் பிற்கால அருணகிரிநாதராக எண்ணிக்கொண்டு "பரமானுபூதி" என்னும் நூலை இயற்றியிருக்கிறார்.

*"அனகா அமலா அருளே சரணம்*
*கனகா கருணு லயனே சரணம்*
*புனிதா புவனு பொருளே சரணம்*
*எனையாள் பதவிக் கிறையே சரணம்."*

என்பது நூலின் இறுதிப்பாட்டு.

## அ0உ. சுப்பிரமணியஞ் செட்டியார்-லா. சி
(20 - நூ.)

இவர் வடார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த கார்க்கூரில் தோன்றியவர். கவிராச பண்டிதர் திம்மப்ப அந்தணனர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்கள் கற்றூர். மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பிரவேச பரீட்சை, பாலபண்டித பரீட்சை ஆகியவை

களில் தேறினர். சேலம் உயர்நிலைப்பள்ளி முதலியவைகளில் தமிழாசிரியராகத் தொண்டுபுரிந்தார். கார்க்கூர்ச்சங்கரசதகம் முதலிய நூல்களை இயற்றியிருக்கிருர். சங்கர சதகத்தைப் பாராட்டிச் சேலம் குகை சாமி தில்லை நடேச செட்டியார், சேலம் செவ்வாய்ப்பேட்டை துரை சதானந்த கவிஞர், ஆம்பூர் பெரியாங் குப்பம் மாணிக்கஞ் செட்டியார், திருப்பத்தூர் முருகைய முதலியார், கந்தசாமி முதலியார் ஆகியோர் சாற்றுக்கவி வழங்கி யுள்ளனர். சதகத்தில் பழமொழிகள் அறவுரைகள் முதலியவை நன்கு அடங்கியுள்ளன.

"மட்டாருஞ் சோலைமலர் செறிந்த கார்க்கூர்
மகிபனெனும் சங்கரய்யா நயா தார்கள்
செட்டாகப் பொன்குவித்து மலையைப் போலச்
செழுந்திருவை வளர்த்தென்ன மேலும் மேலும்
நட்டார்க்குப் பயன்படுமோ அவர்கள் செல்வம்
நளினமுக நினைத்தேடிப் பல்லோர் வாழ்வார்
எட்டிமரம் பழுத்தென்ன நயா தார்கள்
இருநிலத்தில் வாழ்ந்தென்ன என்னுங் காலே."

என்பது சதகத்தில் ஒரு பாட்டு.

## அ௦௫. சுப்பிரமணிய துரை
(20 - நூ.)

கட்டபொம்மு ஊமைத்துரையைப்பற்றி அறியாதார் எவரும் இரார். துரோபதை நகர் எனவும் பாஞ்சாலங்குறிச்சியெனவும் வழங்கிய ஊரில் சிற்றரசாக அமைந்து நின்று பேரரசு செலுத்தி யவர். வெள்ளைக்காரர்கட்கு அஞ்சாமல் எதிர்த்துப்போரிட்ட அவருடைய மாண்பு எல்லோரும் உணர்ந்ததே. அவருடைய வழிமுறையில் தோன்றிய இவர் செந்தமிழ்கற்றுச் சீரிய புலமை பெற்றுத் திகழ்ந்தார். ஞானசித்தர் மும்மணிக்கோவை என்னும் நூலுக்கு இவர்,

"வாளைகள் கமுகின் மிடற்றினை முறித்து
மழைத்துளி விழ்ந்திடப் பாய்ந்து
நாளையும் உதிர்க்குங் கழனிசூழ் குருகூர்
ஞானசித் தாதிபன் புகழார்

தோளைநன் கணிந்து மும்மணிக் கோவை
சூட்டினன் பாரெலாம் புகழக்
கோளைவென் றிடுகிர்ஷ் ணனந்த யோகி
எனும்பெயர் கொண்டசற் குணனே.''

என்னும் பாட்டால் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

## அoச. சுப்பிரமணிய தேசிகர்-பொ. கரு (20 - நூ.)

இவர் செட்டிமார் நாட்டிலே பூவுற்றகுடி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவர் இராமாயண அம்மானை என்னும் நூல் பாடியுள்ளார். பாலகாண்டம் ஒன்றுக்கு மட்டுமே இவ்வம்மானை நூல் காணப்பெறுகிறது.

'' திருவளருஞ் செங்கோல் தெசரதன்மா ராச்சியத்தில்
வருமேகம் ருத்திரன்மேல் வயங்கு விபூதிநிறம்
ஆக விசும்பதனில் அழகாக வேசென்று
சாகரத்தின் நீரருந்தித் தாமரைப்பூ லக்குமியின்
பர்த்தா திருமாலின் பரவு கருநிறமாய்ச்
சுத்து மலையரசன் சுடுவெப்பந் தீர்க்கவென்று.''

என்பது நூலின் தொடக்கம். நூலைப்புகழ்ந்து பூவுற்றகுடி நகரம் வை. மீனுட்சி சுந்தரஞ் செட்டியார், சிதம்பரம் அருணசலம் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## அoரு. சுப்பிரமணியத் தம்பிரான்

திருவாவடுதுறை யாதீனத்திலிருந்த தம்பிரான்களுள் ஒருவர். சிறந்த புலமையுடையவர். ''பூவனூர்ச் சிலேடை வெண்பா'' முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

'' மாதவத்தோர் நன்மனமும் மாதரார் பூங்குழலும்
போதம் பொலியுஞ்சீர்ப் பூவனமே—சீதமுடைப்
பொற்கொன்றைத் தாரணிந்தார் போற்றிசெயு மன்புடைய
எற்கொன்றைத் தந்தார் இடம்.''

என்பது நூலில் முதற்பாட்டு. சிதம்பரம் ஞானனந்த சுவாமிகள், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், பூவனூர் மிராசுதார் சபாபதி முதலியார் திருவானைக்கா சோமசுந்தரம்

பிள்ளை, விழுப்புரம் குழந்தை வேலுப்பிள்ளை முதலியோர் இந் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௩௦௬. சுப்பிரமணிய பண்டிதர்-மு (1890)

இவர் சிதம்பரத்தில் முத்தைய ஞானியார் என்பவருக்கு மகனுகத் தோன்றியவர். மருத்துவத்திலும் தமிழ்ப்புலமையிலுஞ் சிறந்து விளங்கியவர் இவர் வடமொழியில் உள்ள சிவரட்சாமிர்தம் என்னும் மருத்துவ நூலைத் தமிழிலே மொழி பெயர்த்து உரை நடையாகச் செய்திருக்கிருர். இந்நூலுக்குக் காஞ்சிபுரம் புலவர் சபாபதி முதலியார், திருத்தணிகை விசாகப் பெருமாளையர், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், திருவண்ணுமலை வீரபத்திரையர், புலவர் சுப்பராயபிள்ளை, ஆ. செ. வேங்கடாசல முதலியார், ச. வை. அண்ணுச்சாமி முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

பூபதி மாத்திரைக்கும் பரமசிவத்துக்குஞ் சிலேடையாக நூலாசிரியர் பாடிய பரமசிவ வணக்கம்:

"கருநிறையைவெண் பொடிடீலிகம் படிகமடன்
நீலகண்டம் சுசிபொன் வில்லம்
பொருதனிவி ரங்கனனற் பரைபுரம்பெற்
றழுளாடி உரக்கால் விட்டிப்
பொருது சன்மப் பிணிதீர்க்கும் பூபதிமாத்
திரைபோன்றிப் புடவி யெங்கும்
கருதரிய சுகமளிக்கும் பசுபதிதாட்
டுணை மலரைக் கருத்துள் வைப்பாம்."

## ௩௦௭. சுப்பிரமணிய பத்தர்-ந (20 - நூ.)

சோழ வளநாட்டில் தில்லையாடி என்னும் ஊரில் நடராச பத்தர் என்பவருக்கு மகனுகத் தோன்றிக் கல்விகற்றுச் சிறந்த செந்தமிழ்ப் புலமையடைந்தவர். இவர் காலத்தில் பல புலவர்கள் சிறந்து விளங்கியிருந்தனர். சிதம்பரம் என்னும் திருத்தில்லையில் இருந்த நடராசச் செட்டியார் என்பவர் இயற்றிய ஆறுமுகக் கடவுள் பதிகங்கட்கு இவர்,

"தருவளர் தில்லைத் தலத்திலா நந்த
தாண்டவம் புரிநட ராசன்
தழல்விழி தன்னில் அறுசுடர்ப் பொறியாய்த்
தானுதித் திடுசர வணன்மேல்
மருவள ரந்த மாநகர் வாழும்
மகிமைசேர் சேனையந் தலைவர்
மரபினில் உதித்தே தலைமைவாய்ந் திலகு
மாதவ ராமசாமிக் கோர்
திருவளர் புதல்வ னுகவந் தரிய
திகழ்பெரு முத்தமிழ்க் கலைகள்
தேர்ந்துவே தாந்தம் ஓர்ந்தநற் குணஞ்சேர்
சீர்நட ராசநாவலன் சொல்
பொருள்வள ரினிய தோத்திர மாலை
புகழ்பெற இயற்றினுன் உணர்ந்தோர்
புனிதமெய்ஞ் ஞானப் பேரின்ப நிலையின்
போகம தடைவர்கள் மன்னே."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௩௦௩. சுப்பிரமணிய பாரதி-அ. (வரகவி)
(20 - நூ.)

சென்னைமாநகரில் சிறுவர்களின் பொருட்டுப் பாலவிநோதினி என்னும் பத்திரிகையை நடத்திக்கொண்டிருந்தவர். எளிதாகச் செய்யுள் பாடுந்தன்மை அமையப்பெற்றிருந்தாராகலின் வரகவி எனவுஞ் சிறப்புப்பெயர் பெற்றிருந்தார். சுயம்பிரகாச விசயம் முதலிய உரைநடை நூல்களை எழுதியுள்ளார்.

"கங்கை புனைந்த சங்கரன் கோயில்
கொண்டருள் புரியுந் திண்டிறல் வாய்ந்த
கொல்லிமா மலையின் எல்லைசேர்ந் திலகும்
தத்த கிரியில் வித்தகக் குகையில்
வாசமா யமர்ந்து நேசமா யடையும்
தொண்டர் மனக்குறை விண்டிடத் தூய
வெண்ணீ றளிக்குந் தண்ணுர் கருணைப்
புயலே உலக மயலே இலாத
அவதூத நிலையில் சிவபோகம் அருந்த
ஏத மிலதெனும் வேதியர் மரபில்
தோன்றிய மணியே சான்ருேர்க் கணியே."

என்னும் இப்பகுதி இவர் சுயம்பிரகாசர் என்னும் பெரியார்மீது இயற்றிய அகவற்பாவின் ஒரு பகுதியாகும்.

## அ௦௯. சுப்பிரமணிய பாரதி-க (1885)

இவர் இராமநாதபுரம் சமத்தானப் புலவராக இருந்தவர். திருமருதூர் நாகநாதர் பதிகம் முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

'' சீர்தரு நினைதைந் தெழுத்தைநா வியம்பும்
செயன்மருந் தாகவெப் பிணியும்
தீர்தர வுளங்கொண் டுனதடி யவர்தஞ்
சிந்தனை தீர்த்தருள் புரிவாய்
ஏர்தரு நதியு மதியமும் புதிய
இதழியும் இலகுபூங் குஞ்சி
வார்தரு நாக நாதனே மருத
வனத்துமென் மனத்துமா ரமுதே.''

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## அக௦. சுப்பிரமணிய பிள்ளை-சென்னை

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிற் சென்னைமா நகரில் எழும்பூரில் இருந்தவர். சோடசாவதானம் சுப்பராயச் செட்டியாரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமைபெற்றவர் இவர் பொன்னுச்சாமித் தேவர்மீது இயற்றிய பாடல்களில் ஒன்று,

'' எண்ணைந் திலக்கண மெண்குற்றம் வேலை எழுகடற்பார்
கண்ணைந் திடச்செய் யருளஞ் சிறையறு காவினங்கள்
நண்ணும் பொழிற்புது வைக்கன்னி மாநகர் நாயகசீர்
வண்ணம் பொலிபொன்னுச் சாமிமகிப மழைக்கரனே.''

என்பது.

## அகக. சுப்பிரமணிய பிள்ளை (பேட்டை)

திருநெல்வேலிப் பேட்டை என்னும் ஊரில் தோன்றியவர். தக்க அறிஞர்களிடத்தே இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை

பெற்ற இவர், வாசுதேவ நல்லூர்ச் சிந்தாமணி நாதர்மீது மாலை, திருக்குற்றால நாதர்மீது பதிகம், சங்கரநயினார் கோயில் இறைவன்மீது பதிகம், கும்மி முதலிய பல நூல்களை இயற்றி யுள்ளார். சிறந்த புலவராகிய த. ஆறுமுக நயினார் முதலிய பலர் இவரிடங் கல்வி கற்றுச் சிறப்புற்றனர்.

"திருமகள்நீங் காதுறையும் சேமநதி
வளம்பெருகும் செல்வம் ஓங்கும்
பெருமைமிகுந் தேவைநகர் அன்னைஎம்பி
ராட்டியங்கில் பிரியா தென்றும்
மருவுசிந்தா மணிக்குன்றே அன்பரையாட்
கொண்டருளும் வாழ்வே என்னை
அருளியபேர் அருட்பிழம்பே அப்பனே
எனையாட்கொண் டருள்செய் வாயே"

என்பது வாசுதேவ நல்லூர்ச் சிந்தாமணி நாதர் மாலையில் ஒரு பாட்டு. இந் நூலுக்கு இவருடைய மாணவராகிய த. ஆறுமுக நயினார், தமிழ் உபாத்தியாயர் சுப்பிரமணியபிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௪கஉ. சுப்பிரமணிய பிள்ளை – தெ

இவர் ஏறக்குறைய நூற்றெண்பது ஆண்டுகட்கு முன்பு மதுரையில் தோன்றினார். தந்தையார் பெயர் தெய்வசிகாமணிப் பிள்ளை மருதுபாண்டியன் வேண்டுகோட்படி, வானரவீர மதுரைத் தலபுராணத்தைப் பாடினார். வானரவீர மதுரை என்பது இக் காலத்தில் மானாமதுரையென மருவி வழங்கு கின்றது. புராணம் பன்னிரண்டு சருக்கங்களையும் ஐந்நூற்றுப் பதின்மூன்று பாடல்களையுங்கொண்டு விளங்குகின்றது.

'அடையலர்கே சரிசெல்வம் கல்வி யுள்ளோன்
அருட்காளை தனில்தேர்க்கோ புரங்கள் செய்தோன்
உடையார்வேள் சுதன்விசுவை மருது பூபன்
உவப்பொடுவா னரவீர மதுரைத் தொன்னூல்
வடமொழியைத் தென்மொழியால் வழங்கு கென்ன
மதுரைநகர்த் தெய்வசிகா மணிதான் ஈன்ற
குடமுனியை நிகரான கல்வி கேள்வி
குலவியசுப் பிரமணியன் கூறி னானே."

என்பது அவையடக்கச் செய்யுளுள் ஒன்று.

## ௮௧௩. சுப்பிரமணிய பிள்ளை - மு

பாண்டி வளநாட்டிலே முதுகுளத்தூரிலே தோன்றிக் கல்வியறிவிற் சிறந்தவராய் விளங்கித் தொண்ணூற்றைந்து அகவை வரையில் வாழ்ந்திருந்தவர் கல்வியறிவிற் றேர்ச்சிபெற்றது போலவே மருத்துவத்திலும் தேர்ச்சி பெற்று விளங்கினார். பஞ்சதந்திரம், நாலுமந்திரி கதை, வீரகுமார நாடகம், விடாக்கிரக சிந்தாமணி முதலிய நூல்கள் இவராற் செய்யப்பட்டன. ஏறக்குறைய அறுபதாண்டுகட்கு முன்னிருந்தவர். தனிப்பாடல்களும் பல பாடியிருக்கிறார்.

"கதியானை மயில்நடத்துங் கதியானை
அருமறையின் கருத்தை யோரா
விதியானைச் சிறையிலிட்ட விதியானை
மூவர்களு மேவு மெய்ச்சந்
நதியானைச் சரவணநன் னதியானைப்
பலவளமும் நண்ணுஞ் செந்திப்
பதியானை மனத்திலென்றும் பதியானே
அருநரகில் படிவா னன்றே."

என்பது இவருடைய தனிப்பாடல்களில் ஒன்று.

## ௮௧௪ சுப்பிரமணிய பிள்ளை - மு

இவர் பாண்டிவளநாட்டிலே திருநெல்வேலிக் கண்மையில் உள்ள சிற்றூர் ஒன்றிலே 1784 ஆம் ஆண்டிலே பிறந்தார். மிகு இளமைப்பருவத்தில் திருவுருமாமலையில் ஒரு புலவரிடம் இலக்கண இலக்கியங்கற்றுப் புலமையடைந்தார். தெய்வத்திருவருளும் இவர்பால் நன்கு அமைந்திருந்தது. இவர் ஒருசமயம் தேவியைப் பாடி மழைபெய்யச் செய்தார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் வீரபாண்டியச் செல்வியம்மன் திருவிருத்தம், வீரபாண்டியச் செல்வியம்மன் தாலாட்டு, முப்பிடாரியம்மன் ஆசிரிய விருத்தம், கோவிந்தலட்சுமியம்மன் விருத்தம் என்பன. இவர் இளமைப்பருவத்திலேயே தமது இருபத்திரண்டாம் அகவையில் 1806 ஆம் ஆண்டில் இறைவன் திருவடி நீழலை அடைந்தார். இவரியற்றிய வீரபாண்டியச் செல்வியம்மன் திருவிருத்தத்தில் ஒரு பாட்டு.

"பயிரவி வைணவி பாரதி பார்ப்பதி
பதுமா சனத்துநீலி
பன்னி ரிதழ்க்குள்வளர் பகவதி நவகோண
பதியர சிருந்ததேவி
செயிருறச் சிறுபிள்ளை யாகிவே தியர்கள்குல
தீபமென நின்றவொளியே
சிறியேங்கள் செய்பிழை பொறுத்துத் தடுத்தாண்ட
செல்வியே சிவசோதியே
குயிலைப் பழித்தமொழி வல்லியே கருணைகுடி
கொண்டமர கதவல்லியே
கோமதி யூரவர்கள் கொண்டாட நின்றதொரு
கோலா கலக்குமரியே
வயிரவனை வலியமேல் வாசற்ப்ர தானிக்கு
மாணிக்கம் என்றஉமையே
வளர்வீர பாண்டியச் செல்வியே கருணைபொழி
வடிவழகு கல்யாணியே."

என்பது.

## ௮௫. சுப்பிரமணிய பிள்ளை (இலக்கணம்)
(1894)

கொங்குவளநாட்டிலே கோயமுத்தூர் மாவட்டத்திலே கருவூரில் இருந்தவர். சங்க இலக்கியங்களையும் இலக்கணங்களையும் நன்கு கற்றுணர்ந்தவர். இலக்கணத்தில் மிகுதியான புலமைபெற்றிருந்தபடியால் "இலக்கண வித்துவான்" என்னுஞ் சிறப்புப்பெயரும் இவருக்குண்டாகியது இவரியற்றிய நூல்களைப்பற்றிய விவரந்தெரியவில்லை. இவர், திரு ஏகம்பரநாதர் அந்தாதி நூலுரைக்கு இயற்றிய சிறப்புப் பாயிரப்பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"வெண்ணீறுங் கண்டிகையும் மெய்யணியா
மெய்க்கணிந்து விமலற் போற்றிக்
கண்ணீருங் கம்பலையு மாகிவரும்
அடியவர்பாற் கனிவு கூரும்
தெண்ணீர்மைப் பெருமானென் றுரைக்கவருஞ்
சிவநேசன் திருவே கம்பத்
தெண்ணீர்மை யந்தாதி உரையுமச்சிட்
டினிதெவர்க்கும் ஈந்தான் மன்னோ."

## அகக. சுப்பிரமணிய பிள்ளை. ரா. சு
## (20 - நூ.)

பாண்டிவளநாட்டிலே திக்கெலாம்புகழுந் திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள இராசவல்லிபுரம் என்னும் ஊரில் கார் காத்த வேளாளர் குலத்தில் இவர் தோன்றினர். தந்தையார் பெயர் சுவாமி நாதபிள்ளை. தாயார் பெயர் நித்திய கலியாணி. தமிழ்மொழியையும் ஆங்கிலமொழியையும் நன்கு கற்றார். ஆங்கிலத்தில் பீ. ஏ. வரையிலும் பயின்ற இவர் அரசாங்கப் பத்திரப் பதிவு நிலையத்தில் அலுவல் பார்த்தார். வடமொழி தெலுங்கு ஆகியவற்றினும் வேண்டிய அளவு அறிந்திருந்தார். தமிழ் மொழியைத் தந்தையாரிடமும் பயின்றார். சைவசித்தாந்த சாத்திரங்களையுந் தக்காரிடத்திலே பயின்று சிவபூசை சிவாலய வழிபாடு முதலியவைகளையும் மேற்கொண்டிருந்தார். இவருடைய வரலாற்றுச் செய்திகள், மே. சொ. சுப்பிரமணியக் கவிராயருடைய சிறப்புப் பாயிரப் பாடல்களால் விளங்குகின்றன. அது,

"ஒழுக்கநன் குடையான் உடையவர் பூசை
உஞற்றிடு சாமிநா தப்பேர்
அழுக்ககல் குணத்தான் செய்தவப் பயனு
அன்னைநித் தியகலி யாணி
இழுக்கமில் சேரைப் பண்ணைவீட் டினிலே
ஈன்றெடுத் தளித்தநல் தோன்றல்
விழுக்குலம் விளக்கு சுப்பிர மணியன்
எனும்பெயர் மேவிய வள்ளல்,

பாங்குடன் இரண்டு மொழியினுஞ் சீர்செய்
பண்பினே டேவளர் வுற்றேன்
ஆங்கில முதலி ரெழுத்தினை மாற்றி
அமைவுறு பட்டமும் பெற்றேன்
தாங்கிய கல்வித் தந்தையி னிடத்தே
தமிழினை மகிழ்வொடு கற்றேன்
நீங்ககல் பண்பில் பத்திரப் பதிவு
செய்தொழில் அமர்ந்துநி தற்றேன்,

வடமொழி பயின்றேன் தெலுங்கினை முறையே
வாசித்துத் தேர்ந்தஅவ் வலியால்
திடமுடன் தெலுங்கு நாட்டிலும் அரசாங்
கத்தொழில் சிறப்புடன் இயற்றி

*விடமுறு கண்டத் தெந்தையை எங்கு
மேவினும் விடாதுளத் தமைத்து
மடனறுஞ் சைவ சாத்திரம் பயினும்
மார்க்கமே மதித்துயர் மதியோன்.''*

என்னும் அரிய சொன்னயம் பொருணயம் சிறந்து விளங்கும் பாடல்களாகும்.

இவர் நூலியற்றும் பணியிலும் ஈடுபட்டுப் பல நூல்கள் இயற்றியுள்ளார் இவர் இயற்றிய நூல்களுட் புண்ணியராற்றுப் படையென்பது மிகச் சிறந்தது இந்நூலில் சிவவழிபாட்டுச் செய்திகள் யாவும் தக்க ஆதாரங்களோடு விரிவாகக் கூறப்பட்டுள்ளன தொண்ணூற்று மூன்று நூல்களில் இருந்து மேற்கோள்கள் எடுத்துக்காட்டியுள்ளார். திருநெல்வேலி பால்வண்ண முதலியார், செப்பறைச் சிதம்பர சுவாமிகள், சூரியனார்கோயில் ஆதீனம் தட்சிணாமூர்த்தித் தம்பிரான், சரவணப்பெருமாள் பிள்ளை, தூத்துக்குடி பொ. முத்தையபிள்ளை, சுப்பையா ஐயர், சிந்துபூந்துறை வி. சிதம்பர ராமலிங்கம்பிள்ளை, தி. பொன்னம்பல முதலியார், திருவாவடுதுறையாதீனம் சுப்பிரமணியத் தம்பிரான், முரம்பை ஆ குற்றாலலிங்கம்பிள்ளை, வல்லநாடு க. சண்முக சுந்தரம்பிள்ளை, மேலகரம் சொ. சுப்பிரமணிக் கவிராயர், மா. அ. செண்பகக் குமாருப்பிள்ளை, காருடை, சு. சூரிய மூர்த்திப்பிள்ளை, ரா. பி சேதுப்பிள்ளை, சிவானந்த சிவாசார்ய சுவாமிகள் என்போர் நூலினைப் பாராட்டிப் புகழ்ந்து மதிப்புரை சிறப்புப்பாயிரம் முதலியன வழங்கியுள்ளார்கள்

*'' அழியா தாக்கை அடைவித்து அன்பும் பண்பும் ஒன்றவருள்
ஒழியா துள்ளம் அறிற்புகுத்தி ஊட்டி யுறககாட்டுயிர்ப்பித்தும்
பழியா நாட்டில் தான்படைத்தும் பண்பார் பொருளை படிவித்தும்
அழியாப் பதியை அடைவதுவும் அன்னேஎன்றே அருளாயே.''*

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று. இவர் இயற்றிய நூல்கள்,

க. புண்ணியராற்றுப்படை
உ. கங்காள வேடக்கும்மி
ங. அன்பின் வழிப்பாக்கள்
ச. சந்திவிநாயகர் வணக்கம்

ரு. செந்தூர்க் கலிவிருத்தம்
சா. திருச்செந்தூர்த் திருத்தசாங்கம்
எ. அலவாய்ப் பெருமானிடம் ஆற்றுப்படுத்தூது
அ. ஆண்டருளப்பாடியது
கூ. சனீஸ்வரன் அணுகாதிருக்கச் சாற்றியது
க0. ஏழாவது எட்வர்டு மகுடாபிடேக வெண்பா
கக. மகுடாபிடேக சம்பந்த வைபவம்
கஉ. ஐந்தாவது சார்ச் மகுடாபிடேக வாழ்த்து
கங. இராசப் பிரதிநிதி வரவேற்பு வாழ்த்து
கச. வீரைக் கும்பாபிடேகச் செய்யுள்
கரு. சீவலப்பேரி விநாயகர் கும்பாபிடேகச் செய்யுள்
கசா. பெட்லண்ட் பிரபு விண்ணப்பச் செய்யுள்
கஎ. திருக்குற்றால வெண்பா
கஅ. செல்வமல்கச் சேவித்தல்
ககூ. திருவுருமாமலைப் பதிகம்
உ0. திருநெல்லைப் பதிகம்
உக. காந்திமதியம்மாள் பதிகம்
உஉ. கிளாக்குளம் விநாயகர் கும்பாபிடேகச் செய்யுள்
உங. சைவசித்தாந்த சாரசங்கிரகம்
உச. திருப்புடை மருதூர்க் கும்பாபிடேகச் செய்யுள்
உரு. திருப்புடை மருதூர் வெண்பா
உசா. திருப்புடை மருதூர்க் கோமதியம்பாள் அபயம்
உஎ. கருவூர்ச் சித்தர் மானூர்க்காட்சிச் செய்யுள்
உஅ. நீரிறக்கம் நீங்கப்பாடியது
உகூ. கடன் தீரப்பாடியது
ங0. செப்பறைச் சிற்பரருயிர்ப்பா
ஙக. சேறை இரட்டை மணிமாலை
ஙஉ. விநாயகர் இரட்டை மணிமாலை
ஙங. சரசுவதி மும்மணிமாலை
ஙச. அருள்செய்யப் பாடிய பலவிகற்பப்பா
ஙரு. தைப்பனுவல்
ஙசா. செந்திற் செவ்வேள் பின்முடுகு வெண்பா
ஙஎ. திருப்பணி நயினார் திகழ்பாமாலை
ஙஅ. நெல்லையம்பதியில் நிலவுறும் நிலைமை

௩௯. பத்துக்கொன்றுப் பாடியது.
௪௦. சேறைப்பதிகம்
௪௧. செந்தில் அறுமுகனை நோக்கிச் சொன்னது
௪௨. அகிலாண்ட அக்கினீசுவரர் குறுந்தொகை
௪௩. அம்பாள் அருளை வியந்து சொன்னது
௪௪. இராசை இரட்டை மணிமாலை
௪௫. இராசைப் பாலாமடை மழையட்டகம்
௪௬. பேரனைவேண்டிப் பிரார்த்தித்த பதிகம்
௪௭. பிரார்த்தனைப் படியருளியதற்காக வியந்துருகியது
௪௮. பாவாணர்கட் கனுப்பிய பதில்பாடல்கள் முதலியன.

## அகள. சுப்பிரமணியப் புலவர் - இ

(19 - நூ.)

பாண்டி வளநாட்டில் இலஞ்சி என்னும் ஊரில் விசுவ குலத்தில் தோன்றிய இவர் தமிழ்மொழியை நன்கு கற்றுப் புலவரானர். ஊற்றுமலை இருதயாலய மருதப்பத்தேவர் காலத்தில் இருந்த இவர் அவர்மீது பாடல்கள்பல இயற்றியுள்ளார்.

''வண்டானந் தாமரையா விழியுதரங்
கிரிவகனி மயல்வேள்வந்து
வண்டானந் தாமரையா ரடிக்குரமா
வடிவணங்கை மருவாயெற்கு
வண்டானந் தாமரையார் கலையாச
கலமுநல்கு மகிழ்ந்தெந் நாளும்
வண்டானந் தாமரையார் வீரைநகர்
வாழ்மருதப் பேந்திர மாலே ''

என்பது அப்பாடல்களுள் ஒன்று. இதிலிருந்து இவருடைய புலமைத்திறத்தை நாம் ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

## அகஅ. சுப்பிரமணியப் புலவர் - ச

(19 - நூ.)

தொண்டை வளநாட்டில் காஞ்சிமாநகரில் சண்முகக் கவிராயர் என்பவருக்கு அரும்பெறற் புதல்வராகத் தோன்றி

யவர். தந்தையார்பால் கல்வியை நன்கு கற்றுச் சிறந்த புலவ ரானார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் சென்ன சமுத்திரம், பூண்டிப், "பொன் விநாயகர் மாலை" முதலியன பொன்விநாயகர் மாலைக்கு, காஞ்சிபுரம் சிவப்பிரகாச ஐயர், அண்ணாமலை செட்டி யார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"பன்னிய மறையோ டாகம நெறியால்
பன்னிய மங்களும் புரிந்தே
உன்னியல் பணைத்தும் உருகுமன்பதனால்
உன்னியல் விளக்குமா ணவத்தின்
இன்னலங் கொழித்து நினதுபே ரருளாம்
இன்னலம் பெறவெனக் கருளாய்
மன்னுசீர் சென்ன சமுத்திரம பூண்டி
மாநகர்ப் பொன்விநா யகனே."

என்பது மேற்படி மாலையில் ஒரு பாட்டு.

## அகக. சுப்பிரமணியப் புலவர்

இவர் சிவகங்கை மன்னருடைய அவைக்களப் புலவராக இருந்தவர். விரைவாகச் செய்யுள் இயற்றுவதில் வல்லவர். பிரசங்கரத்தினாகரம் என்னும் நூல் ஒன்று இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது. இவரியற்றிய, "வாரிட்டு விம்மிப் புடைத் திறுகி" என்னுந் தனவருணனைப் பாடல் தனிப்பாடல் திரட் டிலே சேர்க்கப்பட்டிருக்கிறது.

## அஉ௦. சுப்பிரமணிய முதலியார் தி. ந.
(20.- நூ.)

திருவெண்ணெய் நல்லூரில் இருந்தவர். செங்குந்த மரபினர் திருவெண்ணெய் நல்லூரிற் சிறந்த புலவராக விளங்கியிருந்த பஞ்சலட்சணசரபம் இராசப்பநாவலரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமைபெற்று மேற்படி நாவலருக்கு முதன் மாணவ ராகச் சிறந்து திகழ்ந்தவர். இவரிடம் தி. ரா நரசிம்ம பாகவதர்' தி. வடிவேலு முதலியார் முதலிய பலர் கல்வி கற்றுச் சிறந்து விளங்கினார்கள். இவர் இயற்றிய நூல்களைப்பற்றிய விவரந் தெரியவில்லை. தம்முடைய ஆசிரியரான இராசப்ப நாவலர்

இயற்றிய திருவெண்ணெய் நல்லூர்க் கலம்பகத்திற்கு இவர் சாற்றுக் கவிபாடியுள்ளார். அவற்றுள் ஒன்றை அடியிற்காண்க:

'' சீர்கொண்ட பூம்பொழில் செறிந்தவளை தவழ்பண்ணை
செந்நெல்கன் னற்பொலிந்த
செல்வதிரு வெண்ணெய்மா நகரிற் சிறந்திலகு
திருவருட் டுறைத்தளிக்கண்
ஏர்கொண்ட பக்தர்க ளிடத்துபித் தேகொண்
டிலங்குமங் களவல்லிதன்
இடமாக மேவுதிரு பாபுரி சர்சரோ
ருகமல ரிணைத்தாளுழிப்
பேர்கொண்ட நவரச வலங்கார மாகவொரு
போகுபதி னெட்டுறுப்பும்
பிறங்குறு கலம்பக வலங்கலை யணிந்துமேல்
பேரின்ப கதிவேட்டுறும்
நார்கொண்ட வத்தலத் துறைவர்கவி வாணர்கள்
நயந்தநாற் கவிசிரேட்ட
நம்பனடி மறவாத நற்றமிழ்க் கடலிரா
சப்பநா வலரத்தினமே.''

## ௬௨௧. சுப்பைய தேசிகர்
(19 - நூ.)

சோழ வளநாட்டில் பொய்கை நல்லூர் என்னும் ஊரில் இருந்தவர். நாகபட்டினத்தில் எழுந்தருளிய இறைவர்மீது இவர் "காரோணர் மாலை'' என்னும் நூலைப் பாடியுள்ளார். மற்றும் அப்பதியில் எழுந்தருளிய நீலாயதாட்சியம்மன்மீது நவரத்தின மகுடம் என்னும் நூலும் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது.

'' கூடாத திநட்புக்கயமைபுல்
லறிவாண்மை குடித்தல் சூது
கூடாத ஒழுக்கமடி பேதைமைகல்
லாமையினக் கொடியோர் தம்மைக்
கூடாமல் மெய்யுணர்தல் அறிவுபொறை
துறவுதவங் குன்றா வாய்மை
கூடுமவ ரிடமருவிக் காரோணர்
அருட்டிறத்தைக் கூறு வோமே.''

என்பது அந்நூலில் ஒரு பாட்டு.

## அஉஉ. சுப்பையாப் பிள்ளை - ரா
(20 - நூ.)

இவர் பாண்டி வளநாட்டிலே முதுகுளத்தூரிலே தெய்வப் புலமை பெற்றவராக விளங்கியிருந்த நல்ல வீரப்பபிள்ளை என்பவருடைய பெயரனுகத் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் இராமசாமிப்பிள்ளை துவாத்திரிம் தசாவதானி சரவணப்பெருமாட் கவிராயருக்கு இவர் மருகர். சுப்பையாப் பிள்ளை இனிமையாகச் செய்யுள் பாடுவதில் வல்லவராகலின் மதுரகவி என்று சிறப்புப் பெயரும் பெற்றனர். இவர் புவனேந் திரகாவியம் என்னும் நூலைப்பாடியிருக்கிருர்

மேற்படி நூல், நாட்டுப்படலம், நகரப்படலம், அரசியற் படலம், தாலபுரந்தரன் தவசுப்படலம், மகார் உற்பத்திப்படலம், மந்திராலோசனைப்படலம், நகர் நீங்குபடலம், வளங்காண் படலம், சோலையைக் கண்ணுற்றபடலம், அசனங்குணர் தற்கேகு படலம், நாகம்வெட்டியபடலம், பூலோகரம்பையைக் கண்ணுற்ற படலம், வரலாறு கூறியபடலம், மந்திரிசோகப்படலம், அரசன் சோகப்படலம், விசயதரன் வேட்டைப்படலம், பூலோகரம்பை யின் வடிவுரைத்தபடலம், விசயதரன் மோகமுற்றபடலம், புவனேந்திரன் முனிவுற்றபடலம், புனல் குளியோடு படலம், விசயதரன் கைக்கிளைப்படலம், வஞ்சனைப்படலம், பூலோக ரம்பை சோகப்படலம், பெண்ணழைத்தபடலம், பூலோகரம்பை பூசாவிதிப்படலம், பூலோகரம்பை பூசனைப்படலம், மந்திரி யாத்திரைப்படலம், மந்திரி தந்திரப்படலம், பூலோகரம்பை மீண்டுற்றபடலம், புவனேந்திரன் உயிர்பெற்ற படலம், பூலோக ரம்பையைத் தேடவிட்டபடலம், எழுச்சிப்படலம், வெங்கட் டம்மாள் காவற்படலம், சமர்த்தன் தூதுப்படலம், புவனேந் திரன் கேள்விப்படலம், புவனேந்திரன் படையெழுச்சிப்படலம், தருமநீதி உரைத்தபடலம், தருமன் தசமுகன் கதையுரைத்த படலம், படைத்தலைவர் வதைப்படலம், சித்திரகேசரி சிங்கன் வதைப்படலம், விசயதரன் சோகப்படலம், வீரசிங்கன் விசய தரன் வதைப்படலம், ஈமவிதிப்படலம், தருமன் பட்டாபிடேகப் படலம், விரிஞ்சநகரடைந்தபடலம், தாலபுரந்தரன் விரிஞ்ச நகரடைந்தபடலம், திருக்கலியாணப்படலம், தன்னகர் சென்ற

படலம், மீட்சிப்படலம், கார்க்கோடகன் வதைப்படலம், புத்தி சிகாமணி இடையூறுற்ற படலம், புத்தி சிகாமணி கல்லுருவான படலம், புத்திசிகாமணி கல்லுருக்கழிந்த படலம், புவனேந்திரன் முடிசூடு படலம், என்னும் ஐம்பத்து மூன்று படலங்களையும் ௩௦௬௬ பாடல்களையுங்கொண்டு விளங்குகிறது.

"ஆணவங் கெடுத்து நல்லருள் பொருந்தி
ஆனந்தம் நிரம்பிமேல் எழுந்த
மாணும்யோ கியர்போல் செழிப்புறு பைங்கூழ்
வான்பொதி திரண்டுநீண் டுயர்ந்து
சேண்முடி தடவிக் கற்புறு மகளிர்
சிரங்கவிழ்ந் தச்சம்உள் உறுத்த
நாணிநிற் பதுபோல் கதிர்க்குலை சாய்த்து
விளைந்தன நறும்பணை யெல்லாம்."

என்பது நாட்டுப் படலத்தில் ஒரு பாட்டு. இந்நூலுக்கு இராம நாதபுரம் சமத்தானம் மகாவித்துவான் துவாத்திரிம் தசாவ தானி முதுகுளத்தூர் சரவணப்பெருமாட் கவிராயர், மேற்படி யாரின் மைத்துனர் சோடசாவதானி, வேலாயுதக் கவிராயர் மேற்படியூர் அட்டாவதானி கலியாணசுந்தரம் பிள்ளை, சித்திரகவி தெய்வநாயகம் பிள்ளை, வேம்பத்தூர் பிச்சுப்பாரதி, மன்னார்குடி கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர், சர்க்கரை இராமசாமிப் புலவர், நாகை நீலலோசனி சதாசிவம்பிள்ளை, சோதுகுடி அப்துல் காதிறுராவுத்தர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"கங்கைகுல மணியனையான் கமழ்குவளை
மாலிகையான் கடல்நீர் வைப்பின்
மங்குலைமுன் புரந்திடுவே ளாளமணை
வைக்கூற்ற வகுப்பி லுற்றான்
துங்கமிக மலிசேது பதிகள்சமத்
தானவித்து வானென் றெங்கும்
பொங்குபெரும் பேர்படைத்தான் பன்னூலுங்
கற்றறிந்த புலமை யாளன்,

குப்பையாம் பிறநூலென் றறிந்தறநூல்
முழுதறியுங் குணவான் யாண்டும்
தப்பையாய் தருபுலவர் தலைவணங்க
நவைசிறிதுஞ் சாரா மேலோன்
சுப்பையா பிள்ளையெனுங் கவிச்சிங்கம்
இவன்பாடற் சுவையை நோக்கின்
ஒப்பையாங் கண்டதிலை எனப்புவனம்
முழுவதுமின் றுவந்த தம்மா."

என்பன அப்துல்காதிறு ராவுத்தர் பாடிய பாடல்கள் பதினொன் றில் இரண்டு.

## அ௨ங. சுப்பையா பிள்ளை - து
## (1928)

சோழ வளநாட்டிலே தஞ்சைமாவட்டத்திலே முத்துப் பேட்டை என்னும் ஊருக்கண்மையில் உள்ள ஆலங்காடு என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே சுப்பையாப்பிள்ளை தோன்றினர். தந்தையார் பெயர் துரைசாமிப்பிள்ளை. செந் தமிழ்ப்புலவராகச் சிறந்து விளங்கிய இவர் சிலப்பதிகாரக் காப்பியத்தின் சுருக்க விளக்கமாக 'வீரபத்தினி' என்னும் அரிய உரைநடை நூலை எழுதி வெளியிட்டார். அந்நூல் சிலப்பதி காரங் கற்பவர்கட்குச் சிறந்த துணையாக அமைந்து விளங்கு கின்றது. நூலைப்பாராட்டிச் சர்க்கரை இராமசாமிப்புலவர், க. சு நவநீதகிருட்டிணபாரதி, குலசை, திருவள்ளுவரகம் ப இராமநாதபிள்ளை, ஆலங்காடு தமிழ் வித்துவான் வை. செல்லை யாச் செட்டியார், அநவரத விநாயகம்பிள்ளை, மறைமலையடிகள் ஆகியோர் சிறப்புரை வழங்கியுள்ளனர்.

''கற்பினுக் கரசி யாய கண்ணகி சரிதந் தன்னை
அற்புடன் ஆய்ந்து செந்தேன் ஆமெனக் கற்றோர் கொள்ளப்
பொற்புற இயற்றி யீந்தான் புவிபுகழ் ஆலங் காட்டுக்
கற்பகச் சிதம்ப ரேந்த்ரன் கழல்தொழு தியல்நூல் தேர்ந்தோன்

கங்கையின் குலத்தோன் கற்றோர் களுக்கெலாம் இனிய நண்பன்
திங்களங் கண்ணி வேய்ந்த சிவபிரான் அடியார்க் கன்பன்
மங்கள சுகுணன் எந்த வர்க்கதும் நினுஞ்சி றந்தோன்
எங்கள்கண் மணிக ளாக இலங்குசுப் பையவேளே.''

என்பன இராமநாதபுரஞ் சமத்தானப் புலவரும் சிதம்பரம் மீனாட்சி கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தவரும் ஆகிய சர்க்கரை இராமசாமிப்புலவர் அவர்கள் இயற்றிய சிறப்புப் பாயிரப் பாடல்கள்.

தெத்திமாநகர்ப் பதிற்றுப்பத் தந்தாதி என்னும் நூலுக்கு இவர் அளித்த சிறப்புப்பாடல்,

"மருமகள் பாடத் திருமகள் நடனம்
வழங்குறு வளமலி நெத்தி
திருமலர் தம்மேல் ஒருதமிழ்த் தொடையல்
நிலவுறப் புனைந்துளன் இனிமை
வருபல புலவர் வானமு தென்று
மகிழ்ந்துளங் கவிதரப் பதிநூல்
தருபலன் அனைத்தும் கொண்டயல் வழங்கும்
தகுநமச் சிவயசற் சனனே

என்பதாம்

## ௪உச. சுப்பையா ஐயர்

1914 ஆம் ஆண்டில் இவர் திருவானைக்கா பதிற்றுப்பத் தந்தாதி என்னும் நூலை இயற்றியிருக்கிறார். எம். ஏ. எல் டி. என்னும் பட்டம்பெற்றவர்

"தேவரும் அறியாச் சிவபரஞ் சுடரே
சிருட்டியா தியமுறை பயின்ற
மூவரும் அறியா முதல்வனே மூவர்
மொழிதமிழ்ச் சுவையுணர் முடிவே
சேவரும் உனது திருவருட் படிவச்
சேவையைக் காவையுட் கண்டேன்
தாவறும் எளியேன் உளத்துனை யல்லால்
சகத்திய லேதுங்காண் கிலனே"

என்பது பதிற்றுப்பத் தந்தாதியுள் இருபத்தைந்தாவது பாட்டு.

## ௪உரு. சுப்பைய சாமி - சி

இவர் சிதம்பரம் பொன்னம்பல சுவாமி மடம் சிதம்பர சுவாமிகளிடம் அருளுரை பெற்றவர். திருவண்ணாமலை ஈசானிய மடம் முதலிய இடங்களில் தங்கியிருந்தவர். இவரால் வேதசார சமுத்தரணம் என்னுந் தோடகவுரை, சிவமகிமை விரிவுரை, கோயிலூர்க்குசுமாஞ்சலி, தருக்கசங்கிரக அன்னம்பட்டீய தெளி பொருள் விரிவுரை, ஈசானிய ஞானதேசிகர் சரித்திரம், புருடார்த் தப் பிரகரணம், பண்டார்கர் சமஸ்க்ருத முதற்புத்தக உரை, சிவபுரிபுராணம், வன்னிகுல விளக்கம், வல்லாள மகாராசன் சரித்திர விளக்கம், ஆன்மானான்ம விவேகம், சக்கந்தி கைலாச

கணபதி ஆலயதுதி, விடயாநந்த விளக்கம் என்னும் நூல்கள் எழுதி வெளிப்படுத்தப் பெற்றன. வடமொழி தென்மொழி இரண்டினும் வல்ல இவர் 1956 ஆம் ஆண்டில் காலஞ்சென்றார்.

## ௩உகூ. சுப்பையாப் புலவர்

ஈழவளநாட்டில் யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணையில் வாழ்ந்திருந்தவர். மேளக்கார வகுப்பைச் சேர்ந்தவர். இளம் பருவத்திலேயே கிறித்து சமயம் புகுந்து அச்சமயநெறியைப் பின்பற்றி ஒழுகினார் இலக்கண இலக்கியப்பயிற்சி மிகுதியாலோ அன்றித் தெய்வத்திருவருளாலோ செய்யுள்பாடுந் திறங் கைவரப் பெற்றவராக விளங்கினார். செய்யுட்களை வேடிக்கையாகப் பாடுவதில் வல்லவர். குடைபிடித்தவர்களைக்கண்டு மிரண்ட காளைக்கன்று தன்னைக் கட்டப்பெற்ற கல்லையும் இழுத்துக்கொண்டு செல்லுங் காட்சியை,

'' புல்லைமேய்ந் தங்கு நின்று
திமிர்புரி இடபக் கன்று
முல்லைசார் வழிய தாக
முடிமிசை குடைகைக் கொண்டு
செல்லுவோர் தம்மைக் கண்டு
சினந்துவால் எடுத்து மூசிக்
கல்லையுங் கயிற்றி னோடு
காட்டிடை இழுத்துச் செல்லும்.''

என்று பாடியுள்ளார்.

இவருடைய காலத்திலே வண்ணை வைத்தீசுரன் கோயிலில் நடனமாதொருத்தி வாழ்ந்திருந்தனள். அவள் அழகில் மிக்காள் கனகி என்னும் பெயரினள். அவளுடைய அழகிற்கு எண்ணற்ற இளைஞர்கள் கைப்பொருளையிழந்து பலியாயினர் அவளுடைய திருவிளையாடல்களை இவர் கனகிபுராணம் என்னும் பெயரமைத்து ஏறக்குறைய நானூறு விருத்தங்களமைந்த நூலாகப் பாடினார். அந்நூல் மறைந்தொழிந்தது. சில செய்யுட்களே வழங்குகின்றன.

'' சொல்லால் மயக்கி ஆடவர்தம்
சூழ்ச்சி அறிந்து காமநிலை
இல்லா தவர்க்கும் எழுப்புவிக்கும்
இருள்சேர் அளகக் கனக மின்னே

பொல்லா மனமும் அழுக்காறும்
பொய்யும் புரட்டு மேமலிந்த
மல்லா கத்து விரரிவர்
மற்றோர் நவாஸி ஊாராரே.''

என்பது அச் செய்யுட்களில் ஒன்று.

## அஉஎ. சுப்பையர் - அ

இவர், பாண்டிவளநாட்டில் திருநெல்வேலி மாவட்டம் சீவைகுண்டம் பிரிவு ஆறுமுக மங்கலத்தில் அந்தணர் குலத்தில் கொல்லம் 1010 ஆம் ஆண்டு தைத்திங்கள் 26 ஆம் நாள் பிறந்தார் இளமையில் கல்வியைக் கற்கத்தொடங்கி நன்முகக் கற்றுப் பெருக்கிக்கொண்டார். முருகக் கடவுளிடத்தில் மிகுந்த அன்புகொண்டு அக்கடவுளை இடையறுது போற்றிப் பணிதலேயே தம்முடைய சிறந்த கடமையாகக்கொண்டிருந்தார். புதுப்பாடல்கள் பலவற்றை இயற்றினர். இவரால் இயற்றப் பெற்ற இசைப்பாடல்கள் ''பத்திரசக் கீர்த்தனை'' என்னும் பெயரோடு அச்சிற் பதிப்பித்து வெளியிடப் பெற்றிருக்கின்றன. பாடல்களைப் புகழ்ந்து கவிராச பண்டிதர்,

''நெல்லையுயர் எல்லையினில் நிலவுமங்கை நகரதனில்
வல்லமறை யவர்குலத்தில் வந்துதித்தோன் மாமனுமுன்
சொல்லியநன் னெறிநடந்தோன் சுப்பய்யர் எனுந்தோன்றல்
எல்லையிலா அன்பால்எம் இறைமுருகன் இசை இசைத்தார்.''

என்று பாராட்டிப் பாடியுள்ளார்.

### இசைப்பாட்டில் 8 - ஆவது

இராகம்—தோடி. தாளம்—ஆதி.

#### பல்லவி

வந்தனம் செய்தேனே வானவர்தொழும்
செந்தில்வாழ் முருகோனே. (வந்த)

#### அநுபல்லவி

சுந்தரஞ்சேர் வள்ளிதெய் வானை உகந்திடும்
துய்யனே பன்னிருகையனே இப்போது. (வந்த)

சரணங்கள்

*உலகமாயை வந்தென்னைப் பலகாலு மேமூடி*
*உழன்று மனப்பேயெங்கும் சுழன்று சுழன்றோடி*
*அலையாம லெப்போதும் நிலையாக உன்னைத்தேடி*
*அன்பாய் நானனுதினம் அருள்சேரும் பதம்பாடி (வந்த)*

*அந்தணர் புகழ்ந்திடும் சந்தனு சலவாசா*
*ஆறுமுககுக அடியவர்க் கருள்நேசா*
*வந்தவினை யகற்றும் அந்தமில் புகழ்ஈசா*
*வாரிதிக்கரை வாழும் வடிவேல் பிரகாசா (வந்த)*

*வண்ணமயில் ஏறும் சொர்ணமாம் பிம்பத்தை*
*மகிழும் சுப்ரமண்யன் மயலெனும் துன்பத்தை*
*நண்ணுமலே எங்கும் எண்ணும்பேர் இன்பத்தை*
*நல்குவாயே உன்தன் இணையடி சம்பத்தை. (வந்த)*

## ௪உ௮. சுப்பையர் - மே

ஈழவளநாட்டுக்காரைத் தீவிலே வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் மேருகிரி ஐயர். இவர் தம் தந்தையாரிடமே வடமொழி, தென்மொழி, தெலுங்கு என்னும் மூன்று மொழிகளையுங் கற்று வல்லவரானார். இசைநூற் பயிற்சியும் பெற்றிருந்தார். நல்லைநாயக நான்மணிமாலை, காரைக்குறவஞ்சி என்பன இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்.

## ௪உகூ. சுயம்பிரகாச திருப்பதி சுவாமிகள்

இவர் கொங்கு வளநாட்டிலே கருவூருக்கடுத்த அரவாக்குறிச்சி என்னும் ஊரில் 1873 ஆம் ஆண்டு மார்கழித்திங்கள் நான்காம் நாள் தோன்றினார். இவருடைய தந்தையார் பெயர் சுப்பிரமணியர். தாயார் பெயர் வெள்ளையம்மை. இவர் இளமைப் பருவத்திலேயே பள்ளிக்கனுப்பப்பட்டுத் தமிழ், ஆங்கிலம், வடமொழி முதலியவைகளை நன்கு கற்றுணர்ந்தார். பிறகு அறிவு நூல்களைத் தக்க ஆசிரியர்பால் ஓதியுணர்ந்தார். பிறகு தென்னாட்டிலும் வடநாட்டிலும் பயணஞ்செய்தார். துறவு நிலையை மேற்கொண்டு விளங்கினார். அறிவு நூல்கள் பலவற்றை இயற்றியதோடு மாணவர் பலருக்கு அறிவுரை வழங்கி அவர்களை

நன்னெறியிற் செலுத்தினர். இவருக்குக் காரணப்பெயர்கள் பல தோன்றின. அவை, அடியார்க்கடியார், திருப்பதிசுவாமி, போதகுரு, கண்ணுறங்கான், பற்றற்ருன், காசுதொடான், போத வானர், மறைமுடிவுப்புலவர், மாசுபடான், ஞானதேசிகன் என்பன.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் பழமொழிப் போதம் உத்திசாகரம், தட்சணாமூர்த்திதோத்திரம், வித்தியாகீதை, பத்தி நெறி, திருநாமமாலை, முத்திநெறி, சிவசூத்திர விமர்சனி, மாதர் விடயம், சதாசிவப்பிரம தோத்திரம், தேவிதோத்திரம், விவேக சித்திரம், தத்தாத்திரேயர் தோத்திரம், மாரியம்மன் தாலாட்டு, சகுந்தலா அல்லது காதல் வெற்றி என்பன. இவர் 1937 ஆம் ஆண்டில் வீடு பேற்றையடைந்தார்.

"சச்சிதா நந்த மாந்தனை ஒழிந்து
சற்றுமொன் றிலையென உணரும்
விச்சையா முருத்தி ராக்கநின் றுதித்து
விளங்கும்யான் நீயெனுங் கருணை
மெய்ச்சலாப் பிழம்பாம் யாமெலா மென்னும்
விருத்தியின் தொடர்ந்ததா ரையதாம்
நச்சுகண் டிகைபூண் பவர்சிவ மெனவெண்
ணுங்குப நிடதமும் நவிலும்."

என்பது உத்திசாகரத்தில் ஒரு பாட்டு.

## ௬௩௦. சுரேந்திரநாத் ஓகலி ஆரியா
(20 - நூ)

வடநாட்டைச் சேர்ந்த இவர் தமிழ் நாட்டை யுடைந்து வசித்திருந்தார். தேச விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறைக்குச் சென்ருர். சிறையில் இருந்த காலத்தில் தமிழ்மொழியைப் படித்து நூல் எழுதுகிற அளவுக்கு அறிவுபெற்ருர். நடராசரைப்பற்றிப் பல கட்டுரைகளை லோகோபகாரியில் எழுதினர். பிறகு அக் கட்டுரைகள் "நடராச தரிசனம்" என்னும் பெயரோடு நூல் வடிவில் வெளிவந்தன. இவருடைய நூல்களைப்பாராட்டி மறைமலையடிகள், த. வே. உமாமகேசுரன் பிள்ளை முதலியோர் முன்னுரை எழுதியுள்ளனர். உமாமகேசுரன்

பிள்ளை தமது முன்னுரையில், "ஆங்கிலம் ஆதிய மேனாட்டு மொழிகளையும், தமிழ் ஆதிய கீழைத்தேய மொழிகளையும் நன்கு பயின்று புலமை எய்தியும், 'யாம்பெற்ற செல்வம் பெறுகவிவ் வையகம்' என்ற உயர்ந்த குறிக்கோளுடன் வாழ்க்கையை நடத்தும் ஆரியா அவர்கள் தில்லைச் சிற்றம்பலவனது ஆடலின் தத்துவங்களைத் தமது சீரிய மனப்பண்பினுக்கு ஏற்றவாறு கண்டு, அவற்றின் பெற்றிமைகளை உலகறியத்தந்தது தமிழர்கள் போற்றத்தக்க செய்தியாகும்" என்று குறிப்பிட்டுள்ளார்.

இவர் தமது நூலைத் தம்முடைய மனைவிக்குப் படைத்து, "கண்ணாய்க், கண்ணின் கருமணியாய், உயிராய், உயிர்க்குயிராய் இருந்தும் என் வாழ்க்கைத் துணைவிக்கு ஸ்ரீ நடராச தரிசன மென்னும் இச்சிறு நூலைச் சமர்ப்பிக்கின்றேன்," என்று எழுதி யுள்ளார்.

## ருசுக. சுல்தான் அப்துல்காதிர் மரைக்காயர்

இவர் பறங்கிப்பேட்டை காதி ரசனு மரைக்காயருடைய மகனாகத் தோன்றியவர். தம் தந்தையாரிடம் தமிழ்க்கல்வியை நன்கு கற்றுப் புலமைபெற்றார். முஹியித்தீன் ஆண்டவர்மீது முனாசாத்து சதகம் பாடியுள்ளார்.

"கோகன கைக்குங் குறிகேட்பர் நின்சீர்க் கொடையிலராஸ்
கோகன கைக்கும் மிளிர்மனை பொன்முடி கொள்ளுமன்னர்
கோகன கைக்கும் வியன்செங்கோல் நெஞ்சுளங் கோத்தணியும்
கோகன கைக்கும் பதக்கப் முஹியித்தின் கோனடியே"

என்பது சதகத்தின் மூன்றாவது பாடல். முகமது அப்துல்காதிர் மரைக்காயர், பிறையாறு வெ. அப்துல் அஜீஜ் மரைக்காயர், பிறையாறு ச. கு. மரியநாத நாயகர், பறங்கிப்பேட்டை, ஆ. நாராயணசாமிப்பிள்ளை, சுல்தான் அப்துல்காதிறு, காரைக்கால் முகோசா மரைக்காயர், ப. அ. முத்துத் தாண்டவராயபிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ருசுஉ. சுல்தான் முகியித்தீன் - மு. கு (1902)

இவர் கீழைக்கரை என்னும் ஊரினர். அவ்வூரில் இருந்த ம. வு. ம. செய்யிது முகமது அலியார் என்னும் இயற்றமிழ்

நாவலரிடம் இலக்கண இலக்கியங்களைப் பயின்று புலமைபெற்ற தன்றித் தாம் பலருக்கும் ஆசிரியராக அமைந்து இலக்கண இலக்கியங்களைப் போதிக்குந் தொழிலினும் ஈடுபட்டிருந்தார். "ஆசாரக்கோவை'' என்னும் நூல் பாடிய மு. க அ. அப்துல் மசீது முதலியோர் இவருடைய மாணுக்கர்களேயாவர். மேற்படி ஆசாரக்கோவை என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

''கடலெடுத்த நெடும்புடவிக் கொருமுடியாய்த்
திகழ் கீழைக் கரையிற் கீர்த்தி
உடலெடுத்த வாகைவளன் மால்சீதக்
காதிமர புதித்தோன் மாதர்
மடலெடுத்த முகமதப்துல் கரிமரைக்கார்
தவத்துருவாய் வந்தோன் கல்வி
அடலெடுத்த அப்துல்மசீ தியற்றமிழ்வித்
வானெனப்பேர் அருளு வோனே.''

என்பது அப் பாடல்களில் ஒன்று

## அநந. சுவாமி ஓம்பிரகாச நாதர்

(20 - நூ.)

வடார்க்காடு மாவட்டத்தில் இராயவேலூரில் கோபால சாமி என்பவருக்கும் அமராவதி அம்மையார் என்பவருக்கும் அருந்தவப்புதல்வராகத் தோன்றிய இவர் சென்னைமாநகரை அடைந்து கல்விகற்றுத் தேறினுர். இளமைப்பருவத்திலேயே இவரிடம் நல்லியல்புகளெல்லாம் நன்கு அமைந்திருந்தன. துறவிகளையடுத்து அறிவுநூற் பயிற்சி பெற்றுர். மைசூர் மன்னரின் அரண்மனையில் சிலகாலம் எழுதும் பணியை மேற்கொண்டிருந் தார். பிறகு உலக வாழ்க்கையில் வெறுப்புக்கொண்டு துறவி யானுர். இளம்பருவத்திலேயே செய்யுள் இயற்றும் திறம் உண்டாகிப் பல செய்யுட்களை இயற்றினுர். தக்க அறிவாசிரிய ரிடத்திலே அறிவுரை முதலியவைகளைப் பெற்றுர். இவருடைய வரலாற்றுச் செய்திகளை,

'' ....... ....... ...... ..................
தூயகோபால சுவாமிகள் அவர்கட்குச்
சேயரா யுதித்துச் சிறப்புடன் வளர

இங்கித முடனே யாவும் பயின்று
வித்தக அருட்கவி வெகுவாய் இயற்றியும்
பக்திவி சாலமாய்ப் பகவனைப் பரித்தும்
திரசித் திரக்கவிச் சிங்கநா வலர்பால்
பார யாப்பியல் பண்புடன் பயின்றும்
நற்சிவ லிங்க நாயனுர் அருளினுல்
சற்சன தீட்சை சாதனம் பெற்றும்
..................................................''

என்னுஞ் சிறப்புப்பாயிர அடிகள் தெரிவிக்கின்றன. உதக மண்டலத்தில் ஆசிரமம் ஒன்று ஏற்படுத்தி அன்பர்கள் பலருக்கு அறிவுரை வழங்கியதோடு ''சத்சம்பாஷிணி'' முதலிய நூல்களும் இயற்றியுள்ளார் நூலின் காப்புச் செய்யுள் வெண்பாவை அடியிற் காண்க:

''பார்மேவும் இச்சத்சம் பாஷிணிநன் னூலுக்குச்
சீர்மேவச் சந்ததமுந் தேர்ச்சியுடன்—வார்மேவு
மார்க்கங்கள் நான்கினிலும் வள்ளலெனும் ஐந்துகரத்
தார்க்கென்றும் போற்றியிது தான்.''

நூலைப்புகழ்ந்து வேதாந்த தருக்க போதகாசிரியர் கோ. வடிவேலுச் செட்டியார், நிச்சலப்பிரகாசர், திரிசிரபுரம் ப. பொன்னுச்சாமிப்பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் அளித்துள்ளனர். கு. கோவிந்தசாமிப்பிள்ளை என்பவர் இவர்மீது குருதோத்திர பஞ்சரத்தினம் முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

## அருச. * சுவாமிநாத செட்டியார்

திருவாரூர் மடப்புறத்தில் குருதட்சணாமூர்த்தி சுவாமிகள் என்னும் பெரியார் எழுந்தருளியிருந்த காலத்தில் இருந்தவர். இவர் ஏனங்குடி புத்தகரம் என்னுஞ் சிற்றூரில் வேளாண் மரபில் தோன்றியவர். இறைவனிடத்திலும் அவனுடைய அடியார்களிடத்திலும் அன்புடையவர். வேதாந்த நூல்களை நன்கு ஓதியுணர்ந்தவர். இல்லற தருமத்தை இனிது பற்றியிருந்தவர்.

இவருக்கு விசாலாட்சி என்னும் பெயருடைய மகள் ஒருத்தியிருந்தாள். அவளுடைய உடல் முழுவதும் மேகரோகம் பரவிக்

* தட்சணாமூர்த்தி சுவாமிகள் வரலாற்றிற் கண்டது.

கரும்பாறைபோல் தடித்திருந்தது. இந்நோயினால் அப்பெண் மிகுந்த துன்பப்பட்டாள். நோயைத் தீர்ப்பதற்குச் செட்டியார் மிகமுயன்றார். எவ்வளவோ பொருட் செலவு செய்தும் நோயைப் போக்கமுடியவில்லை. சிலருடைய அறிவுரைப்படி திருவாரூர் மடப்புறத்திற்கு வந்து தட்சணாமூர்த்தியடிகளுக்கு வழிபாடுகள் செய்து போற்றினர். அப்பொழுது சுவாமிகள்மீது பதிகம் ஒன்றையும் பாடினர். இரவிலேயே நோய் நீங்கி நலமுண்டாயது. இவர் சிலநாள் சுவாமிகளிடம் தங்கியிருந்து பிறகு தம்முடைய ஊரையடைந்தார். இவர் மேற்படி சுவாமிகள்மீது இயற்றிய பதிகத்தின் பாடல்களில் இரண்டை அடியிற் காண்க:

"வாயினால் வாழ்த்தி நெஞ்சால்
வஸ்துநிர்த் தோஞ் செய்து
காயத்தால் வணக்கஞ் செய்யும்
கருத்துடை அன்பர் மூன்பாய்
நாயினும் கடையான் ஆகி
நான் இருப் பதுநன் றாமோ
தாயினும் கருணை பூத்த
சச்சிதா நந்த வாழ்வே.

மமர் ஒழித் தருளும் நிற்கே
மாறுயான் செய்வ தென்னே
கமலநல் சரணம் என்றன்
கருத்திடை இருத்தல் அன்றித்
தமரொடும் திருஆ ரூரில்
தட்சணா மூர்த்தி என்னும்
சமரச குருவாய் வந்த
சச்சிதா நந்த வாழ்வே."

## ௮௱௫. சுவாமிப்பிள்ளைப் புலவர்

இவர் ஈழவளநாட்டில் பண்டத் தரிப்புக் கோயிற்பற்றிலுள்ள விளான் என்னுஞ் சிற்றூரில் ௧௲௮௱௪ ஆம் ஆண்டிற் பிறந்தார். தந்தையார் பெயர் பேதுருப்பிள்ளை. இவர் கிறித்துவ சமயத்தினர். கடவுண்மணிமாலை, வெல்லைமணிமாலை, கணக்கதிகாரம் முதலிய சில நூல்களை இயற்றியிருக்கிறார். (கணக்கதிகாரம் காரிநாயனார் இயற்றியதினும் வேறானது) அன்றி, உரிச்சொல், திவாகரம், நிகண்டு முதலிய நூல்களைக் காப்புச் செய்யுட்

களை மாற்றிக் கிறித்து மேலாக்கிப் பதிப்பித்துப் பயன் படுத்தினர்.

‘ மூவுலகை யும்படைத்துக் கீர்த்தி பெற்று
முதல்வனுக்கேற் றிடுசேத்தோன் முனிமுன் னுளில்
தேவபரன் தனைமனுவோர் புகழ்ந்தற் கெண்ணித்
தீட்டுகல்விச் சாத்திரத்தில் செகத்தை யாண்ட
காவலர்கள் காவலனும் சலோமோன் செப்பும்
கலைதனிலுந் தமிழுதனுங் கற்க எண்ணி
ஆவலுடன் பொருணிகண்டு படிக்கத் தானும்
அடிமுடிவில் லாதபரன் அடிகாப் பாமே.’’

என்பது இவருடைய மாற்றங்களில் ஒன்று. இவர் கஅசச ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

## அருகூ. சுவேதாரணிய சாத்திரி (1907)

இவர் பெங்களூரில் இருந்தவர். தமிழ்மொழியை நன்கு கற்றுப் புலமைபெற்றுப் பாவாணராக விளங்கியதன்றிப் பி. ஏ. எல். டி. வரை ஆங்கிலக்கல்வியும் கற்றுப் பள்ளிக்கூடங்களின் உதவி ஆய்வாளர் என்னும் அலுவலிலும் அமர்ந்திருந்தார். அருங்கலை விநோதராக விளங்கிய இவர் அவ்வக் காலங்களில் பாடிய தனிப்பாடல்களும் பதிகம் மாலை முதலியவைகளும் பல, அவைகள் ஒன்ருகத்தொகுத்து அச்சிடப்பட்டுள்ளன. அந்நூலில் சுவேதாரணிய பதிகம், திருவெண்காட்டு நேரிசை, சரசுவதி யந்தாதி, ஓவியப்பாடல்கள், புலவராற்றுப்படை, நடராசர்மாலை, பல சிவப் பதிகளிற்பாடிய பதிகங்கள் முதலியன அடங்கியுள் ளன. இவரைப்பற்றிய பிற விவரங்கள் தெரியவில்லை. இவ ருடைய பாடல்களுக்குத் ‘‘தனிப்பாடல் பொது’’ என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. ‘‘செங்கற்பட்டின் மேலியற்றிய செய்யுட்கள்’’ என்னும் பகுதியில் அடங்கிய செய்யுட்களில் இரண்டை அடியிற் காண்க :

‘‘ உன்னும் அடியார் உறுதிப் பொருளை
மன்னும் வகைசெய் மன்னன் இடமாம்
இன்னல் இல்லை என்ன மாந்தர்
செந்நெல் கொழிக்குஞ் செங்கற் பட்டே.

*காண இனிய கழுக்குன் றமர்ந்த*
*நாணு விரும்பும் தலமாம் அதுதான்*
*வேணு முதலாந் தருவூர் காணச்*
*சேனை அழைக்குஞ் செங்கற் பட்டே.''*

## ௫௩௭. சூடாமணிப் புலவர்

இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலியன விளக்கமாக வில்லை. வைசியர் சிறப்பினை விளக்குவதாகிய வைசியபுராணம் என்னும் நூலை 840 பாடல்களாகப் பாடியிருக்கிறார். இந்நூல் 1854 ஆம் ஆண்டில் அச்சிற் பதிப்பித்து வெளியிடப்பட்டிருக் கிறது நூலின் செய்யுள் ஒன்றை அடியிற் காண்க:

*'' அன்னையோ வேடந் தாங்கி அறநெறி அணைந்தா ளத்தாய்*
*என்னநன் னயன மென்று இருந்தவர் இறந்து போனர்*
*பின்னையா ரென்ன உன்னிற் பிறிதொரு வரையுங்காணேன்*
*என்னவே விழிநீர் சோர இருந்தனள் ஏங்கி ஏங்கி.''*

## ௫௩௮. சூரியானந்தர்

இவர் சித்தர்களில் ஒருவராக மதிக்கப்பெறுகிறார். இவர் இயற்றிய பாடல்கள் ''சூரியானந்தர் சூத்திரம்'' என்னும் பெயரோடு வழங்குகின்றன.

*'' ஒண்ணுனை நாலாகும் இருநூற் றைந்தில்*
*ஒருவைத்த கருத்தெரியும் இருபந் தைந்தில்*
*கண்ணுகும் இந்தநாள் பதின்மூன் றுக்குள்*
*கருவையொடு கற்பமுறை காட்டிவைத்தேன்*
*வண்ணுனை அறியாத பேருக் கெல்லாம்*
*வாதியென்ற பேரேது வாதமேது ?*
*பெண்ணுனின் சுரோணிதமும் விந்துங்கண்டால்*
*பேரான பூரணத்தின் பெருமைதானே ''*

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## ௫௩௯. செகநாத பிள்ளை. [பேறை. சதாவதானம்]

1875 இல் செங்கல்பட்டில் வாழ்ந்திருந்தார். பூவை - கலியாண சுந்தர முதலியார் இவரிடம், நன்னூல், இலக்கண விளக்கம், நன்னூல் விருத்தியுரை முதலிய இலக்கண நூல்களைப் பாடங்கேட்டார். இவர் இலக்கணக் கடலாகவும் நூறு அவதா

னங்கள் செய்து சீர்த்திபெற்றவராகவுந் திகழ்ந்தார். 1876 ஆம் ஆண்டில் சென்னையில் இருந்து செங்கல்பட்டிற்குப் புகைவண்டி முதன்முதலாக விடப்பட்டது. அப்போது இவர்,

> '' யாருங்கள் ஓர்நொடியில் பன்னுமிடம் போய்வரலாம்
> வாருங்கள் என்னதடை மாநிலத்தீர்—

என்று பாடத்தொடங்கியபோது இவருடைய மாணவராகிய பூவை கலியாண சுந்தரர்,

> நீருங்கள்
> காலால் நடவாமல் காசுமிக நல்காமல்
> மேலாக வாழுவினி மேல்.''

என்று வெண்பாவை முடித்தார்.

## ௪௬௦. செகராச சேகரன்

இவர் யாழ்ப்பாணத்தில் இருந்து அரசுசெலுத்திய சூரிய சிங்கையாரிய இராசாவின் இரண்டாம் புதல்வர். இவருடைய மூத்தவராகிய பரராச சேகரன் அரசியலை நடத்தினர். இவரோ கலாவிநோதராய் நூல்கள் பலவற்றைக் கற்றுப் புலவர் பலரோடு அளவளாவுதலையே தம்முடைய பொழுதுபோக்காகக் கொண்டார். மதுரையை அடைந்து அப்போது அங்கிருந்த புலவர்கள் பலரோடும் அளவளாவினர். புலவர் பலருக்குப் பொருளுதவி செய்து நூல்கள் பலவற்றை எழுதச் செய்தார். இவருடைய தமையனாராகிய பரராச சேகரனின் அவைக்கு அகத்திய முனிவரின் பேரராகிய சுபதிட்ட முனிவர் வந்து பிற்காலச் செய்திகளை அறிவித்துப்போயினர். அவர் கூறியவாறே பிறகு நிகழ்ந்தது. இவர் தம்பெயரால் மருத்துவநூல் ஒன்றும் காலக்கணித நூல் ஒன்றும் இயற்றியதன்றித், தட்சிண கைலாச புராணம் என்னும் நூலும் இயற்றியிருக்கிறர். இந்நூலுக்கு அரசகேசரி சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார். இவருக்குச் சிங்கைச் செகராச சேகரர் என்றும் பெயருள்ளது.

## ௪௬௪. செகராவு முதலியார் - ஏ. எஸ்., இராயபுரம் (20 - நூ.)

சென்னைமாநகரில் இராயபுரத்தில் வாழ்ந்திருந்தவர். சிறந்த தமிழ்ப்புலவராகிய இவர் செயிண்ட் மேரீஸ் கல்லூரியில்

தலைமைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். தண்டையார் பேட்டையில் இருந்த பொன்னுச்சாமிக் கிராமணி என்பவர்மீது "பொன்னுச்சாமி உலா" என்னும் நூல் இயற்றியிருக்கிறார். மேற்படி உலா ௩௯-கண்ணிகளை உடையது. நூல் புராணேதிகாசக்கதை முதலியவைகளைக்கொண்டு செம்மையாக அமைந்துள்ளது.

"வான்வழங்க மண்விளங்க மாசிலாத தேசவன்
மாண்பின்வந்த சான்றவர்நம் மரபினுக்கு மங்களம்
தேன்வழங்க மாலேவெய்ந்த செப்பருங்கந் தப்பவேள்
சேயனை பொன்னுச்சாமி செம்மலுக்கு மங்களம்
கோன்வழங்க அரசர்கற்புக் கோதிலாத கோதைமார்
குறைவிலாத மறைவலோர்கள் குழுவினுக்கு மங்களம்
கான்வழங்கப் பயிர்செழிக்கக் கருதறங்கள் ஓங்கவே
காசினியோர் மேலும்நாளும் கதித்துவாழ மங்களம்."

என்பது நூலின் இறுதியில் அமைந்த மங்களம். நூலைப் பாராட்டிக் காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு, திருமயிலை வித்துவான் சண்முகம்பிள்ளை, தேவகோட்டை சதாவதானம் இராசகோபால ஐயர், கும்பகோணம் நகர் உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியராக இருந்த பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர், க. வ. திருவேங்கட நாயுடு, திருவனந்தபுரம் குமார தேவ சாத்திரியார், தி. வி. சிவப்பிரகாச ஐயர், கோ. வடிவேலுச் செட்டியார், கோட்டாறு செய்குத் தம்பிப்பாலவர், ஈக்காடு இரத்தினவேலு முதலியார், சு. வேலுச்சாமிப்பிள்ளை, கா. நமசிவாய முதலியார், இராயபுரம் வே. கி. நாராயணசாமிப்பிள்ளை, கந்தசாமிப்பிள்ளை, கோ. இராமலிங்கத் தம்பிரான், ம. செல்வநாத முதலியார், வி. மு. இராமசாமிப்பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். இவர் தேம்பாவணிக்கு உரையெழுதினர். அவ்வுரையின் இரண்டாங் காண்டத்தை அச்சிட்டு வெளியிடுவதற்குப் பொருள் உதவி நாடியே இவ்வுலாவை இயற்றினர் என்பது பின்வருஞ் சீட்டுக் கவியாற் பெறப்படுகின்றது.

இவர் இன்னுஞ்சில நூல்கள் இயற்றியிருப்பதோடு பல நூல்களை அச்சிற்பதிப்பித்தும் வெளியிட்டிருக்கிறார். இவருடைய தமிழ்த்தொண்டு பாராட்டிற்குரியது.

பொன்னுச்சாமிக கிராமணியார் சமுகத்திற்கு
ஏ. எஸ. செகராவு முதலியார் எழுதிய

### சீட்டுக்கவி

"உலகமுதல் அத்தனையும் செய்துகாத் தழிப்பதே
உரியதிரு விளையாட்டெனை
உளத்துணரும் எப்பெருமான் உலகில்மனு வடிவமாய்
ஒருங்குபூங் கொடியுயர்த்த
உம்பர்பணி வளனென்னும் திருநாம மாதவனை
ஒருநாளும் மறவாதவன்
உத்தமர்வாழ் திருராய புரவாசன் செந்தமிழின்
உவரியளவிட்ட நேசன்
பலகலையோர் விசுவாசன் செகராவு கவிராசன்
பட்சமுடன் எழுதுகவிதை
பழனவயல் தொறும்வளைகள் பெறுமுத்தம் பரலாகிப்
பங்கயச் சீறடி வருத்தப்
பசியமலர்க் குழலளியை ஆற்றுமல் இடையேங்கப்
பாகுவநடை பெற்றதென்னப்
பச்சைமயில் பின்தொடரச் சென்றுகளை கொய்மாதர்
பண்புசெறி தண்டைநகரான்
கலகவிழி யார்மனமு மூன்றுமட லெழுதழகன்
கற்பகம்பின் விட்டகொடையான்
கதிரவன் குலோத்தமன் ஆத்திமலர் மார்பினன்
கருதுவோர்க் கினியநண்பன்
கந்தப்பன் செய்தவப் பயனுருவாய் வந்ததெனக்
காசினியில் அவதரித்தோன்
கல்வியுடன் செல்வநிறை பொன்னுச்சாமிக்குமணன்
கருணைமுகங் கொண்டு காண்க
இலகுமுத் தமிழ்வல்ல விரமா முனிவன்முன்
இயற்றுதேம் பாவணிக்கு
எழுதிய விருத்தியுரைக் கேற்பநீ செய்தயைநேர்
இவ்விரண் டாங்காண் டமும்
இனிதுநடை பெறவுதவி செய்கவென நின்மீதில்
இயல்உலா ஒன்றெழுதினேன்
என்கருத் திசைவித்து மங்களமாய்ப் புலவரால்
இசைபெற்று வாழ்க மாதோ."

இவர் மேற்படியார்மீது நான்மணிமாலை என்னும் நூலும் பாடிப் பலருடைய சிறப்புப்பாயிரங்களோடு வெளியிட்டுள்ளார். அர்ச். சூசையப்பர் கலம்பகம் என்னும் எண்ணூர்க் கலம்பகமும் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது.

## அசஉ. செங்கமல சுவாமிகள்
## (1910)

இவர் சாட்சிநாத சுவாமிகள் என்பவருடைய மாணுக்கர். சற்குருநாதன் சதவாழ்த்து, சற்குருதோத்திரம், இராகாதி பதின் மூன்றன் விடயம், தட்சணுமூர்த்தி தோத்திரம், கணேசர் தோத்திரம், நடேசர் தோத்திரம், உமாதேவியார் தோத்திரம், முருகேசர் தோத்திரம், சண்டேசர் தோத்திரம், பஞ்சமூர்த்திகள் அந்தாதி, காசி அன்னபூரணியம்பாள் தோத்திரம், காசி விசுவேசர் தோத்திரம், காசி விசாலாட்சியம்பாள் தோத்திரம், காசிக் கால வயிரவர் தோத்திரம், நந்திதேவர் தோத்திரம், இரத்தினகிரிமாலை முதலியவைகள் அடங்கப்பெற்ற தோத்திரப்பாமாலை என்னும் நூலை இயற்றியிருக்கிருர்.

"ஐங்கரன் துணைவா சங்கரன் புதல்வா
அம்பிகை பெற்றிடுங் குமரா
பங்கய மலரில் இருந்திடும் பிரமன்
பணிந்திடும் பதமலர் முடியில்
தங்கிட என்று தரிப்பதோ அறியேன்
சற்குரு வடிவமாய் வந்தேன்
பங்கம தகற்றி உய்ந்திடும் படியே
பரகதி அளித்தல்உன் கடனே."

என்பது முருகேசர் தோத்திரத்தில் ஒரு பாட்டு.

நூலைப்பாராட்டி வண்ணச் சரபம் திருப்புகழ்ச் சுவாமிகள் என்னும் தண்டபாணி சுவாமிகள்,

"முத்திநெறி விரும்பினர்க்கோர் இனியதுணை
எனப்பழையோர் மொழிந்த உண்மைப்
பத்தியினை இழந்துதவ வேடமுளார்
களுட்பலர்போற் படிறெய் தாமல்
சத்திநிபா தம்பதியக் கருதிமுயல்
சிலரொடுசேர் தகைமை யெய்திப்
புத்திமலி செங்கமல முனிவன்அரன்
ஆதியரைப் போற்றி ஞனே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். மேற்கண்ட நூல்களைத் தவிர அறிவுநூல்களுஞ்சில இயற்றியுள்ளார்.

## அ௪௩ செங்கல்வராய முதலியார் - பூ.
(19 - நூ.)

இவர் சென்னைமாநகரில் பூவிருந்த வல்லியில் வாழ்ந்திருந்தவர். செந்தமிழ்ப்புலமை சிறந்து அமையப்பெற்றவர். பொன்மலைச் சுவாமிகள் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்று அறிவு நெறியில் ஒழுகியவர். திருக்குருகூர் ஞானசித்தரின் அருள்பெற்றவர். மேற்படி பெரியார் இயற்றிய நூலுக்கு இவர்,

"அம்ப கந்தன்னை அறிவிக்கும் மந்திரம்
கும்பக மின்றிக் கூடிடும் மந்திரம்
சம்பகம் போலும் சதாநித்ய மந்திரம்
உம்பர்கள் நாட்டுக் குயர்மந் திரமே.

சித்தர்கட் கென்றுந் திரமான மந்திரம்
பத்தர்க ளென்றும் பரவுசீர் மந்திரம்
அத்தர்கட் கென்றும் சுகமான மந்திரம்
முத்தர்கட் கென்றே மொழியுமந் திரமே"

இவை முதலிய பாடல்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## அ௪௪. செங்கல்வராய முதலியார் - ஆ
(20 - நூ.)

இவர் காஞ்சிபுரத்திலிருந்தவர். இலக்கண இலக்கியங்களினும் தருக்கத்தினும் வேதாந்தத்தினும் வல்லவர். இவருடைய பெயர் "தருக்கவேதாந்த போதகாசிரியர்" என்றே வழங்கியது. இவர் வேதாந்த நூல்கள் சிலவற்றை ஆராய்ந்து வெளியிட்டதோடு நாநாசீவ வாதக்கட்டளைக்கு இலகுபோதினி என்னும் உரையும், சசிவன்னபோதத்திற்கு தத்துவப்பிரகாசிகை என்னும் உரையும் எழுதியுள்ளார். குடியேற்றம் முனிசிபல் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். விபூதி விளக்கம் என்னும் நூலுக்கு இவர்,

"சீர்பசும சாபால சேருபநி டத்தினுள
ஏர்பொருளை ஈங்குரைத்தான் ஏமமுறக்—கார்பொருவும்
அங்கப்பன் ஈன்ற அரியகுப்புச் சாமியாம்
சங்கப் புலவனிகர் சாது."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## அசரு. செஞ்சடைவேதிய தேசிகர்

இவர் திருப்பனந்தாள் தலபுராணம் பாடியுள்ளார். அப் புராணம் நைமிசச் சருக்கம் முதல் குங்குலியக்கலய நாயனர் சருக்கம் வரை பதினெட்டுச் சருக்கங்களையும் ஐந்நூற்றுத் தொண்ணூற்றென்பது பாடல்களையுங் கொண்டதாக விளங்குகின்றது.

"திருமருவு தென்பனசைப் புராணந் தன்னைச்
சிந்தைமிகத் தூயவராய்ச் சிறந்து கேட்போர்
பொருவருமங் கலமெய்திப் புகழின் மிக்க
புதல்வரொடு மிகுபொருளும் பொருந்திப் பூமேல்
தருமருவு பொன்னுலக மெய்தி யாங்குத்
தங்குபெரும் போகமெலாந் துய்த்துப் பின்னர்
கருவுறுவெம் பிறவிதனில் அடையா ராகிக்
கண்ணுதலான் திருவடியிற் கலந்து வாழ்வார்."

என்பது நூற்பயன் உரைக்கும் பாட்டு.

## அசசு. செண்பகக் குற்ருலக் கவிராயர்

இவர் மேலகரம் திரிகூட ராசப்ப கவிராயரின் வழி முறையில் வந்தவர். திருவாவடுதுறை யாதினப் புலவராக இருந்தவர். சிறந்த புலவராக விளங்கிய இவர் பல பாடல்கள் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று,

"மோனைக்கா லத்தயன்மால் அறிவரிய
முழுமுதல்வன் முழுமெய்ஞ் ஞானத்
தேனைக்காத் துயிர்க்களிப்பான் சுப்பிரம
ணியப்பேர்த்தே சிகனுத் தோன்றி
வானைக்காத் திடும்பொழிலா வடுதுறையில்
அமர்ந்திருப்ப மகிழ்வன் ஞானை
ஊனைக்காத் திடும்படிவம் பெற்றதனல்
உற்றிடும்பே றுறுவான் மன்றே"

என்பது.

## அசஎ. செண்பகக் குமாரு பிள்ளை - மா. அ
(20 - நூ.)

பாண்டிவளநாட்டிலே திருநெல்வேலிக்கு மேற்கில் உள்ள மாருந்தை என்னும் ஊரில் அருணசலம்பிள்ளை என்பவருடைய

மகனுகத் தோன்றினுர் இவர். திருவாவடுதுறை ஆதீனத்தை அடுத்துப் பெரிய பூசைச் சுப்பிரமணியத் தம்பிரான் என்பவரிடம் கல்விகற்றுப் புலமைபெற்ருர். சற்குருநாதர் சரித்திரம் என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிருர். அந்நூல் இருநூற்றுப் பதினெரு பாடல்களையுடையது. பெரியார் ஒருவருடைய வரலாற்றைக் கூறுவது.

"எம்பெருமான் நோக்கம் ஈதாகுற் சரியென்று
நம்பெருமான் அருள்பெருகு நற்றவருஞ் சமமதித்தார்
சம்பு புகழகத்தில் சதாகாலங் கொண்டவர்க்கு
வம்பலருங் கோதை மகட்பேச எத்தனித்தார்."

என்பது நூலில் ஒரு பாட்டு. இந்நூலுக்கு முரம்பை சுப்பிரமணியத் தம்பிரான், முரம்பை ஆ. குற்ருலலிங்கம்பிள்ளை, வல்லநாடு சண்முக சுந்தரம்பிள்ளை, ப. கைலாசபட்டர், வல்லநாடு- ந. வேலாயுதஞ் செட்டியார், சிவசுப்பிரமணியபிள்ளை, வல்லநாடு வீரலெட்சுமிநாதபிள்ளை, ஆழிமாநகர் சோலைமலை ஐயங்கார், இராமையங்கார், திருநெல்வேலி - சுப்பிரமணியபிள்ளை, திருவாசக ஓதுவார் சண்முகம்பிள்ளை, சிதம்பரம் - சிவஞானத் திருத்தளி சிதம்பரசாமி, நகரமலை - நா. இராமலிங்கம் பிள்ளை, வேம்பத்தூர் சங்கரசுப்பா சாத்திரிகள், மாருந்தை பரமசிவ முதலியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௪சஅ. செப்பறைச் சிதம்பர அடிகள்
(20 - நூ.)

இவர் ஈழவளநாட்டில் தோன்றியவர். இந்தியாவையடைந்து திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள செப்பறையில் தங்கியிருந்தமையின் செப்பறைச் சிதம்பர அடிகள் என்று பெயர் பெற்ருர். இலக்கண இலக்கியத்திலும் சைவசித்தாந்தத்திலும் சிறந்த பயிற்சியுடையவர். திருத்தில்லையில் செங்கழுநீர்ப் பிள்ளையார் கோயில் தெருவில் திருமடம் ஒன்று அமைத்து அதற்குச் 'சிவஞானத் திருத்தளி' என்று பெயரிட்டு அதிலே அமர்ந்திருந்தார். இவரிடம் மாணவர் பலர் கல்வி கற்றனர். இவருக்கு முன்சினம் மிகுதியாக வரும். பிறநூலாசிரியர்களின் கருத்துத் தமக்கு உடன்பாடில்லாதொழியின் உடனே அதற்கு

மறுப்பெழுதி வெளியிடுவார். இவ்வாறு இவரால் எழுதப்பட்ட மறுப்புரைகள் பல. கடினமான செய்யுள்கட்கு உரையெழுதிப் பத்திரிகைகளில் வெளியிட்டுக்கொண்டிருந்தார்.

தில்லையில் தங்கியிருக்குங்கால் பகலுணவு முடிந்தபின் அங்குள்ள மௌன தேசிக ராதீனத்திற்குச் சென்று அங்கு அக்காலிருந்த செல்லப்ப அடிகள், வேலாயுத அடிகள், வீரைய அடிகள் முதலியவர்களோடு அளவளாவுவார். தாம் எழுதிய கட்டுரைகள் பாடல்கள் முதலியவைகளை அவர்களுக்குப் படித்துக்காட்டுவார். திட்டைக்கு அடுத்த அன்னப்பன்பேட்டைத் தாயுமான அடிகள் இவருடைய அறிவாசிரியர் என்பர். சிவஞான அடிகள் தம் கையால் எழுதிய சிவஞானபோத மாபாடிய ஓலைச் சுவடியை இவர் படித்திருக்கிறார். தம்மை மெய்கண்ட தேவ ருரை மாணுக்கர் என்று சொல்லிக்கொள்ளுவார். சிவஞான போதமாபாடியத்திற்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"சிவஞான மின்றிச் சிவன் செல்லுநற்கதிய தென்றற்
குவமான மரகா யத்தி னுரியுரிந் துடுப்ப தென்ப
சிவஞான பாடி யத்தைத் தேர்ந்துடன் தெளியா தன்ன
சிவஞான உண்மை யின்மை சிவஞானத் துணிபு மன்றே."

என்பது அச்சிறப்புப்பாயிரப் பாடல்களுள் ஒன்று.

## ௮௪௧. செம்புலிப் பெரியசாமித் தேவர்
(19 - நூ.)

பாண்டிவளநாட்டில் சொக்கம்பட்டி என்னும் ஊரில் இருந்தவர். தமிழ்ப்புலமை நிரம்பப் பெற்றிருந்த இவர் தனிப் பாடல்கள் பல பாடியுள்ளார்.

"குப்பாலை வைத்தேவை விடவனங்கன்
குமரிகண்டு குறுகிவாடிக்
குப்பாலே விழுந்தவளைத் தாயெடுத்து
மார்பணைத்துக் கொஞ்சி யோராசங்
குப்பாலே கொடுத்தாலும் குமட்டுகின்றுள் மாலைதனைக்
கொடுத்துச் சேர்திக்
குப்பாலு ளோர்கள்துதி எங்களித யாலயசு
குணபூ மானே."

என்பது. இவர் ஊற்றுமலை இருதயாலய மருதப்பத் தேவர்மீது பாடிய பாடல்களில் ஒன்று.

## அருO. செயராம சுவாமிகள்
## (20 - நூ.)

இவர் சென்னைமாநகரில் இருந்த சாது நாராயண தேசிகர் என்னும் பெரியாரையடுத்து வேதாந்த நூல்கள் பலவற்றைக் கற்று வேதாந்தப் புலமைபெற்று விளங்கினர். தம்முடைய ஆசிரியர் இயற்றிய அநுபவாநந்த தீபிகை முதல் திருமுறை இரண்டாந் திருமுறை முதலிய நூல்களுக்கு இவர் உரையெழுதி வெளியிட்டார். இவருடைய புலமைநலத்தையும் உரைத் திறத்தையும் பாராட்டிக், கோ. வடிவேலுச் செட்டியார், பூ. அ. கோவிந்தராச முதலியார், முனிசாமி நாயகர், ச. கந்தசாமி முதலி யார், வேதகிரி முதலியார், கணபதி நாயகர், ஞானனந்த மணவாள சுவாமிகள், அருணகிரிநாத அடிகள், தே. அ சாமி குப்புச்சாமி, சிதம்பரசாமிப் பாண்டியர், சுந்தரபாரதி ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

''அகத்தியர் மரபில் தோன்றும் அன்பர்நா ராயணப்பேர்
மகத்துவ ஞானி சொற்ற மாகுரு அருட்பே றென்று
சகத்தினில் திகழும் நற்கு சயராம சாமி என்பார்
மிகத்திகழ் உரைகண் டாரால் மிக்கவர் உவக்கு மாறே.''

என்பது சிறப்புப்பாயிரத்தில் ஒரு பாட்டு.

## அருக. செயராம செட்டியார். ஏ. எஸ்

தொண்டைவளநாட்டில் இராயவேலூரில் இருந்தவர். ஆங்கிலந் தமிழ் ஆகிய மொழிகளை நன்கு உணர்ந்தவர். பாரிப் பாக்கம் முனியப்ப அடிகள் என்னும் பெரியார்பால் அறிவு நூல்களை நன்கு கற்றுணர்ந்தவர். இவர் ''ஞானநுபவரசம்'' என் னும் நூலை இயற்றியுள்ளார். அந்நூல் முந்நூற்று ஐம்பத்து நான்கு வெண்பாக்களைக்கொண்டது.

''காமக் குரோதாதி கைவிட்டு நல்லோர்பால்
தாமதியா மல்கேட்டுத் தாந்தெளிவின்—வாமசுகம்
உண்டாகும் இந்நெறிவிட் டொண்டொடியார் வத்துவெனக்
கொண்டோருக் காமோ குணம்,''

என்பது நூலில் ஒரு பாட்டு. நூலைப் பாராட்டி தண்டறை-சுப்பராய ஆச்சாரியார், அரியரபாடி—சின்னையா முதலியார், இராயவேலூர்-நாகப்ப முதலியார், இராயவேலூர்-சுப்பிரமணிய செட்டியார், நடுப்பட்டி - ஆறுமுகம்பிள்ளை, சென்னை - சிந்தா திரிப்பேட்டை அத்துவிதாநந்தம் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். நூல் குரோதியாண்டு புரட்டாசித் திங்களில் அச்சேறியுள்ளது.

## அருஉ. செய்கப்துல்காதிறு ஆலிம்புலவர்

இவர் காயற்பட்டணத்தில் முகமதிய சமயத்தில் தோன்றிச் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்,

1. சாம்குத்பு நாயகம் காரணப்புராணம்
2. நாகையந்தாதி
3. மக்காக்கலம்பகம்
4. தோத்திரமாலை
5. சொர்க்கநீதி

முதலியன.

"பட்டம் படாகம் புகழ்முடி யார்பொற் பதியின்பசும்
பட்டம் படாகம் புனைந்தார் மரபினர் பங்கயத்துப்
பட்டம் படாகம்புள் ளூர்திரு நாகையர் பாவையர்கண்
பட்டம் படாகம்பு காட்டுவ ரோர்மைப் பயனெறிக்கே."

என்பது நாகையந்தாதியில் ஒரு பாட்டு.

## அருரு. செய்கு ஆலிப்புலவர்

பாண்டிவளநாட்டில் மேலச்செவ்வல் என்னும் ஊரில் முகமதிய சமயத்தில் இவர் தோன்றினார். இவருடைய தந்தையார் பெயர் செய்கு அபூபக்கர். இவர் இளமையிலேயே செந்தமிழ்க் கல்வியை நன்கு கற்றுச் சிறப்புடன் விளங்கியிருந்தார். கோடை காலம் ஒன்றிலே ஊருக்குப் புறம்பாக நள்ளிரவில் காற்றின் பொருட்டு உலாவிக்கொண்டிருந்தார். அப்பொழுது சில முஸ்லீம்கள் கோவலன் கதை கேட்டுவிட்டு வந்தனர். அவர்கள்

கோவலன் கதை கேட்டதை உணர்ந்த இவர் உள்ளம் வருந்தினர். முகமதிய சமய வரலாறு ஒன்றைத் தமிழில் பாட எண்ணினர். முகமதுநபி மக்காநகரமிருந்து எழுந்தருளி ஹக்கனிட மறுஷிட் போய் மொழிந்துவந்த காரணமாகிய மிகுருசு என்ற வரலாற்றை மிகுருசுமாலை என்று பெயரிட்டுப் பன்னிரண்டு பகுதிகளையும் எழுநூற்று நாற்பத்து மூன்று பாடல்களையும் உடையதாகப் பாடிமுடித்தார்.

"மாங்கனியின் செழுந்தேறன் மடைசாடி
வயற்கரும்பில் வந்து பாயப்
பூங்கரும்பு கணுக்கள்தொறும் புதுத்தரளம்
தனையீன்று புளகித் தோங்க
தேங்கதலி யுடனிகலிச் செல்லின்முகம்
புதைத்துநிற்கும் செந்நெல் சீடர்
பாங்கருடன் குருபாதம் பணிவதுபோல்
தலைசாய்த்துப் பணியுந் தானே."

என்பது நூலில் ஒரு பாடல்.

பிறகு புலவர் தம்முடைய நூலை அரங்கேற்றஞ் செய்ய எண்ணினர். தம்முடைய மாணவர்கள் வசித்திருந்த இடங்களுக்கெல்லாஞ் சென்றார். கோட்டாறு என்னும் ஊருக்குப் போய்த் தம் சமயத்தினரைக்கண்டு நூலியற்றியுள்ள செய்தியைக் கூறினர். அவர்களோ சாக்குப்போக்குச் சொல்லித் தட்டிக்கழித்தனர். அதனல் இவருக்கு மிகுந்த மனவருத்தம் உண்டாகியது. தம்முடைய மாணவரான சிவலிங்கஞ் செட்டியார் என்பவரைக்கண்டு செய்தியைக் கூறினர். அவர் தம்முடைய நண்பரான பாவாடைச் செட்டியார் என்பவரிடங்கூறி அரங்கேற்றஞ் செய்வதற்கு ஏற்பாடு செய்வதாகக்கூறினர். பாவாடைச் செட்டியார் என்பவர் கண்பார்வை இழந்தவர். அவரிடஞ் செய்தியைக் கூறியபோது அவர் அரங்கேற்ற ஏற்பாடு செய்ய இணங்கினர். நன்னாள் ஒன்றில் அரங்கேற்றம் நிகழ்ந்தது.

"நாலஞ்சம்வா னம்இலங்கும் ஞானரத்ன மஃமூரின்
வாசாய மாய்வீற்ற வான்பரியைக்—கோலத்தூண்
தான்துளைத்துக் கட்டியரோ தாஹாசென் றுரைந்தாம்
வானகத்தின் உள்ள மகிழ்ந்து."

என்னுஞ் செய்யுளைப் படித்தபோது இவருக்கு ஆண்டவனுடைய திருக்காட்சி கிடைத்ததோடு பாவாடைச் செட்டியாருடைய

கண்களும் ஒளிபெற்று உலகத்துப் பொருள்களைக் காணும் பேறு பெற்றனவாம். இச்செய்தியை ஊரில் உள்ள முகமதிய சமயத்தினர் உணர்ந்து தாம் நூல் அரங்கேற்ற உடன்படாமல் போனமைக்காக மன்னிப்புக் கேட்டுக்கொண்டனராம்.

மேலும் இப் புலவருடைய வாக்குப்பலிதம் உள்ளதாக இருந்ததாம். ஆகவே பலரும் இவரைக்கண்டு அஞ்சியொழுகின ராம். ஒருமுறை இவர், "ஆலிப்புலவர் தலைமுழுக ஐந்தாறு கொக்குக் கீழேவிழ" என்று சொன்னாராம். அவ்வளவில் விண்ணிற் பறந்து சென்றுகொண்டிருந்த கொக்குகளில் ஐந்தாறு செத்துக் கீழே விழுந்தனவாம்.

இவர் பாளையங்கோட்டைக்குச் சென்றிருந்தபோது பள்ளி வாசல் ஒன்றில் தொழுகை நடத்திக்கொண்டிருக்கும்போது இவ்வுலகவாழ்வைத் துறந்தாரென்றும் அவருடைய பள்ளி "ஆலியப்பாபள்ளி" என்னும் பெயரோடு இன்றும் பாளையங் கோட்டையிற் சிறந்து விளங்குகிறதென்றுங் கூறுகின்றனர். இவருடைய பிற செய்திகளை விரிவான வரலாற்றிற் காண்க.

## ௮௫௪. செய்குமுகம்மது அப்துல்சலாம் சாகிப் (1909)

இவர் கோட்டாறு என்னும் ஊரில் மெய்ஞ்ஞானகுரு ஆரிபு பில்லா செய்குமுகம்மது முகியித்தீன் சாகிபு என்பவருக்குப் புதல்வராகத் தோன்றித் தம் தந்தையாரிடமே பல நூல்களையும் தமது சமய நூல்களையும் ஓதியுணர்ந்தார். "மெய்ஞ்ஞான வினு விடை" என்னும் நூல் இவரால் இயற்றப்பட்டிருக்கிறது. மேற்படி நூல் முகமதிய சமய உண்மைகள் பலவற்றை விளக்கு வதாக அமைந்துள்ளது. நூலைப் பாராட்டி நூலாசிரியரின் ஆசிரியராகிய சைகு முகம்மது மதீனு சாகிபு, ஆ. பி. அப்துல் காதிறுப் புலவர், மு. கு. சுல்த்தான் முகியித்தீன், செ. செ. முகம் மது செய்கு முகியித்தீன், கோட்டாறு புலவர் அட்டாவதானம் எம். எம். முகம்மது அப்துல்காதிறு சாகிபு, யாழ்ப்பாணம் த. செல்லையா, இலங்காபுரி மக்கூன் புலவர் செ. லெ. அப்துல் கமீது மரைக்காயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

*" அஞ்ஞானக் காரிருள்நீக் கத்துவித உண்மையுள*
*மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த வினுவிடையை—இஞ்ஞான்றின்*
*ஆக்குந் தகைமுகம தப்துல் சலாங்கல்வி*
*பூக்குமுளத் தானைப் புகல்."*

என்பது, சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று. நூல் இருபத்து நான்கு பிரிவுகளாக அமைந்துள்ளது.

## ருடு. செய்யப்ப முதலியார்-த
(19 - நூ.)

*" ......................................................*
*நாட்டினுள் மலிந்த நவிலரும் பல்வளம்*
*பொதுளிய செல்வப் புதுவைமா நகரோன்*
*பஞ்ச இலக்கணம் பயில்தரும் இலக்கியம்*
*எஞ்சலிற் கற்றுணர்ந் தினிய கவிமழை*
*சொரிதரு மேகம் விரிநூல் அகத்துள்*
*புதைபொருள் அனைத்தும் புதுமை பயப்பச்*
*சுவைதர எடுத்துச் சொல்லும்நுண் அறிவினன்*
*பலபிர பந்தம் நலமுறப் புனைந்து*
*பாடும் வரத்தின் பீடமைந் துற்றோன்*
*பொறைதவம் ஒழுக்கம் புண்ணியஞ் சீலம்*
*உறைதரப் பெற்ற உத்தம வித்தகன்*
*பன்னக ரதிசயஞ் சொன்னய மோடு*
*முற்றி யுலாவும் வெற்றிக் கொடியோன்*
*பத்திரத் ததிபன் இத்தரை மாக்கள்*
*உய்யப் பலவறி வுணர்த்தும்*
*செய்யப்ப முதலியாஞ் சீரி யோனே."*

என்று அறிஞர்களாற் பாராட்டப்பட்ட இவர் ஏறக்குறைய எண்பதாண்டுகளுக்கு முன்பு சென்னையில் வாழ்ந்திருந்தார். இவருடைய தந்தையார் புதுவையில் வாழ்ந்திருந்த தம்பு முதலியார் என்பவராவர். இவர் சொர்க்கபுர ஆதீனம் இராமலிங்கத் தம்பிரானிடத்திலே கல்வி கற்றுத் தேறினுர். சென்னையில் "வெற்றிக் கொடியோன்" என்னும் பெயருடன் பத்திரிகை ஒன்றை நடத்தியதன்றிச் சென்னை மேரிராணி கல்லூரியில் தமிழாசிரியராகவும் பணிபுரிந்தார். அந் நாளில் கொடையாளியாகச் சிறந்து விளங்கிய மதுரைப் பிள்ளை என்பவர்மீது மும்மணிமாலை என்னும் நூல் ஒன்றைப் பாடினுர். அந் நூலைப்

புகழ்ந்து பாராட்டித் தஞ்சைச் சமத்தானம் அறந்தாங்கிக் கோட்டை வீராப்புலி சமுத்திரம் சோதிட சாத்திரியார், பா. வேங்கடரமண ஐயர், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, புரசை சின்னச்சாமிப் பிள்ளை, தி. சண்முக பிள்ளை, பேறை தசாவதானம் செகநாதப் பிள்ளை, குண்ணம் முனிசாமிப் பிள்ளை, நாகை நடராச பிள்ளை, நாகூர் வா. குலாம் காதிறு நாவலர், நாகூர் கிதுரு முகமது மரைக்காயர், அட்டாவதானம்-பூவை கலியாணசுந்தர முதலியார், தஞ்சை-கோவிந்தசாமிப் பிள்ளை, பவழை தம்புசாமி முதலியார், சென்னை செல்வ-தேவராச பிள்ளை, நாகூர் அல்லிமரைக்காயர், இராயபுரம் கதிர்வேல் கவி ராயர், உருத்திரகோடிப் பிள்ளை, நாகூர் மு செவத்தமரைக்காயர், அட்டமாநகர் கேசவ சுப்பராய செட்டியார், கு. சடையாண்டிச் செட்டியார், திருமயிலை கண்ணுச்சாமி முதலியார், இராயபுரம் வே. கி. நாராயணசாமிப் பிள்ளை, அப்பாத்துரைச் செட்டியார், புரசை சோதிடம் முத்திருளப்ப பண்டிதர், குலாமுகம்மது சாயபு மரைக்காயர், சவேரி முத்தாப் பிள்ளை, கலியாணபுரம் இராயப்பப் பத்தர், மிக்கேல்சாமிச் செட்டியார், மோகூர் வேங்கடசாமி ஐயர், அ. முனிசாமி நாயகர், ஐயாப்பிள்ளை, முத்துச்சாமிப் பிள்ளை, காரைக்கால் அப்பாத்துரைப் பிள்ளை, நாகூர் பகீர் முகியித்தீன், பொன்னேரி பரமசிவம் பிள்ளை, இயாசுப் பிள்ளை, இராயபுரம் வா. சொக்கலிங்கம் பிள்ளை, சேணியப்ப நாயகர், பெங்களூர் சு. இராமசாமிப் புலவர், பூவிருந்தவல்லி அ. திருமலை ராய முதலியார், கோவளம்-அப்பாச்சாமிச் செட்டியார், இராய புரம் இட்டி ஐயர், பா. கிருட்டிணசாமிச் செட்டியார், நாகலா புரம் புலி-இராசகோபால இராமாநுசதாசர், பு. ப. பொன்னுச் சாமிச் செட்டியார், புதுவை கா. சடாட்சர ஆரியர், இராச ரத்தின நாயுடுகாரு, பா. அ. அ. இராசேந்திரம் பிள்ளை, ம. கோவிந்த செட்டியார், பவழை இராசரத்தின முதலியார், தஞ்சை சட்டாவதானம் வைரக்கண் வேலாயுதப் புலவர், தண்ட லம் பாலசுந்தர முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளனர்.

**'' இல்லார்க் கன்பிங் கிடம்பொரு ளென்பயன்**
**பல்கலை ஆய்ந்த பன்னகத் தலைவ**
**கல்வியிற் சிறந்த கண்மணி மதுரைவேள்**

*வெல்லற் கரிய விவேகருஞ் சரமென*
*வில்லுமிழ் மணிசிர மீதுனக் கிருப்பினும்*
*கடுவுடைத் தான காரணம் ஓர்ந்து*
*வடுவொழித் திடுவான் மண்சுமை கொண்டாய்*
*பிலத்தினில் ஒளித்தாய் ஆதி*
*குலத்தொளிர் குலமணி குலவுடு பதிக்கே.''*

என்பது மும்மணி மாலையில் ஒரு பாட்டு.

## அருஎ. செய்யிது அன்பிய்யா சாகிப்

இப் புலவர் தென்காசி வடகரையூரில் இருந்தவர். 106 பாடல்கள் அடங்கிய நபிநாயகன் பிள்ளைத்தமிழ் என்னும் நூலை இவர் பாடினுர். இந்நூல் ஏறக்குறைய நூருண்டுகட்கு முன்பு அச்சிற் பதிப்பித்து வெளியிடப்பட்டது.

*'' ஆதியின் அருளோடு வரிசைகள் தங்கிய*
*அகமது நபிவாழ*
*ஆல சுகாபொடு தீனவர டங்கலும்*
*அறிஞரு முதல்வாழ*
*மேதினி மீதினில் இசையொடு படிப்பவர்*
*விதிமுறை யுடன்வாழ*
*விழைவொடு கேட்பவர் கொடுப்பவர் கிளையொடு*
*வியம்பெற மிகவாழக்*
*கீதம தொடுபல சீவசெந் தடங்களும்*
*கெழுமையின் உறவாழக்*
*கேதமு மணுகிடா விண்ணவர் கூறுதீன்*
*கிருபையுடன் வாழத்*
*தீதொடு பலவினை அகற்றியும் வாழநீ*
*தேரை நடத்துகவே*
*செயசெய சிங்கமுகமதுநபியே*
*தேரை நடத்துகவே.*

என்பது அப் பிள்ளைத் தமிழில் ஒரு பாட்டு,

## அருசு. செய்யிது அபூபக்கர்ப் புலவர் - ந

இவர் காலங்குடியிருப்பு என்னும் ஊரில் நல்லராவுத்தப் புலவருக்கு மகனுகத் தோன்றியவர். அசனலிப் புலவருக்குத் தம்பி. இவரும் நன்கு கல்விகற்றுச் சிறந்த புலவரானுர். இசைப் பாடல்கள் முதலியன பாடியுள்ளார்.

"மங்குல் நெடுங்கடை தங்கி வரும்பிர
சங்க சவுந்தர முந்த விளங்கிடு
நன்குள செம்பொனி லம்புவி யுந்தரு
திங்க ளருங்கக னெங்கு நிறைந்துள
செம்மலி யம்புமுகம்மது நபியே."

என்பது இவருடைய இசைப்பாடல் அநுபல்லவியில் ஒன்று.

## ௮௫௮ செய்யிது முகமதுப் புலவர் - செ

இவர் மதுரைமாநகரில் செய்குமீரான் என்பவருடைய மகனாகத் தோன்றினார். இளமையிலேயே தாய் தந்தையரை இழந்த இவர் புலமைக் கல்வியை நன்கு கற்றுத்தேறினார். தெய்வத் திருவருளும் இவருக்கு அமைந்தது. ஐயம்பேட்டை என்னும் ஊரில் பள்ளியொன்றமைத்துச் சிறியவர்கட்கும் பெரியவர்கட்கும் கல்வி போதித்துக்கொண்டிருந்தார். அதிவீரராமன் பட்டினத்தில் இருந்த முகமதியர்கள் இவருடைய பெருமையை உணர்ந்து அதிவீரராமன் பட்டினத்திற்கு அழைத்துச் சென்றனர்.

அதிவீரராமன் பட்டினத்தில் கதிர்வேலு உபாத்தியாயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தமிழ்ப் புலமைபெற்றிருந்ததன்றி மந்திரவாதியாகவும் இருந்தார். முதலில் கதிர்வேல் உபாத்தியாயருக்கும் செய்யிது முகமதுப் புலவருக்கும் சிறிது மனக்கோட்டம் இருந்தது. முகமதுப் புலவர் தமது அறிவாற்றலாலும் அருளாற்றலாலும் அறுமுகப் பரமன்மீது பதினன்கு செய்யுட்கள் அடங்கிய சிறுநூல் ஒன்றைப் பாடி அறுமுகப்பரமனது காட்சியை அனைவரும் காணுமாறு செய்துவிட்டார். இதன் பிறகு இவருடைய புகழ் யாண்டும் மிகுதியாகப் பரவிவிட்டது.

இவர் அலிநாமா, மகாபாரத அம்மானை, நூறு நாமா, சாந்தாதியசுவமகம் என்னும் நூல்களை இயற்றியுள்ளார். இவருக்கு மதுரகவி என்னும் சிறப்புப் பெயரும் வழங்கியது.

"உளந்தெளிந் துணர்ந்த வகாபுதீன் சாகிப்
உயர்பதம் சிரசினில் அணிந்தே
தெளிந்துமுன் விஷய கேசரி எழில்சேர்
சியகே தனந்திரு மாது

விளங்கிய கூடல் நாறுத்தீன் லெப்பை
மெய்யனும் செய்குமீ ரான்சொல்
வளம்பெறு செய்யித் முகமதிச் சரிதம்
வழுத்தினன் கவிதையி ஞலே.''

என்பது அலிநாமாவில் ஒரு பாட்டு. இவருக்கு மக்கள் இருவர் இருந்தனர். அவர்களுள் மூத்தமகன் கல்வி கற்காமல் தான் தோன்றியாகத் திரிந்துகொண்டிருந்தான். இவர் அவனை எதிரே அழைத்து உட்காரச்செய்து சில மறைகளை யோதி எச்சிலை உமிழ்ந்த அளவில் அவன் அறிவுநலம் பெற்றுச் செய்யுள் பாடுந் திறமடைந்தான்.

## அருகூ. செய்யிது முகமதுப் புலவர்-ந

இவர் கோட்டாறு என்னும் ஊரில் முகமதிய சமயத்தில் தோன்றியவர். "அபாயெசீதுல் புஸ்தாமி'' என்னும் நூலைப் பாடியுள்ளார். இந் நூல் நூறு பாடலைக் கொண்டது.

'' எண்பது மசகலாவை எடுத்தபா யெசீது கூறப்
பண்புற ஆயிரம்பேர் திரியைம்ப தாயிரம்பேர்
எண்படக் கேட்டுத் தூய இசுலாத்தில் வந்தசெய்கை
நண்புறுங் கிச்சரக் கூற தாயனே காப்பு நீயே.''

என்பது காப்புப் பாடல்களில் ஒன்று.

## அசுO. செல்லக்குட்டிப் பிள்ளை
(1879)

இவர் ஆதம்பாக்கம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர் தமிழ்ப் புலமையை இவர் மிக எளிதாக அடைந்து செய்யுள் பாடும் திறமும் அடைந்தார். அதனுல் வரகவி என்னுஞ் சிறப்புப் பெயரும் உண்டாகியது. பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துப் பிள்ளைகளுக்குக் கல்விகற்பித்தலையே தம்முடைய அலுவலாகக் கொண்டிருந்தார். சாங்குசித்த சிவலிங்க நாயனுர் என்பவர் இயற்றிய பூரணுநந்தோதயம் என்னும் நூலுக்கு இவர்,

'' கந்தமலர் வாவிசூழ் பிருங்கிமா நகருறை
கனத்தசாத் ரகுல திலகன்
காதலொடு ரங்கையன் ஈன்றதவ புத்திரன்
கல்விப்ர வாக நிபுணன்

சிந்தைமிகப் பொங்கியே சிவலிங்க நாயனுர்
சிறப்பொடரு மூன்று சித்தர்
செய்தவே தாந்தநூல் யாவையும் உணர்ந்துதான்
தெளிந்துஞ்சி வானுபூதி
அந்தமுறும் அத்துவித அட்டாங்கயோகமுறை
அறுசமய கோட்பா டெலாம்
ஆசிரியர் கண்ணுடைய வள்ளல்திரு அருளினுல்
ஆனந்த மவுன சுகுணன்
சந்ததம் நித்தியா நந்தசை தன்யநிலை
தத்துவமெ லாமொ டுக்கி
தாரணியில் பூரணு நந்தோத யச்சுருதி
தந்தனன் மேலோங் கவே ''

என்னும் பாடலாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## அசுக. செல்லப்ப சுவாமிகள்-மௌ
(20 - நூ.)

திருத்தில்லை மௌனதேசிகராதினத்தில் ஆருவது பட்டத்தாசிரியராக எழுந்தருளியிருந்த இவர் இலக்கண இலக்கிய நூல்களிலும் சமய நூல்களிலும் மிகுந்த பயிற்சியுடையவர். கந்தபுராணச் சுருக்கம் முதலிய நூல்களைப் பிழையறப் பரிசோதித்துத் திருத்தமான பதிப்பாக வெளிப்படுத்தியுள்ளார். செய்யுள் செய்வதிலும் திறமைமிக்க இவர் திருவாரூர்ச் சிவாநந்த சுவாமிகள் இயற்றிய நாநாசீவவாதக் கட்டளை வியாக்கியானம் முதலிய நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

" ...... ............ ..................................
காப்புடைக் கடவுடன் மாப்பெருந் தேவி
ஒப்பியையம் புலனும் ஒருங்கிய மனத்தோ
டாணுவி னமர்ந்தே அறந்தலை நின்று
பூணர வார்த்த பொறியிருட் களத்து
நாதனைத் தெய்வ நாயகன் தன்னை
வாதனை தீரிய வழிபடப் பெற்ற
காரண முறுதலிற் கமலா லயமென
ஆரண மொழிதரு மமலமே வியதாய்
நிகிலமும் புரக்கும் நீணெறி யாதிய
அகிலமும் புரக்கும் அரசர்கள் தெளிவான்
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ''

என்பது நாநாசீவவாதக் கட்டளை வியாக்கியானச் சிறப்புப் பாயிரத்தின் ஒரு பகுதி. இவர் தென்னாற்காடு மாவட்டத்தில் குறிஞ்சிப்பாடியில் செங்குந்த மரபில் 1873 ஆம் ஆண்டில் தோன்றியவர். இளமையில் ஆறுமுக நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலையில் கல்வி பயின்றார். பிறகு ஈசானிய மடம் இராமலிங்க அடிகளிடம் கல்வி கற்றார். இராமலிங்க அடிகள் அடிக்குறிப்புகளுடன் பல நூல்கள் வெளியிட்டுள்ளார். அவ்வடிக் குறிப்புகள் இவரால் எழுதப் பட்டவையென்பர். கோயிலூர்ப் பொன்னம்பல அடிகளிடம் வேதாந்த நூல்களையும் ஓதியுணர்ந் தார். பாடல்களை மிக விரைவாக இயற்றுந் திறமை பெற்றவர். ஏழை எளியவர்களிடத்தில் அருள் மிக்கவர். தம்முடைய ஆதீ னத்தில் உணவு வழங்கும் அறத்தை மேற்கொண்டு தளராதுஞற் றினார். அவ்வறம் இன்றும் சிறப்பாக நடந்துகொண்டிருக்கிறது. இப் பெரியார் 1923 ஆம் ஆண்டில் இறைவன் திருவடி நிழலை எய்தினார்.

## அகூஉ. செல்லம்மாள் (1913)

இவ்வம்மையார் திருநெல்வேலியைச் சேர்ந்த பாட்டப்பத்து என்னுஞ் சிற்றூரைச் சேர்ந்தவர். வேதாந்த சித்தாந்த சமரசக் கீர்த்தனை எனப் பெயரிய இசை நூலினை இயற்றியுள்ளார். ஐந்நூறு பக்கங்கட்கு மேற்கொண்ட புத்தகமாக விளங்கும் வண்ணம் வெளிவந்துள்ள நூலில் நூற்றுக்கணக்கான இசைப் பாடல்கள் அடங்கியுள்ளன. அமர்நீதி வரலாறு, சோமயாசி வரலாறு, திருநீலகண்டர் வரலாறு, மார்க்கண்டேயர் வரலாறு என்பவைகளும் இசைப்பாடல்களாக அமைந்துள்ளன.

ராகம்: பியாக. தாளம்: ஆதி.

பல்லவி

**ஆடிய பாதங்கண்டால் வாடிப்போம் சன்மபந்தம்**
**ஆடிய பாதங்கண்டால் ஓடிப்போம் சன்மபந்தம்**

அநுபல்லவி

**தேடியிரு பேரும்காணு தேடியிரு பேருங்காணு**
**தேடியிரு பேருங்காணு**

சரணம்

செஞ்சிலம்பு கொஞ்சிடவே சிற்சபை தன்னில்
அன்புடன் சிற்சபை தன்னில் (ஆடிய)

அருமறையுந் தேடிக்காணு அய்யன் பாதத்தை
சிற்சுகன் மெய்யன் பாதத்தை (ஆடிய)

தஞ்சமென்றோர் வாட்டந் தீர்த்து நின்றாடும்
பாதம் அஞ்சலென்றாடும் பாதம் (ஆடிய)

விண்ணிலொரு காலைத் தூக்கி வேகமாக நின்
றன்புடன் வேகமாக நின்று (ஆடிய)

காலனைத் திரணமா அன்றுதைத்திட்ட ஈசன்
தேவிலோகாம்பிகை நேசன் (ஆடிய)

என்பது நடராச வணக்கப் பாடல்களுள் ஒன்று.

## ௮௬௫. செல்லையாச் செட்டியார் - வை
(20 - நூ.)

இவர் சோழவள நாட்டிலே தஞ்சைமாவட்டத்திலே முத்துப் பேட்டைக்கு அண்மையில் உள்ள ஆலங்காடு என்னும் ஊரில் சைவவேளாளர் குலத்தில் தோன்றியவர். தேவகோட்டை சைவ சித்தாந்த வித்தியாசாலையில் கல்வி பயின்றவர். மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வுக்கெழுதி வெற்றி பெற்றவர். திருவாவடுதுறை ஆதீன சைவப்பிரசாரகராகவிருந்த தூத்துக்குடி பொ. முத்தைய பிள்ளையிடம் சைவசித்தாந்த நூல்களைப் பாடங்கேட்டவர். காளையார் கோயில் திருவாரூர் முதலிய இடங்களில் வசித்திருந் தார். திருவாரூரில் 'செந்தமிழ்ப் பானு' என்னுந் திங்கள் வெளி யீட்டையுந் தொடங்கிச் சிலகாலம் நடத்திக்கொண்டிருந்தார். எனக்கு இலக்கிய நூல்களைக் கற்பித்தவர்களில் இவரும் ஒருவர். இவர் இயற்றிய நூல்கள் மிளகாய்ச் சுவாமி புராணம், மாதவச் சிவஞான சுவாமிகள் பிள்ளைத்தமிழ் முதலியன. இவர் நடு அகவையிலேயே இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

"அறியாமை அறிவெனும் இரண்டையும் அகற்றியே
அறிவினறி வருளினாலே
அறியா தறிந்ததை அகத்தே முறைப்படி
அமைத்துமப் பொருளிடத்தே

நெறியாகும் அன்புவைத் துற்றவந் தக்கரண
நேசம்விட் டேயடங்கி
நின்றிடுநி என்றுவே லப்பதே சிகனருள
நின்றுமந் நெறியிலேயே
பிரியாத சிவனும் பிரிந்துதோன் றிப்பேத
பிரபஞ்ச முந்தானதாம்
பெற்றியுந் தோன்றியிவை யாவுமல வசகப்
பிறங்கனு பவமுறுஞ்சீர்த்
திறமேவு கோமுத்தி புரமேவு செல்வனே
சிறுதே ருருட்டி யருளே
சிவஞான தேவ நற்றவஞான போதனே
சிறுதே ருருட்டி யருளே.

என்பது இவர் இயற்றிய சிவஞான சுவாமிகள் பிள்ளைத் தமிழில் ஒரு பாட்டு. இந்நூல்களைத்தவிர வேறு சில நூல்களையும் இவர் எழுதினர். அவைகள் அச்சாகவில்லை.

## ௨௱௪௰௪. செல்லையாப் புலவர் - நெ. வை (20 - நூ.)

இவர் ஈழவள நாட்டிலே வண்ணைநகர் என்னும் ஊரினர். இவர் "நல்லைச் சண்முகமாலை" என்னும் நூலைப் பாடியிருக்கிறார். நூறு பாடல்களைக் கொண்ட அந்நூல் நல்லூர் அறுமுகப் பெருமான் மேலது. நூலினைப் பாராட்டி, வித்துவான் சி. கணேசையர், நவநீதகிருட்டிண பாரதியார், ச. பொன்னம்பலம்பிள்ளை, மாணிக்கத்தியாகராச பண்டிதர், வ. சு. இராசையனுர், வண்ணைநகர்-க. வைத்தியலிங்க பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"அறுமுகமும் பன்னிருசெங் கரமும் வேலும்
அபயவர தமுங்கடம்பின் அலங்கல் மார்பும்
குறுநகையும் கருணைபொழி விழிமுந் நான்கும்
குஞ்சரமான் மகளிருவர் குலவந் தோகை
பெறுமயின்மேல் அமர்ந்ததிருக் கோலமென்றும்
பிரியச்தென் நெஞ்சினுள்ளே பேணுநிற்கும்
உறுவதெது வரினுமொளிர் வேற்கரத்தான்
உயிர்த்துணையாய் வருவனென உளங்க ளித்தே"

என்பது மாலையில் இரண்டாவது பாடல்.

## அகூ௫. செல்வப்பெருமாள் கவிராச பண்டிதர்-கா

ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்கு முன் சென்னைமா நகரில் சிறந்து விளங்கிய இவர் காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியார் கல்விச்சாலையில் தமிழாசிரியராகப் பணிபுரிந்திருந்தார். திருத்தணிகை விசாகப்பெருமாளையர், திருவாவடுதுறைத் தாண்டவ ராய சுவாமிகள், பாடி மாசிலாமணி முதலியார், புரசை அட்டாவ தானம் சபாபதி முதலியார் முதலியோர் இவர் காலத்தில் இருந்த சிறந்த தமிழ்ப்புலவர்கள். தம் நண்பராகிய காஞ்சிபுரம் சபாபதி முதலியார் பெரியபுராணத்தை அச்சிட்டு வெளியிட்டபோது இவர்,

> " நன்கமரும் வையாவூர் அருணாச
> லேந்திரன்சொல் நயமிக் கோராப்
> புன்கவிஞர் தமக்கன்றிப் பொருவில்பெருங்
> கவிஞருக்குப் பெருமான் பூமேல்
> பொன்பொலியுந் திருக்கச்சிச் சபாபதிவள்
> ளலைக்கொண்டு புரைதீர்த் தோங்கும்
> மன்பெரிய புராணமச்சுப் பதிப்பித்தான்
> உலகில்தனி மதிப்பித் தானே."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்:

## அகூகூ. செல்வராசுச் செட்டியார்
(20 - நூ.)

இவர் பி. ஏ. எல். டி. வரை ஆங்கிலக் கல்வி கற்றவர். தமிழறிவும் பெற்ற இவர் 'சேசுநாதர் அம்மானை' என்னும் நூல் பாடியுள்ளார்.

> " ஆதிநா ளேதேன் அம்பொழிலில் உண்டான
> தீதுநிறை பாவத் தீங்கதனைப் போக்குதற்கு
> மாதுகன்னி மாமரிபால் வந்துதித்த தேவசுதன்
> கோதில் சரிதை தன்னைக் கூறிடுவேன் அம்மானை
> மூவா முதல்வனவன் மூவுலகக் காரணனைப்
> பாவா லறையொன்றைப் பாங்குருவைப் போற்றி செய்து
> ஏவாள் பழியேற்கா ஏந்திழையாங் கன்னிகையைக்
> காவல் புரியுமந்தக் கைத்தாதை சூசைதனை

நாவாரப் போற்றிசெய்து நவிலுவேன் அம்மானை
ஆவலுந்தான் தீர அறைகுவேன் அம்மானை
குற்றங் குறையிருந்தால் கோதொழித்துக் கொள்ளுவது
உற்ற பெரியோரின் ஒண்கடமை அம்மானை.''

என்பது நூலின் தொடக்கம்.

## அகூஎ. செவத்த மரைக்காயர்

இவர் நாகூர் தர்கா வித்துவான், அ. தம்பி சாகிப் மரைக் காயர் மகன். இவர் நபிநாயகத்தின் பெயரால் மக்காக்கோவை ஒன்று இயற்றினார். 437 செய்யுட்கள் அடங்கிய இக் கோவை யைத் தவிர வேறு கோவைகளும் கலம்பகம், பிள்ளைத்தமிழ், அந்தாதி, மாலை ஆகியவைகளும் இயற்றினார்.

## அகூஅ. செவ்வைச் சூடுவார்

இவர் பாண்டிவள நாட்டிலே, '' திருமருவும் பஞ்சலக் கண வேலை பொங்கிச் செழிக்குமிரு நிதிகொழிக்கும் தென்னிம்பை '' என்று அறிஞர்களால் புகழப்பட்ட வேம்பத்தூரிலே அந்தணர் குலத்திலே மாதவ பண்டிதர் என்பவருடைய வழிமுறையிலே தோன்றினார். இவர் வடமொழியையுந் தென்மொழியையும் நன்கு கற்றுணர்ந்து திருமாலிடத்திலும் பெருமால்கொண்டவ ராய்ச் சிறந்து விளங்கினார். இவர் வடமொழியில் இருந்த பாகவதத்தைத் தமிழில் மொழிபெயர்த்து ஐயாயிரஞ் செய்யு ளமையப் பாடினார். இச் செய்தியை,

'' கதிக்குமறு பிறப்பொழித்துக் கதிகொடுக்கும்
பாகவதக் கதையை முன்னம்
மதிக்குமுயர் வடமொழியால் புனைந்தருள
வியாதமுனி வரனே மீள
மதிக்கு நிம்பை மாதவபண் டிதச்செவ்வைச்
சூடியென உலகு போற்ற
விதிக்குமறை யவர்குலத்தில் தோன்றியருந்
தமிழாலும் விளம்பி னானே.''

என்னுஞ் செய்யுளும் விளக்குகின்றது. இவர் இயற்றிய பாகவதம் பாகவத புராணம் எனவும், விண்டு பாகவதம் எனவும் பெயர் பெறும்.

"களைத்துவண் டிமிர்துழாய்க் கண்ணன் மாக்கதை
மனத்துற வழங்குநர் மகிழ்ந்து கேட்குநர்
வினைத்திருக் கற்றுறு மெய்ம்மை யாதியா
நினைத்தன பெற்றிவண் நீடு வாழியே."

என்பது நூற்பயன் உரைக்கும் பாட்டு.

## அ௬௬. சென்ன மல்லையர்

இவர் சிதம்பரம் பச்சகந்தையர் மடத்தில் இருந்தவர். கல்வி கேள்விகளில் வல்லவர். இவர் திருக்குறள் சிலவற்றிற்கேற்ற கதைகளை இரண்டடியில் அமைத்துச் சிவசிவா என்பதையுஞ் சேர்த்துச் சிவசிவ வெண்பா என்னும் நூல் ஒன்று செய்தார்.

"என்றும் பதிளுறெனவரனுர் ஓதியசொல்
சென்றதே இன்றுஞ் சிவசிவா—நன்றிபெறச்
சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து."

என்பது நூலில் ஒரு பாட்டு.

இவர் நூல் இயற்றிய காலம் முதலியவைகளைக் கீழ்வரும் பாட்டுக் குறிப்பிடுகிறது:

"ஆயிரத் தறுநூற் றெண்பது பத்தாம்
ஆண்டுசெல் சகாப்தநா ளதனில்
மாயிரு ஞாலத் ததிகமாந் தில்லை
மன்றில்வாழ் சென்னமல் லையர்
பாயிருள் துரக்கும் பரிதிபோற் பாவப்
படரகற் றிடுஞ்சிவ வெண்பாத்
தீயவை போக்கிப் பரகதி சேரச்
செப்பினன் தெளிதவத் தவர்க்கே."

## அ௭௦. சென்னகேசவலு நாயுடு - ஆ. மே
(20 - நூ.)

இவர் சென்னைமாநகரில் சிந்தாதிரிப்பேட்டையில் வாழ்ந்திருந்தவர். (இவருடைய முன்னோர்கள் வாழ்ந்திருந்த இடம் ஆரணிக் கடுத்தமேடிகை என்னுஞ் சிற்றூர் என்று தெரிகிறது.) சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் ஆசிரியராக இருந்த பூ. கிருட்டிண

சாமி முதலியார் என்பவரிடத்தில் இலக்கண இலக்கியங்கள் கற்றுத் தேறினர். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் அநுமான் அந்தாதி முதலியன. இவர் பல நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார். இவருடைய சிறப்புப்பாயிரப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

'' சீர்பூத்த தணிகைவரை தன்னில் வாழும்
செவ்வேள் தன் சேவடிக்குச் சிறந்தமாலை
ஏர்பூத்த வெண்பாவில் ஓர் அந்தாதி
இரட்டைமணி மாலையென இசைத்தானூல்
தார்பூத்த கொன்றைமதி அணிந்த மௌலி
தற்பரன்தன் தாளிணைகள் மறவா தேத்தும்
நார்பூத்த நீலகண்ட நாவலன்தன்
நற்புகழை இப்புவியில் நவிலற் பாற்றே.''

## அஎக. சேகுமதாறு சாகிப் புலவர்
(19 - நூ.)

இலங்கையில் கருங்கொட்டித் தீவு என்னும் ஊரிற் பிறந்தவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலமையடைந்தார். இந்தியாவுக்கு வந்து இங்கும் பலகாலம் வசித்திருந்தார். இவருக்குத் திடீரென்று கண் பார்வை மங்கத் தொடங்கியது. நாகூரையடைந்து ஆண்டவனை வணங்கித் தவங்கிடந்தார். கண்பார்வை விளக்கமடைந்ததோடு கல்வியறிவுஞ் சிறந்தோங்கியது. பல பாமாலை, நாகூர் ஆண்டவர் ஒருபா ஒருபஃது, புலார்பிசல் காவியம், நாகூர் ஆண்டவர் பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

## அஎஉ. சேட ஐயங்கார்
(கி. பி. 1870)

இவர் சோழவள நாட்டிலே சீரங்கத்திலே வைணவ அந்தணர் குலத்திலே பிறந்தார். தந்தையார் பெயர் சீநிவாச ஐயங்கார். தாயார் பெயர் சீரங்கம்மாள். இவர் இலக்கண இலக்கிய நூல்களை நன்கு கற்றுப் புலமையடைந்து சிறந்து திகழ்ந்தார். தாயாருடைய வேண்டுகோளின்படி குணாகரம் என்னும் நூலை இயற்றினர்.

கடவுள் வணக்கம், ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப் படலம், அரசியல் படலம், காபுகு படலம், தீவினை சூழ்ச்சிப் படலம், நல்வினை சூழ்ச்சிப் படலம், முயல்வினை காட்டுப் படலம், அரவுகொல் படலம், கைம்மலை செகுத்த படலம், பேய் பொருத படலம், மெய்வழி தொடர்ந்த படலம், வரைக்காட்சிப் படலம், கலைகாண் படலம், மலையேறு படலம், திருமணப் படலம், கலையேறு படலம், போதுகொய் படலம் என்னும் பதினெட்டுப் படலங்கள் இந் நூலில் அடங்கியுள்ளன.

நூலைப் பாராட்டி, இயற்றமிழாசிரியர்—திருத்தணிகை விசாகப்பெருமாளையர், திரிசிரபுரம் ஆறுமுகம் பிள்ளை, அட்டாவ தானம் நாராயண பிள்ளை என்போர் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளனர்.

> '' உடற்பகுதி உணர்ந்ததனை இயக்கும்வளி
> நிலைமையறிந் துறுமுகத்தால்
> அடற்கரிய பகைதடிந்து மெய்ஞ்ஞானம்
> புணர்ந்துபுக ழாக்கை வைத்தே
> கெடற்கருமின் பஞ்சாரும் வகைசிவர்
> அறிந்தெளிதிற் கிட்டவன்பால்
> திடப்படுசே ஷையங்கார் இயற்றுகுறு
> கரநூலைச் சேவிப் போமே.''

என்பது நாராயண பிள்ளையின் பாடல்.

> '' காலலைக்குங் கொடிமாடக் கடிநகரந்
> தனைப்புரக்குங் கனகமேரவி
> வேலலைக்குங் கரத்தானை வெயிலலைக்கும்
> மணியானை விளங்கு ஞான
> நூலலைக்கும் நாவானை நுவலரிய
> குணத்தானை நுணங்கு கேள்வி
> யாலலைக்குஞ் செவியானை யறமலைக்கு
> மனத்தானை அகந்தூ யானை.''

என்பது அரசியல் படலத்தில் ஒரு பாட்டு. இந்நூல் 1870 ஆம் ஆண்டில் சென்னை-ஊ. புட்பரதச் செட்டியாரது கலாரத்நாகர அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டு வெளிவந்திருக்கிறது. இந் நூலைத் தவிர இவர் வேறு சில நூல்களும் இயற்றினர். அவை களில் சில அச்சேறின. சில அச்சேறாமலே மறைந்து ஒழிந்த தாகத் தெரிகிறது.

## ௭௯௩. சேட ஐயர்
### (20 - நூ.)

சோழவள நாட்டிலே திரிசிரபுரத்திற் கணித்தாகவுள்ள திருவானைக்காக் கொண்டயம் பேட்டையில் இருந்தவர். மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் மாணவராகிய தியாகராசச் செட்டியாரிடங் கல்விகற்றுச் சிறந்த புலமை பெற்றவர். மாணவர் பலருக்கு நூல்களைப் போதித்துக்கொண்டிருந்தவர். இவர் திருக்குருகூர்ச் சித்தர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் வழங்கி யுள்ளார்.

''ஏழிசையின் பயனேங்க எண்டிசையுங்
 களிதூங்க எம்போல் வார்கட்
கூழிதொறும் அமுதமுண உயர்பதிக
 மழைபொழிந்தெவ் வுலகும் போற்ற
ஆழியுண்ட முனியருளால் அருள்ஞான
 சித்தரெனும் அரும்பேர் பெற்றுக்
காழிவந்தா னெனப்புவியிற் காட்சிதரு
 நிராலம்ப கருணை யாளன்.''

வேறு

''சித்தர்தந் நெறியே பொருளெனக் கொண்டோன்
 சித்திகள் பற்பல புரிந்தோன்
அத்தன்வாழ் தலங்கள் தொறுந்தினஞ் சென்றே
 ஆயிரம் ஆயிரம் பாக்கள்
வித்தக அருளால் விளம்பினன் மீண்டும்
 விரும்புதன் அன்பர்கட் கிரங்கிச்
சுத்தவே தாந்த மயமென அரங்கர்
 துணைப்பதத் திலங்க வோர் மாலை.

தன்றென உரைத்தான் ஞானயோ கிகளும்
 நாள்தொறும் இறைஞ்சிடும் பதத்தான்
தென்றலங் குழுவி சிந்துதென் மலையில்
 சிலபகல் அமர்ந்துளான் தெய்வ
மன்றுதொட் டடியார் வேண்டிய வாறு
 வழங்குவன் கருணையே வடிவான்
குன்றெனும் புகழான் அவன்பெருந் திறலைக்
 கூறுதற் கியாவரிங் குளரே.''

என்னும் பாடல்களால் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

## அஎச. சேடகிரி அய்யர் - கா. சு

(20 - நூ.)

சென்னை நகரில் இருந்த இவர் ஆங்கிலமொழியினும் தமிழ் மொழியினும் வல்லவர். வாணியம்பாடி முதலிய இடங்களில் ஆசிரியராக இருந்தார். இவர், "பாரத வசனம்" "ஆநந்த விசய ரங்கர்" "எல்லாம் நானே" "இகபரசுகம்" முதலிய உரைநடை நூல்களை எழுதியுள்ளார்.

## அஎரு. சேடகிரி சாத்திரியார் - ஏ

(19 - நூ.)

இவர் சென்னைமா நகரில் இருந்தவர். வடமொழியிலும் வல்லவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் வடமொழிப் பேராசிரியராகப் பணிபுரிந்தவர். இவர் 'திராவிட சப்த தத்வம்' என்னும் நூலை இரண்டு மூன்று பகுதிகளாக இயற்றியுள்ளார். அந் நூலில் வடமொழி தென்மொழி இலக்கண மாறுபாடுகள் முதலியன நன்கு விளக்கப்பட்டுள்ளன.

## அஎசு. சேடகிரிராயர்

(19 - நூ.)

இராமநாதபுரத்தில் கோட்டைச்சாமித் தேவர் காலத்தில் இருந்த தமிழறிஞர். தனிப் பாடல்கள் பல இயற்றியுள்ளார். நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை. அந் நாளிற் சென்னைமா நகரில் இருந்த வியாசர்பாடி விநாயக முதலியார் என்னும் வள்ளலுக்கு இவர்,

"விசுபுகழ் கொண்டநற் சேதுபதி மானேசர்
விண்மணி குலத்து தித்த
மேன்மைபெ றிராகவனை அனையகோட்டைச் சாமி
வேந்தர்க்கு நேச ரத்நம்
தேசத்தில் உயர்சென்னை மாநகரில் வாழ்கின்ற
செல்வன்மா தர்க்கு மாரன்
செப்புநிச வசனத்தி லேயரிச் சந்திரன்
செங்கோல் தவாத சுமுகன்

தேசுபெறு செவ்வருச் சுனைவிநா யகராச
சேகரனை வசமாக் கிறேன்
தீக்கவிய னெனுமிந்த்ர சித்தன்புரிந்திட்ட
தீவினைகள் என்னும் நாசு
பாசபந் தந்தனைப் பஞ்சுபஞ் சாகப்
பறந்தோட வேய றுத்துப்
பலசூத னனின்மேன்மை பெறுவரேல் அன்னவன்
பான்மைபுக லற்கெளியதோ.''

என்னுஞ் செய்யுளை எழுதினர். இவர் சமுத்திர வருணனையாகப் பாடிய செய்யுட்கள் பல. அவற்றுள் ஒன்று.

''நன்னீர் எழிலிக்கு நல்கி அறுசுவையோ
டன்னம் உலகோர்க் களித்தலால்—மன்னிச்
சுரர்க்கமுத மீதலால் தொல்லுலகைக் காக்கும்
நரலையே நாரா யணன்.''

என்பதாகும். மற்றும் இவருடைய கற்பனை நயங்கள் அறிந்து மகிழத்தக்கன.

## ௬௭௭. சேடாசல நாயுடு - வே

(20 - நூ.)

கோயமுத்தூர் வட்டம் காங்கயம் என்னும் ஊரில் இருந்த சிறந்த தமிழ்ப்புலவர். அட்டாவதானஞ் செய்பவராகலின், தம் பெயருக்கு முன்னால் அட்டாவதானம் என்னுஞ் சிறப்புப் பெயரும் அமையப் பெற்றவர். சேலம் மாணிக்க முதலியார் என்பவர் இயற்றிய சங்கீத சந்திரிகை என்னும் நூலுக்கு இவர் சாற்றுக் கவி வழங்கியுள்ளார்.

'' சங்கீத சந்திரிகை யென்றபெயர்
புனைந்தொரு நூல் தந்திட் டானால்
இங்கிதன் பெருமைதனை எவர்வியவார்
யாழ்முனியும் இனிய தும்பு
ருங்கீத சாரமுனர் விஞ்சையரும்
இதன்சாரம் நுகர இந்நூல்
எங்கித ரந்தெரிவாம் எனநிதமும்
வேண்டுவரேல் இயம்பல் யாதே.''

என்பது சாற்றுக்கவியில் ஒரு பாட்டு. மற்றும் பல நூல்களில் இவருடைய சாற்றுக்கவிகள் காணப்படுகின்றன.

## அஎஅ. சேடாத்திரி ஐயங்கார் - நா
## (1876)

நிலமகள் முகமதில் இலகிய திலகமென், றெண்டிசையோர் புகழ் தொண்டை நன்னாட்டினில், பொங்குதண்டலைசூழ் செங்காடென்னும் நற்பதிதன்னில் அந்தணர் குலத்தில் தோன்றியவர் இவர். இவருடைய தந்தையார் பெயர் நாராயண ஐயங்கார். சேடாத்திரி ஐயங்கார் தக்க அறிஞர்களிடத்திலே இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுப் புலமைபெற்றார். குசேலருடைய வரலாற்றை இவர் நாடகமாக இயற்றியுள்ளார்.

**சுசீலைசொல் - விருத்தம்**

*" தனத்தினை மிகவும் பெற்றோர் தனையர்கள் அடையவேண்டி*
*மனத்துய ரோட நேகம் மாதவஞ் செய்து மில்லை*
*கனத்தவோர் இருபத் தேழு காண்மூனையரை என க்கேன்*
*சனித்திட விதித்திட் டாளோ சதுர்முகன் அறிகிலேனே.*

*சம்பத்தை அடைந்தோ ருக்கே தனயர்கள் இருக்க வேண்டும்*
*வெம்பசி தன்னால் நாளும் மெலிந்திடும் எனக்கோ இந்தக்*
*கும்பலா மைந்தர் தம்மைக் கொடுத்துச்சஞ் சலப்ப டுத்தும்*
*எம்பெரு மான்தன் கூத்தை என்னென்று சொல்ல லாமே."*

இவை நூலில் இரண்டு பாடல்கள், ஆறைமாநகர் முத்தமிழ்க் கவி திருவேங்கடப் பிள்ளை, தில்லையம்பூர்ச் சந்திரசேகர கவிராச பண்டிதர், புதுவை வேலாயுத முதலியார், இராணிப்பேட்டை அண்ணாமலைச் செட்டியார், ஈச்சம்பாடி சீநிவாச ராகவாச்சாரியார், சென்னை கிருட்டிணமாச்சாரியார், இராகவாச்சாரியார், வேத இலட்சுமணராயர், கோமளபுரம் இராசகோபாலப் பிள்ளை, ஆ. சுப்பராயப் பிள்ளை, சீநிவாச முதலியார், சின்னச்சாமிப் பிள்ளை, காஞ்சிபுரம் இராமாநுசப் பிள்ளை, ப. வாசுதேவ முதலியார், திருவெவ்வுளூர் இராமசாமிச் செட்டியார், இயற்றமிழ்ப் போதகாசிரியர், சண்முகப் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## அஎகூ. சேணியப்ப நாயகர்

இவர் சேலம் என்னும் ஊரில் தோன்றியவர். பிற்காலத்திற் சென்னையை அடைந்து அங்குஞ் சிலகாலம் தங்கியிருந்தார். அப்

போது இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகளாதீனம் ஈசூர் சச்சிதா நந்த அடிகளாரிடத்தில் வேதாந்த நூல்களையும் ஓதியுணர்ந்து வேதாந்தப் புலமை பெற்றார். அறிவறியாமை ஆதார விளக்கம் என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப்பாயிர நிலைமண்டில ஆசிரியப்பாவின் தொடக்கம்,

> " திருவருட் கடன்மேல் ஒருபரஞ் சோதி
> உயர்வொப் பிழிவா மயலறு மேலோன்
> அறுதியி னுளெலாஞ் செறிமறை முடியினை
> அடியவர்க் குறுத்தி மடிமய லொழிப்பான்
> அந்தர மிறுத்த இந்திர பீடம்
> பரதா மத்திறை கரபாத் திரமுனி."

என்பது.

## ருஅ௦. சேதிராயர்

இவருடைய பெயர் சேதிராயர் என்றிருப்பதைக் கொண்டு சேதி நாட்டில் உள்ளவர்கட்கு அரசராக விளங்கியவர் என்றோ அல்லது சேதி நாட்டில் உள்ளவர்களிற் சிறந்தவரென்றோ ஊகிக்கலாம். இவர் திருத்தில்லையில் எழுந்தருளிய கூத்தப் பிரான்மீது பதிகம் ஒன்று பாடியுள்ளார்.

> " சேலு லாம்வயல் தில்லையு ளீருமைச்
> சால நாளயன் சார்வதி னுலிவள்
> வேலை யார்விடம் உண்டுகந் தீரென்று
> மால தாகுமென் வாளுழலே "

என்பது அப் பதிகத்தில் ஒரு பாட்டு. இப் பாட்டு ஒன்பதாந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளது.

## ருஅக. சேதுராம பாரதியார் - ஆ

சோழவள நாட்டில் திரிசிராப்பள்ளிக்கு அண்மையில் உள்ளதும் இந் நாளில் லால்குடி எனப் பெயர் வழங்குவதுமாகிய திருத்தவத்துறையில் வாழ்ந்திருந்தவர். சிவாநந்த சாகர யோகீசுரர் என்பவரிடம் தமிழ் கற்றுத்தேறிப் புலமையடைந்து திருச்சி, சென்னை திருவல்லிக்கேணி ஆகிய இடங்களில் உயர்நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். சங்கரலிங்கம்

பிள்ளை என்பவர் பாடிய திருவல்லிக்கேணிக் கலம்பகத்திற்கு இவர் இயற்றிய சிறப்புப்பாயிரப் பாடல்களுள் ஒன்று :

"பூமேவு பொறையகலப் பார்த்தனுக்குச்
சாரதியாய்ப் பொலிந்து தோன்றி
மாமேவு மகபதியும் மலரயனு
மனமுருகி வணங்கி யேத்தத்
தேமேவு மலரல்லிக் கேணியமர்
எம்பெருமான் திருத்தாள் மீது
பாமேவு கலம்பகப்பா மாலையமிழ்
தினுமினிதாப் பன்னி னானல்."

என்பது. பழநியாண்டவர் பதிகம் முதலிய நூல்களும் இவர் இயற்றியுள்ளார்.

"எண்ணிலாக் காலம் இழிபிறப் பெய்தி
இளைத்திளைத் தவையொழிந் தறிவார்
இந்தமா னிடத்தின் முந்தைமா தவத்தால்
இனிதுறத் திடவருள் பெற்றும்
மண்ணிலாம் வாழ்வை மெய்யென நினைந்து
மாதர்பால் தோன்றிடுங் காம
மதுவினை யுண்டு மயங்கியே திரியும்
வஞ்சனேற் குளமிக இரங்கித்
தெண்ணிலா மதிசேர் செஞ்சடைப் பெருமான்
திருவுளங் களித்திட நடிக்கும்
செய்யபொற் றுளாக அருட்சிவ காமி
செல்வமே தெய்வகந் திருவர்
பண்ணிலா மிரையாம் பயின்றுதோத் திரிக்கப்
பசுமயில் ஏறிவந் தருளாய்
பழவினை அகற்றும் பதயுகா நனைசேர்
சுனையமர் பழநியாண் டவனே."

என்பது பழநிப் பதிகத்தில் ஒரு பாட்டு.

## அஅஉ. சேதுராமையர் (நா)
### (20 - நூ.)

இவர் தஞ்சை மாவட்டத்திலே விஷ்ணம்பேட்டை என்னும் ஊரிலே வாழ்ந்திருந்தார். இவருடைய தந்தையார் பெயர் நாராயண ஐயர். இவர் முத்து ஐயர் என்பவர் இயற்றிய பகவத் கீதை வெண்பா என்னும் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடி

யுள்ளார். அச் சிறப்புப்பாயிரப் பாடலை நோக்குமிடத்து இவர் பல செய்யுட்கள் இயற்றித் தேர்ச்சி பெற்றவர் என்பது நன்கு விளங்குகிறது.

> "வேதமுடி யென்றே வியனுலகெலாம் துதிக்கும்
> கீதையினை வெண்பாவாற் கேண்மையுடன்—பூதலத்தோர்
> உய்ய உரைத்திட்டான் உண்மைப் பொருளனைத்தும்
> கையிற் கனியெனவே கண்டு"

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களுள் ஒன்று. கும்பகோணம் நேட்டிவ் ஹைஸ்கூல் தமிழ்ப் புலவர் ம. வீ. இராமாநுசாச்சாரியார் என்பவரிடம் கல்வி கற்றார். திருநெல்வேலி முதலிய இடங்களினும் இவர் வசித்திருந்தார்.

## ௪௪௩. சேந்தன்

சோழ நாட்டில் உள்ள அம்பர் என்னும் நகரை ஆட்சிபுரிந்திருந்தவன் திவாகர முனிவர் காலத்தினன். வடமொழி தென்மொழிகளிற் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்ததன்றி நல்ல கொடையாளியாகவும் விளங்கியவன். திவாகர முனிவரைக் கொண்டு சேந்தன் திவாகரத்தை இயற்றுமாறு செய்தவன்.

சம்பாபதி என்னும் புகார்த் தெய்வத்திற்கு ஓர் அந்தாதியும், வில் வேல் முதலியவைகளைப் புகழ்ந்தும் பாடியவன். இவனைச் சங்ககாலப் புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர். ஆனால் இச் சேந்தன் வேறு சேந்தனாக இருக்கலாம் என்பது சிலர் கொள்கை.

## ௪௪௪. சைகுமுகம்மது மதீனாசாகிபு
(20 - நூ.)

சேரவள நாட்டில் கோட்டாறு என்னும் ஊரில் இருந்த முகமதிய சமயப் புலவர். இவர் தம் சமய நூல்களையும் இலக்கண இலக்கியங்களையுங் கற்றுப் புலமை பெற்று விளங்கினார். மெய்ஞ்ஞான வினாவிடை என்னும் நூலுக்கு இவர்,

> "வானு மாயெழு மண்டல மாகியென்
> கோனு மாகிக் குருபர னாகித்தான்
> தானு மாகித் தனிப்பொரு ளானமெய்ம்
> மோன நாதன்மெய்ஞ் ஞான முறைதனை.

கங்கின் விரைசூழ் காசினி தன்னிலே
பொங்கு நல்லுரை யாக்கிப் புகழ்பெறற்
கிங்கு முன்வந் தியற்றிய உத்தமன்
சங்கை யப்துல் சலாமெனுஞ் சாகிபே.

என்னும் இவை முதலிய பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௨௨௫. சைதன்னியாநந்த அடிகள்

தாயுமான அடிகள் இராமநாதபுரத்தில் எழுந்தருளியிருந்தபோது மாணவர்கள் பலர் உடனிருந்தனர். அவர்களிற் பெரும்பாலோர் சிறந்த தமிழ்ப் புலமை பெற்றவர்கள். அவ்வாறு புலமை பெற்றிருந்தவர்களில் இவரும் ஒருவர். அடிகள் வீடு பேற்றையடைந்தபோது இவர் பின்வரும் பாடலை இரங்கற் பாவாகப் பாடினர். கரபாத்திர அடிகள், வாலையானந்த அடிகள், அருளையா, கோடிக்கரை ஞானியார் முதலியோர் இவருடன் வசித்திருந்தவர்களாவர்.

"கங்கைமுதற் புண்ணியதீர்த் தங்கட் கெல்லாம்
காசினியில் தேவதா வாவி என்னும்
மங்களலட் சுமிதீர்த்தக் கரையின் கீழ்பால்
வளம்பெறுநந் தனவனப்பூங் காவி லென்னும்
தங்குசதா நிட்டைபர ராக உள்ளம்
தனிஸ்நினைந்து வில்வமர நீழ லின்கண்
இங்களெனப் பூரண மாந் தாயு மான
சிவமே! நின் பொற்கழலென் சிரமேற் கொள்வேன்."

## ௨௨௬. சையிதுமுகியித்தீன் கவிராயர்

கோட்டாறு என்னும் ஊரிலே முகமதிய சமயத்திலே இவர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் முகமது ஹுசைன் புலவர். சையிது முகியித்தீன் இளம்பருவத்திலேயே தமிழ் மொழியின் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலவரானர். அரபியும் மலையாளமுங் கற்று அம் மொழிகளினும் வல்லவரானர். பிறகு மலையாள நாட்டையடைந்து அரசனுடைய அவைக்களப் புலவராக விளங்கியிருந்தார். சில காரணங்களை முன்னிட்டு அரசனுக்கும் புலவருக்கும் கருத்து

வேற்றுமை உண்டாகியது. புலவர் பிறகு திருநெல்வேலியை அடைந்து அங்குச் சிறிது காலந்தங்கியிருந்தார். பிறன் ஒருவனுக்குப் பிணைபோய் வழக்கிற் சிக்கி ஒருநாள் அரசனுடைய முன்னிலையிலேபோய் நிற்க வேண்டியவரானார்.

அவ்வரசனுடைய பெயர் இஃதிபார்கான் என்பர். அரசன் புலவரைப் பார்த்து, "நீர் யார்? உம்மீது என்ன வழக்கு?" என்று உசாவினான். இவர் உடனே,

"ஆதிநான் முவ்வேழு தலைமுறையின் முதலாக
அதிமதுர கவிதை வண்ணம்
அழகார் உலாமடல் குறவஞ்சி அம்மானை
அவையோடு சந்த மாலை
நீதிசெறி பலபனுவல் செய்தலங் காரமொடு
நீடுபல பாவுரைப்பேன்
நேசமுடன் எக்கவிகளுக்கும்ப்ர சங்கமே
நிகழ்த்திடு நயத்த புலவன்
சூதுதெரி யாதிந்த வெள்ளோலை ஒப்பம்
தொடங்கியான் பிணைபட் டதால்
சொற்சோர் பிணுக்குமே பிணையதாய் வலையிலே
துயர்பட்ட பிணையாகினேன்
நாதுசெறி மாதுவளர் நீதிபெறும் யோகனே!
தயவநிக மானசீலா!
தனமங்கை நகராளு கின்றஇஃ திபார்கான்
சாகிபே! கீர்த்தி அரசே!"

என்னுஞ் செய்யுளைப் பாடினார். இதனைக் கேட்ட அரசன் மகிழ்ந்தான். "பிணைபட்ட புலவரே! இனிமேல் இவ்வாறு பிறனுக்குத் துணைபோய் அல்லலை அழைத்துக்கொள்ளாதீர். இப்பொழுது உம்மை விடுதலை செய்துவிட்டேன். உமக்கு வேண்டியதைக் கேளும், தருகிறேன்" என்று கூறினான். அரசனுடைய செயல் புலவருக்கு மகிழ்ச்சியை உண்டாக்கிற்று. "பாக்குவெற்றிலைச் செலவுக்காக ஏதேனுங்கொடுத்தாற்போதும்" மென்றார். அரசன் திங்களுக்குப் பதினைந்து வெண்பொற் காசுகள் பெற்றுக்கொள்ளுமாறு கூறி அதன்பொருட்டு உறுதி முறியும் எழுதித் தந்தான். புலவர் பிணைபட்டுத் துணைபோனதும் இவ்வாறு ஒரு நன்மைக்கு ஏதுவாயிற்று. வெகுநாள்வரை இந்நன்கொடை வழங்கப்பட்டு வந்ததாகத் தெரிகிறது.

பிறகு புலவர் மேலப்பாளையத்தையடைந்து அங்கு திருமணம் முடித்துக்கொண்டு இனிது வாழ்ந்திருந்தார். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் முகியித்தீன் ஆண்டவர் பிள்ளைத்தமிழ், முகியித்தீன் ஆண்டவர் திருப்புகழ், மாணிக்கமாலை முதலியன.

## ௮௮௭. சொக்கநாதர்

இவர் ஈழவள நாட்டிலே மாவிட்டபுரத்திலே ஏறக்குறைய நூறுண்டுகட்கு முன்பிருந்தவர். இவருடைய மரபு சைவக் குருக்கள் மரபு. தமிழ்ப் புலமை பெற்றுத் திகழ்ந்த இவர் சொக்கநாதர் தன்வந்திரியம் என்னும் வைத்திய நூலை இயற்றி யிருக்கிறுர். அந்நூல் சௌமிய காண்டம் உக்கிர காண்டம் என்னும் இரு பிரிவினையுடையது.

"வேகங் கொண்டு விழுநுரை விண்ணுடன்
போகச் சூரணம் ஒன்று புகலக்கேள்
மோகச் சுக்கச மோதநற் சிரகம்
தாகந் தீர்க்குங் கருவேம்பின் தண்ணிலை.

சுழியுப் போடு கடுகுநாய் வேளையின்
மறுவில் வித்துடன் வெந்தய மோர்மட்டாய்
வறுபொ டித்ததூள் வார்த்நெய்யோ டன்னம்
செறிய உண்ணவே தீருங் குடற்கொதி"

என்பன கருவேம்பின் இலைத் தூளிற்குள்ள பலனைக் கூறும் செய்யுட்கள்.

## ௮௮௮. சொக்கப்ப நாவலர்

இவர் குன்றத்தூர் என்னும் ஊரில் இருந்தவர். இலக்கண இலக்கியங்களைக் கற்றுப் பெரும் புலமையடைந்து திகழ்ந்தார். அட்டாவதானஞ் செய்வதினுஞ் சிறந்து விளங்கினுர். ஆகவே இவருடைய பெயருக்குமுன் குன்றத்தூர் அட்டாவதானி என்னுஞ் சொல் அமைந்து நின்றது. இவர், நாற்கவிராச நம்பி அகப் பொருள் விளக்கத்திற்கு இலக்கியமாகப் பொய்யாமொழிப் புலவர் இயற்றிய தஞ்சைவாணன் கோவைக்கு அரிய ஓர் உரை எழுதியுள்ளார். இவரைப் பொய்யாமொழிப்புலவர் வழி மரபினர் என்பர்.

"பொய்யா மொழியார் எனும்பெரியோர்
புகலும் வாணன் கோவையுரை
மையார் சோலைக் குன்றந்தூர்
வளரட் டாவ தானிசொக்கன்
கையார் கனிபோல் அகப்பொருளில்
காணுஞ் சங்கை எலாந்தீர
மெய்யாந் தொல்காப் பியநூலின்
விதியால் விளக்கி எழுதினனே."

என்பது உரைச் சிறப்புப்பாயிரம். இவ்வுரையைத் தவிர இவர் வேறு நூல்கள் இயற்றியதாகத் தெரியவில்லை.

## ௩௮௬. சொக்கப்ப புலவர்

இவர் தொண்டை நாட்டு அரசூரில் பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர் இவர் கும்பகோணப் புராணம் என்னும் நூலைப் பாடியுள்ளார். இப் புராணம் அகோர முனிவர் இயற்றிய புராணத்தினும் வேருனது. இதில் நைமிசாரணியச் சருக்கம், திருக்கைலாசச் சிறப்புரைத்த வத்தியாயம், கும்பகோணச் சிறப்புரைத்த அத்தியாயம், சிவபூசை உபகரணங் கூறிய அத்தியாயம், சிவபுண்ணியம் உரைத்த அத்தியாயம், கிருதகம்பள விதி கூறிய வத்தியாயம், சீதகும்பமுமதில்பூசையும் உரைத்த அத்தியாயம், சிவநாம மகிமை உரைத்த அத்தியாயம், வாணலிங்க மகிமையுரைத்த அத்தியாயம், வேடன் கதிபெற்ற வத்தியாயம், வாணலிங்க பூசை மகிமை கூறிய அத்தியாயம், பதிநிர்ணயங் கூறிய அத்தியாயம், வாணலிங்க தெரிசன அத்தியாயம், சிவயோக விரதம் உரைத்த அத்தியாயம், சிவசரித்திரங் கூறிய அத்தியாயம், அபராதங்கூறிய அத்தியாயம், விபூதிமகிமை கூறிய அத்தியாயம், கலிவிடம்பன் அத்தியாயம், காசியின் சிறப்புரைத்த அத்தியாயம் ஆகியவை அடங்கியுள்ளன.

"இருண்மணி கண்டன தினிய நல்லருட்
பொருணிநி அறைநிறந் தன்ன பொற்பது
மருளறுத் துயர்சிவ மநித்து வாழ்மறைத்
தெருள்பெறு முனிவரர் திருந்து நைமிசம்."

என்பது நைமிசாரணியச் சருக்கத்தில் ஒரு பாடல். சிறந்த நடையில் அமைந்த இப் புராணம் அச்சாகவில்லை

## அ௯௦. சொக்கலிங்க அடிகள் - ௪
## (20 - நூ.)

பாண்டிவள நாட்டிலே திருநெல்வேலி மாவட்டத்திலே சங்கர நயினர் கோவிலில் இவ்விருபதாம் நூற்றுண்டுத் தொடக்கத்தில் இருந்தவர். வேதாந்த நூல்களைக் கற்றுத் தேறியிருந்ததுடன் இலக்கண இலக்கியங்களைக் கற்றுச் செய்யுள்பாடுந் திறமும் அமையப்பெற்று விளங்கினர். சண்முகாநந்த சுவாமிகள் என்பவர் இயற்றிய திருமுருகன் அருட்பாமாலை என்னும் நூலுக்கு இவர் பின்வரும் ஆசிரிய விருத்தப்பாவால் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். அப் பாடலை அடியிற் காண்க. இதனைக் கொண்டு இவருடைய புலமைத் திறத்தை ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

"சோதிமுதல் நாளகில புவிபடைத் தெழுதாத
சொற்சொன்ன பரமசொருபம்
சுகிர்தநவ நெறிபெருக உயர்மருத கிரிவளர்
சுயம்ப்ரகா சப்ரதீபம்
சுந்தரக் கருணைபொழி பன்னிருகண் மலரலர்
சுகப்பூ ரணப்பிரளயம்
துகளிருட் குறைதவிர்ந் தடியரா னந்தநிலை
தோயவரு கருணலயம்
மூதறிவு முற்ருத காலைமுன் றிற்றமிழின்
மோனமழை பொழியுமேகம்
முற்றத்து றந்தோ ரெனும்பிரம ரஞ்சுற்றி
மொய்த்தவன சக்கரனகம்
மூலகா ரணிவதன மதியுமதி யுங்குளிர
மொழிமழலை குளிருமமிர்தம்
முருகுதளி ரியவிருவ ரம்பைதொழு திடமும்வல
மும்பணிசெய் சுபசோபனம்
ஆதிசுரர் நரர்மரண சனனதுயர் உண்டதை
அறிந்ததிரு நடனஅமலம்
அரியபுகழ் பெருகருண கிரிசொன் மலர் அணியருமை
அதிசயவி னேதஅதிதம்
அர்ச்சனை பழுத்தவடி யர்க்கருள் பழுத்தொழுகும்
அற்புதசு வர்க்கஅன்னம்
அலகைரதம் உலகநிலை அபரிமித துயரிதைய
கன்றிடுதி என்றஅநகம்

நேதிமொழி யாலமல நிலையுடைய அடியர்மனம்
நின்றிலகு குமரன்அருளால்
நிரதிசய பரமசுகம் உறவுரைசெய் தனன்முருக
நெறியருட் பாமாலையை
நிறைபுனல தெனவருளை அடியர்கொள நின்றுபொழி
நின்மலச் செல்லப்பநல்
நிகரில்மல ரடிமனதி லுறுபரம சிவனெனு
நிரைசண்மு காநந்தனே ''

## அகூக. சொக்கலிங்க சுந்தரமூர்த்தி சுவாமிகள் (20 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் திருவழகர் மலைச்சாரலில் உள்ள கடாரிப்பட்டி என்னும் ஊரில் சைவ வேளாளர் மரபில் தோன்றியவர். தென்மொழி வடமொழி முதலியவைகளைத் தெய்வத்திருவருளால் அறிந்தவர். இவர் இளம் பருவத்திலேயே துறவு பூண்டு பல செய்யுட்களைப் பாடினர். அவை "சொக்க லிங்க சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த திருப்பாடற் றிரட்டு" என்னும் பெயரோடு விளங்குகின்றன.

'' வாக்குமன மணுகாது தானே தானு
வளர்ந்திதைய மதுபழுத்த பாக்கி யத்தோர்
நோக்குகின்ற நிருக்கூத்தை எந்த நாளும்
நுவலரிய அகிலாண்ட புவன மெல்லாம்
காக்குகின்ற கருணைமணித் தாயாந் தாயைக்
காணுதா ரினிக்காணுக் கார ணத்தைப்
போக்குவர வின்றிநின்ற பொருளாம் ஒன்றைப்
பூரணு நந்தத்தைப் போற்று வோமே.''

என்பது நூலில் ஒரு பாட்டு. ந. மு. வேங்கடசாமி நாட்டார், அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## அகூஉ. சொக்கலிங்க தேசிகர் (1893)

சோழவள நாட்டில் திருக்கொள்ளம்பூதூர் என்னும் ஊரில் இருந்தவர். தமிழ்ப் புலமை பெற்ற இவர் பள்ளிக்கூடம் ஒன்றில் கணக்காயராக அமர்ந்து மாணவர் பலருக்குக் கல்வி போதித்தார்.

"ஞானியர் மலியுந் தருமையிற் சொக்க
நாதருக் கொருதமிழ் மாலை
தானிய மஞ்சேர் மயிலைவாழ் முத்துச்
சாமிமால் மகிழ்வினிற் செய்து
நானிலம் பரவும் பனசையிற் சாமி
நாதமா முனிவரர் பிரானூர்
தானிருஞ் செவிகட் கேறிடச் செய்து
தண்ணருள் பெற்றுவாழ்ந் தனனே"

என்னும் இப் பாடல் இவர் தருமைச் சொக்கநாதமாலை என்னும் நூலுக்கு இயற்றியதாகும்.

## ௮௬௫. சொக்கலிங்க தேசிகர் - ம (19 - நூ.)

சோழவள நாட்டில் திருவிடைமருதூரில் மருதப்ப தேசிகர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் திருத்தணிகை முருகன்மீது 'திருத்தணிகாசல யமகவந்தாதி' என்னும் நூல் இயற்றியுள்ளார். அவ்வந்தாதி நூறு பாடல்களைக் கொண்டது. தரங்கம்பாடி அட்டாவதானம் கதிர்வேல் கவிராச பண்டிதர், புதுக்கோட்டை நாராயணசாமிப் பிள்ளை முதலியோர் இந் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"திருத்தணி கைக்கந்த சாமிபொற் றுளைநெஞ் சேயுனுள்ளே
திருத்தணி கைக்கந்தச் சேகரஞ் சேகரஞ் செய்திறைஞ்சு
திருந்தணி கைக்குந்த கன்கிட்டி டானதி சீர்த்திகல்வி
திருத்தணி கைக்கந்த வேலாயுதவென்று செப்புவையே."

என்பது அந்தாதியின் முதற்பாட்டு.

## ௮௬௬. சொக்கலிங்கப் புலவர் அட்டாவதானம் (19 - நூ.)

இவர் சேலம் தலபுராணத்தைப் பாடியிருக்கிறார். அப் புராணம் பன்னிரண்டு படலங்களையும் அறுநூற்றெழுபத்திரண்டு செய்யுட்களையும் உடையதாக விளங்குகிறது. நூலைப் பாராட்டி, திரிசிபுரம் அ. க. அமிர்தம் பிள்ளை, சேலம் சரவண பிள்ளை

இடுவய்ஞ்னேரி சுந்தரம் பிள்ளை, காஞ்சிபுரம் கனகசபை நாயகர், தி. சு. வேலுச்சாமிப் பிள்ளை, ப. மாரிமுத்து நாயகர், அரங்கசாமி நாயகர், சேலம் மாரிமுத்துச் செட்டியார், அ. சொக்கலிங்கம் பிள்ளை என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். இவருடைய ஊர் குலம் முதலியவைகளைக் கீழ்வருஞ் சிறப்புப்பாயிரம் விளக்குகின்றது.

"குன்றையூர்ச் சேக்கிழார்தங்
குலக்கூடற் கிழாரில் வந்தோன்
வென்றவட் டாவ தான
சொக்கலிங் கக்க விசன்
மின்றிகழ் பாவ நாச
புராணமே விளங்கச் செய்தான்
தென்றமிழ் அமுதம் உண்ணச்
சிவனடி யார்க டாமே"

"இந்தப் பதியில் செய்பாவம் இந்தத் தலத்தே நீர்வ தல்லால்
எந்தப் பதியிற் சென்றாலும் எக்கா லத்துந் தீராது
பந்தப் படுவர் நரகுழல்வர் பன்னாட் பிறவி பலபிறந்தும்
தொந்தப் படுவர் இப்பாவம் தொலையு மாறு கூறிடுவாம்."

என்பது பாவநாசச் சருக்கத்தில் ஒரு பாட்டு

## ௪௬௫. சொக்கலிங்கப் பெத்தண்ணற் பூபதி
(19 - நூ.)

இவர் ஆற்றங்கரைச் சமத்தானம் என்னும் ஊருக்குத் தலைவராக இருந்தவர். அறிஞர்களிடம் நூல்களைக் கற்றுப் புலமை மிக்குடையவராகத் திகழ்ந்தார் இவர் இருசொல் அலங்காரம், விடுகதைச் செய்யுட்கள் முதலியன பாடியுள்ளார். விடுகதைச் செய்யுளில் ஒன்றை அடியிற் காண்க:

(அ)

"காய்கனியும் அருந்தாது நீருண் ணாது
கனத்தவுயிர் தனக்குமொரு சலன மில்லை
தேய்வான மேனியெல்லாம் புகுந்து கொள்ளும்
சிதரன்றன் புரியிலிது முதன்மை யாகும்
ஆய்ந்துரைக்கில் வலுத்தவூ ரிதுவே யாகும்
அரியேறே சிவயோகர் யாவ ரேனும்
வாய்திறக்கிற் பொருள்தனியே வந்து சேரும்
மற்றவர்கள் இதையறிய வழுத்து வாயே.

## அ௬௬. சொக்கலிங்கம் பிள்ளை - வா
(19 - நூ.)

இவர் சென்னை இராயபுரத்தில் இருந்தவர். இலக்கண இலக்கிய நூல்களைக் கற்றுப் புலமை பெற்றதோடு சைவத்திரு முறைகளிலுஞ் சிறந்த தேர்ச்சியடைந்து சிவபூசை முதலியன செய்பவராகத் திகழ்ந்தார். இதனால் இவரைப் பலரும் "சிவக் கியானி" என்று போற்றலாயினர். வே கி. நாராயணசாமிப் பிள்ளைமீது புகழ்ப் பாமாலை என்னும் நூலை இவர் பாடியுள்ளார்.

'ஏர்பொருந்து நன்னூல் இயற்காரி கைதொன்னூல்
பேர்பொருந்த வேபடித்த பேருடையான்-சீபொருந்து
மின்னேநா ராயணசா மிப்புலவன் போல்வலவர்
இந்நா னிலத்தில் எவர்.''

என்பது மேற்படி புகழ்ப் பாமாலையில் முதற்பாட்டு

## அ௬௭. சொக்கலிங்கம் பிள்ளை
(19 - நூ )

பாண்டிவள நாட்டிலே திருநெல்வேலியைச் சேர்ந்த பேட்டையென்று சொல்லப்பெறுகிற மங்கைமா நகரத்தில் இருந்தவர். செந்தமிழ்ப் புலமைபெற்ற இவர் சிற்றூர் அதிகாரியாக அலுவல் பார்த்துக்கொண்டிருந்தார் இவரால் இயற்றப்பெற்ற நூல் திருத்தொண்டர் தோத்திரப் பாமாலை என்பது பெரிய புராணத்துட் கூறப்படும் எல்லோருக்கும் இதில் வணக்கம் கூறப்பட்டுள்ளது. இவர் சமய தீக்கை பெற்றுச் சிவபூசை செய்துகொண்டிருந்தவர். இவருடைய உடன் பிறந்தவராகிய சுப்பிரமணிய பிள்ளை என்பவரும் நன்கு கல்விகற்று நூலியற்றும் ஆற்றல் பெற்றவராகச் சிறந்து விளங்கினர். அவர் பால்வண்ண நாதர் பேரில் தோத்திர வெண்பாமாலை முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

''புண்ணியஞ்சேர் குலத்திலவ தரித்தெந் நாளும்
புதுமலர்கொண் டரனைவிதிப் படிபூ சித்தும்
எண்ணரிய சிவனடியார் இறைஞ்சி நிற்க
எயினர்குலத் துதித்தீசன் தன்னைப் போற்ற

வண்ணமலர் சூடவொசரியூன் சிரங்க ரத்து
வாயில்நீர் கொண்டாட்டிச் சூட்டி யூட்டிக்
கண்ணையுங் ஈற் செருப்பின்மிதித் தப்பியன்பால்
சுவின்கதிசேர் கண்ணப்பர் கழற்கால் போற்றி.''

என்பது கண்ணப்ப நாயனார் துதி. மற்றைப்படியுள்ள பாடல்களும் இவ்வாறே அமைந்துள்ளன

## ௮௯௮. சொக்கலிங்கம் பிள்ளை – மு

பாண்டிவள நாட்டில் சிவகங்கையைச் சேர்ந்த பதினெட்டாங் கோட்டையில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் முத்துக்கறுப்ப பிள்ளை. இவர் குன்றக்குடி என்னும் மயூரகிரியில் எழுந்தருளிய முருகக்கடவுள்மீது இரட்டைமணி மாலை என்னும் நூலைப் பாடியுள்ளார்

'' மேவிக் குறமானும் விண்குஞ் சரிமானும்
காவிச் குறமானுங் கண்களிக்குந் — தாவிப்பைந்
தோகைவடி வேலசலா தொண்டா வெனையாளன்
பாகைவடி வேலசலா பர.''

என்பது இரட்டைமணி மாலையில் ஒரு பாட்டு.

## ௮௯௯. சொரூபாநந்தமணி சுவாமிகள் (20 - நூ.)

தொண்டைவள நாட்டில் காஞ்சிமா நகரில் இருந்தவர். நிச்சலராமாநந்த அடிகள் என்னும் பெரியாரிடத்தில் வேதாந்த நூல்கள் பலவற்றை ஓதியுணர்ந்த இவர் செய்யுள்பாடுந் திறமுடையவராய்த் தம் ஆசிரியர்மீது தோத்திரப் பாமாலை முதலிய நூல்கள் பாடியுள்ளார். மேற்படி பாமாலையின் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

'' இன்பவடி வானசிவ ராசசுக யோகத்தில்
ஏகாந்த நிட்டைபெற்று
சடறு நிகண்மூன்றும் என்றும்வந் தெய்தாமல்
இத்துவிதம் அறவொழித்தே
அன்புருவ மாகிவளர் அத்துவித ஆநந்தம்
அடிமையேற் கருளவேண்டி
ஆநந்த மாகருணை வள்ளலெனை உள்ளமரும்
ஆதிபரஞ் சோதிஉருவே

*தன்பொறுப் பென்றவெனைத் தன்மயா காரமுறத்*
*தாள்சூட்டி ஆட்கொண்டுமே*
*தன்னிகரில் செல்வத்தைத் தந்திடுங் கடவுளே*
*தாயினுங் கருணையானே*
*கன்மநெறி யென்றுமே கைவிடாக் கயவர்கள்*
*காணொணுக் கெம்பிரனே*
*கச்சிநகர் மெச்சவரு நிச்சலசா மாநந்த*
*கருணைபொழி கின்றமுதலே.''*

## ௬௦௦. சொரூபானந்தர்

இவர் தம்முடைய பெயரால் சொரூபசாரம் என்னும் நூலை இயற்றியிருக்கிறார். அந் நூல், ௧௰௦-வெண்பாக்களைக் கொண்டது. நூலுக்கு ஈசூர் சச்சிதாநந்த அடிகளார் விரிவுரை கண்டுள்ளனர். விரிவுரையைப் பாராட்டித் திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையினுடைய மாணவர் மணவூர் முனிசாமி முதலியார், சேலம் கோமளேசுவர முதலியார், அ முனிசாமி நாயகர், மணிமங்கலம் திருவேங்கட முதலியார், திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

*''வெட்டெனவும் பேசார் வெகுளாச் முகங்கோணார்*
*இட்டபதார்த் தம்பெரியோர்க் கேற்றுவைப்பார்—துட்டர்களைச்*
*சேரா ரியாவர்க்குந் தீங்குரையார் கண்சிவந்து*
*பாரார் பிறவிதீர்ப் பார்.''*

என்பது சொரூபசார நூலில் முப்பத்தாறுவது பாடல்.

## ௬௦௧. சொர்ணகவி

முகமதிய சமயத்தினராகிய இவர் சையிது முகமது என்பவரின் வழிமுறையில் தோன்றியவர். இவருடைய முழுப்பெயர், சொர்ணகவி நயினு முகமதுபாவாப் புலவர் என்பதாகும். இவருடைய முன்னோர்களைப் போலவே இவரும் வாக்குப்பலிதம் உள்ளவராக விளங்கினர். இவர், மழைப்பாட்டு, செய்குதாவூது அலியுல்லா பிள்ளைத்தமிழ், கியாமத்மாலை, திருமண வாழ்த்து, வண்ணப்பாட்டு, வழிநடைச் சிந்து முதலிய நூல்களை இயற்றியுள்ளார். மழைபெய்யாமற் பயிர்கள் வாடிவதங்கிய ஓர் ஊரில் இவர் மழைப்பாட்டுப் பாடவே நல்ல மழைபொழிந்ததாம்.

"செட்டுச் செய்பவர் துட்டத் தனங்களால்
சிறிது தானியம் உள்ளதை வாங்கியே
கட்டி வைத்து விலையைக் குறைத்திடக்
கட்டு வோர்உளக் கட்டகன் றோடவே
மட்டு வார்புய எங்கள் முகமது
வள்ளற் காகவிப் போதி னில்மாமழை
கொட்டுக் கொட்டென்று கொட்ட அருள்செய்வாய்
கோதி லாவடி வேளங்கள் நாயனே!"

என்பது மழைப்பாட்டில் ஒன்று.

## கூ0உ. சோடசாவதானம் சுப்பராய செட்டியார்

பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் மாணவர்களில் இவர் ஒருவர். புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் ஒருசமயம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களும் வேறு பலரும் கூடியிருந்த பேரவையொன்றில் அட்டாவதானம் செய்தார். அப்பொழுது அங்கு அந்த அவதானத்தைப் பார்த்துக்கொண்டிருந்தவர்களில் ஒருவரான செல்லப்பா முதலியார் என்னும் செல்வர் ஒருவர் பெரும்புலவரைப் பார்த்து, "தங்கள் மாணவர்களில் எவரையேனும் இவ்வாறு அவதானியாக்க முடியுமா?" என்று உசாவினார்.

மீனாட்சிசுந்தரம் பிள்ளை அப்போது யாதும் மறுமொழி கூறவில்லை. தம் மாணவர்களில் ஒருவராகிய சுப்பராய செட்டியாராகிய இவரைப் பதினாறு அவதானஞ் செய்யுமாறு சில திங்களுக்குள் பழக்கினார். பிறகு பெரிய அவையொன்று கூட்டினார். அவ்வவைக்கு முற்கூறிய செல்லப்பா முதலியாரையும் வேறு பலரையும் அழைத்தார். அவ்வவையில் சுப்பராய செட்டியாரைக் கொண்டு பதினாறு அவதானங்களையுஞ் செய்து காட்டச்செய்து அவருக்குச் சோடசாவதானம் சுப்பராய செட்டியார் என்று பெயர் வழங்கினார். அவதானத்திற்குக் கூடியிருந்த செல்வர்கள் சுப்பராய செட்டியாருக்குப் பலவகையான சிறப்புக்கள் செய்து பெருமைப்படுத்தினார்கள். அதுமுதல் அவருடைய பெயர் சோடசாவதானம் சுப்பராய செட்டியார் என்று வழங்கலாயிற்று. தம் மாணவர்கள் பலருள்ளும் இவர் நினைவாற்றலிற் சிறந்தவராக விளங்கியபடியினால்தான் மீனாட்சி

சுந்தரம் பிள்ளை இவரை அவதானம் பழக்குதற்குத் தெரிந்தெடுத்தார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை. இவருடைய சிறப்புப்பாயிரம் பல நூல்களிற் காணப்பெறுகின்றன.

## ௬௦௩. சோணாசலம் பிள்ளை - (கா) (1868)

இவர் திருநெல்வேலி கீழைத்தெருவில் இருந்தவர். தந்தையார் பெயர் காந்திமதிநாத பிள்ளை இவர் இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவருக்குச் சேதுபுராணம், திருக்கோவையார் உரை, தனிப்பாடல் திரட்டு ஆகிய நூல்கள் அனுப்ப வேண்டும் என்று எழுதிய செய்யுட்களில் இரண்டு:

**கட்டளைக் கலித்துறை**

*"தேவாதி பன்தொழுஞ் சண்முக வேலனைச சிந்தித்துநன்*
*மாவாழ்வு பெற்றநம் பொன்னுச் சுவாமி மகிபதியே*
*பாவாண ரைப்புரந் தேநிதி நல்குநிவ பான்மைசொல*
*நாவா யிரம்படைத் தானிலே யேயந்த நான்முகனே"*

**நேரிசை வெண்பா**

*"மன்னர் புகழ்பொன்னுச் சாமிவள்ள லேமிக்க*
*நன்னயஞ்சேர் சேது புராண புடன்—பன்னு*
*திருக்கோவை யாருரையுஞ் சீர்தனிப் பாட்டுஞ்*
*செருக்காகத் தந்தருளச் செய்."*

## ௬௦௪. சோணாசல முதலியார்

இவர் புராணிகர் சோணாசல முதலியார் என்று வழங்கப் பெறுகிறார் ஆகவே புராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்திக் கொண்டிருந்தவர் என்பது பெறப்படுகிறது. இவர் திருவண்ணாமலையில் வாழ்ந்திருந்தனர். இவர் உண்ணாமுலையம்மை பிள்ளைத் தமிழ், திருவண்ணாமலைக் கார்த்திகைத்தீப வெண்பா, சோணாசல வெண்பா, சோணாசல பதிகம், திருவருணைக் கலிவெண்பா முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார்.

"அஞ்ஞானம் போக்கி அருள்தீபம் ஆநந்த
மெய்ஞ்ஞானங் காட்டி மிளிர்தீபம்—எஞ்ஞான்றும்
சித்தர்மகிழ் சோணகிரித் தீபம் பணிந்தேத்தும்
பத்தர்மகிழ் கார்த்திகைத்தீ பம்."

என்பது கார்த்திகைத் தீப வெண்பாவில் ஒரு பாட்டு.

## கூ0ரு. சோமசுந்தர உபாத்தியாயர் - செ (1866)

இவர் சென்னைமா நகரில் வாழ்ந்திருந்த செ. நல்லதம்பி உபாத்தியாயர் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். புலமை பெற்றுத் திகழ்ந்த இவர், மதுரை வீராச்சாமி பதிகம், இசைப் பாடல்கள் முதலியன இயற்றியுள்ளார்.

"வட்டமதி யொத்தவத னக்கனத னத்தியர்
மயக்கில்நெறி யற்றுநாளும்
மட்குயவர் சக்கரமெ னச்சுழன்ம னந்தனுன்
மலைத்திரு வடிப்போதினைச்
சுட்டியொரு புட்பமதெ டுத்தினிய பத்தியொடு
சொற்றுதி செயத்தெளிவிலாத்
துட்டனைம னத்தொரு பொருட்டென நினைத்தரி
சுகத்தினி லிருத்துமமுதே
பட்டயமெ டுத்தமர்தொ டுத்தவர்மு டித்தலை
பறக்கவிடும் உக்ரதரனே
பத்திசெயு முத்தமர் நினைத்ததை முடிக்கும்வெகு
பட்சகரு ணைத்தினிதியே
மட்டவிழு மற்புத வுரத்த வளமுற்றமது
ரைப்பதியி னித்தமருவு
மணிநிலா வித்திரண்ட புயமுலா முக்ரதண்ட
மதுரைவீ ரப்ரசண்டனே."

என்பது மதுரை வீராச்சாமி பதிகத்தில் ஒரு பாட்டு.

## கூ0சு. சோமசுந்தர ஐயர் - சு (20 - நூ.)

இவர் நெப்புக்கோயில் என்னும் ஊரினர். அந் நாளில் திருவாவடுதுறை யாதீனத்தில் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம்

பிள்ளை மாணவர் பலர்க்குப் பாடஞ்சொல்லிக்கொண்டு பெரும் புகழோடு விளங்கியிருந்தார். கல்வி கற்கவேண்டுமென்று பெரு விருப்பங்கொண்ட இவர் ஆதீனத்தையடைந்து பிள்ளையவர்களிடம் கல்விகற்றுச் சிறந்த புலவரானார். அப்பாவையர் என்பவர் இயற்றிய திருவதிகைப் புராணம் என்னும் நூலுக்கு இவர் பதினாறு பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

'' அம்மதலைக் கப்பாவென் றேசெல்வ
அபிதானம் இடவன் ேறானும்
செம்மாந்து அரியதிரா விடபாடை
இலக்கணத்தின் வரம்பு தேர்ந்து
விம்முசிவ சன்மார்க்கச் சிவானந்தப்
பரவையினில் மிகவும் மூழ்கி
எம்மான்வாழ் அதிகைக்கே அவனருளால்
சொன்மாலை இசைத்தான் பல்ல ''

என்பது சிறப்புப்பாயிரத்தில் ஒரு பாட்டு.

## கூ௦எ. சோமசுந்தரச் செட்டியார் (1886)

இவர் புதுச்சேரியில் வைசியர் குலத்தில் சபாபதிச் செட்டியார் என்பவருடைய புதல்வராகத் தோன்றினர். அந் நாளில் திருவாரூரில் தட்சணமூர்த்தி சுவாமிகள் மடத்தில் இருந்த அருணாசல சுவாமிகள் என்னும் பெரியாரிடத்தில் இலக்கண இலக்கிய நூல்களையும் வேதாந்த நூல்களையும் நன்கு கற்றுத் தேறினர். செய்யுள் இயற்றுந் திறமையும் இவருக்கு நன்ருக அமைந்தது. இவருக்குச் சொக்கலிங்கச் செட்டியார் என்னும் பெயருடைய உடன் பிறந்தாரும் இருந்தார். அவருங் கல்வி கேள்விகளில் வல்லவர்.

சோமசுந்தரச் செட்டியார் வேதாந்த சித்தாந்த முடிபுகளை அமைத்துச், ''சிவநாமாத்துவிதக் கீர்த்தனை '' என்னும் இசை நூலை இயற்றினர். இந் நூல் நாற்றுமுப்பத்தெட்டு இசைப் பாடல்களையும் வேறுபல விருத்தப்பாடல்களையுங் கொண்டது.

'' இன்னல்செயு மிடிய தனால் வருந்தி வாடி
இருநிதியார் செருக்குடைய செல்வர் பாற்போய்
என்னெளிமை புகலுதற்கிங் கெண்ண மாட்டேன்
எந்தாயே ஒற்றியில்வாழ் தியாகே சாநின்

பன்னரிய பதாம்புயமே தஞ்ச மென்று
பணிந்துனது புகழ்பாடுந் தொண்ட னேற்கும்
இன்னமிரங் காதிருக்கில் என்செய் வேன்யான்
இமயனருட் குமரிபங்கா எளிய னேனே''

என்பது விருத்தப்பாடலில் ஒன்று. இசைப் பாடல்கட்கு இவருடைய உடன்பிறந்தார் சொக்கலிங்கச் செட்டியார் இராகங்களையும், தியாகையர் என்பவர் தாளங்களையும் அமைத்துள்ளனர். நூலைப் பாராட்டி இவர் காலத்தில் இருந்த புலவர்களாகிய திருமயிலை சண்முகம் பிள்ளை, காஞ்சீபுரம் பு. கனகசபை நாயகர், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், அனந்தபுரம் குழந்தைவேலு அடிகள், செங்கற்பட்டு அரங்கசாமி நாயகர், கு. சடையாண்டிச் செட்டியார், கும்பகோணம் சரவணமூர்த்தியடிகளின் மாணாக்கர், திரிசிபுரம் அப்பாவுப் பிள்ளை, அக்கம்மாள் பேட்டை கோவிந்த செட்டியார் என்பவர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' சந்தமுறும் புதுவைசபா பதிவேள் ஈன்ற
தனையனெனும் அமிர்தகவி சோமசுந்தரன்
சுந்தரஞ்சேர் கலைவாணி அருளி னாலும்
தூயமெய்ஞ் ஞானமுணர்ந் தோங்கூ லானும்
சிந்தைகளித் துலகுயிர்கள் உய்யும் வண்ணம்
சிவநாமாத் துவிதகீர்த் தனையென் றோர்நூல்
வித்தையுறு பாவாணர் உளங்க ளிக்க
விண்ணவரும் வியப்படைய விளம்பி னானே ''

என்னும் இது கோவிந்த செட்டியார் பாடல்.

## கூ௦௩ சோமசுந்தர செட்டியார் - வி
## (20 - நூ.)

காமசுந்தரனைக் கண்ணால் காய்ந்தெரித்தொழித்த மேலோனுடைய ஏமமார் பெயரை நன்கு இயைந்திடப் பெற்ற இவர் திருப்பாதிரிப்புலியூரில் இருந்தவர் திருக்கோவலூராதீனம் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்பால் இலக்கண இலக்கியங் கற்றுணர்ந்தவர். புகையிலை வாணிபத்திற் புகுந்து பொருளீட்டும் பணியில் நின்றார் முருகக் கடவுளிடத்தும் அவனடியாரிடத்தும் முறுகிய காதலுடையவர். செய்யுட்களைச்

சிரிய முறையில் இயற்றுபவர். புதுவைப் பெரியசாமிப் புலவர் இயற்றிய கலம்பகத்திற்கு இவர் நான்கைந்து செய்யுட்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவர் இயற்றிய நூலைப் பற்றிய விவரங் கிடைக்கவில்லை. சிறப்புப்பாயிரத்தின் இறுதிச் செய்யுளை அடியிற் காண்க:

"புறங்காட்டல் நவமாய்ச்சி சம்பிரத
மம்மானை புயவகுப்புள்
ளுறையுவமம் வெளியுவம முருவகந்தற்
குறிப்பணிபல் லணிகளுங்கக்
கறையிலது கரிஉளது கண்ணியந்த
தெனவியக்குங் கலம்பகத்தைத்
தரைபுகழ்நற் புலமைமிகு பெரியசா
மிப்புலவன் தந்தான் மன்னோ."

## ௬௬. சோமசுந்தர தேசிகர் – ப
## (1890)

இவர் தஞ்சைமாவட்டத்தில் கொட்டையூர்ச்சிவக்கொழுந்து தேசிகரின் வழிமுறையில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பழநியப்ப தேசிகர். இவர் அரித்துவாரமங்கலம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார். தேவாரம் பெற்றுள்ள திருப்பதி ஒவ்வொன்றிலும் எழுந்தருளியுள்ள சுவாமியின் பெயர் அம்பாளின் பெயர் வேண்டுகோள் ஆகியவைகளை அமைத்துப் பதிக்கு ஒருபாடலாக இருநூற்று எழுபத்து நான்கு பாடல்களைப் பாடியுள்ளார். அந்நூல் "சிவாலய மான்மியக் கோவை" எனப் பெயர்பெறும். நூலினைப் பாராட்டித் தஞ்சைமாநகர் சதாவதானம் சுப்பிரமணிய ஐயர், மு. ஐயாச்சாமிப்பிள்ளை, தஞ்சை ந. வீரபத்திர பிள்ளை, மன்னார்குடி இரங்கசாமிச் செட்டியார், நாராயணசாமிப் பிள்ளை, கொட்டையூர் சி. சாமிநாத தேசிகர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"மங்கலந் திகழும் நாவலூ ரார்க்கு
மருவுவெண் ணெய்நவிர்ந் தவனே
எங்களாண் டவனே துருத்திமா நகரில்
இவர்முகி ழாம்பிகைக் கிசைந்த

சங்கரா வேதேச் சுரவெனை யாள்வாய்
சம்புவே சதாசிவப் பொருளே
செங்கர மதனிற் டமருகம் உடைய
செல்வமே கருணைவா ரிதியே.''

என்பது அந் நூலில் ஒரு பாட்டு.

## ௬௧௦. சோமசுந்தர தேசிகர் - கு

சோழவள நாட்டில் தஞ்சைமாவட்டத்தில் 1897 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் பதினோராம் நாள் பிறந்தார். தந்தையாருடைய பெயர் குருசாமி தேசிகர். தாயாருடைய பெயர் செல்லத்தம்மாள். திருவையாறு அரசர் கல்லூரியில் வடமொழியுந் தமிழுங் கற்றார். ஆங்கிலத்திலும் பி. ஓ. எல். பட்டம் பெற்றார். முசிரி, திருவையாறு முதலிய இடங்களில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். தமிழ்ப்புலவர் வரலாறு, கமலை ஞானப்பிரகாசர், நரவாகன தத்த சரிதம், பெரிபுளுஸ், தமிழைக் குறித்த பழைய குறிப்புகள் முதலிய நூல்களை இயற்றி வெளியிட்டதன்றிச், சோழமண்டல சதகம், தசகாரியம், அன்பர் போற்றிக் கலிவெண்பா, பஞ்சாக்கர மாலை, மயிலையமகவந்தாதி, குறுந்தொகை மூலம், திருவாரூர்ப் பள்ளு, சோடசகலாபிரசாத யோகம், இலக்கண விளக்கம் பொருளதிகாரம் முதலிய நூல்களை அச்சிற் பதிப்பித்தும் வெளியிட்டார். சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழகராதிக் குழுப் புலவர்களில் ஒருவராக இருந்தும் பணிசெய்தார். கல்வெட்டுகளை ஆராய்வதில் மிகுந்த திறமையுடையவர். இவர் 1943 ஆம் ஆண்டு இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

## ௬௧௧. சோமசுந்தரப் புலவர்
### (20 - நூ.)

சோழவள நாட்டில் திருமலைராயன் பட்டினத்தில் இந் நூற்றாண்டுத் தொடக்கத்தில் இருந்தவர். நாகை, தரங்கம்பாடி முதலிய இடங்களில் பள்ளிக்கூட ஆசிரியராக இருந்தார் என்று தெரிகிறது. நூல்கள் சிலவற்றிற்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ள செய்தி அறியப்படுகிறது.

## ௲௧௨. சோமசுந்தர முதலியார்
(19 - நூ.)

ஏறக்குறைய நூறு யாண்டுகட்கு முன்னர் சோழவள நாட்டில் திரிசிரபுரத்தில் சிறந்து விளங்கியவர். இவரைப் பலரும் மகாவித்துவான் என்று பாராட்டினர். ஆயினும் இவருடைய வரலாறு மூடுமந்திரமாகவேயுள்ளது சிற்சுகவாரிதிச் சதகம் என்னும் நூலுக்குக் கீழ்க்கண்ட கட்டளைக் கலித்துறையைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

*'' அழகப்ப வள்ளலின் கான்முளை முன்னோன் அருணிறைந்த
அழகப் பரைநினை மாதுரு பூதமென் றன்புடையோன்
அழகப்ப முற்றுநி யாவண்ண மீசன் அடிமலரில்
அழகப் புனைந்தனன் பாமாலை நூறும் அமிர்தென்னவே ''*

## ௲௧௩. சோமசுந்தரம் பிள்ளை - கு
(20 - நூ.)

இவர் திரிசிரபுரம் வரகனேரியில் தோன்றியவர். தந்தையார் பெயர் குழந்தைவேற்பிள்ளை. இலக்கண இலக்கியங்களைக் கற்றுச் சிறந்த தமிழறிஞராக விளங்கியவர். சோமசுந்தரம் பிள்ளை தந்தையாரிடமே கல்வி கற்றுக் கொண்டு சிறந்து விளங்கியிருந்தார் சில அன்பர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி ஆசாரவிளக்கம் என்னும் சிறுநூல் ஒன்றை இயற்றினர். அந்நூல் நாற்பேருர் அகவற்பாக்களால் நிறைவுற்று மக்கட்குரிய நாட்கால ஒழுகலாறுகளை விளக்கி இனிய எளிய நடையுடன் அமைந்துள்ளது. அறநெறி முறைகள் பல இதில் கூறப்பட்டுள்ளன சீரங்கம் குரு சுப்பிரமணிய ஐயர், திரிசிரபுரம் அ. இராமலிங்கம் பிள்ளை, தி. ம பொன்னுச்சாமிப் பிள்ளை, சோ. வீரபத்திர பிள்ளை முதலியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

*'' பகலின் தென்றிசை நன்னை நோக்கியும்
இரவினில் வடதிசை தன்னை நோக்கியும்
மலசலங் கழித்தல் மாட்சிமை ஆகா ''*

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கூகச. சோமசுந்தரம் பிள்ளை
(19 - நூ.)

சோழவள நாட்டில் திரிசிரபுரத்திற்கு அண்மையில் உள்ள திரு ஆனைக்கா என்னுஞ் சிவப்பதியில் வாழ்ந்திருந்தவர். பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் இலக்கண இலக்கியங்கற்றுச் சிறப்புற்றவர். திருவாவடுதுறையாதீனம் சுப்பிரமணியத் தம்பிரான் இயற்றிய பூவனூர்ச் சிலேடை வெண்பா என்னும் நூலுக்கு இவர் பின்வரும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

'' தனதனு மனந்தனுந் தகுகுரு வெனும்பொனுந்
தருசுரபி யாழியென்னைத்
தாவிலாச் செல்வமும் கல்வியும் மனத்திறனுட்
டகுநுட்ப மதியிகையும்
கனதிபெறு மனையினும் வாசகினு மனத்தினும்
கையிலுய கொண்டெவர்க்கும்
கருதுபல உதவியும் புரியுநன் மனத்தர்கள்
கலந்துவாழ் பூவ னூரில்
தனதருள் பெறும்படி கருதிவரு மெய்யடியர்
தங்கள்மல பந்தம் நீக்
தாவிலாப் பெருவாழ்வு தந்தருளும் எம்பிரான்
தாளில் தொடுத்தணிந்தான்
மனமகில் உணர்ந்துபல நயமருவு சிலேடைவெண்
பாமாலை ஒன்றை ஞான
மருவியொளிர் துறைசைநகர் வந்தசுப்பிரமணிய
மாதவன் உவந்து மாதோ.''

## கூகரு. சோமசுந்தர முதலியார் - பு

இவர் புதுச்சேரியைச சேர்ந்த சாரம் என்னும் ஊரில் இருந்தவர். இவர் இரணியனுடைய கதையை '' இரணிய நாடகம் '' என்னும் பெயரோடு நாடகமாக இயற்றியுள்ளார். ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்தவர். நாடகத்தில் இசைப் பாடல்கள், விருத்தப்பாடல்கள், உரைநடைகள் முதலியன விரவியுள்ளன. இந்நூலால் இவர் திருமாலிடம் அன்புள்ளவர் என்று தெரிகிறது.

''பஞ்சவர்தூதா போற்றி பாருல களந்தாய் போற்றி
வஞ்சனை தீர்ப்பாய் போற்றி வாலியை வதைத்தாய் போற்றி
தஞ்சமென் றோரைக் காக்கும் சாரங்க பாணி போற்றி
செஞ்சிலைக் கரத்தாய் போற்றி சீரங்க நாதா போற்றி.''

இது நூலுக்கு முன்னால் சேர்த்துள்ள திருமால் போற்றிப் பத்து என்னும் தோத்திரப் பகுதியில் ஒரு பாடல்.

## ௬௬௬. சோமசுந்தர முதலியார்
## (19 - நூ.)

இவர் புதுச்சேரியில் தோன்றியவர். தமிழ், தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளையும் கற்றுணர்ந்தார். வீராச்சாமி நாயகர் என்பவர் தெலுங்கு மொழியில் இயற்றிய 'பரதத்துவ சுதாநிதி' என்னும் நூலை இவர் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். நூலைப் பாராட்டித் தமிழ்ப்புலவர் சோடசாவதானம் தி. சுப்பராய செட்டியார், ஆறைமாநகர் முத்தமிழ்க்கவி திருவேங்கடப் பிள்ளை, பு. தெய்வசிகாமணிப் பிள்ளை, திருமயிலை சண்முகம் பிள்ளை, பேறை செகநாதப் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

''பரிவாலிவ் விதபூசை செய்துசமு சாரமாம்
பவ்வநீந் துவர்பெரியர் ஆதலாலே
விரிநீர்கொள் உலகத்தி லேமனோ பூசைஇவ்
விதம்இயற் றித்தூபம் அதனைத் தேகேந்
திரியம தறக்கொடுத் தருமந்த்ர புட்பத்
தினால்தியா னித்துப்பின் தியானம் அதனைப்
புரிபவனே டேற்பவன் சீவன்இம் முக்குறியைப்
போக்குவாய் ஞானசரந்தேக்குவாயே.''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௬௬௭. சோமசுந்தரக் கவிராயர்
## (1875)

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்தவர். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை. நீதிசாரம் முதலிய பல நூல்களை ஆராய்ந்து அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்.

"சிறியனைச் இருந்தான் தானும் அற்பனைச் சேரிப் போனும்
பிரியமாயப் புலாலுண்பானும் பெருஞ்சின மனைவி யோனும்
வறிஞனாய்த் திரிவான் தானும் மாகவுதீயவைபெற் றோனும்
அறுவகைப் பெயரும் பூமி தனில்நரகழுந்து வாரே"

என்பது நீதிசாரப் பாடல்களில் ஒன்று

## ௯௧௮. சோமாஸ்கந்த பட்டாரகர் - மா (1896)

சோழவள நாட்டில் திருமறைக்காடெனும் ஊரில் மாணிக்க தேசிகர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர் என்பது,

"சுருதியி ரண்டுங் கருதி யருச்சனை
புரிந்தருள் கூடுர் பெருந்திருப் பதியின்
மாணிக்க தேசிகன் மாணிக்க மாமணி
என்னத் தந்தவன் பன்னரு நோன்பால்
இலக்கண இலக்கியத் தலக்கரை கண்டோன்
ஈச னிடத்துப் பேசரும் அன்புளன்
நாமா துறையுஞ் சோமாஸ் கந்தப்
பலர்புகழ் கலைஞனும் பண்புடை யோனே."

என்னுஞ் சிறப்புப்பாயிரத்தாற் பெறப்படுகின்றது. தமிழ்ப் புலமை மிக்கவராகிய இவர் அகத்தியான் பள்ளியில் எழுந்தருளிய வரத விநாயகர்மீது "இருபா இருபஃது" என்னும் நூலை இயற்றியுள்ளார். நூலைப் பாராட்டி யாழ்ப்பாணத்துச் சங்கானை அ. அருணாசல சாத்திரிகள், யாழ்ப்பாணத்து வட்டுக் கோட்டை சிவசுப்பிரமணிய சிவாச்சாரியர் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். அந்நூலில் மூன்றாவது பாட்டு.

"வாழ்குவரே வானவர்தம் மாமுடிதோய் தாளினராய்
ஆழ்கலிநேர் இன்னல் அகற்றுவரே—தாழ்சடையில்
இந்து முடியாய்நல் ஏரம்ப என்றிசைப்பார்
வந்துதொழும் அன்பரொடு வந்து."

## ௯௧௯. சோலைமுத்துப் பிள்ளை - சிவ. (1907)

சோழவள நாட்டிலே தஞ்சைமாநகரை ஒட்டியுள்ள கருந் திட்டைக்குடி என்னும் கரந்தையம்பதியில் சிவராம பிள்ளை

என்பவருக்கு மகனுகத் தோன்றிய இவர், திருவையாற்றுப் புராணத்தை உரைநடையாக எழுதியுள்ளார்.

"சீர்வளர் ஐயா றதனிடை வதித்துத்
தேவதே வோத்தமன் அடியார்
நார்வளர் உள்ளக் கோவில்புக் குறைவோன்
நாரணன் தேடியுங் காணுத்
தார்வளர் பதத்தின் சரணபங் கயத்தைத்
தண்ணளிக் காவிரி படிந்து
ஏர்பெற வணங்குந் தன்மைய ரென்றும்
இன்பவீ டடைந்துவாழ் குவரே!

என்பது நூற்பயன் கூறும் பாட்டு.

## ௬௨௦. சௌந்தர பாரதி

இவர் இராமநாதபுரம் மாவட்டம் சிவகங்கை நாட்டைச் சேர்ந்த வேம்பத்தூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர், சாமாவையரெனவும் ஆண்டி ஐயர் எனவும் வழங்கியது. இந்தச் சாமாவையரும் புலமை பெற்றுத் திகழ்ந்து கங்காவிலாசம் முதலிய நூல்களை இயற்றி ஞர். சௌந்தர பாரதியார் திருவாவடுதுறை யாதீனத்திற்குச் சென்று கல்விகற்றுப் புலமைபெற்ருர். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் பதிகமஞ்சரி, நிரோட்ட யமகவந்தாதி, திருப் பரங்கிரிக்குமரன் தகாரவண்ணம் முதலியன. நிரோட்ட யமக வந்தாதியை வாமதேவ சுப்பிரமணிய சிவாசாரியர் வேண்டு கோளின்படி இயற்றினுர். இவ்வந்தாதியை உ. வே சாமிநா தையர், பி. பாஸ்கர ஐயர், சேற்றூர் மு. ரா. சுப்பிரமணியக் கவி ராயர், சீவைகுண்டம் நல்லகுற்றுலம் பிள்ளை, சர்க்கரை இராம சாமிப் புலவர், பொன்னுதுவா மூர்த்தி, காரைக்குடி ராம. சொ. சொக்கலிங்கஞ் செட்டியார், வல்லநாடு சங்கரசுப்பா சாத்தி ரிகள், பிச்சுவையரின் மருகர் கோவிந்தையர் முதலியோர் பாராட்டியிருக்கின்றனர். பாஸ்கர ஐயர் தமது சிறப்புப்பாயிரத் தில்,

"நாமா தாநிகர் சாமா வையன்
தாமா தரவில் தந்தசு புத்திரன்
மறையாக் கீர்த்தித் துறையா வடுதுறை

யிறையா ரிடத்துமங் குறைந்தா ரிடத்திலும்
இலக்கிய இலக்கணத் தலபுரா ணங்கள்
சிலநாட் டங்கி நலமாத் தேர்ந்தோன்
கட்டெழுத் தாணியர்க் கிட்டபா முதலாம்
எட்டவ தான மட்டிற் செய்தோன்
வண்ணப் புவியில் வண்ணப் புவியென
எண்ணப் பலவகை வண்ணம் இசைத்தோன்.''

என்று குறிப்பிடுகிறார். உ. வே. சாமிநாதையர், ''பாண்டி நாட்டிலுள்ள வேம்பத்தூர்த் தமிழ்ச் சங்கத்தவர்களுள் ஸ்ரீ கவிராச பண்டிதருடைய பரம்பரையினரும் நூற்றுக்கணக்கான வெத்தனையோ வரிய செய்யுட்களை விரைவிலியற்றிக் கேட்பவர்களுக்கு மிக்க விம்மிதத்தை யுண்டுபண்ணி வருபவர்களுமாகிய பிரமஸ்ரீ சௌந்தர பாரதிகள் திருநெல்வேலியிலுள்ள வேம்பத்தூா மடாதிபதிகளாகிய ஸ்ரீமத் வாமதேவ சுப்பிரமணிய சிவாசாரியரவர்களுடைய விருப்பத்தின்படி குன்றுதோறாடும் ஸ்ரீ சண்முகப்பெருமான்மீது இயற்றிய நிரோட்ட யமகவந்தாதிச் செய்யுட்களையும் அவற்றின் பொருள்களையுங் கேட்டு மிகவின்புற்றேன். செய்யுட்களிலுள்ள யமகங்கள் மிக்க வின்பத்தை விளைவிக்கின்றன. இந்நூலைக் கேட்கும் தமிழபிமானிகள் மிகவின்புற்றிவர்களை யாதரித்து, ஊக்கமளிப்பார்களென்றும் நம்புகிறேன். இதனை யாக்குவித்தோர்களை நினைக்கும்பொழுது முன்னமே திருச்செந்தில் நிரோட்ட யமகவந்தாதியை வெளிப்படும்படி செய்த நெல்லைமா நகரின் தமிழ்ப் பெருமை நன்கு வெளியாகின்றது,'' என்று குறிப்பிட்டுள்ளார்.

''காரன்ன கந்தரத் தார்தந்த காளையெங் கந்தனலங்
காரன்ன கந்தரத் தாயின்ற காதலன் கண்ணிலடங்
காரன்ன கந்தரத் தார்த்திடச் செய்சேய் கடற்சலச்சங்
காரன்ன கந்தரத் தானடைந் தேதினங் காத்தனனே''

என்பது நிரோட்ட யமகவந்தாதியில் ஒரு பாட்டு.

சிதம்பர பாரதி என்பவருடைய நூலுக்கு இவர் கொடுத்த சாற்றுக்கவியொன்றை அடியிற் காண்க:

''பூமேவு செங்கமல மங்கையுடன் ஆரணம்
புகலுநா மங்கை தினமும்
பொங்கிவளர் தென்மழவை அம்பதியை ஆளுமெய்ப்
பூசுரர் குலத்து தித்துக்

தேமேவு கவிவலவ சின்னச்சா மியெனவும்
திகழ்சி தம்பர பாரதி
செப்புபா லன்புளகு சேலன் சரித்திரம்
தேர்துருவ மஞ்ச ரித்ரம்
மாமேவு புகழும்ப ரீடன்ச ரித்திரம்
வரருக்கு மணிவ துவையாம்
பன்னுஞ் சரித்திரமும மாநிலத் தமுதமென
மருவுவெண பாவி ருந்தம்
நாமேவு கீசத்தனம் பினுநற் கலித்துறையும்
நாடிடும் பாக்க ளுடனே
நற்றமிழி லற்புதமு றக்கவிஞர் மெச்சிட
நலத்தொடும் உரைத்து ளானே.''

## கூஉக. சௌந்தரராச உடையார் (1901)

சோழவள நாட்டில் சண்பகக்கொல்லை என்னும் ஊரில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் வேங்கடாசல உடையார் ஈழவள நாட்டில் தோன்றி வடமொழி தென்மொழி முதலியவைகளை நன்கு கற்றுணர்ந்து சிறந்த புலமைபெற்றுத் ''தர்க்க குடார தாலுதாரி'' என்னுஞ் சிறப்புப் பெயரையடைந்த திருஞானசம்பந்தப் பிள்ளை என்பவரிடம் கல்விகற்றுத் தேறினர். தெய்வீக புராணமென வழங்கும் திருக்கோவலூர்ப் புராணத்தை விரித்துப் பாடி அச்சியற்றி வெளியிட்டார். ஆலங்குடி கோபாலையர், திருவிடைமருதூர் சுந்தரமூர்த்திப்பிள்ளை, அம்மையப்பன் கருப்பூர் முருகானந்த அடிகள், கும்பகோணம் அருணசலச் செட்டியார், வேடம்பூர் பஞ்சாட்சரப் பிள்ளை, கண்டியூர் சோணசலப் பிள்ளை, கண்டியூர்ச் சோமசுந்தரப் பிள்ளை என்போர் இவர் காலத்தில் இருந்த அறிஞர்களாவர்.

'' அந்தமிலா முத்திதனை உதித்திடினும்
மரித்திடினும் ஆண்டே எய்திச்
சிந்தைமகிழ் வுடன்தரிசித் திடினுநனி
யளிகருமெழில் தில்லை மன்றில்
சந்ததமும நடமபயிலும் இந்துவளர்
சடைமுடியான் அடியைச் சார்ந்து
வந்துதரி சித்திடவே உன்னியவன்
எழுத்தைந்தும் மனத்த முத்தி.''

என்பது தெய்வீகராசன் நாடுகண்ட சருக்கத்தில் ஒரு பாட்டு.

## கூஉஉ. ஞானக்கூத்த சிவப்பிரகாச தேசிகர்

இவர் சிவன்பாக்கம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கியங்களில் வல்லவராகிய இவர் சைவத் துறவியாக விளங்கினார். விருத்தாசலம் என்னும் பழமலையின் பெருமையை விளக்குவதாகிய விருத்தாசல புராணம் என்னும் நூலை இவர் இயற்றினார். இதில் சாடுரு பாக்கள் உள்ளன.

" அஞ்சினன் மழைக்குச் சென்றான்
ஆடல்பா டற்காச் சென்றான்
விஞ்சிய விமலம் காணின்
மெய்ஞ்ஞானந் தவங்க ளுண்டாம்
வஞ்சக மனத்தனா னும்
வந்திக்கப் பிரதோ டத்தில்
செஞ்சவே பாவ நீங்கும்
தீண்டிற் சாருபஞ் சேர்வான்."

என்பது அப் புராணத்தில் சிவபூசைச் சருக்கத்தில் ஒரு பாட்டு.

இவர் திருக்கயிலாய பரம்பரை துறையூர் சிவப்பிரகாச தேசிகர் ஆதீனத்தில் இரண்டாவது பட்டம் பெற்றவரெனவும், பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவரெனவும், திருவிடைமருதூர்ப் புராணமும் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறதெனவுந் தெரிகின்றன.

## கூஉ௩. ஞானக்கூத்தர்

இவர் நானூற்று முப்பத்தேழு பாடல்கள் அடங்கிய திருவையாற்றுப் புராணம் பாடியிருக்கிறார். இப் புராணத்தில், பதிகச் சருக்கம், குறுமுனிச் சருக்கம், கயிலாயச் சருக்கம், காவிரிச் சருக்கம், பஞ்சநதிச் சருக்கம், சிலாதமுனிச் சருக்கம், நந்திகேசுவரச் சருக்கம், நியமேசச் சருக்கம், வாகீசச் சருக்கம், சம்பந்தச் சருக்கம், வன்தொண்டச் சருக்கம், சைவச்சருக்கம் எனப்பன்னிரண்டு சருக்கங்கள் உள்ளன.

" பாலலோச னத்துநாலு
தோளர் பாங்கர் ஞாங்கரே
மேலுங் கீழுந் தெரியவோடி
மீளு வார்கள் கூட்டமே

> போல லோக சிட்டிசெய்யும்
> பூத நாதர் புஞ்சமே
> சீல நிட்டை அட்டசித்தி
> தொட்ட சித்தர் சங்கமே.''

என்பது கயிலாயச் சருக்கத்தில் ஒரு பாட்டு

## ௬௨௪. ஞானசிவ தேசிகர்
(1909)

இவர் கச்சியப்ப முனிவருடைய வழிமுறையைச் சேர்ந்தவர் 'கொடுமுடி' என்று வழங்கும் திருப்பாண்டிக் கொடுமுடியில் இருந்தவர். அப் பதியில் எழுந்தருளிய இறைவன்மீது இவர், ''மும்மணிக்கோவை,'' ''இரட்டைமணிமாலை'' என்னும் நூல்களைப் பாடியுள்ளார்.

> ''தாதார் நெடுங்கண்ணி தன்வய மற்றுந் தனித்திருந்தே
> ஏதா ரணியுஞ் சடைமுடி யோயெனை ஏய்ந்திதைத்
> தேதா ரமெனுங் கனற்சூழம் பான்மெய் கருகுமென
> மாதா ரினைத்தர வேண்டித்தன் மாமனம் வாடுவளே.''

என்பது மும்மணிக்கோவையில் ஒரு பாட்டு

## ௬௨௫. ஞானதேசிகப் பிள்ளை
(1868)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலியில் கீழப்புதுத் தெருவில் வாழ்ந்திருந்தவர். இவர் திருநெல்வேலி தாலுகா மேலநத்தம் என்னுஞ் சிற்றூரின் கணக்கராகப் பணிபுரிந்திருந்தவர். இலக்கிய இலக்கணப் புலமைபெற்ற இவர் நால்வகைப் பாக்களையும் பாடுந்திறமும் பெற்றிருந்தார்.

> ''பொன்மிகுதே சாதிபதி பூபதுரை சாமிதிரு
> நின்முடிமால் மார்பெனும்பங் கசநினைவாள்—நன்பூ
> நிலைதா னரசாட்சி நின்னினையோன் செய்கோ
> சலைபால பொன்னுசா மி.''

என்பது இவர் பொன்னுச்சாமித் தேவருக்கெழுதிய நான்கு பாடல்களில் ஒன்று. இதனைக் குதிரையடி வெண்பா என்பர்.

## ௯௨௬. ஞானப்பிரகாச பட்டாரகர்

இவர் திருவாரூரிலே இருந்தவர். ௫௪-செய்யுட்கள் அடங்கிய புட்பவிதி என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். அந்நூல் மலர்களின் வகை, தன்மை, இன்ன இன்ன மலர், இன்ன இன்ன பலனையளிக்கும் என்பனவாதிய செய்திகளை விளக்கிக் கூறுகின்றது. மலர்களின் பலனுரைக்கும் செய்யுள் ஒன்றை அடியிற் காண்க:

"தும்பைமலர் கோகத்தி தோடம் நீக்கும்
சொன்னநயந் திடுகளவு பலாசு நீக்கும்
தம்பிதமை யனைக் கோறல் அறுகு நீக்கும்
சாத்திடுஞ்சந் தனமகா துக்கம் நீக்கும்
அம்புவியில் இலிங்கபின்னம் அசோகு நீக்கும்
அடைந்தோர்தம் வறுமையெலாம் ஆன்பால் நீக்கும்
வம்பவிழ்நெய் நெல்லியிவை உரோகம் நீக்கும்
வளர்நீலோற் பலநீக்கும் வாக்குத் தோடம்."

## ௯௨௭. ஞானப்பிரகாச முனிவர்

இவர் "செங்குந்தர் பிள்ளைத்தமிழ்" என்னும் நூலைப் பாடியுள்ளார். இப் பிள்ளைத்தமிழ் ஆண்பாற் பிள்ளைத் தமிழாம். இது காப்புப் பருவமுதல் சிறுதேர்ப் பருவம் ஈறுகப் பத்துப் பருவங்களையுடையது. வீரவாகு தேவர் முதலிய ஒன்பதின்மர், சுப்பிரமணியக் கடவுள் ஆகிய இவர்கள் மரபில் வந்தவர் செங்குந்தர் என்னுஞ் செய்தியைத் தெரிவிக்கின்றது.

"கானக் குயில்சேர் மொழிமாதர்
கனக மணிமா மேடையின்மேல்
கதிர்சூழ் மணிக்கோ புரமுடிமேல்
காரார் அரசர் செச்சைகள்மேல்
மீனத் திரள்போல் முத்துமணி
மிளிரும் புரிசைத் தலையதின்மேல்
விளங்கும் பளிங்கு மண்டபமேல்
வீதித் திருத்தேர் உச்சியின்மேல்
தானத் தருமச் சாலைகள்மேல்
தங்கு மறையோர் மாளிகைமேல்
சங்கத் தமிழோர் மாமனைமேல்
தரிக்குந் துகிற்பூங் கொடிகள் சென்று

வானத் தளவும் வளர்காஞ்சி
வாழ்வோர் தாலோ தாலேலோ
மயில்வா கனத்தோன் துணையாக
வந்தோர் தாலோ தாலேலோ."

என்பது தாலப்பருவத்தில் ஒரு பாட்டு.

## ௬௨அ. ஞானப்பிரகாசர் (கச்சி)

இவர் பதினாறும் நூற்றாண்டில் காஞ்சீபுரத்தில் வாழ்ந்திருந்தவர். இவர் கிருட்டிணதேவராயர்மேல் 'மஞ்சரிப்பா' என்னும் நூலும், ஏகாம்பரநாதர்மீது கலம்பகமும் பாடியுள்ளார் என்பது,

"வானப்ர காசப் புகழ்க்கிருட்ண ராயர்க்கு மஞ்சரிப்பா
கானப்ர காசப் புகழாய்ந்து கச்சிக் கலம்பகஞ்செய்
ஞானப்ர காச குருராயன் வாழ்ந்து நலஞ்சிறந்த
மானப்ர காச முடையோர் வளர்தொண்டை மண்டலமே."

என்னுந் தொண்டைமண்டல சதகப்பாட்டாற் பெறப்படுகிறது. மேற்படி நூல்களைப் பாடியதற்கு நன்கொடையாக இராயர் பதினெண்வகை வாத்தியமும், தங்கச் சிவிகை, சிங்கமுகச் சுருட்டி முதலான விருதுகளுங் கொடுத்தார் என்பது,

"நீடாழி உலகத்தில் கரிகால சோழன்முத
னிகழ் தொண்டை மண்டலத்து
நிகரிலாக் கச்சிதனின் ஞானப்ர காசநன்
நிதிமூர்த்தி யார்தமக்கு
வாடாப் புகழ்க்கிருட்டின ராயராம் வேள்தந்த
மாதங்கக் கொடியாடையும்
மாவுடங் காவெண் டயமேல்வெண் கலப்பேரி
மதிபாறு பிறை வாச்சியம்
சோடசய திருச்சின்னம் கவரிகா ளம்பூரி
சொல்லுமெக் காள தாளம்
தோற்கருவி தவுண்டைபல் லரிதவளச் சங்கு
சொர்ணச் சிவிகை கவிகை
ஆடர மணிச்சிங்க முகவா சுருட்டியும்
அணிஉபய வெண்சா மரமும்
அருகில்வரு குஞ்சரம் பகல்தீவட்டி யுருகு
வாளான பதினெண்வாச் சியமும்

ஈடான முப்பத்தி ரண்டுவிரு தாண்மையும்
இரத்தினம் இழைத்த குல்லாய்
எழுதோ மரங்கபாய் கைலாவு கட்டியம்
இன்ன மநேக பலவும்
சேடனு பிரத்துபய நாவினுற் சொல்லரிய
தெய்வீக விநோத விருதும்
சீராய் நடத்தினன் ஏகம்ப ரபியவா
நித்தன் மதியுள்ள காலமே.''

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகிறது. இவர் இயற்றிய மேற்படி இரண்டு நூல்களும் இப்பொழுது வழக்கிற் காணப் படாமையால் மறைந்தொழிந்தனவோ என்று எண்ணவேண்டிய தாகிறது.

## கூ௨கூ. ஞானப்பிரகாசர் (திருவொற்றியூர்)
(16 - நூ.)

இவர் திருவாரூரில் எழுந்தருளியிருந்த ஞானப்பிரகாசரிடம் அருளுரைபெற்றுத் தம் ஆசிரியரின பெயரையே தாமுங்கொண்டு திருவொற்றியூர்க்குச் சென்று ஆண்டு வசித்திருந்தார். இவரால் இயற்றப்பெற்றவை, திருவொற்றியூர்ப் புராணம், சிவஞான சித்தியார் பரபக்கவுரை, சங்கற்பநிராகரண உரை என்பன.

திருவொற்றியூர்ப் புராணம் என்பது திருவொற்றியூரின் சிறப்பைக் கூறி அத்தலத்திற் சிவபெருமான் இயற்றிய திருவிளை யாடல்களையும் கூறுவது. பதினறு படலங்களையும் ௬௯அ செய் யுட்களையும் கொண்டது இப்புராணத்தை இவர் பதும புராணத்தும் பிரமாண்ட புராணத்துங் கண்டபடி தமிழிற் பாடி னர் என்பதும், இவர் இதனைத் தம்முடைய ஆசிரியர் தென் ஆரூர் அமர்ந்த ஞானப்பிரகாச அடிகள் கட்டளைப்படி பாடினர் என்பதும்,

'' பேதமிலாப் பதுமத்தும் பிரமாண்டந் தன்னிலுமே
ஆதிபுரிப் பெருமைமிக வுறையுமதை நுமக்கியான்
நீதகல உரைத்திடுவேன் என்றிசைத்த மொழிதமிழால்
ஓதென்றுன் தென்னுரூர் உவந்தகுரு நாதன்தான் ''

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகின்றது

## கூ௩௦. ஞானவரோதய பண்டாரம்

இவர் காளமேகப் புலவர் காலத்தினர் எனவும் திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே ஆறுகல் தொலைவில் உள்ள வயலூரில் தோன்றியவரெனவும் ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர். இவர் இளமைக்காலத்தில் கணக்காயருடைய பிரம்படிக்கு அஞ்சிப் பள்ளிக்குப் போகாது பலவிடங்களினும் ஒளிந்து திரிந்தார் எனவும், ஒருநாள் வயலூருக்குச்சென்று முருகக்கடவுளின் திருவுருவத்திற்குப் பின் மறைந்துகொண்டிருந்தார் எனவும், இச் செய்தியை அறியாத கோயிலார் இரவில் கோயிலைப் பூட்டிக்கொண்டு சென்றுவிட்டபடியால் இரவு முழுவதும் கோவிலுக்குள்ளே அடைபட்டுக் கிடந்தார் எனவும், அன்றிரவு முருகப்பிரான் இவருக்கு வெளிப்பட்டுத் திருவருள் புரிந்து கல்வி நலத்தை வழங்கினுர் என்றும் கூறுப. இவர் மதுரைக்குச் சென்றிருந்த போது காளமேகப் புலவர்,

> "முதிரத் தமிழ்தெரி நின்பாடல் தன்னைமுறை யறிந்தே
> எதிரொக்கக் கோப்பதற் கேழுபே ரில்லை இன்தமிழின்
> பதரைத் தெரிந்தெறிகோ இல்லைஏறப் பலகையில்லை
> மதுரைக்கு நீசென்ற தெவ்வாறு ஞானவ ரோதயனே."

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பியதாகப் பழஞ்செய்திகள் கூறுகின்றன.

இவர் கந்தபுராணத்தின் ஒருபகுதியாகிய உபதேச காண்டத்தைப் பாடியுள்ளார். அக் காண்டம் இரண்டாயிரத்து அறுநூற்று இரண்டு பாடல்களையுடையது.

> "நீறு புனலிற் குழைத்துமுடி
> நெற்றி களமார் புந்தியிரு
> வேறு புறந்தோள் நடுக்கரங்கள்
> வெரிநோ டெருத்தந் தலம்பதினைந்
> தீறில் திரிபுண் டரந் தரித்தோன்
> எவனே அவனே மலரயனும்
> கூறும் அவனே திருமாலும்
> அவனே முக்கட் குழகனுமே."

என்பது விபூதிமான்மியத்தில் ஒரு பாட்டு. இது திருநீறு அணியும் முறையும் இடங்களும் விளக்கியது காண்க.

## கூருக. ஞானனந்த சுவாமிகள்

இவர் சோழவளநாட்டில் இருந்தவரென்று தெரிகிறது. இவருடைய பெயருக்கு முன்னால், "மாணிக்கவாசக சுவாமிகள் ஆதீன வித்தியாபீடம் அத்தியாச்சிரம பாலசரசுவதி" என்னும் அடைமொழிகள் காணப்பெறுகின்றன 'பஞ்சாட்சர ரகசியம்' என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார். இந் நூல் ஐந்தெழுத் தருமறையின் உண்மையையும் மறைபொருளையும் விளக்குகின்றது

"வேத நான்மறைச் சிரசில்வீற் றிருக்குமெய்ப் பொருளாம்
போதவைந்தெழுத் தின்மகா ரகசியம் புகலக்
காதல் கூர்ந்துஞா னனந்த வல்லியின் கருணைப்
பாத தாமரை களைத்தியா னஞ்செய்து பணிவாம்"

என்பது நூலின் கடவுள் வணக்கம்.

## கூருஉ. ஞானநந்தாநந் தேந்திர சரசுவதி
(20 - நூ.)

இவர் சோழவள நாட்டிலே வசித்திருந்தவர். இவர் வாழ்ந்திருந்த நகரம் இன்னது என்பதும் இவர் பட்டப்பெயர் இன்னது என்பதும் தோன்றவில்லை. பெயர்க்காரணமும் தெரிந்திலது. இலக்கண இலக்கியப் புலமைபெற்றிருந்ததன்றி மருத்துவத்திலும் பயிற்சி பெற்றிருந்தார். இவர் சித்தகுரு நடராசர் பதிகம் என்னும் நூல் பாடியுள்ளார்.

"சாகாத கல்விதரு வேகாத கால்கொண்டு
சாசுவத நிட்டை பெறவும்
சந்ததமும் மெய்யன்பர் தங்களுடன் மேவியே
சச்சிதாநந்த முறவும்
போகாத புனலுண்டு சாகாத தலைகண்டு
பூரணாநந்த முறவும்
போதபரி பூரணர்கள் நாதநா தாந்தர்பெறு
போக்குவர வற்ற நிலையான்
மோகாதி தருமைந்து மலம்வென் றெலாம்வல்ல
முத்தேக சித்த ஞானி
முத்திதரு சித்திபெற வொத்தபத் தியினெழுகி
முதுணர்வின் மீதி லுறவும்

தேகாதி மூன்றுரிமை ஈந்துனருள் சார்ந்துனைச்
சேர்ந்தென்று மொளிர வருள்கூர்
சிற்சபையி னிலகீச சிவகாமி மகிழ்நேச
சித்தகுரு நடராசனே.''

என்பது சித்தகுரு நடராசர் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௩௫௫. ஞானானந்தமணவாள சுவாமிகள் (20 - நூ.)

இவர் சென்னை தண்டையார்பேட்டையில் இருந்தவர். சாது நாராயணதேசிகர் என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்று அத் தேசிகர் மடத்தில் தலைவராக இருந்தவர். சுவாமி அருணகிரிநாதர் முதலியோர் இவருடைய மாணவர்கள். மருத்துவ நிலையம் முதலியன அமைத்து மக்களுக்கு அரிய பணிபுரிந்து கொண்டிருந்தார். தம் ஆசிரியர் நாராயண தேசிகர்மீது அந்தாதி ஒன்று பாடியுள்ளார். அவ்வந்தாதி தேசிக நாராயணர் திருவந்தாதி என்று வழங்குகிறது. அவ்வந்தாதியைப் பாராட்டிச் சிவராமலிங்க அடிகள், சி. செ. முக்தாநந்த அடிகள், கோ. வடிவேலுச் செட்டியார், சுவாமிசுந்தர பாரதியார், பெங்களூர் கணபதி நாயகர், தே. அ. சாமிகுப்புசாமி, த. கோவிந்தசாமிப் பிள்ளை, காளத்தி இ. சிதம்பரசாமி புராணிகர், மேலவலம் சிவகாருணிய முதலியார், ச. கந்தசாமி முதலியார், பூ. அ. கோவிந்த ராச தாசர், தி. முனிசாமி நாயகர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர் (இவர் தொண்டைவள நாட்டில் காஞ்சிபுரத்திற்கு அண்மையில் உள்ள படுவூர் என்னும் ஊரில் வேளாள குலத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் வீராசாமி, தாயார் பெயர் நாகம்மாள் பின்னுளிற் சென்னையை அடைந்து அலுவல் பார்த்துத் திருமணம்புரிந்து முறையே இல்லற வாழ்க்கையை நடத்தியவர்.)

'பார்மிதில் ஓங்கிப் பயிர்தழைப்பப் பெய்யுமொரு
கார்போல வந்தென் கலிதீர்த்துப்—பேர்வடிவம்
அற்ற பரசிவமா யாக்கிவைத்த நாரணு
நற்றவனே நினவருளை நல்கு''

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௩௩௪. தங்கவேலுச்சாமித் தேவர் - வீ
## (1889)

இவர் இராமநாதபுரத்தில் அரசராக விளங்கிய முத்து விசய ரகுநாத பாஸ்கர சேதுபதிக்கு மைத்துனர் ஆவர். இலக்கண இலக்கியப் பயிற்சி மிக்காராய்ச் செய்யுள் பாடுந்திறமுடையவராக விளங்கினர் இவரால் இயற்றப்பெற்ற நூல் 'கீதாமிர்தம்' என்பது அது பல இசைப் பாடல்கள் அடங்கப் பெற்றது. பாடல்கள் உள்ளத்தை உருக்கும் இனிமை அமையப்பெற்றது.

**மங்களம்**

*இராகம்—சுருட்டி—தாளம்—ஆதி.*

பல்லவி

சரவணபவ குருபர முருகசண்முக தேவா
மங்களம் ஓம் (சரவண)

**சரணங்கள்**

அரகர சிவசிவ அரியய னறியாத
பிரணவ மந்திரப் பொருளான எங்கள் தங்குல
நாதா மஙகளம் ஓம் (சரவண)

அலகிலா மகிமையுட னுலகுக் கொருதனி
மலமறு நிருநீல கண்டருக்குப தேசித்த
வேலா மஙகளம் ஓம் (சரவண)

வாசமிகுவள்ளி தெய்வயானையுடனே யிலங்கி
நேசமுடனே தங்கவேலுச்சா மிக்கருளும்
கந்தா மங்களம் ஓம் (சரவண)

## ௩௩௫. தங்கவேலுப் பிள்ளை - அ

அரன்வாயில் என்னும் ஊரில் தோன்றியவரும் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடங் கல்வி கற்று வெண்பாப் புலியாக விளங்கியவருமாகிய அரன்வாயில் வேங்கடசுப்புப் பிள்ளையவர்களின் உடன பிறந்தார் ஆவர். இவருடைய தந்தையார் பெயர் அப்புப் பிள்ளை. இவருந் தம்முடைய உடன் பிறந்தாரைப் போன்றே கல்வி கற்றுச் சிறப்படைந்து விளங்கினார். 'இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை.

பல நூல்களின் முகப்பில் இவருடைய சிறப்புப்பாயிரமுங் காணப்பெறுகின்றது. அப்பாவுப் புலவர் என்பவர் இயற்றிய நெஞ்சறிவுறுத்தல் என்னும் நூலுக்கு இவர்,

"கோயிலூர் அருண்முத்தி ராமலிங் கத்தனிக்
குரவனிரு சரணமுடிமேற்
கொண்டுசெந் தமிழ்மணம் மணப்பவரு செஞ்சொற்
குவான்மனந் தணிபெருகவே
ஆயிருஞ் சித்தாந்த நயமுறை விரிந்தநெஞ்
சறிவுறுத் துதலென்னு நூல்
அறிஞர்கள் மணியென்று வந்துகொண் டாடவே
அகமகிழ்ந் தினிதுரை செய்தான்
சேயிழை வதிந்தமணி மார்பனருள் தத்தாத்
திரேயசிவ யோகி மரபாம்
திருப்பருப் பதப்பரம் பரையினிற் சிவராம
தேசிகற் கடிமை பூண்டோன்
தாயில்வரு பரசிவங் கோயில்கொண் டருளுநல்
தலமெனுஞ் சிரபுரத்தில்
தங்குசீர் அப்பாவு மபிபனென் றொருபெயர்
தரித்திலகு தமிழ்வாணனே."

என்னுஞ் செய்யுளால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். வடபழநி வண்ணமஞ்சரி என்னும் நூலுக்கு வெண்பாவினாலேயே சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார் திருக்குருகூர் ஞானசித்தர்மீது புகழ்நூல் ஒன்றும் இவரால் இயற்றப்பெற்றுள்ளது

## கூகூசு. தஞ்சை இராமசாமிக் கவிஞர்

முகமதிய சமயப் புலவர் ஒருவரால்,

"விஞ்சைக்கோ வந்த வினைக்கோ கவிக்கோமான்
தஞ்சைக்கோ மிஞ்சும் தவக்கோவாம்—அஞ்சுக்கோ
விற்சரணம் பூண்டான் வியன்ராம சாமிமனு
விற்சனனம் பூண்டான் வியந்து"

என்று புகழ்ந்து பாராட்டப் பெற்ற இவர் சோழவள நாட்டில் தஞ்சைமா நகரில் இருந்தார் அட்டாவதானஞ் செய்வதினும் வல்லவர். இவர் காலத்தில் தொண்டியில் முகமது இபுராகிம் சாகிபு புலவர் என்பவர் சிறந்த அறிஞராகவும் செல்வராகவும் கொடையாளியாகவும் விளங்கினார் இவர் அவர்மீது பல செய்யுட்கள் இயற்றிச் சென்று சிறந்த பரிசில்கள் பெற்றதன்றி

அப்புலவரால் புகழ்ப்பாடல்களையும் பெற்றார். மேற்படி முகமதிய வள்ளலின் கொடைநலத்தைை இவர் புகழ்ந்து,

'' சுற்றன் முகமதிபு ராகீம் சுகநளிவம்
உற்றதடங் கையே உவந்தகை—மற்றையர்கை
பொக்லை கரிக்கை பழுது விழுந்தமரச
சக்கை உலக்கையது தான் ''

என்னுஞ் செய்யுளைப் பாடினார். இவர் இவ்விருபதாம் நூற்றாண்டினரே.

## கூஙஎ. தட்சணாமூர்த்தி தேசிகர்
(15 - நூ.)

திருவாவடுதுறை ஆதீனத்தில் சின்னப்பட்டத்தில் இருந்தவர். தசகாரியம், உபதேசப்பஃறொடை என்னும் சைவசித்தாந்த நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

## கூஙஅ. தட்சணாமூர்த்தி தேசிகர்

இவர் பாண்டிவளநாட்டில் தென்காசியில் இருந்தவர். இவர் வசித்திருந்த ஆதீனம் சிவந்த பாதமுருடைய தேசிகர் ஆதீனம் என வழங்கப் பெறுகிறது இவர் ஆகம சாரசங்கிரகம் என்னும் ''சந்தியாகருமதீவிகை'' நூலை உரைநடையில் எழுதியுள்ளார்.

'' சந்தியா வந்தன நூல் சாற்றுவதற் கைங்கரனை
வந்தனஞ்செய் துள்ளம் மகிழ்ந்தேத்திப்—பந்தவினை
நீக்கும் பதாம்புயத்தைத நெஞ்சிலுற வேநினைந்தே
வாக்குநடை சொல்வேன மகிழ்ந்து ''

என்பது காப்புப் பாடல்.

## கூஙகூ. தணிகாசல முதலியார்

இவர் சென்னை மயிலையில் இருந்தவர். மகாவித்துவான் வரிசையிற் சேர்த்துப் பாராட்டப் பெற்றவர். திரு. வி, கலியாண சுந்தர முதலியாருடைய தமிழாசிரியர்களில் இவரும் ஒருவர். திரு. வி. க. இவரிடம் பல சைவசித்தாந்த நூல்களையும் பிற நூல்களையும் ஓதியுணர்ந்தார். ஆறுமுக நாவலரின் மாணாக்கரில் ஒருவர். சைவசாத்திரங்களைப் பன்முறை பலருக்குப் பாடஞ்

சொன்னவர். பதினெண் புராணங்களையுஞ் சொற்பொழிவு செய்தவர். இவரிடம் மாணவர்கள் நெருங்கிப் பாடங்கேட்க வேண்டுமாயின் பயபக்தியுடனும் அடக்க ஒடுக்கத்துடனும் கண்ணுங் கருத்துமாக விழிப்புடன் இருந்து கேட்கவேண்டுமாம். மாணவர்களிடம் அணுவளவு தவற்றினைக் கண்டாலும் பாடஞ் சொல்ல முடியாது என்றுகூறி விரட்டிவிடுவாராம். ஒருமுறை புதிதாகப் பாடங்கேட்கச் சென்ற சிலர் பாடலை இசையுடன் படிக்கவே இவர் மிகுந்த சினமடைந்து "உங்களுடைய இசைப் பயிற்சியை என்னிடமா காட்டுவதற்கு வந்தீர்கள்? ஒடுங்கள் வெளியே" என்றுகூறி விரட்டிவிட்டாராம். பாடங்கேட்கச் சென்றவர்கள் எவ்வளவோ கெஞ்சிக்கேட்டும் மன்றுடியும் பய னில்லையாம். இவரைப் பற்றிய செய்திகள் கேட்கப்படுகின் றனவேயன்றி இவர் நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை. நன்னூல் முதலிய இலக்கண நூல்களிற் கூறப்பெறுகிற தன்மைகள்வாய்ந்த ஆசிரியர்களும் மாணவர்களும் உலகில் எத்தனையோ பெயர் இருக்கின்றனர்.

## ௬௪௦. தணிகைராய முதலியார் - செ

(20 - நூ.)

இவர் சொர்க்கபுர ஆதீனம் சுப்பிரமணியத் தம்பிரானிடம் இலக்கண இலக்கியங்களையும் சைவசித்தாந்த நூல்களையுங் கற்றவர். தம்மாசிரியராகிய தம்பிரான்மீது இவர் இரட்டை மணிமாலை என்னும் நூல் பாடியுள்ளார்.

"சின்மயனே சுப்ரமண்ய தேசிகனே தற்பரனே
மின்மயமா மெய்யென்று வெவ்வினையேன்—வன்மனத்தை
ஐம்புலத்திற் செல்லா தடக்கவுரந் தந்துனது
செம்பொனடி சேர்ந்திடுமா செய்"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௬௪௧. தண்டபாணி தேசிகர் - வி

(20 - நூ.)

இவர் இந்நூற்றுண்டின் தொடக்கத்தில் சோழவள நாட் டிலே மாயூரத்தில் இருந்தவர். அங்கு அந் நாளிற் சிறந்த புலவ

ராக விளங்கியிருந்த கிருட்டிணையர் என்னுங் கிருட்டிணாநந்த யோகிகளிடத்தில் இலக்கண இலக்கியங்கற்றுப் புலமைபெற்றார். தம்முடைய ஆசிரியர் இயற்றிய மயிலைச் சிலேடை வெண்பா என்னும் நூலுக்கு இவர்,

"காவிரி நதியாற் பலவள மோங்கும்
கவின்பெறு மயிலைவாழ் பரற்கு
மாவிர தயகோ ளடியவர் தம்பால்
மனமுற மகிழ்ந்திருந் தருள்வோன்
பாவியல் இசைநா டகமெனுந் தமிழைப்
பண்புறத் தெரிந்தெடுத் துரைப்போன்
பூவிய லுறுவே தாந்தசித் தாந்தப்
பொருளுணர் சமரச நிலையோன்.

ஓதுமா மயிலைக் கிருட்டிண நந்த
யோகியென் றுறுபெயர் கொண்டோன்
காதலி னெனக்கும் இயற்றமிழ் உணர்த்திக்
காட்டிய நற்குரு வானோன்
மாதுபா தியனே பரமெனக் கொண்ட
மனமுறு வேதியர் குலத்தோன்
தீதிலா மயிலைச் சிலேடை வெண்பாவைச்
சிறப்புற வனைந்தனன் அதனை.

கருணையின் மகிழ்ந்தொன் றாயிர மாக்கிக்
காணிய விழைவினச் சிடுவித்
தருளினன் துறைசைப் பெரியவா தீனத்
தன்பமர் அடியரின் மிக்கோன்
பொருவின்மா யூர நாதர்கட் டளையிற்
பொலிவுறு புனிதன்மா லையனுந்
துருவுசே வடிகள் திருவுளத் தகலாச்
சுந்தர லிங்கமா தவனே"

என்னுஞ் செய்யுட்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## சுசஉ. தத்துவப்பிரகாச அடிகள்

இவர் திருவாரூர்த் தத்துவப் பிரகாசருக்கு வேறானவர். சீகாழியில் இருந்தவர். சிற்றம்பல நாடிகளின் மாணவர்களில் ஒருவர். இவர் முந்நூலின் வழியே சரியை முதல் நான்கு பாதங்களையும் ஒவ்வொன்றை நான்காய்ப் பதினாறு பாதமாக விரித்து முந்நூற்று முப்பத்தேழு திருவிருத்தங்களால் 'தத்துவப் பிரகா

சம்' என்னும் நூலை இயற்றியிருக்கிறார். அந்நூலை ஆராய்ந்தவர்கள் சரியையாதி நான்குபாதங்களின் பகுதிகளையும் பரசமய உட்சமய பேதங்கள் நாற்பத்தெட்டினையும் சித்தாந்த பேதம் எட்டினையும் உணர்ந்து சைவசித்தாந்த உண்மை நெறியில் நின்று வீடுபேற்றை அடைவர்.

"கருதுபுற நூலாறின் விரிவுபதி னெட்டுங்
கரவிலுட் சமயத்தி னிரைகள்பதி னெட்டும்
இருதெரிவுங் கூட்டியோர் நாற்பத்தெட்டும்
எந்நூலே மெய்ந்நூலென் றிசைக்குமிதற் கெல்லாம்
அரிதுபொரு ளாயனுகா தகச்சமய நேரா
அப்பாலாய்க் கண்ணொளியும் அலரிபடி கமும்போல்
பெரிதுபொரு ளாஞ்சைவ சித்தாந்த நெறியைப்
பேதமையா லறிந்தவகை காதலினுல் உரைப்பாம்."

என்பது பதியிலக்கணங் கூறத்தொடங்கலில் முதற் பாட்டு.

## கூசரு. தத்துவலிங்க சுவாமிகள்
(கி. பி. 1860)

இவர் தத்துவநிசானுபோகசாரம் என்னும் நூலினை இயற்றியிருக்கிறார். நூல், வேதச் சிறப்பு, ஆகமச் சிறப்பு, பிராமணன் சரிதை, க்ஷத்திரியன் சரிதை, வைசியன் சரிதை, சூத்திரன் சரிதை, பிரமசாரி சரிதை, இல்லறத்தான் சரிதை, வானப்பிரத்தன் சரிதை, சந்நியாசி சரிதை, உடலிழிவு, குடும்ப இழிவு, போக இழிவு, மகளிர் இழிவு, பொருளிழிவு முதலியவைகளைக் கூறுகிறது.

"வேதமின் மினிவி ளக்கு
வெண்மதி கதிர்போல் காட்டும்
பேதநால் விதத்துஞ் சிட்டிப்
பிரபஞ்சத் தொழில்கள் எல்லாம்
நீதமாய்க் காட்டி மோட்ச
நிலவகை ஒன்றாய்க் காட்டும்
பேதமா மதங்கள் காட்டிப்
பின்னிட்டுக் காட்டு மன்றே."

என்பது வேதச் சிறப்புக்கூறும் பாட்டு.

## கூசச. தம்பா உபாத்தியாயர் - ச
## (19 - நூ.)

பாண்டிவள நாட்டில் கடகானல்லூர்ப் பேட்டையில் சங்கரலிங்க உபாத்தியாயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் தம்முடைய தந்தையாரிடமே இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமை யடைந்தார். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள், "திருக்கமலேசர் செந்தமிழ் மணிமாலை" "அருணசலேசர் தோத்திரப் பாமாலை" "செகதீசுவரி சந்தக்கொம்மைப் பாடல்" முதலியன

"பெண்மயலி லேமூழ்கிப் பேரின்ப மாய்மகிழும்
எண்ணைந் தவிர்ந்துனை நான் ஏத்துவதும் எந்நாளோ
தண்ணம பிறையணிந்த சாமியே யானைமுகத்
தண்ணல் தனையீன்ற அருணசலேசுரனே"

என்பது அருணசலேசர் தோத்திரப்பாமாலையில் ஒரு பாட்டு. திருவிதாங்கூர்ச் சமத்தான வித்துவான் பதுமநாபன் கவிராசர், எட்டையபுரம் தெய்வசாமிக் கவிராசர், உலகநாத உபாத்தியாயர் எனபோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## கூசரு. தம்பியப்ப செட்டியார் - நா
## (20 - நூ)

சோழவள நாட்டில் தில்லையாடி என்னும் ஊரில் இருந்தவரும்,

"பல்பெரும் நூலும் பாங்குங் கதித்தான்
திருவுங் கல்வியும் சிறப்புந் திகழ்ந்தான்
மருவுங் குற்றமும் வாட்டமும் இகழ்ந்தான்
துதியமை புலவன் அரிசில சீர்த்தியான்
முருகவேள் கழற்கண் உருகும் ஆர்த்தியான்."

என்று அறிஞர்களால் பாராட்டப் பெற்றவருமாகிய நாராயண செட்டியார் என்பவருடைய அருமைப் புதல்வராகத் தோன்றியவர் இவர். திருவிடைக்கழி முருகக்கடவுள்மீது அந்தாதியொன்று பாடியிருக்கிறார். தனிப்பாடல்களுஞ் செய்துள்ளார்.

இவருடைய அந்தாதியைப் பாராட்டிப் பெங்களூர் ப. மு. சோம சுந்தரம் பிள்ளை, சீர்காழி சீநிவாச ஐயங்கார், திருவிடைக்கழி அ. குமாரசாமிப் பிள்ளை, தில்லையாடி த. வேதியப் பிள்ளை, கோ. வரதராச செட்டியார், தரங்காபுரம் வீ. இருளப்ப பிள்ளை, பிறையாறு நா. பெ. இராமச்சந்திர நாயுடு முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

''வடிவார் வதனங் குழைச்செவி வெண்பொடி மல்கு நுதல்
செடியார் வினைதீர் விழிப்புன் முறுவல் திகழுறுவேல்
கடியார் பதங்கண் டிகைமுப் புரிநூல் கவினுறவிப்
படியா ரிடைக்கழி யாய்கடைக் கண்ணணைப் பார்த்தருளே.''

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௬௪௬. தருமதாசுப் பிள்ளை - தி
(19 - நூ)

இவர் திரிசிரபுரத்தில் சுகதாசுமண்டித் தெருவில் வாழ்ந்திருந் தவர். பழங்கால முறைப்படி நூல்களைப் பயின்று புலவரானவர் இவருடைய பெயருக்கு முன்னால் வித்துவான் என்னும் சிறப்புப் பெயருங் காணப்பெறுகிறது. இவர் அங்காளம்மன் பதிகம் பாடியிருக்கிறார். பிற விவரந்தெரியவில்லை. திரிசிரபுரம் வீரேச்சுரத்தில் இருந்த மதுரைநாயகம் பிள்ளை என்பவர் மேற்படி பதிகத்திற்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். அப் பதிகத்தில் ஒரு பாடலைக் கீழே காண்க.

''சுந்தரி வரந்தரு நிரந்தரி வஸந்தரு
துரந்தரித்ரி யம்பகியெனும்
சோதியரு ளாதிதிகழ் வேதியிரு ளோதியென்
துயர்தவித் திடுவிநோதி
அந்தரி புராதனிகிர் பாகரி சுமங்கலி
அநாதரட் சகியோகினி
ஆரணி தயாநிதிந லம்பிகை அநந்திசெக
நாதரிச டாதரியரி
சிந்தைமகிழ் தநகையகி லாண்டமுழு தும்பெற்ற
திருவயிற் றமலைவிமலை
தேவியென் றுன்னையனு தினநவிலு நாயினேன்
தீமைகள் தவிர்க்கவருவாய்

வந்தனை செயும்புலவர் வாழ்வண்ண னூர்தனில்
வண்மையொடு விறலிருக்கும்
மங்களம் மிகுந்தசிவ சங்கரி யெனுங்கவுரி
மங்கையங் காளம்மையே ''

வேறு சிலரும் அங்காளம்மன பதிகம் பாடியுள்ளனர்.

## ௩௪௭. தருமபுத்திரன் கவிராயர்

இவர் பாண்டிவள நாட்டில் ஆயாபட்டி என்னும் ஊரில் இருந்தவர். "வாளெழுபது'' என்னும் நூலை இவர் பாடியுள்ளார்.

'' விடைகொண்டு போனதூ துவன்வந்து
சொன்னமொழி வீறுகா தேறு மளவில்
வெற்றிமுர சடிவிருது டால்பிடி குடாரமடி
விஷைதிசா னடிகொம்பிசை
படைசென்று தூசிடென் றணியிட்டு வாரிட்ட
பைம்பொற் களத்தேறியே
பாராடல் வினைனினில் சேராட விழ்சிரசு
பந்தாட வந்தேறியே
அடர்கின்ற பரியானை உடல்துண்ட மதுகண்டு
அணிகின்ற காலபிலசித்
திராக்கினை படக்கண்டு தேக்குகுரு திக்கடலில்
அருபிண மிதப்ப வோடை
குடையங்கை விலைதுங்க முடிபதா கைகள்சல்வி
கொம்புபமபிட வென்றிவாட்
கோட்டையிடு கின்றபடை விட்டவர்களே யைந்து
கோட்டைவளர் நாட்டவர்களே.''

என்பது வாளெழுபதில் ஒரு பாட்டு.

## ௩௪௮. தருமலிங்கக் கவிராயர்

இவர் பொன்னூர் என்னும் ஊரினர். இவர் தம்முடைய பெருமைகளை,

'' உலகம்யா வும்படைக் கும்பிரம னுஞ்சீத
உததியிடை துயிலுமாலும்
ஓடியோ டித்தேடி யறியொணு ஒருபொருளை
உள்ளமல ரிற்கண்டவன்

ஓங்குதென் பொதிகைமுனி அருள்வழி வரும்ராச
யோகவமு தங்கொண் டவன்
ஒப்பிலா அணிமாதி ஓரெட்டு சித்திகளின்
உண்மைதேர்ந் துளமகிழ்ந்தோன்
ஓதரும் இலக்கண இலக்கியம எனும்பெரிய
ஒண்கடற் கரைகண் டவன்
ஊக்கமிகும் ஆயுள்வே தந்தெரிந் தோன்தேவி
உபயதா ளுக்கடிமையாய்
ஒளிர்கின்ற பூரணா னந்தசற் குருவடியை
ஒருநாளு மறவாமலே
உன்னியுன் னிப்பரவு தருமலிங் கக்கவிஞன்
உவகையோ டெழுதுநிருபம்.''

என்று குறிப்பிடுகிறார். இலக்கண இலக்கியங்களில் வல்லுந ராகிய இவர் சாரங்கதர விலாசம் என்னும் நாடக நூலையும் வேறு பல நூல்களையும் இயற்றியிருக்கிறார். இவரிடத்தில் தமிழ்க் கல்வி கற்றுப் புலமைபெற்றவர்கள் பலர். இவருடைய நாடகம் பழங்காலப்போக்கை ஒட்டி அமைந்துள்ளது. இந் நூலைப் பாராட்டித் திருத்தணிகை விசாகப்பெருமாளையர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். சேர்வைக்காரன் சாரங்கதரனைச் சிறையி லடைத்து அரசனிடஞ் சொல்வது:

''அண்ணலே நீ உரைத்த அரிய ஆக் கினைப்படிக்குத்
தண்ணளி மிகுந்தநல்ல சாரங்க தரனைப்பற்றி
மண்ணுல கதனில்பொல்லா வன்சிறை யதனில்வைத்தேன்
கண்ணகன் ஞாலங் காக்கும் காவலா தெரிந்தி டாயே.''

## கூசகூ. தருமலிங்கம் பிள்ளை - பூண்டி

(19 - நூ.)

இவர் தஞ்சைமாவட்டத்திலேயுள்ள பூண்டி என்னும் ஊரில் இருந்தவர். இலக்கண இலக்கியங்கள் நன்கு கற்றுச் செய்யுள் பாடுந் திறம்பெற்றிருந்த இவர் பள்ளிக்கூடம் ஒன்று வைத்துக் கொண்டு அதில் மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக்கொண் டிருந்தார். அந் நாளில் தஞ்சைமாநகரில் சதாசிவராயர் தோட் டத்தில் பெரியார் ஒருவர் வசித்துக்கொண்டிருந்தார். அவர் பால் சுவாமிகள் எனவும், பாபவிநாசஞ் சுவாமிகள் எனவும் காரணப் பெயர் அமையப் பெற்றவர். நாராயண சுவாமிகள் என்னும்

பெயரினர். மெய்ஞ்ஞானியாக விளங்கிய அவர் சித்துக்கள் செய்வதினும் வல்லவராகச் சிறந்து விளங்கியிருந்தார். அப்பெரியார்மீது இவர் பதிகம், இசைப்பாடல் முதலியன இயற்றியுள்ளார்.

> " காசினியில் வாழுயிர்கள் யாவையுங் காத்திடக்
> கடவுளே அவதரித்துக்
> கற்பகத் தருவென்ன அடிமைகட் குரியநல்
> கதிகள்மேன் மேலும்உதவி
> மாசிலா யோகியர் வசிக்குந் திருத் தஞ்சை
> மாநகர் எனுந்தலத்தில்
> வாசமிகு பூமரஞ் சூழ்சதா சிவராயர்
> மகிழுநந் தனவனமதில்
> ஆசில்கவி நாலாயி ரத்துத்தொ ளாயிரத்
> தநன்ஞெடெண் பத்துமூன்றில்
> ஆண்டுவிஷு மதிதனுசு தேதிபதி னொன்றுபங்
> காம்பட்சம் முதல்சதுர்த்தி
> தேசுவளர் திருவோண நாழிபகல் பதினொன்றில்
> தேவர்களெலாமகிழ்ந்து
> தேன்மாரி பொழியநா ராயணப் பிரமஞ்
> சிவத்துடன் உகந்துற்றதே."

என்பது இவர் அப் பெரியார் வீடுபேறடைந்த காலங்குறித்துப் பாடியது.

## ௬௫௦. தருமலிங்கம் பிள்ளை - தி

(1876)

இவர் திரிசிரபுரத்தில் இருந்தவர். கோவிந்த பிள்ளை என்பவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலவரானுர். கம்பராமாயணச் சொற்பொழிவு செய்வதில் இவர் சிறந்து விளங்கியமையின், " கம்பராமாயணப் பிரசங்கி " என்னுஞ் சிறப்புச் சொல்லாலும் வழங்கப்பட்டார். இவர் " திருவெள்ளறை இரட்டைமணிமாலை " என்னும் நூல் பாடியுள்ளார். நூலைப் புகழ்ந்து கோவிந்த பிள்ளை, இராமாநுச நாயகர், ஆகியோர் சாத்துக்கவி பாடியுள்ளனர் திருவெள்ளறை இரட்டைமணிமாலையைத் தவிர வேறு நூல்கள் இவர் இயற்றியனவாக அகப்படவில்லை.

"கேசவனை யேபணிவேன் கேட்பேன் அவன்சரிதம்
ஆசையுடன் காண்பேன் அவனுருவை—வாசமிகும்
அச்சந் தவிர்வெள் ளறையனரு ளாலினியென்
அச்சந் தவிர்வேன் இயான்"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கூருக. தர்க்ககுடார தாலுதாரி

இவர் ஈழவள நாட்டிலே தோன்றியவர். ஞானப்பிரகாச அடிகளது வழிமுறையில் வந்தவர். ஆறுமுக நாவலருக்கு மருகரும் மாணுக்கரும் ஆவர். தென்மொழியினும் வடமொழியினும் வல்லவர். சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியாசாலையில் தலைமை யாசிரியராக இருந்தவர். இவர் வடமொழியில் இருந்த "அரிகர தாரதம்மியம்" என்னும் நூலைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடியதன்றி, வேதாகம நாமவாத தீபிகை, நாராயண பரத்துவ நிரசனம், தருக்காமிர்தம், அட்டநேத்திர புராணம் முதலிய வேறு நூல்களையும் இயற்றியுள்ளார். அரிகரதார தம்மியம் க0கூ செய்யுட்களால் ஆகியது.

"ஒருவன்விழி மலராலர்ச் சனைபுரிந்தான்
ஒருவனவற் குவந்து தன்கை
விரவுறுபே ராற்றலமர் சக்கரத்தை
வெற்றிபெற வழங்கி ஞன்மே(வு)
இருவர்தமில் எவனதிகன் எனவூஉத்
துண்மையிசைத் திடுக மாசு
மருவுதலில் அறிவுடையீர் யாமவனை
அடைந்துவழி படுவாம் அன்றே."

என்பது அரிகரதார தம்மியத்தில் ஒரு பாட்டு. இந் நூலுக்குத் தஞ்சை விசுவலிங்க பிள்ளை என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். "தர்க்க குடாரதாலுதாரி" என்பது காரணச் சிறப்புப் பெயர் இவருடைய இயற்பெயர் திருஞானசம்பந்தப் பிள்ளை என்பர்.

## கூருஉ. தன்வந்திரி

ஆயுள்வேத நூற்கடலின் கரையைக் கண்ட இவர் முன் பிறப்பில் திருப்பாற்கடலில் பிறந்து தேவலோக மருத்துவராக

இருந்தவராம் மறுபிறப்பில் மனிதராய்த் தீர்க்கதமன் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினராம். வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவராகிய இவர், தம் பெயரால் தன்வந்திரி நிகண்டு, தன்வந்திரி வைத்திய சிந்தாமணி சிமிட்டு ரத்தினச் சுருக்கம், கலைக்ஞானம் முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார். மருத்துவத்தில் இவர் சிறந்த புலமைபெற்றவர்.

" ஆமப்பா இந்நூலைப் பதனம் பண்ணு
அப்பனே நல்லோர்கள் பதனஞ் செய்வார்
வாமப்பா இந்நூலை எடுத்துக் கொண்டு
வளமாக நீயெடுத்துப் பூசை பண்ணு
காமப்பா கல்வியறி வெல்லாந் தோன்றும்
கனமான இந்நூலைக் கைவிடாதே
நாமப்பா முந்நூறும பாரு பாரு
நலமான கருக்கிடைநி கண்டிது தான்முற்றே "

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## சூ'ந்டு. தாசி பெரிய குப்பு

சோழவளநாட்டில் மாயூரத்தில் சென்ற பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடையில் வாழ்ந்திருந்தவள். நூல்கள் பலவற்றைக் கற்றுச் சிறந்த புலமை பெற்றிருந்தாள். கம்பர் தமது இராமாயணத்திற்குத் தாசியொருத்தியிடமும் சிறப்புப்பாயிரம் பெற்றதைப்போல இவளிடமும் பலர் சிறப்புப்பாயிரம் பெற்றனர். மனுச்சோழச் சக்கரவர்த்தி சரித்திரப்பா என்னும் நூலுக்கு இவள் பாடிய சிறப்புப்பாயிரம்,

" மீயூரும் முகிற்குலங்கள் பொங்கரில் வாழ்
புதுமைநகர் மேலோன் நல்ல
தாயாரும் புகழ்நாரா யணசாமி
மனுச்சோழன் சரிதப் பாவை
வேயூரு முத்தனடி யவர்படிக்கப்
பார்க்கவதை விரும்பிக் கேட்க
வாயூருங் கண்ணுடுஞ் செவிதேடும்
மேனியாம வழுதகல் என்னே."

என்பதாகும். இச் சிறப்புப் பாயிரச் செய்தியைத் தவிர இவரைப்பற்றிய பிற செய்திகள் ஒன்றுந் தெரியவில்லை.

## ௯௨௪. தாண்டவராய அடிகள்

தஞ்சைமாவட்டத்தில் நன்னிலம் என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய ஆசிரியரின் பெயர் நாராயணகுரு. இப்பெரியார் வேதாந்த நூல்களில் மிகுந்த பயிற்சி பெற்றவர். வடமொழி தென்மொழி இரண்டினும் வல்லவர். இவர் கைவல்ய நவநீதம் என்னும் அரிய வேதாந்த நூலை உ௮௮ பாடல்களுடையதாக இயற்றியிருக்கிறார். நூல் தத்துவ விளக்கப் படலம், சந்தேகந்தெளிதற் படலம் என்னும் இரு பிரிவினையுடையதாக அமைந்திருக்கிறது. இந் நூலுக்குப் பிறைசை அருணசல அடிகள், ஈசூர் சச்சிதாநந்த அடிகள், சிதம்பரம் பொன்னம்பல அடிகள் என்னும் பல பெரியோர் உரையியற்றியிருக்கின்றனர். இவ்வுரைகளிலெல்லாம் பொன்னம்பல அடிகளாருடைய உரையே மிகச் சிறந்ததாக இக்காலத்தில் வழங்குகின்றது.

''சொல்லிய மகனே எங்குஞ் சூழ்வெளி யிருக்க மண்ணைக்
கெல்லிய பின்பு தோன்றுங் கிணற்றி னாகாசம் போலே
ஒல்லையாம் பிரம நூலால் உற்றது போலே தோன்றும்
எல்லையில் நாம்எப் போதும் ஏகமென் றிருந்து வாழ்வாய்.

கானல்நீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க னூர்
வானமை கயிற்றில் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
பீனமாந் தறிபு மானிற் பிரபஞ்சம் எல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே உன்னை நம்மாணை மறந்தி டாதே.''

என்பன தத்துவவிளக்கப் படலத்தில் இரண்டு பாடல்கள்.

## ௯௨௫. தாண்டவராயக் கவிராயர்

இவர் சென்னைமா நகரில் திருமயிலாப்பூரில் வாழ்ந்திருந்தார். திருமயிலையில் எழுந்தருளிய இறைவன்மீது யமகவந்தாதி ஒன்று இயற்றினார். இவர் காலத்தில் திருமயிலையில் பூம்பாவை வேலப்ப முதலியார் என்னும் பெயருடைய செல்வர் ஒருவர் வாழ்ந்திருந்தார். அச் செல்வர் புலவர்களைப் போற்றிப் புரக்கும் ஏற்றமிக்குடையவர். அவர் இவ்வந்தாதியின் பெருமை சிறுமைகளை நன்குணர்ந்துகொண்டு பிறகு அரங்கேற்றஞ் செய்யலாம் என்று எண்ணினார்.

வேலப்ப முதலியார்க்குப் புலமைமிக்க நண்பர்கள் பலர் இருந்தனர். அவர்களுள் அம்பலவாணக் கவிராயர் என்பவரும் ஒருவர். பேரறிஞராகிய அவர் சோழவள நாட்டிலே தஞ்சை மாவட்டத்திலே இருந்தார். தாண்டவராய கவிராயரின் யமக வந்தாதியின் தன்மையை மேற்படி அம்பலவாணக் கவிராயர் மூலமாகத் தெரிந்துகொள்ள எண்ணினர். மூலத்தையும் உரையையும் அவருக்கு அனுப்பி அதனைப் பார்வையிட்டு உள்ளக்கிடக்கையைத் தெரிவிக்குமாறு கேட்டார். நூலையும் உரையையும் பார்வையிட்ட அவர்,

'' சங்கத் தமிழ்ப்பொன்னின் உரையாணி ஞானச்
சரக்கறை எதிர்ந்தகவிதைத்
தந்திக் குழாம்வென்ற கண்டீர வம்பெரிய
சைவசித் தாந்தநிபுணன்
துங்கப்ர பந்தங்கள் ஒருகோடி அனுதினம்
சொல்லினிய மதுரவாக்கி
துரைராசர் பரவுமம் பலவாண கவிராச
துரந்தரன் அனுப்புமோலை
வங்கப் பயோததியின் நிறைசெல்வன் மதியூகி
வைத்யநா தேந்த்ரன்ஈன்ற
வரதநற் குணமேரு பூம்பாவை வேலப்ப
மகிபன்எதிர் கொண்டுகாண்க
கங்கைச் சடாமகுடர் மயிலையந் தாதியுரை
கனிகண்டு கண்டுகொண்டோம்
கவியரங் கேற்றியிசை நாட்டுதாண் டவராய
கவிராசர் மனமகிழவே.''

என்னுஞ் சீட்டுக்கவியை எழுதியனுப்பினர். பிறகு நூலரங்கேற்றம் நடைபெற்றுப் புலவருக்குச் சிறந்த நன்கொடையும் வழங்கப்பெற்றது.

'' படியேற்ற மாற்கர விந்தமுரித்தவர் பார்த்திபன்பாற்
படியேற்ற மாற்கர விந்தற்கெட் டாதபொற் பாதருட்
படியேற மாற்க ரவிர்தார் மயிலைப் பரமர்விதிப்
படியேற்ற மாற்கர வில்லாம னில்லருள் பண்ணுவரே.''

என்பது அந்தாதியில் முப்பத்திரண்டாவது பாடல். இப்புலவர் மேற்படி பூம்பாவை வேலப்ப முதலியாருடைய ஆதரவில் வாழ்ந்திருந்ததாகத் தெரிகிறது.

## கூ௫சு. தாண்டவராய முனிவர் (1881)

இவர் திருத்தில்லையைச் சேர்ந்த பாளையங்கோட்டை என வழங்கும் தென்னபுரி என்னும் ஊரில் இருந்தவர். கடம்பூர் சுயம்பிரகாச தேசிகர் என்பவரிடத்தில் அருளுரைபெற்றுத் துறவியாக விளங்கியவர். புலமைச் சிறப்புடைய இவர், "வேதாந்த சங்கற்ப நிராகரணம், வைராக்கிய சதகத் தோத்திர வுரை, சுயம்பிரகாச தேசிகர் பிள்ளைத்தமிழ், திருத்தொண்டர் போற்றிக் கலிவெண்பா, விளாகம் நிருத்த விநாயகர் பதிகம், திருத்தொண்டர் அந்தாதி, க்ஷேத்திரக் கலிவெண்பா, சிவசந்நிதானமுறை முதலிய நூல்களை இயற்றியுள்ளார். சிவசந்நிதான முறையில் புலியூரந்தாதி, அன்புறுமாலை, வண்ணப் பதிகம், கவி சங்கரம், பலசந்தமாலை, நவரத்தினமாலை, திரிபந்தாதி, தெட்சணா மூர்த்தி வெண்பா, திருவருள் வியப்பு, திருவருட்பஞ்சகம், திருவளர் பதிகம், சச்சிதாநந்த வாழ்வு, காப்பியக் கலித்துறை, சங்கீர்த்தன பஞ்சகம் வேண்டுதல் புலம்பல், முறையீடு முதலியன சேர்ந்து நானூற்றுப் பதினாறு பாடல்களையுடையதாக விளங்குகிறது

"வண்மைய னேபுலி யூருறை வோயொரு மாமறைசொல்
உண்மைய னேகரு ணாகரனே யன்பர் உள்விளையும்
தண்மைய னேதம் முணர்வார்க்கு மற்றையர் தங்களுக்கும்
அண்மைய னேமிக்க சேய்மையனே என்னை ஆண்டருளே."

என்பது புலியூரந்தாதியில் ஒரு பாட்டு.

## கூ௫எ தாண்டவேசர்

இவர் அந்தணர் குலத்தில் தோன்றியவர். கரும்பைநகர் என்னும் ஊரிலிருந்த பெரியாண்டித்துரை என்பவர் விருப்பப்படி இவர் பாகவதத்தின சுருக்கமாகப் 'பாகவத சாரம்' என்னும் நூலைப் பாடியுள்ளார்

"வடமொழியில் வேதவியா தன்புகலும்
பாகவத நூலை வாவுங்
கடலமுதந் திரட்டியெடுத் திருங்கரையின்
மேல்வைத்த காட்சி போலக்

குடமுனிவன் தென்தமிழால் பாகவத
சாரமெனக் குறித்துரைத்தான்
தடமலியும் ஏரகரப் பூசுரர்கோன
சுருதியுணர் தாண்டவேசன்.''

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௲௫௪. தாமோதரம் பிள்ளை - க (1892)

இவர் திருநெல்வேலி மாவட்டத்திலே சிறுக்குளம் என்னும் ஊரிலே கற்பகம் பிள்ளை என்பவருடைய குமாரராகத் தோன்றியவர். புலமைபெற்று விளங்கிய இவர் சாத்தூர்ச் சிலேடை வெண்பா, சிறுக்குளம் விநாயகரந்தாதி முதலிய நூல்கள் இயற்றியிருக்கிறார். இவரிடம் பலபேர் இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமையடைந்தனர்.

### முப்பொருட் சிலேடை

'' தந்திரமி ஞூர்முகந்நிற் சார்புருவத் நில்லகத்தில்
சந்திரவி லேகிளருஞ் சாத்தூரே—முந்தொருசீ
யம்போ ருகத்தா னகமுனிந்த சிம்புளடி
யம்போ ருகத்தா னகம்.

என்பது சாத்தூர்ச் சிலேடை வெண்பா.

'' ஆண்டானை யோரத்துதிக் கையானை மாமுகத் தானையெங்கும்
நீண்டானைச் செல்வச் சிறுககுளத்தானை நிகரில் வன்னி
பூண்டானைத் தன்னை விழுங்கிய மாயைப் புயங்கமொன்றைக்
கீண்டானை வாழ்த்துநர்க் கந்தகனுல்வருங் கேடில்லையே.''

என்பது விநாயகரந்தாதி. நூலைப் பாராட்டித், துறையூர் அமிர்தலிங்கத்தம்பிரான், அரன்வாயில் வேங்கடசுப்புப் பிள்ளை, துறையூர் வசவலிங்கபுராணிகர், திருநெல்வேலிச் சாமிநாத பிள்ளை, அறுப்புக்கோட்டை, சு. வேங்கடாசலம் பிள்ளை, அறுப்புக்கோட்டை வாழவந்தபண்டாரம், வேப்பிலைப்பட்டி அழகரியாசாரி, அறுப்புக்கோட்டை சீனிவாசக நாடார் என்போர் சிறப்புப் பாயிரம் வழங்கியுள்ளனர்.

'' செந்நென்மலி தடம்பணைசூழ் சாத்தூர்வாழ்
சிதம்பரமா தேவ தேவே
நின்னிருதாட் கணைபுகந்து சிலேடைவெண்பா
மாலைபுனை நேமன காமன்

மன்னுமலர் வாவிநிகழ் சிறுக்குளந்தா
 மோதரநா வலவன் பார்மேல்
இன்னமுநல் வாழ்வுபெறப் பொன்னிதயங்
 கனிந்துவரம் ஈகு வாயே.''

என்பது அமிர்தலிங்கத்தம்பிரான் பாட்டு.

## கூருகூ. தாயுமான முதலியார்

இவர் அத்திப்பேடு என்னும் ஊரில் இருந்த புலவர். முருகேச முதலியார் என்பவர் இயற்றிய சிவதலமான்மியச் சுருக்கம் என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப்பாயிரப் பாடல் ஒன்று கிடைத்திருப்பதைத் தவிர வேறு செய்திகள் தெரியவில்லை.

'' உலகிலுள விட்டுணுத் தலஞ்சிவத் தலமியாவும்
 உற்றவூர் தீர்த்தங் களும்
 உண்டாஞ் சரித்திரமும் மூர்த்திகளும் அம்மையார்க்
 குள்ளதிரு நாமங் களும்
அலகிலாப் புகழ்பெற்ற அடியார்கள் ஆழ்வார்கள்
 அருளதான் மொழிந்த கவியும்
 அங்கங்கு தான்சென்று தரிசித்த விபவமும்
 யாவருஞ் சேவிக் கவே.

புலமையும் பொறுமையும் பெரியோர்கள் நேயமும்
 போகாத நேயனைத்தும்
 போகச்செய் பண்டிதத் திறமையும் முருகனடி
 போற்றித் துதிக்கும் மனமும
நலமுளோன் தலமான்மிய மென்றச் சியற்றினுன்
 நாற்றிசைகளும் பரவவே
 நாட்டிலுயர் நெடுவேலி முருகேச பூபாலன்
 நாளுமவன் குலம்வாழ் கவே ''

என்பது அச் சிறப்புப்பாயிரப் பாடலாகும்.

## கூகூ0. தாவீதுயோசேப்பு உபாத்தியாயர்
(19 - நூ.)

இவர் கிறித்துவ சமயத்தினர். ஆறுமுக நாவலரிடம் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத்தேறியவர். பெரும்புலவர்

மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் வடலூர் இராமலிங்க அடிகள் ஆகியோருடனும் இவர் நெருங்கிய தொடர்புடையவராக விளங்கினார். உபாத்தியாயராகவும் பள்ளிக்கூடங்களின் ஆய்வாளராகவுந் தொழில்புரிந்த இவர் 'தமிழ் இலக்கணத் தெளிவு' என்னும் இலக்கண நூல் ஒன்றை எழுதியுள்ளார். அந்நூல் இலக்கணத்தை எளிய முறையில் பயில்வதற்கேற்ற முறையில் அமைந்துள்ளது. நூலின் முகப்பில் இவர் பாடியுள்ள இறை வணக்கம் முதலிய செய்யுட்களை அடியிற் காண்க:

" ஆதமொ டேவாள் செய்த அரும்பவப் புணப்பான் மக்கள்
தீதுறு வண்ணங் காக்கச் செகந்தனில் மனுட னாகி
ஓதரும் பாடுற் றேதன் உயிரையும் நீத்த யேசு
போதக ரட்ச கன்றன் பொன்னடி மனத்துள் வைப்பாம்.

அரியநல் லிலக்க ணங்கள் அலகிலா திருப்ப வொன்றும்
தெரிவிலேன் தானுஞ் செப்பல் என்னெனில் ஒருவன் சித்ரம்
வரையவும் வனப்பே யசக மதியிலாப் பாலர் கிறிப்
பரிவுறப் புலப்ப டுக்கும் பான்மைய தாகு மன்றே."

## ௬௬௧. தானியேல் சேசுதாசு
## (20 - நூ.)

இவர் இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் கரூரில் இருந்தவர். உவெஸ்லியன் மிஷன் லோயர் செகண்டரி பெண் பாடசாலையொன்றில் தலைமையாசிரியராகப் பணிபுரிந்திருந்தவர். இலக்கணப் பயிற்சி மிகுதியாகப் பெற்றவராகிய இவர் தமிழ்மொழியை நன்கு கற்கவிரும்பிய மாணவர்கட்குப் பயன்படுமாறு 'தமிழாசிரியன்' என்னும் பெயர் கொடுத்து இலக்கண நூல் ஒன்றை எழுதியுள்ளார். மேற்கூறிய நூல் இலக்கண விதிகளை எளிய முறையில் விளக்கிச் செல்லுகிறது.

## ௬௬௨. திம்மப்ப அந்தணனார்
## (20 - நூ)

இவருடைய முழுப்பெயர், "கவிராச பண்டிதர் ஆந்திரக் காசியப திம்மப்ப அந்தணனார்" என்று காணப்பெறுகிறது. இவர் சங்க நூல்களையும் இலக்கண இலக்கியங்களையும் நன்கு கற்றுச் சிறந்த புலமைபெற்றவர். மதுரைத் தமிழ்ச்

சங்கப் புலவர்களில் ஒருவர் சேலம் கல்லூரியின் தலைமைத் தமிழாசிரியராகத் தொண்டு செய்தவர். இவருடைய ஊர் 'சமயசங்கிலி' என்னும் சிற்றூர் என்று அறியப்படுகிறது. இவர் பல கட்டுரைகளும் நூல்களும் எழுதியுள்ளார். இவருடைய திருவேங்கட மும்மணிக்கோவை என்னும் நூலைப் பாராட்டிச் சென்னை வரகவி அ சுப்பிரமணிய பாரதியார், பண்டித ரத்னம் புழலை திருநாவுக்கரசு முதலியார், சேலம் கிருட்டிணசாமி ஐயர், தோரமங்கலம் அ. வரதநஞ்சைய பிள்ளை, செவ்வாய்ப்பேட்டை கவிதாரத்தினம், தா. சுப்பராய செட்டியார், சேலம் திருமலை ஐயங்கார், ஈரோடு சுப்பராயலு ரவுத்து, திண்டிவனம் பழனிச்சாமிச் சிவாச்சாரியார், ஓமலூர் வீரராகவ ஐயங்கார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"தேவேந் திரையுறு சீதர வனைபர்த் திகழுவைப் பாய்
தேவேந் திரன்முதற் றேவரும் போற்றுந் திருவவுவந்
தேவேந் திரக்கஞ் செறிந்தவ வேங்கடஞ் சேர்ந்தவவந்
தேவேந் திரக்கத் திகிரி வளையருள் செய்தவனே"

என்பது இவர் இயற்றிய திருவேங்கட மும்மணிக்கோவையின் இறுதிப் பாட்டு.

## ௬௬௩. தியாகராச ஐயர் - ஆ
(20 - நூ.)

சோழவள நாட்டில் காரைக்காலில் பாடசாலையொன்றில் தமிழாசிரியராக இருந்தவர். தம்பி-புருடோத்தமப் பிள்ளை என்பவர் தொகுத்த காரைக்கால் அம்மையார் புராணம் என்னும் நூலுக்கு இவர்,

"பூமணக்கும பொழில்களௌரம புயல்மணக்கும் புதுவா
புரிமணக்குந் தம்பியெனும் புகழ்மணக்கும் புலவன்
பாமணக்கும தமிழ்க்கலையாம் பரவையினுட் படிந்து
பயன்மணக்கும் அருஞ்செய்யுள்பலவெடுத்துக் காட்டி
ஆமணக்கும காரைக்கால் அம்மைபுரா ணததின்
அருமபொருளை நனிவிளக்கி அச்சிட்டே சந்தான்
மாமணக்கு மதுபடிக்க வாய்மணக்குங கேட்க
மகிழ்ந்தெடுக்கச் செவிமணக்கு மணக்குங்கை மன்னே."

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாக வழங்கியுள்ளார்.

## கூகூச. தியாகராச கவிராச தேசிகர்

இவர் திருவாரூரில் தோன்றியவர். இலக்கண விளக்கப் பரம்பரையில் தோன்றிய தியாகராச தேசிகர் என்பவரும் இவரும் ஒருவரா அன்றி வேருனவர்களா என்பது புலனுகவில்லை. இவர் திருப்புனவாயிற புராணம் பாடியுள்ளார் அப் புராணம் இருபத்திரண்டு சருக்கங்களையும் தொளாயிரத்து இருபத்தெட்டுச் செய்யுட்களையும் உடையது.

*" சீதமதி புனையமலன் கருணை யான*
*சிவகங்கை தனிற்படிந்தால் பிரமகத்தி*
*ஆதிபா வங்கள்போம் புகைபோம் நோய்கள்*
*அனைத்தும்போம் நினைத்தசித்தி அனைத்தும் உண்டாம*
*சோதியமுல் தனையறியா தடுத்த போதும்*
*சுடுமாறு போலிதன்றன் சொருப மோராப்*
*பேதையர்வே றேதுவாற் படிந்த போதும்*
*பேசரிய கதிபலவும் பெறுவ ரன்றே."*

என்பது தலமகிமைச் சருக்கத்தில் ஒரு பாட்டு.

## கூகூரு. தியாகராசக் கவிராயர்

இக் கவிராயர் விருத்தாசலம் என வழங்கும் பழமலையில் ஏறக்குறைய நூற்றியிருபது ஆண்டுகளுக்கு முன்பிருந்தவர். வேளாளமரபில் தோன்றியவர் தந்தையார் பெயர் வேலாயுதச் செட்டியார். கல்வி கேள்விகளில் இவர் வல்லவராக விளங்கியிருத்தலை மயிலாசலத்தில் அக் காலத்தில் எழுந்தருளியிருந்த சிவஞானபாலைய தேசிகர் என்னும் பெரியார் அறிந்தார். இவரைக்கொண்டு மயிலாசல புராணத்தைப் பாடச் செய்ய வேண்டும் என்று எண்ணித் தமது கருத்தைக் கவிராயருக்குத் தெரிவித்தார். கவிராயர் புராணத்தைப் பாடத் தொடங்கிப் பத்துப் படலங்களும் 630 பாடல்களும் அமையப் புராணத்தைப் பாடி முடித்தார்.

இவருடைய பாடல்கள் செம்பாகமான நடையில் சொல் நயம் பொருள் நயம் முதலிய நயங்கள் அமைந்து கற்பவருக்குக் களிப்பூட்டும் வகையில் அமைந்துள்ளன.

"பெருமானைக் குமரனையன் பாகமேவும்
பெண்மானை வனமானுட் களிக்க முன்னம்
வருமானைக் குறவர்குலம் வளர்த்த மானை
வடிவெல்லாந் திரண்டுருவாய் வந்த மானைத்
திருமானைக் கலைமானை ஏவல்கொண்டு
திருவருள்செய் திடுமானை இடத்தில் வைத்தும்
ஒருமானைக் கரத்தணிநதோன் மருகியாகி
உறைமானை உளமனையில் உவப்ப வைத்தே."

(பாலசித்தர் தவம்புரி சருக்கம் - ௨௪.)

திருவாலங்காட்டுப் புராணத்திற்கு உரை செய்ய வேண்டும் என்று சிலர் இவரை வேண்டிக்கொண்டனர். இவர் அவ்வாறே உரை செய்தார். இவருடைய உரையை வியந்து, திருவாவடுதுறை இரத்தின சபாபதி சுவாமிகள், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், காயாறு ஞானசுந்தர ஐயர், பழவை சர்க்கரைச் செட்டியார், புதுவை குமாரசாமி முதலியார், திருஎவ்வுளூர் இராமசாமி செட்டியார், புதுவை மாணிக்க செட்டியார் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"மணிமுத் தாநதி வளம்பெறும் பழமலை
என்னும்வான் பதியில் இன்பொடு வாழ்வோன்
பன்னருஞ் சைவப் பரம்பரை யுடையோன்
மங்கைபங் கினன்சடை மன்னிய தெய்வக்
கங்கைதன் குலத்தொளிர் கண்மணி யனையோன்
அன்பொடு இரக்கம் அடக்கம் வாய்மை
பொன்பொருட் கல்விப் பொக்கம துடையோன்
கவிமழை பொழியும் புவியுறு கந்தரம்
அவியறி வினைத்துரன் டொளிர்தரு தீபம்
கலைகளாங் கடலைக் கடந்திடு கவிஞரால்
பலகாற் புகழும் பண்டிதத் திறத்தோன்
ஆகம முடிபெலாம் அன்புடன் தேர்ந்து
பாகமாய் அரியசித் தாந்தமும் பார்த்து
இம்மையின் நலனும் மறுமையின் நலனும்
செம்மையி தல்லெனச் சீயென இகழ்ந்தோன்
அவத்தினை நீக்கிச் சிவத்தருள் தழைத்துத்
தவத்தினைப் புரிந்து பவத்தினை ஒழிப்போன்
தயாநலஞ் சிறந்த தனைமைசேர் புனிதன்
தியாகரா சப்பெயர்ப் புலவரே றனையான"

என்பது சிறப்புப்பாயிரத்தில் ஒரு பகுதி.

இவருடைய மகனும் கல்வி கேள்விகளில் வல்ல புலவராய் விளங்கியிருந்தார். அவரும் பல நூல்கள் செய்துள்ளார்.

## ௩௬௬. தியாகராச சிவயோகியார்
(20 - நூ.)

இவர் ஏகாம்பர சிவயோகியாருடைய மாணவர். ஏகாம்பர சிவயோகியார் வேலூர் தோபாசுவாமிகளுடைய திருவருளால் தோன்றிச் சகல கலைகளையும் ஓதாதுணர்ந்த உத்தமர். தியாகராச சிவயோகியார் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை. பெங்களூர் நாகரத்தினம்மாள் இயற்றிய "பஞ்சீகரண பௌதிக விவேக விளக்கம்" என்னும் நூலுக்கு இவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

"நான்முகன் முதலா நலந்திகழ் மூவரும்
வானவர் குழுவலும் மறைகளும் முறையிடப்
பூரண கருணையில் பொலிதிரு உருவாய்
மானிடத் தவர்க்கு மாட்சிமைப் பெருமை
சிறுமையும் மாரணப் பிறப்பறும் வகையினை."

என்பது பாயிரத்தின் தொடக்கம்.

## ௩௬௭. தியாகராச தேசிகர் - க
(20 - நூ.)

சோழவள நாட்டிலே மாயூரத்திற்கணித்தாகவுள்ள கூறை நாட்டில் சிறந்த தமிழ்ப்புலவராக விளங்கிய சித்தாந்த ரத்நாகரம் அ கந்தசாமித் தேசிகர் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றியவர் இவர். தம் தந்தையாரிடமே கல்வி கற்றுச் சிறப்புற்ற இவர் இசைப்பாடல்கள் முதலிய செய்யுள் இயற்றுவதிலே வல்லவராக விளங்கினார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், பெற்றான் சாம்பான் சரித்திரக் கீர்த்தனம், மயிலை அபயாம்பிகை சோடசமாலை, கலியுகாக்கியானம், மாயூரம் காவடிச்சிந்து, இராமகிருட்டிணச்சிந்து, மங்கை மதிச்சிந்து, நளசரித்திரம், சசிரேகாபரிணயம், காரைக்காலம்மையார் சரித்திரக் கீர்த்தனம் என்பன. பெற்றான் சாம்பானுக்கு ஆண்டை அறிவுரை கூறல் :

இராகம்—ஆபோகி—தாளம்—ஆதி.

பல்லவி

புலையா சிவனடியர் தமக்குத்தொண்டு
புரிவாயோ விளையத் திரிவாயோ அட (புலை)

அநுபல்லவி

நிலையாக் காரியம் நீயினிச் செய்தால்
நெரிப்பேன் கட்டிவைத்து உரிப்பேன் நிசமிது (புலை)

சரணங்கள்

விடியுமுன் மாடுகளை யோட்டு அவை
மேய்த்து மாலையிற் குளிப் பாட்டு வீடு
கடிதிலோட்டித் தண்ணீர் காட்டு பாது
காத்திடு நீனியுதைப் போட்டு அட (புலை)

மாரிகாலம் நீங்கிக் கோடை யாச்சு கொல்லை
மானம் பார்த்து மிகக் காய்ந்து போச்சு தண்ணீர்
சரங்கொள்ள வேற்றமிட்டுப் பாச்சு போ
இதைவிட வேறுஎன்ன பேச்சு அட (புலை)

வயிறூரக் கஞ்சிவாங்கிக் கொள்ளு அரி
வாளலக்குக் கொண்டறுப்பாய் முள்ளு அதை
கயிறால் கட்டியே தூக்கித் தள்ளு வா
காசுதருகிறேன் குடி கள்ளு அட (புலை)

பெற்றான் சாம்பான் சரித்திரக் கீர்த்தனையில் விருத்தம் உரைநடை முதலியவைகளும் விரவியுள்ளன. இந் நூலுக்குக் கூறைநாடு சாம்பமூர்த்தி ஐயர், தருமபுர ஆதீனம் சண்முகத் தம்பிரான், வைத்தீசுரன் கோயில் சோமசுந்தர தேசிகர், மாயூரம் மாயூரநாத தேசிகர், தண்டபாணி தேசிகர், சொர்க்கபுர ஆதீனம் சிதம்பரநாத சுவாமிகள், குற்றாலம் சோமசுந்தரம் பிள்ளை, சிதம்பரம் இராமலிங்க உபாத்தியாயர், மாயூரம் டாக்டர் சண் முகம் பிள்ளை, மூவலூர் ப. சிங்காரவேற் புலவர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## கூசுஅ. தியாகராச தேசிகர் (1)

திருவாரூரில் தோன்றிய இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகருடைய மகன் பாட்டியல், சிவரகசியம் ஒன்பதாம் அத்தி

யாயம் முதலியன இயற்றியவர். இவருடைய காலம் ஏறக் குறைய இருநூற்றெழுபத்தைந்தாண்டுகட்கு முன்னராகும்.

## கூசுகூ. தியாகராச தேசிகர் (2)

இவர் முன்னவருடைய மகன். தேவையந்தாதி, காழியந்தாதி, கோவை, உலா, திருக்கூட்டச் சதகம், அன்பர் போற்றிக் கலி வெண்பா முதலியன இவரால் இயற்றப்பெற்ற நூல்கள். இராம நாதபுரம் சமத்தானத்திலே அமைச்சராக இருந்த தாமோதரம் பிள்ளையால் சூரியங்கோட்டை என்னும் சிற்றூரும் விசய அருணசல வணங்காமுடி என்பவரால் தண்டிகைவரிசையும் மறவ னேந்தல் முதல் மூன்று சிற்றூர்களும் பரிசு பெற்றுச் சிறப் புடன் வாழ்ந்திருந்தவர்.

## கூஎ௦. தியாகராச நாவலர்

இவர் தென்னாற்காடு மாவட்டத்திலே தில்லைக்கண்மையில் உள்ள உடையூர் என்னும் ஊரில் தோன்றியவர். இயலிசை நாடகம் என்னும் முத்தமிழையும் நன்கு பயின்று இலக்கண இலக்கியங்களில் வல்லவராய் விளங்கினர். காந்தமகா புரா ணத்தை நன்கு கற்றுணர்ந்தவர். காந்தமகா புராணத்தின் சுருக்கமாகக் காந்தமகா சங்கிரகம் என்னும் நூலை ஆறுநாட்க ளுள் செய்துமுடித்தவர். அந்நூல் சாலிவாகனசகம் 1807 இல் தாரண ஆண்டு ஆடித் திங்களில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டு வெளிவந்தது. நூலின் பாடல்கள் ஏறக்குறைய மூந்நூறு.

''மாருத மகிழ்ச்சியொடு மேனைவளர்த்
திடவைந்தாம் வயதில் யாரும்
கூருத தவம்புரிவல் எனத்தந்தை
மறுத்திசையக் கொண்டாள் ஓர்பால்
தேருத அசுர்காணன் வரத்தண்டங்
கட்கரசாய்ச் சூர்கோல் ஓச்சப்
பேருதல் உணரவன்பிற் சனகன்முத
லோர்கைலைப் பிறங்க லுற்றார்.''

என்பது உற்பத்தி காண்டச் செய்யுளுள் ஒன்று.

## ௬௭௧. தியாகராச பிள்ளை - மு

இவர் திருச்சிராப்பள்ளியில் ஆண்டார் வீதியில் வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் முத்துலோகம் பிள்ளை இவர் இலக்கண இலக்கியப் புலவராகவும் காலக்கணிதப் புலவராகவும் விளங்கியிருந்தார். இவர் "தியாகராச சோதிட ஆனந்தக் களிப்பு" என்னும் நூலை இயற்றியிருக்கிறார். மேற்படி நூல் சோதிடச் செய்திகளைக் கொண்டது.

"தனுவில் குருபதி ஆட்சி—மாதே
தினகரன் மாமதி வெள்ளியும் பாம்பு
சனிபுத னுறுபேர் நட்பு—பூவில்
சாற்றினேம் செவ்வாய்க்குப் பகையாகுந் தோழி."

சங்கர சங்கர சம்பு—சிவ
சங்கர சங்கர சங்கரசம்பு

என்பது நூலில் ஒரு கண்ணி.

## ௬௭௨. தியாகராசப் பிள்ளை

இவர் யாழ்ப்பாணத்து நல்லூரில் தோன்றிச் சிறந்த புலவராக விளங்கியிருந்தவர். திருவண்ணாமலையில் எழுந்தருளிய அண்ணாமலையார்மீது இவர் வண்ணம் பாடினார்.

## ௬௭௩. தியாகேச முதலியார் - இரா
(19 - நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் மாவண்டூரில், தொண்டை மண்டலம் கொண்டைகட்டி வேளாளமரபில் நலங்கிழார் கோத்திரத்தில் இராமசாமி முதலியார் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். இவர் ஆறுமுகநாவலரிடத்தில் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறினார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் சிதம்பரவெண்பாவந்தாதி, சிதம்பரக் கலித்துறையந்தாதி, கோயின்மும்மணிக்கோவை, சிதம்பர நான்மணிமாலை, திருக்கழுக்குன்றத்திரட்டைமணிமாலை, தலவெண்பா, திருவொற்றியூர் வடிவுடையம்மன் அந்தாதி முதலியன.

"பூமேவு தில்லைச்சிற் றம்பலத்தில் புண்ணியனைத்
தேமருவு கொன்றையந்தார்த் தேசிகனைக்—காமருபூங்
கொம்பன்னாள் கண்களிப்பக் கூத்தா டிணையிலியை
வம்பனேன் கண்டேன் மகிழ்ந்து."

என்பது சிதம்பரவெண்பாவந்தாதியில் ஒரு பாட்டு.

## கூஎச. திரவியசங்கர நாராயணக் கவிராசர் - வீ (1897)

இவர் பாண்டிவள நாட்டில் எட்டையபுரத்தைச் சேர்ந்த சம்புலிங்கபுரம் என்னும் ஊரில் வீரராகவக் கவிராசர் என்பருடைய மகனாகப் பிறந்தார். தந்தையார் சிறந்த புலவராகலின் தந்தையாரிடமே கல்வி கற்றார். இவருக்கு வரகவி என்னுஞ் சிறப்புப் பெயர் உண்டு. இவருடைய உடன் பிறந்தாராகிய திருவண்ணநாதக் கவிராயர் என்பவரும் சிறந்த புலவர். அவருடைய கோமதியந்தாதி நூலுக்கு இவர்,

"புண்ணியம் புரிந்தோர் அடைந்திடுஞ் சுவர்க்க
பூமியின் வளனெலாங் கவர்ந்து
மண்ணினின் றொளிரும் சங்கரன் கோவில்
வதிந்திடும் அழகுகோ மதிமேல்
பண்ணினில் இனிய தெள்ளமிழ் தெனவே
பகர்ந்தனன் தூயவந் தாதி
நண்ணிய புலவோர் புகழ்திரு வண்ணை
நாதன்நா வலர்சிகா மணியே."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கூஎரு. திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனார்

இவர் சிதம்பரம் எனவழங்குந் திருத்தில்லையில் எழுந்தருளியிருந்தார். ஒருநாள் சிறந்த பக்குவம் உடையவர் ஒருவர் இவரைக் கண்டு வணங்கிப் போற்றினார். இவர் அவருக்குத் தீக்கை முதலியன செய்து அவருடைய ஐயங்களும் மாறுபாடுகளும் அகலக்கூடியதாயும், சிவாநுபூதிச் செல்வத்தை அளிக்கக் கூடியதாயும், தம்முடைய பரமாசாரியர் செய்த திருவுந்தியாரின் கருத்தை விளங்கக் காட்டுவதாயும் நூறு வெண்பாவில் ஒரு நூலை இயற்றினார்.

அந் நூலினை உலகத்தில் உள்ளார் ஒப்புக்கொள்ள வேண்டுமே என்று எண்ணியவராய்க் கூத்தப்பிரான் திருமுன்பு சென்று அப் பெருமானை வணங்கினார். தாமியற்றிய நூலைக் கூத்தப்பிரான் திருமுன்புள்ள திருக்களிற்றுப்படியில் வைத்தார். படியுருவில் அமைந்திருந்த களிறானது கையை நிமிர்த்தி அந் நூலையெடுத்துக் கூத்தப்பிரானுடைய திருவடியில் வைத்தது. அப்போதங்கிருந்த தில்லைவாழந்தணர் முதலியோர் கண்டு மிகுந்த வியப்படைந்து அந் நூலுக்குத் திருக்களிற்றுப்படியார் என்று காரணப் பெயர் இட்டனர். அந் நூல் சைவசித்தாந்த நூல்களுள் ஒன்றாய்ச் சிறந்து விளங்குகின்றது.

"நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்
நல்லசிவ ஞானத்தால் நானழிய—வல்லதனால்
ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்
ஆரேனுங் காணா அரன்"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௩௦௭. திருக்கண்ணபுரம் தாசி

திருக்கண்ணபுரம் என்னும் ஊரில் இருந்த இவள் கல்வி கேள்விகளில் வல்லவளாய்ச் செய்யுள் பாடத்தக்க கல்வியறிவுடன் சிறந்து விளங்கினாள். இவளது கல்வியறிவையும் அழகையும் அறிந்த முனையதரன் என்பவன் இவளைத் தன்னுடைய ஆசை நாயகியாகக் கொண்டு ஒழுகினான். இவளும் அவன்மீது உண்மையான பற்றுக்கொண்டு ஒழுகினாள். ஒரு சமயம் இவள் அவனைப் பலநாள் பிரிந்திருக்க வேண்டிய நிலைமை யேற்பட்டது. முனையதரன் ஏதோ அலுவலால் இவளிடம் பல நாள் வராமல் இருந்துவிட்டான். அப்பொழுது இவள் அவனுக்கு,

"இன்றுவரில் என்னுயிரை நீபெறுவை இன்றைக்கு
நின்று வரிலதுவும் நீயறிவை—வென்றி
முனையா கலவி முயங்கியவா றெல்லாம்
நினையாயோ நெஞ்சத்து நீ."

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பினாள்.

## ௩௭௭. திருக்கமலப் புலவர்

இவர் பாண்டிவள நாட்டில் சங்கரநாராயணர் கோயிலுக் கண்மையில் உள்ள புளியங்குடி என்னும் ஊரினர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலவராகத் திகழ்ந்தவர். ஊற்றுமலைச் சமத்தானப் புலவராக விளங்கியிருந்தார். சங்கர நாராயணர் கோயில் கோமதியம்பிகை மீது சதகநூல் ஒன்று இவராற் பாடப்பெற்றுள்ளது

"பொன்பூத்த தவளபங் கயவாணி யாழ்கைப்
புணர்த்தியின் னிசைமிழற்றப்
பொங்குகடல் பூத்தபைந் தோகைநவ மணியில்
பொலிந்தசா மரையி ரட்ட
மின்பூத்த கற்பக நிழற்கட் புலோமசையும்
மென்கையில் அடைப்பை யேந்த
வேளிரதி படியகந் தாங்கிவர மகளிர்தொகை
விண்ணவர்கள் வாழ்த்தெடுப்பக்
கொன்பூத்த பவளகிரி ஒருபுடையின் மரகதக்
கொடிபடர்ந் தனைய பண்பில்
கொழுநனொடு கனகசிங் காசனத் தரசுபுரி
கொலுவிருந் தருளு மம்மே
தென்பூத்த நறவொழுகு புன்னையங் காட்டுவளர்
செறிகுழற் காட்டு மயிலே
தெய்வவர ராசையம் பதிவளரு மாதவச்
செல்விகோ மதிவல் லியே."

என்பது சதகத்தின் முதற்பாட்டு. இவருடைய பெயர் திருக்கமலக் கவிராயர் என்றும் வழங்கியது.

"கஞ்சனங் கைக்குமா ராயங் காட்டுமிக்
கன்னியர்க்கர சானுள்க போலமோ
கஞ்சனங் கைக்குமா ராயிற்பங்கயங்
காலுக்கன்றி யொவ்வாமயல் கூர்ந்துநன்
கஞ்சனங் கைக்குமா ராதிருக்கின்றாள்
கனகசப்பிரமஞ் சத்தனை வாயையயா
கஞ்சனங் கைக்குமா ராற்றல் காட்டிவெல்
காவலா இருத யாலய பாண்டியனே."

என்பது இவர் இருதயாலய மருதப்பத் தேவர்மீது பாடிய பாடல் களில் ஒன்று.

## ௩௭௮. திருக்காளத்தியப்பக் கவிராயர்

பாண்டிவள நாட்டில் சங்கரநாராயணர் கோயிலுக்கண்மையில் உள்ள புளியங்குடியில் இருந்தவர். அவ்வூரில் இருந்த முத்துவீரக்கவிராயரிடம் கல்விகற்றுப் புலமை பெற்றவர். அருணாசலம் ஆச்சாரியார் பாடிய புதுவை வண்ணமஞ்சரி என்னும் நூலுக்கு இவர்,

> "குஞ்சரித்தார் வேட்டுமணக் கும்புதுவை
> வேலவர்க்கே கொண்டு வண்ண
> மஞ்சரித்தார் சூட்டுகவி வள்ளலரு
> ணாசலவேள் வண்பாக் கண்டே
> சஞ்சரித்தா தவன்மதியோர் சகபனைத்துஞ்
> சொலித்துதிக்கச் சார்ந்தார் நித்தம்
> பஞ்சரித்தா லும்படியாப் பாவகரும்
> படித்தருட் பேர்ப் பலன்பெற் றோரே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவரைப் பற்றிய பிற செய்திகள் விளங்கில.

## ௩௭௯. திருக்குறுங்குடி நம்பி

பாண்டிவள நாட்டில் திருக்குறுங்குடி என்னும் ஊரில் இருந்தவர். சிறந்த புலவர். இவர் தொண்டைவள நாட்டில் வல்லநகர் என்னும் ஊர்க்குச் சென்று அங்கிருந்த காளத்தி முதலியார் என்பவரைக் கண்டு,

> "பொரடக் கயம்பிடி யென்றுன் மதனுமிப் பூவையுமா
> தரடக்க முஞ்சற் றறிந்தில ளேதனைத் தாள்பணியா
> முரடக் கவுடக் கெடிமண்ட லீகர் முடிபிடுங்குங்
> கரடக் கடாக்களிற் றுய்வல்ல மாநகர்க் காளத்தியே"

என்பது முதலிய பாடல்களைப் பாடி அவ் வள்ளலிடமிருந்து நல்ல பரிசுகள் பெற்றார். அவ் வள்ளலின் கையைப் பாராட்டி,

> "நற்றோ ரணவீதி நண்ணும்வல் லைக்காளத்தி
> கற்றோர் தமக்களிக்குங் கையேகை — மற்றோர்கை
> வேங்கை அலகைமுகை வேட்கை பலகைநகை
> காங்கை யழுகைவிழு கை."

என்னும் வெண்பாவைப் பாடினர். கற்ருர் வியக்கும் வகையில் சொற்களும் பொருளும் அமைந்து இனிமை பயக்கின்றது வெண்பா. இவர் தொண்டைநாடு சென்று பரிசுபெற்ற செய்தியைத் தொண்டைமண்டல சதகமுங் குறிப்பிடுகிறது. அப் பாட்டு,

"சொல்லையி லாகச் சொரிகவிமாரி சுருதிவல்லான்
செல்லையில் சோலைக் குறுங்குடி வாழ்நம்பி சென்றுகண்ட
எல்லையில் நீடுங் கரடக் கடாக்களி றென்றுசொன்ன
வல்லையிற் காளத்தி வாழ்வா னதுந்தொண்டை மண்டலமே."

என்பது.

## கூஅ௦. திருக்கைவேல் பண்டிதர்

(19 - நூ.)

இவர் பழநியம்பதியில் வாழ்ந்திருந்தவர். அறுமுகவர் திருநீற்றுப்பதிகம் என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது. பதிகம் திருநீற்றின் பெருமையை நன்கு கூறுவதாக அமைந்துள்ளது.

"அரவங்கள் பூதங்கள் மிருகங்கள் பேய்களை
அடக்கவே இட்ட நீறு
அட்டபாக் கியலட்சுமி இட்டமுடன் எந்நாளும்
அகலாமல் இட்ட நீறு
இரவுப்கல் மறவாமல் முருகர்திரு நாமமே
இறைஞ்சித் தரிந்த நீறு
எதிராளி நெஞ்சங் கலங்கிப் பயந்தோட
ஏற்கவே யிட்ட நீறு
பரவுபல பிணிகளும் உறவுகெடு கோள்களும்
பணிந்தோட இட்ட நீறு
பஞ்சபா தகமுடன் மிஞ்சிடும் வல்வினை
பணிந்திட அணிந்த நீறு
அரசருடன் மந்திரி ஆனபுவி வீரரும்
அதிவசிய மான நீறு
அடியவர்க் கருள்கிருபை பொழிபழநி யங்கிரி
அறுமுகவர் திருவெண் ணீறே."

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௩௮௧. திருக்கோட்டி நம்பி

இவர் பாண்டமங்கைத் திருக்கோட்டி நம்பி என்று கூறப் பெறுவார். பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர். காலக்கணித நூலுள் ஒன்றாகிய "சூடாமணி உள்ளமுடையான்" இவரால் இயற்றப்பெற்றது இதில் திதி, வாரம், நட்சத்திரம், கரணம், யோகம், ராசி கிரகங்களின் பெயரும் கோசார பலன் சாதக பலன் முதலியவைகளும் கூறப்பட்டுள்ளன. இந் நூல் செய்வித்தோனால் பெயர்பெற்றது. அந்நூலின் ஒரு பாட்டு.

"கற்றவ ருய்ய வந்தான்
அருளுள்ளம் உடையான் மங்கை
கொற்றவன் புகழ்பொ லிந்த
குவலயம் முழுதும் கேட்பச்
சொற்றஇந் நூற்பேர் உள்ளம்
உடைச்சூடா மணியென் றிட்டுப்
பொற்றொடி வளைக்கை நல்லாய்
புலவர்முன் புகல லுற்றேன்."

## ௩௮௨. திருஞானசம்பந்த சுவாமிகள் - பேறை (19 - நூ.)

தொண்டைவள நாட்டில் பேறை என்னும் ஊரில் அறிவு நூல்களைக் கற்று மெய்யறிவு பெற்று விளங்கியிருந்த இவர் 'மெய்ஞ்ஞான சாரம்' என்னும் நூலை இயற்றியுள்ளார். நூலைப் பாராட்டிக் காஞ்சீபுரம் சபாபதி முதலியார், கோயிலூர் நித்தியானந்த சுவாமிகள், தொ. நாராயணசாமி முதலியார், சோமசுந்தர உபாத்தியாயர், சுந்தரானந்தர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். மெய்ஞ்ஞான சாரத்தில் ஒரு பாட்டு.

"உவமானப் பிரமாணம் தன்னையெடுத் துரைக்கில்
ஓதுகின்ற மரைபசுவை ஒத்திருக்கும் எனல்போல்
அவமாகச் செயல்பற்றும் மனத்தின்கற் பனைகள்
அற்றிருக்கும் சுழுத்தியினில் ஆநந்தம் என்ன
நவந்தொன்மை இரண்டுமிலா தவத்தையினைக் கடந்த
ஞானமாய் நிரதிசய நாட்டசுக மான
தவமாகும் பிரமவா நந்தமொன் றுண்டென்று
சந்தேகம் அறத்துணிவு தனைக்கோட லாமே."

## ௩௫௩. திருஞானசம்பந்தன் - மு
(20 - நூ.)

முடிவை வித்துவான் திருஞானசம்பந்தன் என்று சொல்லப் பெறும் இவர் சென்னைத் திருமயிலையில் வசித்திருந்தார். சித்தாந்த நூற் பயிற்சியில் வல்லவராகையால் 'சித்தாந்தப் பேராசிரியர்' எனவும், பல கலைகளினும் வல்லவராகையால் 'பல்கலைக் கிழவர்' எனவும் சிறப்புப்பெயர்கள் பெற்றிருந்தார். நூறு அவதானங்கள் செய்யக்கூடியவராகையால் 'சதாவதானி' என்றும் வழங்கப்பெற்றார். இவர் செய்த நூல்களில் "ஏழின் தத்துவார்த்த விளக்கம்" என்னும் நூல் ஒன்று அறியப்பெறுகின்றது. இந் நூலுக்கு மறைமலையடிகள் சிறப்புரை எழுதியுள்ளார்கள். அம் மதிப்புரையில், "........இந்நூலைக் கண்ணுறும்பொழுது இந் நூலாசிரியர் சித்தாந்தம், இலக்கணம், இலக்கியம், ஆங்கிலம், ஆரியம் முதலியவைகளை நன்றாகக்கற்றுத் தேர்ந்த வல்லுநர் என்பது போதருகின்றது. ஏழு என்ற இலக்கம் இறைவனைப் போன்றது என்று கூறியிருப்பது மிகவும் பாராட்டற்குரியது. மேலும் தமிழ் எழுத்துக்களைச் சித்தாந்த முறைப்படி ஆராய்ச்சி செய்துகாட்டியிருப்பது யாராலுங் கண்டு கொள்ளற்கியலாதது" என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

## ௩௫௪. திருஞானசம்பந்தசாமிப் பிள்ளை - கு

இவர் திரிசிரபுரத்தில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் குமாரசாமிப் பிள்ளை. இவர் சைவசித்தாந்த நூல்களை நன்கு கற்றுத் தேறியதோடு திரிசிரபுரத்தில் சைவசித்தாந்த சபை ஒன்றை ஏற்படுத்தினார். 'சித்தாந்த சைவ வினாவிடை' என்னும் நூல் ஒன்றையும் இயற்றினார். அந்நூல் தருமபுர ஆதீனத்தாரால் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளது.

## ௩௫௫. திருஞானசம்பந்த முதலியார்
(19 - நூ.)

இவர் பாக்கம் என்னும் ஊரிற் பிறந்தவர். புலமைக் கல்வி கற்க விரும்பிய இவர் திருத்தணிகை விசாகப்பெருமாளையருக்கு

மாணவராகிக் கல்வி கற்றுச் சிறந்த புலமைபெற்றுர். சென்னை யில் உள்ள இலண்டன் மிஷன் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராக அமர்ந்து மாணவர்கட்குக் கல்வி போதித்தார். சிறிய நூல்கள் சிலவுஞ் செய்தார். கடவுள்மாலை என்னும் நூலுக்கு இவர் வழங்கிய சாற்றுக்கவி,

''சீர்கொண்ட சண்மதங் களின்பேன்மை தம்மினும்
திகழ்விர சைவ சமயன்
சேவனு டோறுமங் கையர்நடை யிணைப்பயில்
செவலைப் பொறைப்பதி யினன்
ஏர்கொண்ட நல்லுணர்வி னேர்கள்சொலு மிசையுறும்
இயற்றமிழ்ப் புலவ ரென்னும்
ஏரியிற் பொற்ரு மரைப்பூ வெனச்சொல்ல
இனியகுண மொடுமுதித்தோன்
பேர்கொண்ட சங்கக்க விச்சொற்கள் தாழவும்
பேசுமன் பதைதாழவும்
பேறெலாம் உடைதிருக் குறளதனை யொப்பவே
பேசுபொருள் நான்கும் அமையச்
சார்கொண்ட நாச்சியப் பன்றவச் சேய்சின்ன
சாமிகவி ராயரொன்று
தானுகு முறையினேக் கடவுள்மா லைப்பெயர்
தந்துசாற் றினர்நமக்கே.''

என்பதாகும்.

## ௬௨௬. திருச்சிற்றம்பல ஞானியார்
### (20 - நூ)

இவர் சுவர்க்கபுரம் என்னும் ஊரில் இருந்த சிவலிங்க சுவாமிகள் என்னும் பெரியாரிடத்தில் இலக்கண இலக்கியங்களை யுஞ் சமய நூல்களையும் கற்றுத் தேறினர். சமய உணர்ச்சி கொண்டவராக விளங்கியமையின் ஞானியார் என்னும் பெயர் உண்டாகியது. இவர் இலக்கணப் புலமைமிக்கவர் எனவும், உரைநடைகளைக் கடினமான போக்கில் வரைபவரெனவும் உரைப்பர். இவர் ஞானசித்த மும்மணிக்கோவை என்னும் நூலுக்கு, பின்வரும் ஆசிரிவிருத்தப்பாவைச் சிறப்புப் பாயிர மாகப் பாடியுள்ளார். இவர் செய்யுள் வடிவில் வேறு நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை.

" நம்மணிகண் டப்பரம நடனமதைச்
சந்ததமும் நயக்கும் வாமத்
தம்மணியின் பாதமலர் அகத்திருத்தும்
ஞானசித்த அண்ணல் மீது
மும்மணிப்பா மாலையொன்று மொழிந்தனன்நன்
மாயூரம் உதித்த தூயோன்
செம்மணிக்கு நிகர்பெறுகிர்ஷ் ணுநந்த
யோகியெனுஞ் செல்வன் தானே."

## கூஅஎ. திருச்சிற்றம்பல ஞானியார் - கா
(1881)

இவர் காஞ்சீபுரத்தில் இருந்தவர். இலக்கண இலக்கியப் பயிற்சியில் வல்லுநர் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களால் இயற்றப்பெற்ற காசி ரகசியம் என்னும் நாலுக்கு இவர் உரை இயற்றியுள்ளார். இவரைப் பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை.

## கூஅஅ. திருச்சிற்றம்பல சுவாமிகள்
(19 - நூ.)

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்தவர். குலசேகரன் பட்டினத்து மடத்தின் தலைவராக இருந்தார். தமிழறிவு நிரம்பப்பெற்ற இவர் குலசைநகர் மாலை, குலசைநகர் அகவல் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்

" கற்றுவைப் போலக் கரிந்துருகிச் சேயணைத்து
வற்றுச் சுரபி வடியவைத்தால் ஆகாதோ
செற்றூர் புரமெரித்தாய் செவ்வேள் தனையீன்றாய்
குற்றாலா எங்கள் குலசைநகர் ஆண்டோனே."

என்பது குலசைநகர் மாலையில் ஒரு பாட்டு.

## கூஅக. திருச்சிற்றம்பல தேசிகர்

இவர் கம்பராயணத்தை உரைநடையில் எழுதியிருக்கிறார். இவருடைய பெயருக்கு முன்னால் 'தமிழ்ச் சங்கத் தலைமைப் புலமை' என்னும் சிறப்புச் சொல் ஒன்றுங் காணப்படுவதைக்

கொண்டு இவர் மதுரைத் தமிழ்ச் சங்க அங்கத்தினர்களில் ஒருவராக இருந்தாரென்றும் தெரிகிறது. இவரைப் பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை.

## கூகூ௦. திருச்சிற்றம்பல நாவலர்

இவர் மாம்பாக்கம் என்னும் ஊரில் ஏறக்குறைய நூறு ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர். புலமை மிக்க இவர் சிறந்து மாணவர் பலருக்குக் கல்வி போதிக்கும் கணக்காயராக இருந்தார். ஆகவே இவருடைய பெயர் மாம்பாக்கம் உபாத்தியாயர் என்று வழங்கிக்கொண்டிருந்தது. திருவண்ணாமலை அருணாசலப்பெருமான்மீது நூல் ஒன்று செய்யவேண்டுமென்று குலசேகரன் என்பவர் இவரைக்கேட்டுக்கொண்டனர். இவர் அதற்கு இணங்கி அண்ணாமலைச் சதகம் என்னும் நூலைப் பாடினார்.

சதகம், குமரேச சதகம், அறப்பளீசுர சதகம் முதலியவைகளைப்போல் அறநெறி, ஒழுகலாறு, உலக இயல் முதலியவைகளைக் கூறுவதாக அமைந்துள்ளது நூலினைப் பாராட்டிச், சிவானந்த அடிகள், திருவெண்ணெய் நல்லூர் இராசப்ப உபாத்தியாயர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"பணிமுடி சுமக்குமெழு பாரனந் தவனுமுயர்
பதுமா தனத்திறைனும்
பன்றியன மாய்நிலம் அகழ்ந்து விண்மீதில்
பறந்துநா டற்கருமையாய்.
அணியிதய தொண்டர்நினை யாமுனம் வந்தவர்
அவாவின தருட்கெளிமையாய்
அனல்வடிவ மாயெழுந் தெங்கும்பிர காசிக்கும்
அண்ணா மலைத்தேவர்மேல்
மணிதரு வளைக்குலம் ஒலிக்கும் பணைக்கணுறு
வாளைகள் எழுந்துவானின்
வரநதி உழக்கிவரு சிங்கநக ராளிபுகழ்
மன்னிய வசந்தராயன்
திணிபுயத் தரசரே றறிஞர்குல சேகரன்
திறல்மிகுஞ் சதகமதுநீ
செப்புதி எனச்சிந்தை அன்புகூர்ந் தருளினன்
சிற்றம் பலக்கவிஞனே."

என்பது இராசப்ப உபாத்தியாயர் பாடியது.

"தேவா லயங்களில் சந்நிதா னங்களில்
திருவிழா விற்சிறந்த
தேர்நடந் திடுபொழுதில் அருமறை பகர்ந்தவழி
செய்யுந் தமுற்சாலையில்
பாவாணர் கல்விப்ர சங்கம்பு ராணம்ப
டிக்கின் ற வித்வசபையில்
பார்வைக் கலங்கார சோபனமு கூர்த்தங்கள்
பண்ணும்வி வாகசபையில்
கோவான சிங்கா தனத்திருந் தரசுசெங்
கோல்கொண்ட ராசர்சபையில்
கூறுமிவ் விடமெலாம் ஆசுசம் இலையென்று
கூப்பிட் டுரைக்குமறைகள்
ஆவா கனத்தனே மாவார் வனத்தனே
அருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னில்துதிசெய் உண்ணா முலைக்குரிய
அண்ணா மலைத்தேவனே."

என்பது மேற்படி சதகத்தின் எழுபத்தொன்பதாவது பாடல். இப் பாடல் திட்டுப்படாத இடங்கள் இவையென்பதைக் கூறு கின்றது. நூல் முழுவதும் இவ்வாறே வசந்தராயராகிய செய் வித்தோனைச் சுட்டிக் கூறப்பட்டுள்ளது.

இவர் 'வீரட்டேசுர சதகம்' என்னும் நூலும் பாடியுள்ளார்.

"நல்லார் இருக்கின்ற ஊரதாய் அவ்வூரில்
நடுவே யிருக்குமனையாய்
நன்மனைவி சாலமும் தோட்டமுந் துரவுமதில்
நல்லதண் ணீருள்ளதாய்
இல்லாள் மிகுத்தகுண சாந்தையாய் மனதுக்(கு)
இசைந்தபுத் திரருடையராய்
இடரிலா துறுதொழிலும் அத்தொழிலில் லாபமும்
இன்பமென் மேலுமுளதாய்
சல்லாப நூல்பல உணர்ந்தபெரி யோர்கள்பால்
தர்மார்த்த கேள்விமேவித்
தானமுந் தவமுமே மானமென இல்லமாம்
தனியறந் தாங்குவோனும்
அல்லார் பொழிற்கொன்றை வனமேவும் அனகனே
அருள்பெற்று வாழும்அடியார்
அகமலரில் வாசனே திரிபுரைதன் நேசனே
அதிகைவீ ரட்டேசனே,"

என்பது இல்லறத்தான் தன்மையுணர்த்தும் பாட்டு.

## ௯௯௧. திருச்சிற்றம்பல முனிவர்
(19 - நூ.)

சோழவள நாட்டில் திருமறைக்காட்டில் இருந்தவர். இவர் வடமொழியிலுந் தென்மொழியிலும் புலமை மிக்குடையவர். வடமொழியில் இருந்த காவேரிப் புராணத்தைத் தமிழில் மொழி பெயர்த்துப் பாடியுள்ளார். அந்நூல் ௩௯ அதிகாரங்களையும், ௧௪௭௪ பாடல்களையுங் கொண்டுள்ளது. சுப்பைய தேசிகர் என்பவர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். நூலின் தெய்வ வணக்கத்துள் காவேரியம்மன் வணக்கப்பாடலை அடியிற் காண்க:

> "மாவேரி நல்லுருவிற் பொற்கென்று
> மலைமகள்கை மலரின் முன்னாள்
> தூவேரி னுற்பவித்த கங்கையினும்
> விழுமிதாய்த் துறுமிப் பூத்த
> பூவேரி யமுனையிற்பொங் கிடவபீட்
> டங்களெல்லாம் பொழியப் போந்த
> காவேரி மாநதியைக் கைக்கமலங்
> குவித்திறைஞ்சிக் கருத்துட் கொள்வாம்."

## ௯௯௨. திருச்சிற்றம்பலம் பிள்ளை - ச
(19 - நூ.)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூரில் பெரும்புலவராக விளங்கியிருந்த சந்திரசேகரம் பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். தந்தையாரிடமே கல்விகற்றுச் சிறந்த புலமை பெற்றுக் கோயமுத்தூர் இலண்டன் மிஷன் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். இவர் பல நூல்கட்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். வீராச்சாமிப் பிள்ளை என்பவருடைய திருப்பேரூர் வெண்பாவந்தாதிக்கு இவர் பாடிய சிறப்புப்பாயிரத்தை அடியிற் காண்க:

> "அந்தாதி யில்லா அரசவனத் தீசற்கோர்
> அந்தாதி ஒன்றிங் கணிவித்துப்—பிந்தா
> வளம்பெறும்வீ ராச்சாமி மன்னவர்கோன் தீர்த்தான்
> குளம்பெறுமக் கண்ணன் குறை."

இவரிடம் கல்விகற்றுப் புலமையடைந்து சிறந்து திகழ்ந்தவர்கள் பலர்.

## கூகூரு. திருஞானசம்பந்த உபாத்தியாயர்

ஈழவள நாட்டிலே சுளிபுரம் என்னும் ஊரிலே ஏறக்குறைய நூற்றிருபது ஆண்டுகட்கு முன்னே தோன்றியவர். ஆறுமுக நாவலரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத்தேறியவர். கந்தபுராணம், பெரியபுராணம், பாரதம் முதலிய இலக்கியங்களிலே நல்ல பயிற்சி உடையவர். இந்நூல்களைப் பிறருக்குப் போதித்துப் பேரும் புகழும் பெற்றவர். சொற்பொழிவு செய்யுந்திறமையுஞ் செய்யுள்பாடுந் திறமையும் நன்கு அமையப்பெற்றவர். மாணிக்கப் பிள்ளையார் திருவருட்பா, கதிர்காம வேலவர் திருவருட்பா முதலியன இவரால் இயற்றப்பெற்றவை இவைகளையன்றித் தனிப் பாடல்களும் பல இவரால் இயற்றப்பெற்றன.

"பூவார் மலர்மிசைப் போதனு மாயனும் போற்றியினும்
நாவாற் றுதித்தற் கரிதாங் கதிரை நகருறையும்
மாவாரும் வள்ளிதெய் வானை மணாளற்கு மன்னுமருட்
பாவார் துதித்துணை மாணிக்க வைங்கரன் பாதங்களே."

என்பது இவர் இயற்றிய கதிர்காம வேலவர் திருவருட்பாவின் காப்புச் செய்யுளாகும்.

## கூகூச. திருஞானசம்பந்த முதலியார்
(கி. பி. 1838)

இவர் தொண்டைமண்டலத்தில் பழந்தண்டலம் என்னும் ஊரில் துளுவ வேளாளர் குலத்தில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் சோமு முதலியார். இவர் தோன்றிய ஆண்டு 1838. இலக்கண இலக்கியங்களைத் தக்காரிடங் கற்றுச் சிறந்த தமிழ்ப்புலமை பெற்றார். பள்ளிகளில் தமிழாசிரியராக மாணவர் கட்குப் போதித்ததன்றிக் கற்க விரும்பிய பலர்க்குங் கல்வியைக் கற்பித்தார். சித்தருடைய நூல்களிலும் இவருக்குப் பயிற்சி யமைந்திருந்தது. இவர் திருக்கழுக்குன்றத்திறைவன்மீது உருத்திரகோடிக் கோவை என்னும் நூலையியற்றியதன்றி வேறு சில சிறு நூல்களையும் இயற்றினர்.

''காருறு செவ்விய கஞ்சமு நற்பிறை கார்முகமும்
ஏருறு வேலுங் குமிழுநல் வள்ளையும் எண்பவழம்
நேருறு நித்தில மும்முறும் பூங்கொடி நின்றதுகாண்
சீருறு நம்பன் உருத்திர கோடிச் செழும்புனத்தே.''

என்பது கோவையின் முதற் பாட்டு.

''சீர்தரு வெள்ளிச் செழுங்கிரி யும்பர்
பேர்தரு விபுதர் பெட்புடன் சூழ்ந்து
கையஞ் சலிக்கக் கரணஞ் சாம்ப
ஐய அருளென அவர்பால் அளியாய்க்
கருணை பொழிந்து காக்கும் பரமன்
முச்சுடர்க் கொளிதரு மூர்த்தி யெண்ணு
இச்சகம் அறிவான் இறைவிதன் நாயகன்
நாட்டந் தம்மை நயவினை யாட்டால்
அங்கையின் மறைக்க அவ்விரல் களில்வரு
கங்கை மரபில் கதித்த துளுவன்
தகைமை செறிபழந் தண்டலைப் பதியான்
வகைபூ விருந்த வல்லி மரபினன்
சேரமான் சிவராய கோத்திரத் துதித்தோன்
சோமு முதலியார் சுபுத்திரன் இக்கலி
நாலா யிரத்துத் தொளாயிரம் நண்ணிய
மேலை முப்பான் ஒன்பது விளம்பி
வந்தவ தரித்து வாய்மை தூய்மை
சிந்தையில் அன்புடன் செவ்வே வளர்ந்தோன்
பல்வழி விரிந்த பாரகா வியமெலாம்
சொல்லி வைக்குந் துய்மை யாளன்
இலக்கணம் அனைத்தும் இனிது தேர்ந்து
கலக்கம் அறவே கற்பித் திடுவோன்
எத்தகை யாரும் ஏற்றத் தக்க
சித்தர் நூல்களில் தேர்ச்சி யுற்றோன்
அருந்தமிழ்க் கிவனோர் ஆசிரியனென
இருந்து யோகத் தெழில்நெறி நின்றோன்
எற்கு ஞானமோ டருந்தமிழ் பகர்ந்தோன்
நற்குணம் அனைத்தும் நலக்க வாழ்ந்தோன்
ஆரண சைல அலங்கா ரப்பேர்
காரண மாகக் கழறினேன் பஞ்சக
அகப்பொரு ளனைத்தும் அழகின் அமைத்துப்
பகுப்பிற் பிரித்துப் பாரலங் காரம்
கற்பனை அதிசயம் கவிநயங் காட்டிப்
பொற்புறு நுட்பம் பொலிய வைத்திங்

கெழிற்றுறை நானூற் றிருபா ஞன்கிற்
கழறினன் கோவை கவிஞர் வியக்க
மறைகள் நான்கும் மலையா வளர
நிறைமுடி நாப்பண் நிலைசிவம் முளைக்க
வருகழுக் குன்றூ வைய மேத்தும்
ஒருதிரு நகராம் உருத்ரகோ டிக்கே
பெருஞா னத்தால் பேரருள் நிலைத்த
திருஞான சம்பந்த தேசிகோத் தமனே.''

என்னும் புன்னைப்பாக்கம் உலகநாத முதலியார் சிறப்புப்பாயிரத்தால் இவருடைய வரலாற்றுப் பகுதிகள் சில விளங்குகின்றன.

## ௬௬௫. திருத்தேவர்–பழனியப்பக் கவுண்டர் (கி. பி. 20 - நூ.)

இவர் கொங்குவள நாட்டில் வேடசெந்தூரில் தோன்றியவர். வடமொழியையுந் தென்மொழியையும் நன்கு கற்று இருமொழிகளினுஞ் சிறந்த புலமைபெற்று விளங்கினர் குலசேகரன் பட்டினம் போடிபட்டி அருணசல அடிகள் என்னும் பெரியாரை அருளாசிரியராகக் கொண்டு வேதாந்த நூல்களை நன்கு கற்றுணர்ந்தார். பிறருக்கு வேதாந்த நூல்களைப் போதிப்பதினும் சொற்பொழிவு செய்வதினும் சிறந்து விளங்கினர்.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்: பரமாத்துவித சித்தாந்தம், மனித இயல்பு, முதற்குறளும் முதற்பொருளும், இறைவனும் எழுத்தைந்தும், கோவில்யானை, பேராசிரியன், தனித்தமிழ் மந்திரம் என்பன.

'' அருணன்கு சாதனங்கள் அற்றவெமைப்
போல்வாரும் அடைய முத்தி
முரணமல் தத்துவங்கள் தமையுணர்த்த
முதல்வனே மூர்த்தி யாகும்
பொருணலே மூம்வடிவாம் பரமசிவா
நந்நியத்தைப் பொருந்தக் காட்டும்
அருணசலக்குரவன் அடிக்கமலம்
முடிக்கழகாய் அணிந்து வாழ்வாம்.''

என்பது இவர் பரமாத்துவிதக் கட்டளையில் இயற்றிய குரு வணக்கப் பாடல்.

## ௯௯௬. திருநயம் அப்பாவையர்

இவர் திருநயம் என்னும் ஊரினர். திருவிளையாடல் ஈர்த்தனை முதலிய நூல்கள் இயற்றியவர். வழிவழியாகத் தமிழ்ப் புலமைவாய்ந்த குடும்பத்தில் தோன்றியவர். பலருக்குக் கல்வி கற்பித்தவர்.

## ௯௯௭. திருநாகந்தையர் (1886)

இவருடைய பெயருக்கு முன்னால், "கச்சித் தலைச்செங் கோட்டத் துறுவனார் மகனார்" என்னும் அடைச்சொற்கள் காணப் பெறுதலைக் கொண்டு இவருடைய ஊரையும் தந்தை யார் பேரையும் ஒருவாறு துணியலாம். இவர் கம்பரால் பாடப் பெற்ற ஏரெழுபது என்னும் நூலுக்கு விளக்கவுரை எழுதியுள் ளார். உரையைப் பாராட்டித் திருத்துருத்தி பொன்னிகுடி கிழார் என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௯௯௮. திருநாகேசுவர முதலியார் - வே

இவர் தொழுவூர் வேலாயுத முதலியாருடைய மூத்த புதல்வர். தம்முடைய தந்தையாரிடமும் வேறு பலரிடமும் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றார். தம்முடைய தந்தையார் வரலாற்றை எழுதி வெளியிட்டதுடன் தந்தையார் இயற்றிய நூல்களையும் ஆராய்ந்து வெளியிட்டார். பூண்டி அரங்கநாத முதலியார் இவருடைய தந்தையார் வேலாயுத முதலி யாருக்கு நண்பர். தம் நண்பரின் மகனாகிய இவருக்குத் தமிழ் மொழிபெயர்ப்பு அலுவலகத்தில் அலுவல் ஒன்றும் வாங்கிக் கொடுத்தார்.

## ௯௯௯. திருநாராயணபட்டன்

இவர் "கவிகுமுத சந்திர பண்டிதன்" என்னும் சிறப்புப் பெயர் பெற்றுள்ளார். "குலோத்துங்க சோழ சரிதை" என் னும் நூல் இவரால் இயற்றப்பட்டிருப்பதாகக் கல்வெட்டுகளி னால் அறியப்பெறுகிறது. இச் சரிதை நூல் இக்காலத்தில்

வழக்கில் இன்மையால் மறைந்து விட்டதென்றே கொள்ள வேண்டும்

## க000 திருநாவுக்கரசு முதலியார் (புழலை) (19 - நூ.)

இவர் சென்னை புழலையில் இருந்தவர். கல்வி கேள்விகளில் வல்லவராய்ப்பண்டிதரத்தினம் என்னுஞ்சிறப்புப்பட்டம்பெற்று விளங்கினர். திராவிட மாபாடியகர்த்தர் சிவஞான யோகிகள் மீது மாலை என்னும் நூல் ஒன்று பாடியிருக்கிறர். இந் நூலைப் பாராட்டித் திருக்குருகூர் ஞானசித்த சுவாமிகள் என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கிறர். இவர் திருத்தொண்டர் வெண்பா என்னும் நூலை ஆராய்ந்து வெளியிட்டிருக்கிறர். இவரிடஞ் சிலர் கல்விகற்றுச் சிறப்படைந்தனர். அவர்களுள் புழலை மாணிக்கவேலு முதலியார் என்பவர் ஒருவர் திருநாவுக்கரசு முதலியார் கல்வி கற்றது சித்தாந்தசரபம்-அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியாரிடத்தில்.

"ஞாலமதி லேலுயர்ந்த ஞானதே சிகனும்பின்
வேலப்ப தேசிகன்பால் வேதா கமங்கற்றுச்
சாலவுயர் தீட்சாதி சர்வமும்பெற் றேயுறைந்த
சீலமுறுந் தென்துறைசைச் சிவஞான தேசிகனே."

என்பது சிவஞானயோகிகள் மாலையில் ஒரு பாட்டு.

## க00க. திருப்பாற்கடனுதன் கவிராயர்

இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் வாழ்ந்திருந்தவர். அம்பலவாணக் கவிராயர் என்பவரிடத்திலே இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறினர். அந்நாளில் சமயத் தொண்டு புரிதற்குத் திருநெல்வேலிக்கு வந்த இரேனியஸ் ஐயர் இவரிடம் பதினன்கு ஆண்டுகள் தமிழ் கற்ருர். இதனுல் அவருக்குத் தமிழ்ப்புலமை தக்காங்கு நிரம்பியது. இரேனியஸ் காலமான போது இவர்,

"அனை நிகர் அன்பும் ஏசுவின் அருளும்
அவனியின் பொறையும்விண் சுடரோன்
தனை நிகர் ஒளியும் மலைநிகர் வலியும்
தழைத்திட வாழ்த்துநன் மொழியால்

கனைகழல் வேந்தர் முதலினோர்க் கறிவு
காட்டிநற் கதியினைச் சார்ந்தான்
தினையள வையம் இன்றிநற் கலைகள்
தேர்ந்த இரேனியூ சென்போன்.

"சரணமென் றடைந்தோர் தங்களுக் கிரங்கித்
தமனியம் ஈந்துமூ வகையாம்
கரணமென் பகையால் தீங்குரு வண்ணம்
காசினி தன்னிலா தித்தன்
கிரணம்போல் அறிவைப் பரப்பிய இரேனி
யூசெனுங் குரவனைச் சார்ந்த
மரணமே நினக்கு மரணம்வந் துருதேல்
மனத்துயர் அருதுநல் லோர்க்கே."

என்னும் இத்தகைய பல பாடல்களை இரங்கற்பாவாகப் பாடினார்.

## ௧௦௦௨. திருமயப் புலவர்

இவர் திருமயம் என்னும் ஊரில் ஏறக்குறைய இருநூறு யாண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர். வீரபாண்டியக்கட்ட பொம்மு ஊமைத்துரை என்பவர்களும் இக் காலத்தினரே. அந்நாளில் புதுக்கோட்டையில் கலைமகள் விழா நடைபெற்றது புலவர் புதுக்கோட்டைக்குப் போய்த் தொண்டைமானிடம் பரிசில் பெற்றுக்கொண்டு திரும்பினார். நடுவழியில் கள்ளர்கள் சிலர் தோன்றிப் புலவருடைய கையில் இருந்ததைத் தட்டிக் கொண்டு சென்றனர். புலவர் வீட்டிற்கு வந்து வழியில் நிகழ்ந்ததை மனைவியிடம் உரைத்தார். அவள் உள்ளம் வருந்தினாள். உடனே புலவர்,

"கள்ளன் கொடுத்ததைக் கள்ளன் எடுத்தகன்றான்
உள்ளங் கடுத்தல் உறலாமோ—வள்ளல்
மருதரசன் உள்ளான் மடவாய் வறுமை
ஒருவ அருள்வான் உடன்."

என்னுஞ் செய்யுள் ஒன்றைப் பாடினார். புதுக்கோட்டைத் தொண்டைமான் கள்ளர் வகுப்பைச் சேர்ந்தவராதலின் அவரையும் புலவர் கள்ளன் என்று குறிப்பிட்டுள்ளார். மருதரசன் என்பவன் மருதுபாண்டியன் என்னும் பெயரினன்; சிவகங்கையில் அரசுபுரிந்திருந்தவன்; அவன் வள்ளன்மை உடையவனா

கலின் அவனை "வள்ளல் மருதரசன்'' என்று புலவர் குறிப்பிட்டுள்ளார். இவரைப் பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை.

## ௧௦௦௫. திருமலைக்கொழுந்து கவிராயர்

இவர் பாண்டிவள நாட்டிலே திருநெல்வேலிக்கடுத்த சிக்கிலியையன்குளம் என்னும் ஊரில் கம்மாளர் மரபிலே பிறந்தவர். ஏறக்குறைய நூறுயாண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர். மிகுவிரைவாகப் பாவியற்றும் ஆற்றல் அமையப்பெற்றவராகையால் 'துரிதகவி' என்னுஞ் சிறப்புச் சொல்லையுந் தம் பெயருக்கு முன்னுற் பெற்றார்.

இவர் மதுக்குடித்தலினும் வசைபாடுதலினும் நசைமிக உடையவர். ஒருநாள் மதுவருந்தும் பொருட்டுக் கட்கடை ஒன்றுக்குச் சென்றார். இவர் வசைபாடின் பலித்தேவிடும். இவரைக் கண்டால் அனைவரும் அஞ்சி நடுங்குவர். இவரைக் கண்ட கடைக்காரன் யாது நிகழுமோ என்று அஞ்சிக் கலங்கினன்.

கவிராயர் கடைக்காரனைப் பார்த்து,

' தாசிசா ஒன்றைத் தராவிடிலோ இன்றைக்கே
நீசிசா என்றே நிகழ்த்துவேன்.''

என்று அரைப் பாடலைப் பாடும்போது கடைக்காரன் மதுச் சீசா ஒன்றை இவரிடம் எடுத்துக் கொடுத்தான். இவர் நின்ற நிலையிலேயே வாங்கி 'மடமட' என்று குடித்துவிட்டு அப்பாற்சென்றார்.

இவர் காலத்திலே சென்னைமா நகரில் விநாயக முதலியார் சிறந்த அறப்பெருஞ் செல்வராக விளங்கியிருந்தார். அவரைப் பாராட்டி இவர் பல செய்யுட்கள் பாடினார். இவர் இயற்றிய தனிப்பாடல்கள் பல தனிச் செய்யுட் சிந்தாமணியில் சேர்க்கப் பெற்றுள்ளன. இவர் பலரிடமுஞ் செய்யுள் பாடிச் சென்றிரந்தலை,

'' சாலவிலக் கணம்படித்தும் ஒன்றுக்கும்
ஒன்றரைக்குந் தமிழைப் பாடிக்
காலமிகக் கழிக்கநெஞ்சில் வெட்கமிலை
யாவிதென்ன கருமஞ் செய்தீர்

மாலைகட்டுங் கோணிற்றைக் கொடுத்திரவுங்
கோளூரின் மடத்திருந்து
பாலகரைப் படிப்பியுங்கள் கூலிக்கா
கிலும்அறுங்கள் பாவல் லோரே ''

என்னுஞ் செய்யுளால் வெறுத்துப் பாடியுள்ளார். இச் செய்யுள் நகைச்சுவைக்குரிய சொற்கள் அமைந்து விளங்குகின்றது.

## க௦௦௪. திருமலைநயினார் சந்திரசேகரர்

இவர் திருவண்ணாமலை மெய்கண்ட சந்தானத்தைச் சேர்ந்த சத்தியஞான தரிசினிகளுடைய மாணாக்கர். இவர் 'இறைவானறையூர்ப் புராணம்' என்னும் புராணம் இயற்றினார். இவ்வூர் திருக்கோவிலூர்ப் பிரிவில் உள்ளது. இப் புராணத்தைப் பாடியதற்காக இவருக்கு அவ்வூர் அறநிலையக் காப்பாளர்களால் வீடு கட்ட மனையும் நிலமுந் தானமாகக் கொடுக்கப்பட்டன. இவர் பாடிய புராணம் இப்பொழுது இல்லை; மறைந்து போய் விட்டது.

## க௦௦௫. திருமலைமுத்துப் பிள்ளை
## (1910)

மதுரைமா நகரில் மேலமாசி வீதியில் இருந்தவர். சிறந்த தமிழ்ப்புலமையுடையவர். இவரைப் பற்றிய செய்திகள் புலனாகவில்லை.

'' காருரு மலர்ப்பொழிலுங் கஞ்சமலர்ச்
செழுந்தடமுங் கவின்செய் தோங்கும்
நீருரும் வேணியனார் நடம்பயிலும்
தில்லையுளான் நிலவும் பூமித்
தேருரும் அரணைமற வாதமனன்
கங்கைகுலன் செல்வி யாளன்
சீருரும் புயனருணு சலமகிபன்
செய்ந் நோன்பிற் சிறக்கவந்தோன்.''

என்பது இவர் வேளாள சூளாமணி என்னும் நூலுக்களித்த சிறப்புப்பாயிரப் பாடல்களுள் ஒன்று. இவர் பாடியனவாகவும் இயற்றியனவாகவும் வேறு செய்யுட்களோ உரைநூல்களோ கிடைத்தில.

## ௧௦௦௬. திருமலையப்ப முதலியார் - சி
## (1910)

இவர் சிவில்லிபுத்தூரில் இருந்த சிதம்பரநாத முதலியார் என்பவருடைய மகனாகத் தோன்றினார். "சிவத் தோத்திராந் தாதி" என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது.

"நீர்கொண்ட மேகமென அருள்சுரக்குந்
தேவாகு நிமல நீதா
ஏர்கொண்ட வையகத்திப் பிறப்பினது
பயனையுரு திருப்ப தாலெச்
சீர்கொண்ட பிறப்புறுவே னோவென்று
பதறுகின்றேன் சிலாக்கியத்தை
ஆர்கொண்ட மானிடமே இன்னுமிகு
செல்வத்தோ டருள்வாய் தானே."

என்பது அந்தாதியின் முதற்பாட்டு. அந்தாதியைப் பாராட்டி, மதுரையில் இருந்த சுந்தரேசுவர ஐயர், குன்னூர் பெரிய வீட்டுக் குமாரசாமி முதலியார், வெ. ப. சுப்பிரமணிய முதலியார், கமுகங்காடு சிதம்பரநாத முதலியார், வைகுண்டம் கோ. ஆறுமுக தேசிகர், மதுரைத் தமிழ்ச் சங்க நூற்பரிசோதகர் மு. ரா. அருணசலக் கவிராயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"இம்மைநலம் மறுமைநலம் இரண்டுமுற
இறைவனருள் எய்த வெங்கும்
செம்மைதிகழ் சிவதோத்தி ராந்தாதிப்
பிரபந்தஞ் சிறப்பச் செய்தான்
மம்மரறு வில்லிபுத்தூர்ச் சிதம்பரநா
தக்குரிசின் மைந்தன் என்றும்
பொய்ம்மையொழித் தறநெறியில் ஒழுகுதிரு
மலையப்ப புனிதன் மாதோ."

என்பது வெ. ப. சுப்பிரமணிய முதலியார் பாட்டு.

## ௧௦௦௭. திருமலையாண்டிக் கவிராயர்

பாண்டிவள நாட்டில் திருக்குற்றாலத்திற்கு அண்மையில் உள்ள வாசுதேவ நல்லூர் என்னும் ஊரில் இருந்தவர். பழனியாண்டிப் புலவர் என்பவரிடம் கல்வி கற்றுத் தேறிய இவர்

சிறந்த புலவராக இலங்கினார். இவர் இயற்றிய சாற்றுக்கவி ஒன்றை அடியிற் காண்க:

"பூமகளும் நாமகளும் சயமகளும்
புகழ்மகளும் பொருந்தி வாழ்வோன்
காமனையே நிகர்க்கின்றோன் கவிவாணர்
தங்களுக்கே கனக மாரி
சேமமுறப் பொழியெழிலி சேரலராங்
கரிகளையே செயிக்கும் சிங்கம்
தாமமணி திண்புயத்தான் சைவசிகா
மணியான தகைமை யாளன்."

திருமலையாண்டி என்பது அறுமுகக்கடவுள் மலைகள்மீதுறைதலால் ஏற்பட்ட காரணப் பெயர்.

## க00அ. திருமலைராயன்

சோழவள நாட்டில் அரசுபுரிந்திருந்த சிற்றரசர்களில் ஒருவன். அதிமதுரகவி முதலிய புலவர்களைத் தன்னுடைய அவைக்களத்தில் இருக்கச் செய்து அவர்களோடு அளவளாவுதலையே இனிய பொழுதுபோக்காகக் கொண்டிருந்தவன். தன் அவைக்களப் புலவர்களிடத்திலே கொண்டிருந்த பற்றுதலால் காளமேகப் புலவரின் வெற்றியைப் புகழ்ந்து போற்றிப் பாராட்டி மகிழாமல் காளமேகப் புலவருடைய வசைப்பாட்டிற்கு ஆளானவன். காளமேகப் புலவர் எமகண்டம் பாடும்போது "குடத்திலே கங்கையடங் கும்" என்று ஈற்றடி கொடுத்துப் பாடலை நிரப்பச் சொன்னவன். காளமேகப் புலவர் நிரப்பிய பாட்டு,

"விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும்—பெண்ணை
இடத்திலே வைத்த இறைவர் சடாம
குடத்திலே கங்கையடங் கும்."

என்பது.

## க00௯. திருமாளிகைச் சௌரிப்பெருமாளரங்கன்

இவர் திருக்கண்ணபுரம் என்னும் ஊரிற் பிறந்தார். ஐந்தாம் ஆண்டில் தாயையும் பதினைந்தாம் ஆண்டில் தந்தையை

யும் இழந்தார். பிறகு கல்விகற்க விரும்பி மதுரைமா நகருக்குச் சென்றார். மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் சேர்ந்து கற்பதற்கு இயலாதபடியினால் சோழவந்தான் கிண்ணிமடத்தை அடைந்து கிண்ணிமடம் அடிகளிடம் கல்வி பயின்றார். அப்பொழுது இவருடைய உணவு உடை முதலியவற்றிற்கு அன்பர்கள் பலர் உதவி செய்தனர். அக் காலத்தில் அங்குச் சிறந்த தமிழறிஞராக விளங்கியிருந்த அரசஞ்சண்முகனாரிடமுஞ்சில நூல்களைக்கேட்டுத் தெளிந்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டிதத் தேர்வுக்கு எழுதித் தேர்ந்தார்.

பிறகு வேலூர், வாணியம்பாடி முதலிய ஊர்களில் உயர் நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். குறுந் தொகை நூலின் ஏட்டுப் பிரதிகளைப் பலவிடங்களினும் தேடி நன்றாக ஆராய்ந்து, அதற்கு உரையெழுதி வெளிப்படுத்தினர். இவருடைய குறுந்தொகையுரை **1915** ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் வெளிவந்தது.

## ௧௦௧௦. திருமூர்த்தி நயினார் (1870)

தொண்டைவள நாட்டில் செய்யூரில் காலக்கணிதம் இராம சாமிப் பத்தர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் நாலுமந்திரி கதையை நாடகமாகப் பாடியுள்ளார்.

" உச்சித சரிகைச் சேலை உயரும்நன் முத்து மாலை
மெச்சருஞ் சித்ர வேலை மேவிய தங்க வோலை
பச்சைக்கல் லிழைத்த நத்துப் பணிகளை அலங்கரித்துக்
கச்சணி நடன மாதர் கடுகவே வருகின் றாரே "

என்பது நடனப் பெண்கள் தோற்றத்தைப் பற்றிய பாட்டு. நூலைப் பாராட்டிக் களத்தூர் வேதகிரி முதலியார் குமாரர் ஆறுமுக முதலியார், பழவேர்க்காடு இரத்தினவேலு முதலியார், தஞ்சை பாலவைரக்கண் வேலாயுதப் புலவர், சென்னை புரசை சோதிட முத்திருளப்ப பண்டிதர், இராயப்பேட்டை அப்பாவு பண்டிதர், பெங்களூர் சு. இராமசாமிப் புலவர், இராம சமுத் திரம் க. திருவேங்கடசாமிதாசர், வேலைநகர் அரங்கசாமிதாசர்,

திரிசிரபுரம் சீனிவாசதாசர், வல்லிபுரம் நாராயணசாமிதாசர், சென்னை சுப்பராயதாசர் சேவலைப்புரை சின்னசாமிப் பண்டிதர், சென்னை புதுப்பேட்டை சபாபதிப் பத்தர், மகாபலிபுரம் சேனுவரையன், வேலைநகர் அண்ணுச்சாமிதாசர், சென்னை அ. அருமைச்சிரோன்மணி ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௧௦௧௧. திருமேனிக் கவிராயர்

தென்திருப்பேரையில் இருந்த காரிரத்தினக் கவிராயருடைய மகன். 17 ஆம் நூற்றுண்டில் இருந்தவர் திருப்பேரைத் திருப்பணிமாலை என்னும் நூல் இயற்றியவர்.

## ௧௦௧௨. திருவடிக் கவிராசர்

இவர் காயற்பட்டினம் என்னும் ஊரில் இருந்தவராகலாம் என்று ஊகிக்கின்றனர். அவ்வூரிற் சிறந்த புலவராக விளங்கியிருந்த காசிம் புலவர் என்னும் முகமதியப் புலவர் இவரிடங் கல்விகற்றவராவர். தம் மாணவராகிய காசிம் புலவர் பாடிய சந்தப்பாக்களைப் பாராட்டி இவர்,

''வடிக்கட்டுச் சங்கத் தமிழ்ப்புல விர்!எழு வான் கடந்த
முடிக்கட் டழகர் திருப்புகழ் வாரி முகந்து கொண்டு
படிக்கட் டுலகப் பரப்பையெல் லாம்சுற்றிப் பார்த்து விண்மேல்
கொடிக் கட்டித் தாவுநல் காசிம் புலவர் கொழுங்கவியே.''

என்னுஞ் செய்யுளைப் பாடியுள்ளார். இவரைப் பற்றிய பிற செய்திகள் எவையும் புலனுகவில்லை.

## ௧௦௧௩ திருவடிதாசர்

இவர், ''கசேந்திர மோட்சம்'' என்னும் நூலைப் பாடியிருக்கிறார். முதலைவாயில் அகப்பட்ட யானையைத் திருமால் பாதுகாத்து வீடுபேறளித்த கதையைக் கூறுவது இது. நூற்றுப் பதினெட்டுப் பாடல்களால் ஆகியது. திருவடிதாசருடைய தந்தையார் பெயர் வேங்கபூபன் என்பதும் இவர் காஞ்சியில் வாழ்ந்திருந்தவர் என்பதும்,

"சுகர்பரிச் சித்துக் கன்பாய்ச்
சொல்கசேந் திரமோட் சத்தைச்
சகதல மிசையே விரிச்
சாற்றுவான் ஆரோ என்னில்
நகதரன் தனைவ ளர்த்த
நற்குல வேங்க பூபன்
மகவென வீறுங் கச்சி
வாழ்திரு வடியான் தானே"

என்னும் கசேந்திர மோட்ச இறுதிப் பாடலாற் பெறப்படுகின்றது.

## கΟகச. திருவண்ணநாதக் கவிராயர் - வீ (1897)

இவர் பாண்டிவள நாட்டிலே எட்டையபுரம் சீமையில் சம்புலிங்கபுரம் என்னும் ஊரில் வீரராகவக் கவிராசர் என்பவருடைய திருமகனுகத் தோன்றியவர். தந்தையாரிடமே கல்வி கற்றுச் சிறந்த செந்தமிழ்ப் புலமை பெற்றுர். சங்கரநயினர் கோயிலில் எழுந்தருளிய கோமதியம்பிகைமீது இவர் அந்தாதி ஒன்று பாடியுள்ளார். அவ்வந்தாதி கோமதியந்தாதி எனப் பெயர்பெறும்.

"எழுத்தஞ் சினையும் மனத்துன்னி
இறைஞ்சி ஒருகால் துதிப்பவர்க்கு
வழுத்தும் பரம பதமெனநான்
மறையும் உரைக்கும் எனில்வேதம்
பழுத்த குணக்கோ மதியேநின்
பதம்பல் காலுந் துதிப்பவர்க்கு
விழுத்த விடென் றுரைத்திடவும்
வேண்டுங் கொல்லோ வீளம்புவையே."

என்பது அந்தாதியில் ஒருபாட்டு. இந் நூலுக்குச் சௌரிய மங்கலம் சிதம்பரவேலுப் பிள்ளை, இவருடைய மகன் முத்துக் குமாரசாமியா பிள்ளை, திருவண்ணநாதக் கவிராயருடைய உடன் பிறந்தாராகிய திரவிய சங்கரநாராயணக் கவிராசர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். இவர் திருச்செந்திற் பதிகம் என்னும் நூலும் பாடியுள்ளார். அந்நூல் பத்துப் பதிகங்களாய் நூறு பாடல்கள் உள்ளது.

## ௧௦௪௫ திருவம்பலனார்

இவர் கொங்குநாட்டிலே அவிநாசிக்கு வடகிழக்கில் எட்டுக் கல் தொலைவில் உள்ள பெருமாநல்லூர் என்னும் ஊரில் தோன்றியவர். இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழையும் நன்கு கற்றுத் தேறியவர். ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர். செந்தமிழிலும் வடமொழியிலும் தெலுங்கு மொழியிலும் சிறந்த புலமைபெற்றிருந்தார். இவர் யாப்பிலக்கண விதி தவறாமல் பலவகைப் பாவினங்களில் இனிமை தவழவும் அழகு பொலியவும் பல தமிழ்நூல்களை இயற்றிப் புகழ்பெற்று விளங்கியிருந்தார். நாட்டிய மாதர்கட்கும், நாட்டியங் கற்பதையே தொழிலாகவுடைய ஆடலாசிரியர்கட்கும் ஆடல் பாடல் அபிநயங்களைக் கற்பிப்பதில் இவர் வல்லவராக விளங்கியிருந்தார் இவரால் இயற்றப்பெற்ற பல நூல்களுள் (1) நூற்றெட்டு மாத்திரைத் தாளக் கலிவெண்பா, (2) நூற்றெட்டுத்தாள வெண்பாவந்தாதி என்னும் சில நூல்கள் அச்சாகி வெளிவந்துள்ளன.

"சச்சப் புடமிரண்டு வில்கோனுஞ் சார்புலுதம்
இச்சையுடன் மாத்திரையும் எட்டாகும்—மெச்சவரு
சாசபுட மோர்குருவாம் சாரும் லகுவிரண்டு
மாசுகுரு வொன்றூறு மாத்திரையாம்—வீசுபுகழ்
சற்பிதா வோர்புலுதம் சாரும் லகுகுருகோல்
சொற்குருவு நற்புலுதம் சொல்பனிரெண்—டிப்புவியில்
சம்பொற்கட் டம்புலுதம் சாருங் குருமூன்றும்
இன்பமுயிர் மாத்திரையும் ஈராறே—தம்பமெனும்"

என்பன நூற்றெட்டுத் தாளக் கலிவெண்பாவிற் சில அடிகள்.

## ௧௦௪௬. திருவரங்க ஐயங்கார் – கி

(20 - நூ.)

இவர் திருவாலி உபாத்தியாயர் கிருட்டிணமாச்சாரியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். வைணவ சமயத்தினர். அச் சமய நூல்கள் பலவற்றையும் நன்கு கற்றுத் தமிழ்ப்புலமை பெற்றார். இவர் புதுவைக் கலம்பகம் என்னும் நூலுக்குச் சிறப்புப்பாயிரமாகப் பாடிய பாடல்,

" காரார் புதுவைக் கரிவரத மாலின்மேல்
சீரார் கலம்பகத்தைச் செப்பினுன்—தாரார்
பெரியசா மிப்பெயர்கொள் பீடுடையென் கோமான்
அரியபொருள் யாவும் அமைத்து "

என்பது. இவர் இயற்றிய நூல்களின் விவரமும் பிற செய்திகளும் புலனுகவில்லை.

## கoகஎ. திருவரங்கத் தமுதனுர்

இவர் இராமாநுச நூற்றந்தாதி பாடியுள்ளார்.

" பூமன்னு மாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த
பாமன்னு மாறனடிபணிந் துய்ந்தவன் பல்கலையோர்
தாமன்னவந்த விராமா நுசன்சர ணுரவிந்தம்
நாமன்னி வாழநெஞ் சேசொல்லு வோமவன் நாமங்களே."

என்பது மேற்படி அந்தாதியில் ஒரு பாட்டு.

## கoகஅ. திருவழுந்தூர்த் தாசி

இவள் சோழவள நாட்டில் திருவழுந்தூரில் இருந்தவள். ஆடல் பாடல்களில் தேர்ச்சி பெற்றவளாக விளங்கியதோடு தமிழ் நூல்களைக் கற்றுத் தமிழ்ப்புலமையும் அமைந்து விளங்கினுள். எல்லாக் கலைகளிலும் தேர்ச்சி பெற்ற பிறகு சோழ மன்னனைக் கண்டு தனது கலைத்திறத்தைக் காட்டிப் பரிசு பெற்று வரலாமென்று சென்றனள். இவளைக் கண்ட சோழன், "எந்த ஊர்?" என்று உசாவினுன் உடனே இவள்,

" கம்பன் பிறந்தவூர் காவிரிஇ லங்குமூர்
கும்பமுனி சாபங் குலைந்தவூர்—செம்பதுமத்
தாதகத்து நான்முகனும் தாதையுந்தே டிக்காணு
தோதுமத்தர் வாழழுந் தூர்."

என்னுஞ் செய்யுளால் விடையளித்தனள் இவளைப் பற்றிய பிற செய்திகள் புலனுகவில்லை.

## கoகக. திருவாவடுதுறைக் கந்தசாமிக் கவிராயர்

பெரும்புலவர் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திருவாவடுதுறை ஆதீனப்புலவராகச் செல்லுதற்கு முன்பிருந்தே இவர்

திருவாவடுதுறை ஆதீனப்புலவராக அமர்ந்திருந்தார். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் ஆதீனப் புலவரான பிறகும் அவ்விடத்தில் தங்கி மீனாட்சிசுந்தரம் பிள்ளையோடிருந்தார். அவர் பாடுகிற நூல்களில் சில பகுதியைத் தாம் பாடி முடிப்பதாக இவர் அடிக்கடி பிள்ளையவர்களைக் கேட்பதுண்டு. அவ்வாறு கேட்காமல் அச்சுறுத்தித் தடைபடுத்தியவர் மு. ரா. கந்தசாமிக் கவிராயராவர். பெருநிலக்கிழார் ஒருவர்மீது இவர் கோவையொன்று பாடி நிலக்கொடை முதலிய நன்கொடைகள் பெற்றார்.

## ௧௦௨௦. திருவாலியமுதனார்

இவர் சோழவள நாட்டிலே மாயூரத்திலே அந்தணர் குலத்திலே தோன்றினார். இளமையிற் கலைகளை நன்கு பயின்று கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்து விளங்கினார். "கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன், நற்றாள் தொழாஅர் எனின்" என்பது பொதுமறையன்றோ? கல்வியறிவொழுக்கங்களில் மேன்மையுடையவராய்ச் சிறந்து விளங்கிய இவர், கடவுளன்பினுஞ் சிறந்தவராய் விளங்கிச் சிவபெருமான்மீது பதிகங்கள் பாடினார். அவற்றுள் நான்கு ஒன்பதாந்திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளன.

"வைத்த பாதங்கள் மாலவன் காண்கிலன் மலரவன் முடிதேடி
எய்த்து வந்திழந் தின்னமுந் துதிக்கின்றார் எழின்மறை யவற்றாலே
செய்த்தலைக்கம லம்மலர்ந் தோங்கிய தில்லையம் பலத்தானைப்
பத்தி யாற்சென்று கண்டிட என்மனம் பதைபதைப் பொழி யாதே."

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௦௨௧. திருவீழிமிழலைச் சாமிநாத கவிராயர்

இவர் தஞ்சைமாவட்டத்தில் உள்ள திருவீழிமிழலையில் பிறந்தார். அங்கிருந்த ஓர் அறிஞரிடம் இலக்கண இலக்கியங்களைச் சிறிது கற்றார். பிறகு திருவிளையாடல், பெரியபுராணம், கம்பராமாயணம் முதலியவைகளைக் கற்க விரும்பினார்.

அந்நாளையில் மீனாட்சிசுந்தரம் பிள்ளை பல மாணவர்கட்குத் தமிழ்நூல்களைப் போதித்துக் கொண்டு திரிசிரபுரத்தில் இருத்தலை யறிந்தார். திரிசிரபுரத்தையடைந்து பிள்ளையவர்களிடம்

இராமாயணத்தையும் வேறு சில நூல்களையும் பாடங்கேட்டார். சாமிநாத கவிராயர் நுண்ணுணர்வு மிக்காராக விளங்கினமையின் விரைவில் தேர்ச்சியடைந்தார். புராணச் சொற்பொழிவுகளைக் கேட்போர் களிக்குமாறு செய்யும் ஆற்றலும் இவருக்கு உண்டாகியது. படித்துக்கொண்டிருக்கும்போதே அடிக்கடி வெளியிடங்கட்குச் சென்று கற்றாரும் மற்றையோரும் வியக்குமாறு சொற்பொழிவு செய்து நன்கொடைகள் பெற்றுச் சிறப்படைந்து வந்தார். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்னும் முதுமொழிக்கிணங்க இவரும் இளமையிலேயே சொற்பொழிவு செய்வதிற் சிறப்படைந்திருந்தது பாராட்டத் தக்கது.

பிள்ளையவர்கள் இவருடைய சொற்பொழிவுச் சிறப்பையறிந்து மகிழ்ந்தார். ஒரு பேரவை கூட்டிக் கம்பராமாயணத்தின் சில பகுதிகளைச் சொற்பொழிவு செய்யச் செய்தார். "கம்பராமாயணப் பிரசங்க வித்துவான்" என்னும் சிறப்புப் பெயரை யளித்ததன்றிச் சால்வையொன்றையும் வழங்கினார் அது முதல் சாமிநாத கவிராயருக்குத் தமிழ்நாட்டில் பேரும் புகழும் உண்டாயிற்று. இராமாயணச் சொற்பொழிவு செய்தே தமது வாழ்க்கையை நடத்தினார்.

இவருடைய மகனாகிய சரவணப் பிள்ளை என்பவரும் சிறந்த புலவராகிச் சேலம் கல்லூரியில் பதினேழு ஆண்டுகள் தமிழ்ப் புலவராக இருந்தார்.

## க0௨௨. திருவேங்கட ஐயர்

இவர் சீவில்லிபுத்தூரிலே பதினான்காம் நூற்றாண்டில் இருந்த ஓர் அந்தணர். மங்கையர் உறுப்புகட்கு உவமை கூறும் உவமான சங்கிரகம் என்னும் நூலை இவர் இயற்றினார். இந்நூல் பதினைந்து வெண்பாக்களை உடையது. இந்நூலில் கூந்தலுக்கும் நெற்றிக்கும் உவமை கூறும் வெண்பாவை அடியிற் காண்க :

> "கொண்டலுங்கூந் தற்பனையும் கொன்றைக் காயும்மிருளுந்
> தண்டலையுங் கார்மணலுஞ் சைவலமும்—வண்டினமும்
> தண்குழலை ஒப்பாந் தனிவாள் நுதற்குநிகர்
> வெண்பிறையுஞ் செஞ்சிலையு மே.

## க௦௨௩. திருவேங்கடதாசர் - இ
(20 - நூ.)

திருநெல்வேலி மாவட்டத்தில் ஆழ்வார் திருநகரியில் இருந்தவர். இவர் இராமாயணச் சொற்பொழிவு செய்வதில் தேர்ச்சி பெற்று விளங்கினாராகலின் தம் பெயருக்கு முன் இராமாயணம் என்னும் அடைமொழியையும் பெற்று இராமாயணம் திருவேங்கடதாசர் என்று கூறப்பெற்றார். அவ்வூரில் வாழ்ந்திருந்த வேங்கடத் துறைவான் கவிராயர் என்பவர் மாறன்கோவை என்னும் நூல் இயற்றி அரங்கேற்றிய காலத்தில் இவர்,

"சீரோங்கு 'மாண்டொரெண் ணூற்றுத்தொண்
ணூற்றில் திருக்குருகூர்
நாரோங்கு செந்தமிழ் நம்மாழ்வார்
கோவையை நாவலர்முன்
வாரோங்கு ஞானந் திகழ்வேங்
கடத்துறை வான்கவிஞன்
நேரோங்கும் ஆதிப் பிரான்கோ
யிலிலரங் கேற்றினனே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## க௦௨௪. திருவேங்கடத்தா பிள்ளை

இவர் சரபேந்திரர் வைத்திய முறைகளைச் செய்யுளாகப் பாடியுள்ளார். இந்நூல், "சரபேந்திரர் வைத்தியமுறை" என்று பெயரமைந்தது. இதில் கர்ப்பிணிகளுக்குண்டாகும் நோய்களும் சிறுவர்களுக்கு உண்டாகும் நோய்களும் அவைகளுக்குப் பலவகைப்பட்ட மருந்துகளும் சொல்லப்பட்டிருக்கின்றன.

"நன்றாக இவையனைத்தும் நறுக்கியுள்ளி
வசம்புடனே நல்லெள் எண்ணெய்
குன்றாத விளக்கெண்ணெய் வேப்பெண்ணெ
யுங்குழப்பிக் கூட்டி மைந்தன்
தன்றலைமார் பகமட்டுந் தடவிவீக்
கமும்இறங்குந் தலையும் வார்க்கத்
துன்றுகரப் பான்வாதந் தொலையுமெனச்
சரபேந்திரர் சொன்ன வாறே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

இந்நூலையன்றி வேறுசில வைத்திய நூல்களையும் இவர் பாடியிருக்கிறார்.

## ௧௦௨௫. திருவேங்கடப் பிள்ளை - அ
(1876)

இவர் ஆறைமாநகர் என்னும் ஊரில், கவி அரங்கப் பிள்ளை என்பவருடைய அருமைப்புதல்வராகத் தோன்றித் தந்தையாரிடமே இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழையும் நன்கு கற்றுணர்ந்தார். முத்தமிழ்க்கவி என்னுஞ் சிறப்புப் பெயரும் இவருக்கு வழங்கியது. "குசேல விலாசம்" என்னும் நூலுக்கு இவர்,

"சீர்கொண்ட எழின்ஞானம் ஒருருக் கொடுவந்த
சிலக்கு சேலமேலோர்
திறனுற்ற சரிதைமிகு நன்னடை விலாசமாய்ச்
செய்கவென வேண்டப்பலோர்
ஏர்கொண்ட செங்காட்டு நாரா யணப்புனிதன்
இன்பார்ந்த புத்ரரத்நம்
இணையிலாப் புகழிரா மாநுசச் செல்வனுக்
கிளைஞர்சட கோபசியர்
நீர்கொண்ட அன்பனுஞ் சேடாத் திரிப்புலவன்
நெஞ்சினின் மகிழ்வு கொண்டு
நிருமல அகத்தியப் பாஷையில் இயற்றியே
நீடுபுகழ் மேவி னுறல்
பார்கொண்ட கவிஞரிஃ தற்புத மெனப்புகல்வர்
பண்புள்ள சான்றோர் குழாம்
பரிவாக நோக்கியே பரகதிக் கேறுசோ
பானமாம் என்பர் மாதோ"

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௧௦௨௬. திருவேங்கடப் பிள்ளை - ஆ
(1908)

புதுவைமா நகரில் பெருங்கொடைவள்ளலாகத் திகழ்ந்த புதுவை ஆனந்தரங்கப் பிள்ளையை அறியாதார் இலர் பெருஞ் செல்வராகிய அவர் மக்கட்பேற்றினைப் பெற்றிலர்போலும்.

இத் திருவேங்கடப் பிள்ளை என்பவர் மேற்படி ஆனந்தரங்கப் பிள்ளைக்கு வளர்ப்புப் பிள்ளை. இவ் வளர்ப்புப் பிள்ளை தமிழ் மொழியை நன்கு கற்றுப் புலமைபெற்றுப் பார்த்தசாரதிப் பெருமாள் ஊசற்றிருநாமம் முதலிய நூல்களைப் பாடியுள்ளார்.

'' இன்னல்தவிர்த் தெனையாளுங் களைகண் ணாகி
எவ்வுயிருங் காத்தளிக்கு மிறையு மாகிப்
பின்னமற எங்குநிறை பொருளு மாகிப்
பேரின்பம் நல்குமெழிற் பெம்மா னாகி
மன்னுமுனை ஏகாந்தத் திருந்து போற்றி
மாயையிருள் துரக்கவென்பாற் கருணை கூரும்
பன்னுபழ மறைமுதலே யாடி ரூசல்
பார்த்தசா ரதிமாலே யாடி ரூசல்,''

என்பது ஊசல் திருநாமத்தில் ஒரு பாட்டு.

## க0௨எ. திருவேங்கடப் பிள்ளை - கோ
(1868)

இவர் திரிசிரபுரத்தில் இருந்த கோவிந்தப் பிள்ளை என்பவருடைய புதல்வர். தம் தந்தையாரிடமே இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலமையடைந்தார். திருக்கோவையார் உரை, சேதுபுராணம், தனிப்பாடற்றிரட்டு முதலிய நூல்களைப் பொன்னுச்சாமித் தேவர் அச்சிட்டு வெளியிட்டபோது மேற்படி நூல்களில் இவருக்கு ஒவ்வொன்று அனுப்பினார். அப்பொழுது இவர் எழுதியனுப்பிய பாடல்கள்,

'' புலவர்வரோ தயன்பொன்னுச் சாமிநரேந்
திரசிங்கம் என்று போற்ற
வலவரன்றே நாற்கவியும் வலவர்கடற்
சேதுபதி மாலே யென்று
நலவர்சொல நடுநிலைக்கோல் நடாயநின
தருட்சமுக நன்கு காண்டல்
இலவரென்றுண் டோகொடிக்குக் காய்பொறையோ
சுகஞ்சுகமே எய்த லாமே.

திருக்கோவை யாருரையுஞ் சேதுபுரா
ணமுந்தனிப்பா டற்றி ரட்டும்
அருக்கோத யஞ்சந்தி ரோதயஞ்சுக்
ரோதயம்போல் அனுகப் பெற்றேன்

*பெருக்கோகை யுடனுதவு பெரியோய்பொன்*
*னுச்சாமிப் பிரபு டீகா*
*மருக்கோக நகச்சுமுக சமுகமுநான்*
*பெறச்சிறிது மனங்கொள் வாயே.''*

## ௧௦௨௮. திருவேங்கடப் புலவர்

இவர் ஏறக்குறைய அறுபதாண்டுகட்கு முன் தொண்டை வள நாட்டில் பிரமபுரி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். வேலூர்ப் பள்ளியொன்றில் தமிழ்ப்புலவராக இருந்த இவர் 'கோலப் புத்தகம்' என்னும் நூல் எழுதியதோடு தோட்டக்காடு இராமகிருட்டிண பிள்ளை யென்பவரின் விருப்பத்திற்கிணங்க நந்தமண்டல சதகம் என்னும் நூலுக்கு உரையும் எழுதி யுள்ளார்.

புரசை சின்னச்சாமிப் பிள்ளை, திருமயிலை சண்முகம் பிள்ளை, சேதுராமபாரதி, பேறை தசாவதானம் செகநாத பிள்ளை, பூவை கலியாணசுந்தர முதலியார், தி. சு. வேலுச்சாமிப் பிள்ளை, காஞ்சிபுரம் முத்தமிழ்க்கவி திருவேங்கட முதலியார், பல்லவ புரம் சோணசல முதலியார், திருவையாறு முத்துச்சாமிப் பாரதி யார், ஆயுள்வேத பண்டிதர் அரங்கசாமிப் பிள்ளை, பிரமபுரி கந்தசாமிப் பிள்ளை, கோ. வடிவேலுச் செட்டியார், ஆரணி சென்னகேசவுலு நாயுடு, பொய்கைப்பாக்கம் அப்பாசசாமி உபாத்தியாயர், பானுகவி, கிருட்டிணசாமி முதலியார் முதலிய பல அறிஞர்கள் திருவேங்கடப் பிள்ளையின் காலத்தில் இருந்த வர்கள். இவருடைய தந்தையார் பெயர் பரசுராம பிள்ளை. கீழ் வருஞ் சிறப்புப்பாயிரப் பாடல்கள் இவருடைய வரலாற்றை ஒருவாறு விளக்குகின்றன :

*''பொலமன்னு குன்றுகுடை யாவெடுத்துக்*
*கோக்குலத்தைப் புரந்த மாலை*
*வலமன்னு சந்ததியா வளர்த்தருள்கோ*
*வசியர்குல வளங்கொள் சீர்த்தி*
*பலமன்னு நந்தமண் டலசதகத்*
*துறுபொருளைப் பலருந் தேர்வான்*
*நலமன்னு பொழிப்புரைசெய் தருள்கவென*
*நனியெவரும் நயந்து வேண்ட,*

மன்னியபல் லுயிர்களெலாம் இன்பமுறத்
திருவினொடு வனத்து மாய்மால்
துன்னிவளர் பதிகளிரு பானிரண்டு
நிலவுமெழில் தொண்டை நாட்டில்
பொன்னகரிற் பொலிபிரம புரியதனில்
பாற்கடல்போற் புவனம் ஏத்தப்
பன்னமுதற் குலப்பரசு ராமமுகில்
இயற்றுதவப் பயனால் தோன்றி.

அற்பினொடு பன்னூலுங் கரிசுதபக்
கற்றுணர் நுண் ணறிவு மேலாம்
விற்பனவி நயநிபுணம் பொறையொழுக்கம்
ஒப்புரவு மிக்க சீலம்
நற்குணமும் பெருகுதிரு வேங்கடநா
வலவன் அந் நூல் நயங்கள் எல்லாம்
பற்பலரும் எளிதுணர வரைந்தளவி
லாதபுகழ் படைத்தான் மன்றோ.

### உரையாசிரியர் இயற்றிய அவையடக்கம்

திருவளரும் உலகினிலேந் திலக்கணமோ
டிலக்கியங்கள் தெளிந்தோ ராய
பொருவிலுரை யாசிரியர் திறங்களெலாம்
நனியோங்கிப் பொலியும் வண்ணம்
குருவருளால் பன்னூலும் உணர்மாத்ரு
பூதையனுங் குணவான் செய்த
மருவியசீர் நந்தமண் டலசதகத்
தினுக்குரையான் வரைந்தேன் மன்றோ ''

## ௧௦௨௯. திருவேங்கட முதலியார் - மணி (20 - நூ.)

தொண்டைவள நாட்டில் மணிமங்கலம் என்னும் ஊரில் தோன்றியவர். நூல்கள் பலவற்றைக் கற்றுச் சிறந்த புலமை பெற்றுப் புலவர் திலகராய் விளங்கியிருந்தார். வேதாந்த நூல்களினும் சிறந்த ஆராய்ச்சியுடையவர். சுவயோனந்த ப்ரம்ம யோகேந்திரர் என்னும் பெரியாரை அறிவாசிரியராக அடைந்து அருளுரை பெற்றார். இவரியற்றிய செய்யுட்களில் ஒன்றை அடியிற் காண்க:

" உலகுய்யக் கருணையினுல் உயர்பரமே
யொருவனென உதித்திட் டிந்நாள்
கலகமுரு நிலையிதெனக் கண்டுசிவ
சிவைக்கியங் கருதெம் போல்வார்
புலமிகவே பசுமரத்திற் கடாவியதோ
ராணியெனப் புகன்ருய் நூலில்
திலகமெனும் ஒருயோக ஞானநு
பவதீபந் திரமிக் கோயே."

இல்லற ஞானியாகச் சிறந்து விளங்கிய இவர், "தத்துவ உபதேச வெண்பா" என்னும் நூலை இயற்றியுள்ளார். அந் நூல் வேதாந்த உண்மைகளை விளங்க உணர்த்தும் இருநூற் றைம்பது வெண்பாக்களைக் கொண்டது.

" சம்சார மேதென்னில் சாற்றக்கேள் பிராந்தியதே
சம்சார மற்ருென்றுந் தானல்ல—சம்சாரம்
தத்துவத்தைக் காணில் தரியா திருளொளிமுன்
எத்துணையு நேரா தென."

என்பது நூலில் ஒரு பாட்டு. இந் நூலைப் பாராட்டி, காஞ்சி புரம் நிச்சல இராமானந்த அடிகள் சதாசிவப்பிரம யோகீந்திரர் மாணுக்கர் தே. சுப்பராய முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௧௦௩௦. திருவேங்கட முதலியார் வே. பொ. (1872)

இவர் தொண்டைவள நாட்டில் இராயவேலூரில் ஆனந்த மேத்திரி என்பவருடைய புதல்வராகிய பொன்னப்ப மேத்திரிக் குப் புதல்வராகத் தோன்றியவர். செங்கற்பட்டில் இருந்த பேறை செகநாத பிள்ளை இவருடைய நண்பர். "நிகம நிச்சயம்" என்னும் நூல் ஒன்றை இவர் இயற்றி வெளியிட்டிருக்கிறுர்.

"வேதப் பொருளே விழுப்பொருளே விண்ணோர்க்கிறையே வித்தகமே
- நீதப் பொருளே நித்தியமே நிமலாநந்த நிண்ணயமே
தீதற் றுயருஞ் செழும்பாகே தெவிட்டாத்தேனே தெள்ளமுதே
ஆதத் தெனைநீ வருகென்று யடியே னுன்றன் அடைக்கலமே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கoா௯க. திருவேங்கடாசல முதலியார் (1908)

இவர் புதுச்சேரியில் வாழ்ந்திருந்தவர். இவருடைய பெயர் குறள் உபாத்தியாயரென்றும் வழங்கியது. இவர் திருமந்திரப் பத்து, இராமாநுசப் பத்து, வாசுதேவப் பத்து, அத்திகிரி அருளாளர் பத்து, பரமதோத்திரப் பத்து முதலிய நூல்களைப் பாடியுள்ளார்.

'' மாதவா கேசவா வைகுந்த நாயகா
வாசுதேவா முகுந்தா
மாயவா அச்சுதா நந்தகோ விந்தனே
வாமனு மதுசூதனு
சீதரா ஆதிபுரு டோத்தமா விண்டுவே
தேவாதி தேவ அரியே
திருவரங் கேசனே திருவேங் கடாசலா
திருக்கச்சி வரத ராசா
பூதமோ ரைந்தின் புணர்ச்சியறி யேன்புலன்
பொறி கரண வகையறி கிலேன்
பொருந்திய உயிரொப்பினிலை போக்குவர வறிகிலேன்
போதன்முத லோரறிவரும்
நாதாமீ தானமெய்ஞ் ஞானநிலை யறிவனே
நம்பினே னெனையா ளுவாய்
நாலாய வேதமிக ஆராய மிதொளிரும்
நாராய ணாய நமவே ''

என்பது திருமந்திரப் பத்தில் ஒரு பாட்டு.

## கoா௯உ. திருவேங்கடாச்சாரி

இவன் புகழேந்தி ஒட்டக்கூத்தர் ஆகிய புலவர்கள் காலத்தில் சோழவள நாட்டில் இருந்தவன். ஏதோ ஒரு குற்றத்தின் பொருட்டுச் சிறையில் அடைக்கப்பட்டிருந்தான். கருமான் வகுப்பில் தோன்றிய இவன் கூரிய அறிவுடையவன். ஒட்டக்கூத்தரின் பொல்லாங்கினுல் சிறையில் அடைக்கப்பட்டிருந்த புகழேந்திப் புலவர் ஒட்டக்கூத்தரைத் தோற்கடிப்பதற்குப் புலவர் சிலரை உண்டுபண்ண எண்ணினுர். சிறையில் இருந்தவர்களில் அறிவு நுட்பம் உடையவர்களைத் தேர்ந்தெடுத்தார்.

அப்பொழுது இவனையுந் தேர்ந்தெடுத்துக் கல்வி புகட்டினர். தன் மதிநுட்பத்தால் இவன் விரைவிற் கல்விகற்றுச் சிறந்த புலவனானான். பிறகு ஒட்டக்கூத்தரிடம் இவனைக் கொண்டு போய் நிறுத்தப்பட்டபோது ஒட்டக்கூத்தர் இவனைப் பார்த்து "நீ யார்?" என்று உசாவினர். இவன் உடனே,

'செல்வன் புதல்வன் திருவேங் கடவன்
செகத்குருவாம்
கொல்லன் கவியைக் குறைசொல்லு வோரைக்
குறடுகொண்டு
பல்லைப்பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப்
பகைவர்முன்னே
அல்லும் பகலும் அடிப்பேன் கவியிருப்
பாணிகொண்டே"

என்று பாடினன். இதனால் இவனுடைய உயிர் பிழைத்தது. இதன் பிறகு இவன் சிறந்த புலவனாக விளங்கியிருந்தான்.

## கoருரு. தில்லைநாயக சோதிடர்

தொண்டைவள நாட்டிலே உள்ள சம்புகேச்சுரம் என்னும் ஊரிலே இருந்தவர். கணிதநூல் துறை கண்டவர். வடமொழியில் இருந்த யோகமஞ்சரி என்னும் நூலைத் தமிழிலே மொழிபெயர்த்து அதற்குச் "சாதக சிந்தாமணி" என்று பெயரிட்டார். இச் செய்தி,

"நறைகமழ் கமலப் பொகுட்டில்வீற் றிருக்கும்
நான்முகக் கடவுள்தான் படைத்த
நிறைவுள மாந்தர் வினைப்பயன் அதனால்
நிலைபெறு யோகமஞ் சரியாம்
துறையென வழங்கும் வடமொழி அதனைத்
தூயசெந் தமிழினாற் செய்தான்
திறைகொடா வழுதிப் புகழ்தொண்டை நாடன்
தில்லைநா யகமகி பதியே"

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகிறது. சாதகசிந்தாமணி உகசுஅ பாடல்களைக் கொண்டது.

"நிலைகொண்ட மகமேரு வரையடுத்த காகமும் பொன்
னிறம் பெற்றாற்போல்
அலைகொண்ட பாற்கடலைச் சார்ந்தநதி எல்லாம்பால்
ஆகி னாற்போல்

கலைகொண்ட பெரியர்குழாத் தடைதலும் கட்கடை படுமக்
காட்சி யாலென்
தலைகொண்ட புன்சொல்லு நன்சொல்லாப் பிறங்கிடவே
தக்க தாமால்.''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧0௩௪. தில்லை முதலியார் - ப

சோழவள நாட்டிலே பிரமநகர் என்னும் ஊரிலே இருந்தவர். தந்தையார் பெயர் பகவான் முதலியார். சொக்கலிங்க முதலியார் என்பவரிடத்திற் கல்விகற்றுச் சிறப்புற்ருர். இவர் பிரமீசர் 'இரட்டை மணிமாலை' என்னும் நூலைப் பாடியுள்ளார். தில்லைவிடங்கன் வெண்பாப்புலி வேலுச்சாமிப் பிள்ளை அந்நூலைப் பார்வையிட்டுள்ளார். காஞ்சீபுரம் வீராசாமி முதலியார் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

''கஞ்சமலர்க் கண்சாத்திக் கார்வண்ண னேத்தவொளி
விஞ்சரிய நேமியருள் வேந்தனே—எஞ்சலிலாப்
புண்ணியநல் லைம்முகனே பொற்பிரமூர் வள்ளால்யான்
கண்ணியநல் கஞ்சக் கரம்.''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧0௩௫. திவாகரமுனிவர்

கல்வி கேள்விகளிற் சிறந்து பெருமைபெற்றுத் திகழ்ந்த இவர் மனைவியோடு இல்லின்கண்ணிருந்து துறவற வாழ்க்கையை மேற்கொண்டிருந்தமையின் முனிவர் என்று பெயர் பெற்ருர். இலக்கண இலக்கியங்களில் வல்லுநராகிய இவர் காலத்தில் சோழவள நாட்டில் அம்பர் என்னும் நகரில் சேந்தன் என்னும் சிற்றரசன் ஒருவன் வாழ்ந்திருந்தான். இவனுஞ் சிறந்த புலமைபெற்றவன். திவாகர முனிவரோடு நெருங்கிய தொடர்புடையவன் (இவன் திவாகர முனிவரிடத்தே கல்விகற்ற மாணவனுக இருத்தலுங் கூடும்.)

இவன் நிகண்டு ஒன்று செய்யுமாறு திவாகர முனிவரை வேண்டிக்கொண்டான் அந்நாளில் நிகண்டோ அகரவரிசை

நூல்களோ இல்லை ஆகவே திவாகரர் சேந்தனுடைய வேண்டு கோட்கிணங்கிப் பன்னிரண்டு தொகுதிகளையுடைய நிகண்டு ஒன்றைச் செய்துமுடித்தார். இதுவே நிகண்டுகள் எல்லாவற்றிலும் முற்பட்டது. செய்தவர் செய்வித்தவர் ஆகிய இருவர் பெயரும் ஒருங்கே அமையச் 'சேந்தன் திவாகரம்' என்று பெயரிட்டார்.

"சங்கர னிறையோன் காம தகனன்
கங்கா தரனே கறைமிடற் றண்ணல்
கூற்றை யுதைத்தோன் குன்ற வில்லி
ஏற்று வாகனன் திரியம்பகன் சோதி
நக்கன் சடையோன் நாரி பாகன்."

என்பது சிவன் பெயர் சொல்லும் சூத்திரத்தில் ஒரு பகுதி.

## ௩௦௯. துரு ஐயர்
## (Rev. W. H. Drew)

தமிழ் நாட்டிற்கு வந்த வெள்ளைக்கார ஐயர்களில் இவரும் ஒருவர். இவர் இயற்றமிழாசிரியர் முகவை இராமாநுச கவிராயரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றார். சில சிறு நூல்களைத் தமிழில் எழுதினார். திருக்குறளின் சில அதிகாரங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

## ௩௦௭. துட்டநிக்கிரக சிரோன்மணி
## (19 - நூ.)

இவர் சென்னைமா நகரில் இருந்தவர். இவருடைய இடுகுறிப் பெயர் இன்னதென்று தெரியவில்லை. துட்டநிக்கிரக சிரோன்மணியென்பது தாமேயாகப் படைத்திட்டுக்கொண்ட பெயர். இவர் "பொக்கைவாயன் பேரிற் சொல்லிய நொண்டி" என்னும் ஒரு சிறிய நூலைப் பாடியிருக்கிறார். பொக்கைவாயன் என்பவன் இவருக்குப் பகைவன் போலும் நூல் வசை நூலே. காப்புப் பாடலையும் முதற் பாடலையும் அடியிற் காண்க

"பல்விழுந்து கேடுகெட்ட பாழ்ப்பொக்கை வாயதனால்
சொல்விழுந்த வாடைச் சுணகமது—சொல்லும்
பழுதை அகற்றநொண்டி பாடக்கோ வேறு
கழுதைப்ர சாபதியே காப்பு."

"பொக்கைவாய் உடையமூளிப் புழுக்கையாம் புடவைச் சேரி
அக்கிரம மிகுந்த தீய அம்பலப் பயலாம் பாவி
மொக்கையாய்த் திரிந்த வாறும் முடிச்சுகள் அவிழ்த்த வாறும்
செக்கோட்டிப் பழம்புண் ணுக்குத் தின்றவா றையுஞ்சொல்வேனே"

## ௧௦௩௮. துரைசாமி ஐயங்கார் - மே
## (20 - நூ.)

இலக்கண இலக்கியம், வடமொழி, தென்மொழி, மருத்துவம் ஆகிய துறைகளில் வல்லவராகிய இவர் சென்னைமா நகரில் வசித்திருந்தார். ஆயுர்வேத கலாசாலையில் ஆசிரியாராக இருந்தார். "சாரங்கதர சம்மிதை", "மாதவநிதானம்", "இரசரத்தின சமுச்சயம்" முதலிய வைத்திய நூல்களையும், காதம்பரி, மேகசந்தேசம் முதலிய வடமொழி இலக்கியங்களையுந் தமிழில் மொழிபெயர்த்தார் மேலும் அட்டாங்க இருதயம் என்னும் மருத்துவ நூலையுந் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். இந் நூலில் மக்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாத செய்திகள் யாவும் நிறைந்துள்ளன.

## ௧௦௩௯. துரைசாமிக் கவிராயர்
## (1870)

இவர் ஏறக்குறைய எண்பது ஆண்டுகட்கு முன்பு சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் காமியப்ப கவிராயர் இவருஞ் சிறந்த புலவர். துரைசாமிக் கவிராயர். பழநியாண்டவர் இசைப் பாட்டு, திருப்போரூர் ஆண்டவர் இசைப்பாட்டு, பழநியாண்டவர் வெண்பாவந்தாதி, பழநியாண்டவர் கலித்துறையந்தாதி, பழநியாண்டவர் பதிகம், பழநியாண்டவர் தோத்திரப் பாமாலை, பழநியாண்டவர்மாலை, பழநியாண்டவர் போற்றிக் கலிவிருத்தம், சொர்ணம்பிகை தோத்திரம் முதலிய நூல்களைப் பாடியிருக்கிறார்.

"காரிலகு மென்சிலையும் நீறிலகு நுதலும்நல்
கவினிலகு கருணை விழியும்
கானிலகு குமிழ்நாசி யுங்குழைச் செவியும்
கனிககொவ்வை அனைய வாயுந்

தாரிலகு சிவாமணி தழைத்திலகு கண்டமும்
தவளமுந் நான்மார் பமும்
தண்கடம் பணியனுடன் அயிலிலகு புயமுமுத்
தண்டதண் டம்பிடித்த
சீரிலகு மணிவலக் கரமுமூ ருவினிற்
செறிந்தில கிடக்கர முநுண்
செந்துகில் அணிந்திலகும் இடையும்இந் திரனாதி
தேவர்தஞ் சிரமிசையினும்
பாரிலகு தொண்டரக மலர்மிசையி னும்மிலகு
பாதமுங் காண அருள்வாய்
பழவடியர் துதிதுய்ய அழகுதிகழ் தருமெய்ய
பழநிமலை முருகையனே.''

என்பது இவரியற்றிய பழநியாண்டவர் பதிகத்தில் ஒரு பாட்டு. நூலினைப் பாராட்டித் திருத்தணிகை விசாகப்பெருமாளையர், காஞ்சீபுரம் வித்துவான் சபாபதி முதலியார், அ வீராச்சாமிச் செட்டியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' உரைசாமிச் செழுஞ்சரட்டின் மணியும் முத்தும்
ஒருங்குறக்கோத் தமைத்ததென உம்பர்க் கென்றும்
அரைசாமிந் திரன்பணியும் பழநி வாழும்
ஆறுமுக சாமிசிலம் பார்ந்த செந்தா
மரைசாமி யப்பெறுசே வடியில் தென்சொல்
வடசொல்லோ டிசையுறப்பல் வகைப்பா மாலை
துரைசாமி எனும்பெயரோன் காமியப்பன்
சுதனாக வந்துதித்தோன் சூட்டினானே ''

என்னும் இப் பாடல் விசாகப்பெருமாளையரால் இயற்றப் பெற்றது.

## ௧௦௪௦. துரைசாமி நாயகர் - மு

சென்னைமா நகரில் கோடம்பாக்கத்தில் இவர் வாழ்ந்திருந்தார். ஆங்கிலம் தமிழ் வடமொழி ஆகியவைகளில் வல்லுநர். அரக்கோணத்தில் புகைவண்டி நிலையத்தில் அலுவல் பார்த்த இவர் நூலாராய்ச்சியிலும் ஈடுபட்டுச் சாணார்விகற்ப வினாவிடை, சிலையெழுபது விருத்தியுரை, ஆக்கினேய புராணத் தமிழ் மொழி பெயர்ப்பு முதலிய நூல்களையும் எழுதி வெளியிட்டார். சாணார் விகற்ப வினாவிடையில் சாணார்குல ஆராய்ச்சி செய்யப்பட்டுள்ளது. அந் நூலின் தொடக்கத்தில்,

" உலகினிற் சாணூர் தலைதடு மாறி
உரைத்தபூர் வோத்திர முதலாம்
நிலையில்பொய்ந் நூல்கள் குலைந்திடக் கருணை
நீடிய முகத்திறை மலர்த்தாள்
தலைமிசைத் தாங்கி வினுவிடை யொன்று
சாற்றுகேன் சான்றவர் நாடும்
கலையிது வெனவே யாவருங் கண்டு
களித்தக மலைவுதீர்ந் திடவே "

என்று காப்புச் செய்யுள் பாடியுள்ளார்.

## ௧௦௪௧. துரைசாமிச் சோழகர் - ௪
## (1910)

சோழவள நாட்டில் தஞ்சையைச் சார்ந்த வெள்ளாம்பிரம்பூரில் வாழ்ந்திருந்தவர். இலக்கண நூல்களையும் சங்க நூல்களையும் நன்கு கற்றுணர்ந்து புலவரெனப் புகழ்பெற்றிருந்த இவர் சிறந்த செய்யுள்பாடுந் திறனும் அமையப்பெற்றிருந்தார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரம் எதுவுந் தெரியவில்லை. 'வேளாள சூளாமணி' என்னும் நூலுக்கு இவர் இயற்றிய இரண்டு சிறப்புப்பாயிரப் பாடல்கள் அகப்பட்டுள்ளன. அவை வருமாறு:

" குருமுனியுங் குறுமுனிநான் என்ருன் அந்தக்
குமரனுநான் குமரனென்ருன் கோதிலாத
அருமறையாள் நான்வெள்ளை ஆனேன் என்ருள்
அம்பலம்வாழ் வசியனரு ணாசலப்பேர்
பெருமையுளேன் தவத்துதித்துக் கலைகள் தேர்ந்த
பெருந்தகையோன் செய்வசிய ரத்ந நூலின்
அருமையை யோர்ந் துரைத்தனரேல் கலைகள்தேர்ந்தே
அவனியுளோர் எவரறைவர் அவன்பேர் கேண்மோ."

" சீராரு மூன்றிரண்டுஞ் சேருமொரு பான்மூன்றும்
ஏரா ரிருநான் குடனிரண்டும்—பேராரும்
ஏழொன்றீ ரொன்பான்பே ரெய்தியவன் இந்நிலத்தின்
வாழிநீ டூழி மகிழ்ந்து."

என்பனவாம். பின்னதான வெண்பா எண்களால் சுட்டப்பெறும் பொருள் கொண்டு உணரும் உரை விளக்கமுடையதாகவுள்ளது.

## கoசஉ. துரைசாமி நாயகர்
(20 - நூ.)

இவர் பேழைக்குடி என்னும் ஊரில் தோன்றியவர். வன்னிய குலத்தினர். செந்தமிழ்ப் புலமைபெற்றுத் திகழ்ந்த இவர் கம்பரால் இயற்றப்பெற்ற "சிலையெழுபது" என்னும் நூலுக்கு உரையெழுதியுள்ளார். உரையைப் பாராட்டி விசுவநாத சிரௌதிகள், வெள்ளாளப்பட்டி கிருட்டிணசாமி ஐயர், மலைவை யாவூர் வரதாச்சாரியார், காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு, பூவை கலியாணசுந்தர முதலியார், திருவோத்தூர் ம தி. பானுகவி, தருக்க வேதாந்த போதகாசிரியர், கோ வடிவேலுச் செட்டியார், கா. நமச்சிவாய முதலியார், மு சி. பூரணலிங்கம் பிள்ளை, கா. ர. கோவிந்தராச முதலியார், செங்கல்பட்டு அரங்கசாமி நாயகர், பக்தவத்சலம் பிள்ளை, வ. சு செங்கல்வராய பிள்ளை, கோமளேசு வரன் பேட்டை ம இராசகோபால் பிள்ளை, அ வரதநஞ்சைய பிள்ளை, விட்டுணுபாத சேகரர் என்று பெயர் மாற்றிய பசுபதி நாயகர், யாழ்ப்பாணம் நா. கதிரைவேற் பிள்ளை மாணவர் மு. பாலசுந்தர நாயகர், சிவராமலிங்கம் பிள்ளை, காங்கயம் சேடாசல நாயுடு, கோயமுத்தூர் சிவக்கவிமணி சுப்பிரமணிய முதலியார், ச. சச்சிதானந்தம் பிள்ளை, திருச்சி அமிர்தம் சுந்தரநாதம் பிள்ளை, திருவெண்ணெய்நல்லூர் வடிவேலு முதலியார், காரைக்கால் குருசாமி படையாச்சி, செம்பூர் வித்துவான் ஆறுமுகஞ்சேர்வை, கோயமுத்தூர் சொக்கலிங்கம் பிள்ளை, அ. கந்தசாமிப் பிள்ளை, வையாபுரிப் பிள்ளை, சாமிநாத முதலியார், பூபதி பழனியப்ப நாயகர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

*"கலைமகளைக் கண்கண்ட கம்பன் அளித்த*
*சிலையெழுப துக்குரையைச் செய்தான்—கலைதேர்*
*உரைசாமி என்ன உலகோர் உரைப்பத்*
*துரைசாமி யாம்புலவன் சூழ்ந்து"*

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

*"... ... ... .. ... ... . . ... ... ... ... . . ... ... ..*
*... ... ... ... . . .. ..சென்னிநன் னாட்டில்*
*உமையவள் மஞ்ஞை உருக்கொடு சிவபரஞ்*
*சுமைதரு பூசை அருத்தியிற் புரிந்த*

*பொன்னி நன்னதிசூழ் புண்ணிய தலத்தின்
தென்திசை அதனில் திகழொரு யோசனை
எல்லையில் எல்லையில் இன்மணங் கமழும்
சொல்லரு நறுந்தண் சோலைசூழ் போந்த
பேழைக் குடியிற் பெட்புற உறைபவன்
ஏழைக் குடிகட் கிரங்குந் தயாளன்
நயனுறு மொழியினன் நனிபுகழ்ப் பொறையினன்
உயரிய சீர்சால் ஒழுக்கம் அடக்கம்
வாய்மைநற் றவமொடு மாண்புமுற் றகலாத்
தூய்மையன் ஈசற் செழும்பத்தி இதயன்
கற்றவர்க் கினியன் கவிரசம் ஒழுகப்
பற்பல வகையில் பகர்தர வல்லோன்
சகாதேவன் என்னச் சாத்திர நிபுணன்
மகாதேவ நாயக வள்ளல் தவத்தில்
உற்பவித் திட்ட உயர்சுதன்
சற்குணம் உறுதுரை சாமிநா வலனே.''*

என்னப் பாராட்டப்பெறும் இவருடைய தந்தையார் பெயர் மகாதேவ நாயகர். இவருடைய தமையனாராகிய கிருட்டிணசாமி நாயகர் என்பவருஞ் சிறந்த அறிஞர். இவர் தம்முடைய உடன் பிறந்தாராகிய கிருட்டிணசாமி நாயகரிடமே கல்வி கற்றார்.

## கஂசரு. துரைசாமி நாயுடு
### (19 - நூ.)

இவர் கோவளம் என்னும் ஊரினர். திருத்துருத்தி இந்திர பீடம் கரபாத்திர சுவாமிகளாதீனம் ஈசூர் சச்சிதாநந்த சுவாமிகளை ஆசிரியராக அடைந்து வேதாந்த நூல்களைக் கற்றறிந்ததுடன் செய்யுள்பாடுந் திறனும் பெற்றார். இவர் அறிவறியாமை ஆதார விளக்கம் என்னும் நூலுக்குப் பாடிய சாற்றுக்கவி,

*'' நெறிபடு சங்கர மாமுனியன்று நிறுத்தியமெய்
செறிதரு பீடத்தி லிந்திர பீடஞ் சிறக்கவந்தோன்
தரைபுகழ் தண்டறை வாழ்சுப்ப ராய தயாநிதியின்
றறிவறி யாமையா தார விளக்கம் அளித்தனனே.''*

என்பது.

